உ

# திருக்குறட் குமரேச வெண்பா

( மூலமும்---உரையும் )

## பொருட்பால்

ஆசிரியர்

ஜெகவீரபாண்டியனார்

மூன்றும் பதிப்பு

மதுரை

வாசுகி அச்சகத்தில் பதிப்பிக்கப் பெற்றன.

சோபகிருது ௵ தை ௴

1964

# முகவுரை

உயிர் இனங்களுள் மனித இனம் பலவகை நிலை களிலும் தலை சிறந்துள்ளது. மனம் மொழி மெய்களால் தொழில் புரிந்து எவ்வழியும் எழில் மிகுந்து இந்த இனம் யாண்டும் ஒளி விரிந்து வருகிறது. தனது வாழ்வு நெறி முறையே நடந்து வர வழிமுறையே ஒரு தலைவனைப் பழமையிலிருந்தே கிழமையாய்க் கிளர்ந்து வந்துளது. வீட்டுக்கு ஒரு தலைவன் போல் நாட்டுக்கு அவன் நாயக மாய் நிலவி யாண்டும் நலம் புரிந்து நிற்கிருன்.

அரசன், இறைவன், மன்னவன், வேந்தன் என இன்னவாறு பல காரணப் பேர்களோடு பூரணமான தலைமையில் அவன் பொலிந்து வந்துள்ளான்.

மாந்தரைப் பாதுகாக்க நேர்ந்துள்ள அந்த வேந் தன் எத்தகைய உத்தமனுய் எவ்வளவு வித்தக விவேகி யாய் விளங்கி யிருக்க வேண்டும் என்பதை இறைமாட்சி என்னும் அதிகாரத்துள் தேவர் தெளிவா விளக்கியிருக்கிருர்.

மன்னனும் மக்களும் மதிநலம் தோய்ந்து இம்மை யும் மறுமையும் பெருமையாய் வாழவேண்டிய வழிமுறை களைத் துறைகள்தோறும் உணர்வொளி வீச உரைத்துள் ளார். வாழ்வின் வகைகள் தகவா விளங்கியுள்ளன.

மனிதன் அறிவால் உயர்ந்திருக்கிருன்; அந்த அறிவு கல்வியால் ஒளி பெற்று வருகிறது; ஆகவே இளமையிலேயே வளமையாக் கற்றுக் கொள்ளுக; கல்லா மல் கழிந்து போகாதே; சீலமுள்ள மேலோர்களுடைய

அறிவுரைகளை ஆர்வத்துடன் கேள்; சிறந்த அறிவுடையனாய் உயர்ந்து நில்; குற்றங்கள் யாதும் படியாமல் பாதுகாத்துக் குணங்களையே எவ்வழியும் பழகிச் செவ்வியனாயுயர்க; பெரியாரைப் பேணித் துணைக்கொண்டு பெருந்தகையாளனாய் வாழ்க; சிறியாரை எவ்வகையிலும் யாதும் சேராமல் விலகி விடுக. எதையும் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து தெரிந்து வினைசெய்; வலிநிலைகளை உணர்ந்து, காலம் கருதி, இடம் அறிந்து கருமங்களின் மருமங்களை ஓர்ந்து யாண்டும் தருமங்கள் சார்ந்து வரக் காரியங்களைச் செய்து சீரியராய்ச்சிறந்து வாழ்ந்து வருகஎன்னும் இன்னவாறான உணர்வு நலங்கள் நன்னயமாய் இதில் ஒளி வீசியுள்ளன.

உண்மை தெளிக: செம்மையாய் வாழ்க

நீதி மன்னர் நெறிமுறை ஆளுக;
ஓதி மாந்தர் உணர்வொளி ஓங்குக;
கோதி லாத குணங்கள் குலாவுக;
ஆதி தேவன் அருள்வழி சூழ்கவே.

திருவள்ளுவர் நிலையம்
மதுரை.
16—1—64.

இங்ஙனம்
செகவீரபாண்டியன்

# திருக்குறட் குமரேச வெண்பா

## பொருட் பால்

உலக வாழ்வு பொருளால் நடந்து வருகிறது. உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க வீடு முதலிய வசதிகள் மனிதனுக்கு அவசிய தேவைகளாய் நேர்ந்துள்ளன. உயிர் வாழ்க்கைக்கு உறுதியான ஆதாரங்களாய் மருவியிருத்தலால் பொருள்களை யாவரும் ஆவலோடு தேடிக் கொள்ளுகின்றனர். பொன் மணி நெல் மனை மாடு நிலம் புலம் எனப் பல வகைகளாய் அவை பரவி யிருக்கின்றன. அரிய பிறவியை அடைந்து வந்துள்ள மனிதன் பெரிய அறிவுடையவன் ஆதலால் தனக்கு உரியனவற்றை ஓர்ந்து நன்கு தொகுத்துக் கொண்டு எவ்வழியும் செவ்வையாய் வாழ்ந்து வரத் தேர்ந்து கொள்கிறான்.

பொருள்களை நல்ல வழிகளில் ஈட்டவும், நன்கு அனுபவிக்கவும், பிற வுயிர்களுக்கு இதமாய் உதவி புரிந்து இம்மையும் மறுமையும் செம்மையாக இனிது வாழ்ந்து இன்பம் தோய்ந்து வருவதே உயர்ந்த வாழ்வாய் ஒளி மிகுந்து ஓங்கி வருகிறது.

அறம் பொருள் இன்பம் வீடு என்பன மனிதன் நெறி முறையே அடைய வுரியன. புருடனால் உரிமையாய் அடையத் தக்கன ஆதலால் புருடார்த்தங்கள் என இவை புகழ் பெற்றுள்ளன. நான்கு வகைகளும் பாங்கு மிக வுடையன.

ஈதல்அறம் தீவினைவிட்டு ஈட்டல்பொருள் எஞ்ஞான்றும்
காதல் இருவர் கருத்துஒருமித்து — ஆதரவு
பட்டதே இன்பம் பரனை நினைந்து இம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

அறம் முதலிய நான்கு நிலைகளையும் ஔவையார் இவ்வாறு செவ்வையாய் விளக்கி யிருக்கிறார். பழி படியாமல் வாழ்ந்து வருபவனே விழுமிய மேன்மகனாய் விளங்கி வருகிறான். அறத்தின் நிலைமை தலைமை நீர்மை சீர்மைகளைக் குறித்து முன்னம் தெளிவாகத் தேவர் உணர்த்தியிருக்கிறார். பொருளின் வகைமை தகைமைகளை இதில் நயமாய் விளக்கி யுள்ளார்; ஆகவே இப்

பகுதி பொருட்பால் என வந்தது. முன்னுள்ள புண்ணியத்தை யும் பின்னுள்ள இன்ப நிலைகளையும் பொருள் ஒருங்கே ஆக்கி அருளும் ஆதலால் இதனை இடையில் வைத்தருளினர். வைப்பு முறைகளில் பல நுட்பங்கள் வாய்ந்து வருகின்றன. அறமும் இன்பமும் பொருளின் வழியே வளமையாய் வருதலால் இதனை இரு மருங்கிலும் நெருங்கி நின்று அவை கிழமை கூர்ந்துள்ளன.

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு. (குறள், 760)

வடுவிலா வையத்து மன்னிய மூன்றின்
நடுவணது எய்த இருதலையும் எய்தும். (நாலடி, 114)

எல்லாம் பொருளில் பிறந்துவிடும். (நான்மணி, 7)

முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்.
(திருக்கோவையார்)

பொருள் துன்னும் காலைத் துன்னாதன இல்லையே.
(சீவக சிந்தாமணி)

பொருளின் பெருமைகளை இன்னவாறு முன்னோர் பலரும் வியந்து புகழ்ந்துள்ளனர். புண்ணியம் புகழ் யாவும் பொருளினல் நண்ணி வருதலால் இதன் சீரிய நிலைகளை எண்ணி உணர்ந்து கொள்கிறோம். உயிர் வாழ்க்கைக்கு உயர் ஆதாரமாயுள்ள பொருளை ஈட்டிக் காத்து ஈந்து துய்த்து மாந்தர் யாண்டும் மாண்புடன் வாழ்ந்து மகிழ்ந்து வருகின்றனர்.

இந்த வரவு நிலை வயன் முறையே நடந்து வர அரசுரிமை நெறியே அமைந்துள்ளது. மனித இனத்துக்குத் தலைவனும் உலகத்தை நன்கு பாதுகாத்து எங்கும் யாவர்க்கும் ஆதரவு புரிந்து வரும் அரசனுக்கு எல்லாப் பொருள்களும் தனி யுரிமை களாய் இசைந்துள்ளன. கருவிலேயே திருவுடையனாய்ப் பெருமை பெற்று வந்துள்ள அரசனுடைய மகிமை மாண்புகளைக் காணவே பொருள்களின் அமைதிகளை எல்லாம் எளிதே தெளி வாய்க் காணலாம் ஆதலால் அரசமாட்சி முதலில் காட்சிக்கு வந்துள்ளது. திருவின் நிலை தெரியத் திருவை அறிகின்றோம்.

பொருளின் பகுதியை விரித்து விளக்கி யிருத்தலால் இது பொருட்பால் என வந்தது. பால் = பாகம். ஒரு நாலுள்

பெரும் பிரிவு பால் எனவும், சிறு பிரிவு இயல் எனவும் வழங்கப்படும். அரசியல், அங்க இயல், ஒழிபியல் என மூன்று பிரிவுகளுடையனவாய் எழுபது அதிகாரங்கள் இதில் அடங்கியிருக்கின்றன. அந்த அமைதிகள் ஆய்வுடன் அமைந்தன.

பொருட் பாலின் அமைவு :

இறைமாட்சி எண்ணுக, கல்வியைக் கருதுக,
கல்லாமை ஒழிக, கேள்வி முயல்க,
அறிவுடைமை அடைக, குற்றம் கடிக,
பெரியாரைத் துணைக்கொள், சிற்றினம் சேராதே,
தெரிந்து செயல்செய், வலியினை உணர்க,
காலம் அறிக, இடனினை தெரிக,
தெரிந்து தெளிக, தெரிந்துவினை யாடுக,
சுற்றம் தழுவுக, பொச்சாவாது ஒழுகுக,
செங்கோன்மை செய்க, கொடுங்கோன்மை விடுக,
வெருவந்த செய்யாதே, கண்ணோட்டம் காணுக,
ஒற்றாடல் ஓர்க, ஊக்கமுடைய ராகுக,
மடியின்மை மருவுக, ஆள்வினை அடைக,
இடுக்கண் அழியாதே, அமைச்சை அமைக,
சொல்வன்மை தோய்க, வினைத்தூய்மை விழைக,
வினைத்திட்பம் மேவுக, வினைசெயல் ஆய்க,
தூது துணிக, மன்னரைச் சேர்க,
குறிப்பறி வுறுக, அவையறிந்து பேசுக,
அவையஞ் சாதே, நாடு நாடுக,
அரண்வலி ஆர்க, பொருள்செயல் ஓர்க,
படைமாட்சி படிக, படைச்செருக்கு அமைக,
நட்பு நயக்க, நட்பா ராய்க,
பழைமை பேணுக, தீ நட்பு ஒழிக,
கூடா நட்பு அகல்க, பேதைமை நீங்குக,
புல்லறிவை ஆளாதே, இகலில் வீழாதே,
பகைமாட்சி காணுக, பகைத்திறம் தெரிக,
உட்பகை ஒருவுக, பெரியாரைப் பிழையாதே,
பெண்வழிச் சேறேல், வரைவின்மகளிர் அகலுக,
கள்ளுண் ணாதே, சூது புரியேல்,
மருந்து மருவுக, குடிமை உயர்க,
மானம் பூணுக, பெருமை பெறுக,

சான்றாண்மை சார்க, பண்புடைமை படிக,
நன்றியில் செல்வம்தீர்; நாணுடைமை பேணுக,
குடிசெயல் வகையறி, உழவை ஓம்புக,
நல்குர வுறாதே, இரவு ஏறாதே,
இரவை அஞ்சுக, கயமை கழிக,
இவ்வகை எழுபதும் முழுவதும் ஆய்ந்து
பொருட்பால் ஓர்ந்து மருட்பால் தீர்ந்து
அருட்பால் அமர்ந்து தெருட்பால் உயர்ந்து
வாழும் வழியில் வகையாய் ஒழுகின்
நீளும் புகழறம் நெடிதாய்
நாளும் இன்பம் நலமுற வருமே.

அரசியல்

அரசனுடைய தலைமை நிலைமை தன்மை வண்மை நேர்மை சீர்மை கூர்மை ஆண்மை ஆற்றல் கேண்மை காட்சி ஆட்சி முதலிய தகுதிகளை வகையா யுணர்த்தி வருதலால் இது அரசியல் என வந்தது. மன்னன் இலக்கணம் மதிநலமுடையது.

1 இறைமாட்சி
2 கல்வி
3 கல்லாமை
4 கேள்வி
5 அறிவுடைமை
6 குற்றம் கடிதல்
7 பெரியாரைத் துணைக் கோடல்
8 சிற்றினம் சேராமை
9 தெரிந்து செயல்வகை
10 வலி அறிதல்
11 காலம் அறிதல்
12 இடன் அறிதல்
13 தெரிந்து தெளிதல்
14 தெரிந்து வினையாடல்
15 சுற்றம் தழால்
16 பொச்சாவாமை
17 செங்கோன்மை
18 கொடுங்கோன்மை
19 வெருவந்த செய்யாமை
20 கண்ணோட்டம்
21 ஒற்றாடல்
22 ஊக்கம் உடைமை
23 மடியின்மை
24 ஆள்வினையுடைமை
25 இடுக்கண் அழியாமை

இந்த இருபத்தைந்து அதிகாரங்களால் அரசனுடைய இயல்புகள் முறையே கூறப்பட்டுள்ளன. மக்கள் எல்லார்க்கும் உரியன. ஆயினும் மன்னனுக்குச் சிறப்பாக இருக்க வேண்டும் ஆதலால் இவை அவனுக்குத் தனி யுரிமைகளாய் நின்றன. மாந்தரை ஆளும் வேந்தன் மாண்பு படிந்து வரும் அளவு மாநிலத்திலுள்ள யாவரும் மாட்சி யடைந்து வருகின்றனர்.

# முப்பத்தொன்பதாவது அதிகாரம்

## இறை மாட்சி

அஃதாவது உலகை ஆள நேர்ந்துள்ள மன்னனுடைய மாண்புகள். அரசனுடைய குணநலன்களும் செயல் இயல்களும் பொருள் வளங்களும் ஆட்சியின் மாட்சிகளும் இதில் காட்சிக்கு வந்துள்ளன. இறை என்பது கடவுளுக்கு உரிய ஒரு பெயர். எங்கும் தங்கி எல்லாம் அறிந்துள்ளவன் என்னும் காரணத்தால் இப்பேர் அப்பூரணனுக்குப் பொருந்தியுள்ளது. இதனை ஈண்டு அரசனுக்கு இட்டது, உலகத்தைப் பாதுகாத்துப் பரிபாலித்து அருளுகிற அவனது தலைமையும் நிலைமையும் தகைமையும் கருதி. நேரே காணமுடியாத கடவுளின் பிரதிநிதியாய் அரசன் காட்சிக்கு வந்துள்ளான். அந்த உண்மையை நுண்மையாய் உணர்ந்து கொள்ள இறை என்னும் பெயரை ஏந்தி வந்தான்.

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறைஎன்று வைக்கப் படும்." (குறள், 388)

இந்த அதிகாரத்தின் எட்டாவது குறளில் அரசனை இறை என்று தேவர் இங்ஙனம் சுட்டியிருக்கிறார். தலைமையில் சூட்டிய பெயருக்கு உரிய தகைமையைத் துலக்கி நிலைமையை விளக்கியிருப்பது நினைந்து சிந்திக்கத் தக்கது.

"மானுட வடிவன் ஏனும் மன்னுயிர் புரந்து மன்னன்
வானுயர் கீர்த்தியோடு வருதலால் இறைவனேயாம்."

இதனை ஈண்டு உரிமையுடன் கருதி யுணர்ந்து உறுதியுண்மைகளை ஓர்ந்து கொள்ளவேண்டும். மன்னன் மாட்சிகள் நன்னயம் உடையன ஆதலால் அவை முதன்மையாய் முன்னுற அறிய வந்தன.

381. வெற்றிமுரசுகுந்தன்வேந்தருள்ளேவேந்தனென்றேன்
கொற்றமுற்று நின்றான் குமரேசா — உற்ற
படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு. (1)

இ-ள்.

குமரேசா! முசுகுந்தன் என் அரசருள் சிறந்த அரசனாய் உயர்ந்து விளங்கினன்? எனின், படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் உடையான் அரசருள் ஏறு என்க.

இது, சக்கரவர்த்தியின் தகுதி கூறுகின்றது.

தக்க சேனைகள், நல்ல குடிகள், செல்வ வளங்கள், சிறந்த மந்திரிகள், தேர்ந்த நண்பர்கள், வலிய அரண்கள், ஆகிய இந்த ஆறு வகைகளும் சீராக வுடையவன் அரசர்க்கு அரசனாய்ச் சிறந்து யாண்டும் நீண்ட புகழுடன் உயர்ந்து விளங்குவான்.

படை என்றது சேனையை.

தேர் யானை குதிரை காலாள் என்னும் நால்வகைத் தானைகளையும், வில் வேல் வாள் முதலிய எல்லா வகையான வல்லமை வாய்ந்த ஆயுதங்களையும் இது தொகையாக் குறித்து நின்றது.

குடி என்றது நாட்டில் வாழ்கின்ற மக்களை.
கூழ் என்றது தனம் தானியம் முதலிய செல்வங்களை.
அமைச்சு என்றது மதி மாண்புடைய மந்திரிகளை.
நட்பு என்றது உரிமையான உறவினங்களை.
அரண் என்றது மதில் அகழ் மலை முதலிய நிலைகளை.

ஓர் உடலுக்குக் கை கால் முதலிய உறுப்புகள் சிறப்பாக வாய்ந்து சீர் செய்துள்ளது போல் படை முதலிய இந்த ஆறும் அரசுக்கு ஆதரவாய் அமைந்து உறுதி தோய்ந்து எவ்வழியும் அழகு செய்து நிற்றலால் இவை அங்கம் என வந்தன.

அங்கம் ஆறும் உடையான் சிங்க ஏறு என்றது அவன் எங்கும் வெற்றித் திருவுடன் வீறு கொண்டு விளங்குதல் கருதி.

ஆறுள் ஒன்று குறையினும் ஏறு என்னும் தன்மை அவனுக்கு இல்லை என்பதை உம்மை நன்கு உணர்த்தி நின்றது.

ஏறு = ஆண் சிங்கம்: ஏற்றம் உடையது ஏறு என வந்தது.

விலங்கினங்களுள் சிங்கங்கள் சிறந்தன; அவற்றுள்ளும் ஆண் சிங்கம் உயர்ந்தது. அது போல் மக்களுள் அரசர்கள் சிறந்தவர்கள்; அவருள்ளும் படை முதலிய ஆறு அங்கங்களும் சீராக அமையப் பெற்றவன் சிறப்பாய் உயர்ந்தவன் என்க.

சிங்கம் மிருகேந்திரன் என மேவியுள்ளது; அரசன் நரேந்திரன் என நண்ணியுள்ளான். எந்த மிருகங்களையும் எளிதில் கொல்ல வல்லதாய் யாண்டும் மடங்காத வலியுடைய தாயினும்

என்றும் அமைதியாய் அடக்கமும் பெருந்தன்மையும் அமைந்து நிற்றலால் அருந்திறலாண்மையும் பெருந்தகவுமுடைய அரசர்க்கு உவமையாய் வந்து வீரத் திறலை ஈண்டு அது விளக்கி நின்றது.

"சிறுவன்ஓர் சிங்க ஏற்றை சீவக சாமி என்பான்."

"சிங்கஏறு எள்ளிச்சூழ்ந்த சிறுநரிக் குழாத்திற் சூழ்ந்தார்."

(சிந்தாமணி 665, 1083)

சீவகன் என்னும் மன்னனைச் சிங்க ஏறு என இங்ஙனம் குறித்திருக்கிறார். கோக்குமார் கோளரி என நோக்க நின்றனர்.

"மாற்றுச் சிங்கத்து மறக்குரல் கேட்ட
ஏற்றுச் சிங்கத்தின் இடித்தெழுந்து உரறி."

(பெருங்கதை)

சிறந்த அரசரைச் சிங்க ஏறு என இவ்வாறு கூறியுள்ளனர்.

சிங்க ஏறு அனைய வீரன் என இராமனை இங்ஙனம் எங்கும் குறித்து வருகிறார். மன்னரைச் சிங்கம் என வருணிப்பது இந் நாட்டு இலக்கியங்களில் பெரு வழக்காயிருக்கின்றது. பிறநாடு களிலும் வீரமான இம் மரபு வியனாய்ப் பரவி யுள்ளது.

படைகளும் குடிகளும் பொருள்களும் அமைச்சரும் நட்பினரும் அரணும் ஆகிய ஆறு அங்கங்களையும் பூரணமாக வுடையவன் அரசருள் ஆண் சிங்கத்தை ஒத்தவன் என்று குறித்தது அவனுடைய தலைமை நிலைமைகளை உய்த்துணர்ந்து கொள்ள வந்தது. உரிய உறுதிகள் அமைவது பெரிய பெருமையாம்.

படையை முதலில் வைத்தது அதன் திறமை கருதி. உலகத்தைப் பாதுகாக்கும் அரசனுக்குச் சேனை சிறந்த உறுதித் துணையாய் அமைந்திருக்கின்றது. உடலுக்குக் கைபோல் அரசுக்குப் படை. மன்னிய தளமே மன்னவன் வளமாம்.

பொல்லாப் பகைவர் நாட்டிடையே புகாமல் தடுத்து நிறுத்துவதும்
ஒல்லாக் கள்வர் முதலோரை ஒடுக்கி யடக்கி ஒழிப்பதுவும்
வல்ல படையே ஆதலினால் மண்ணுள் வேந்தர்க்கு என்றும் அது
வெல்லும் வீரம் உடையதாய் வெற்றி யருளும் மெய்த்திருவே.

படையின் அடலாண்மைகளை இதனால் அறிந்து கொள்கிறோம். குடிகள் துயருறாதபடி பல வகைகளிலும் காத்தருளுவது வேந்தன் கடமையாம். அரிய படைகள் அவனுக்கு உரியவாயின.

ஒரு பெரிய தேசத்தை ஆளுகின்றவனுக்கு அரசன் என்று பெயர்; அத்தகைய அரசர் பலரையும் அடக்கி ஆள்பவன் சக்கரவர்த்தி என மிக்க கீர்த்தியை மேவி நிற்கின்றான். அவன் படை முதலிய அறுவகை நலங்களையும் குறைவற வுடையனாயின் எல்லா அரசர்களாலும் நன்கு மதிக்கப்பெற்றுத் தன் ஆணையை எங்கும் செலுத்தவல்லவன் ஆவன்; ஆகவே அவ்வன்மையும் தன்மையும் அம் மன்னர் பெருமானுக்கு நன்னய உரிமைகளாய் நவில வந்தன. உரிய உறுப்புகள் அரிய சிறப்புகளாயின.

கல்வியறிவும் நல்ல குணங்களும் செல்வ வளங்களும் உடையவராய்க் குடிகள் சிறந்திருந்தால் அந்நாடு உயர்ந்து விளங்கும்.

இங்கே குறித்த படை குடி பொருள் நட்பு அரண் அமைச்சு முதலிய உறுப்புகளின் நிலைகள் பின்னே சிறப்பாக விரித்து விளக்கப் பட்டுள்ளன. அங்கே நன்கு கண்டு கொள்ளலாம்.

பத்திமை சான்ற படையும் பலர்தொகினும்
எத்திசையும் அஞ்சா எயில்அரணும் — வைத்தமைந்த
எண்ணின் உலவா இருநிதியும் இம்மூன்றும்
மண்ணாளும் வேந்தர்க்கு உறுப்பு. (திரிகடுகம் 100)

உற்றவூ றஞ்சாப் படையும், உயர்குடியும்,
முற்றுலவாப் பைங்கூழும், முன்வருதல் சேமிக்கும்
பெற்றி அமைச்சும், உதவும் பெருந்துணையும்,
கொற்ற அரணும், உடையானே கோமகனே.

(பிரமோத்தர காண்டம்)

படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் என்ன
உடைய அரசியல் ஆறென உரைப்பர். (பிங்கலந்தை)

இக்குறளில் குறித்துள்ள கருத்துக்களை அடியொற்றி அரசின் இயல்புகளைப் பிறரும் இவ்வாறு உரைத்திருக்கின்றனர்.

தனியான ஒரு மனிதனது குடி வாழ்க்கை போலன்றித் தேசம் முழுவதும் நெடிது பேணும் பெரிய பொறுப்புடைமையால் அரச வாழ்வு அரிய பல துணைகளை உரிமையாக மருவியுள்ளது. ஆட்சிக்கு உரிய கருவிகள் நேரே அறிய வந்தன.

உரைசெயும் அறத்தின் ஆற்றல் ஒருகுடை நிழற்ற முந்நீர்த்
தரைமுழுது ஆள வேண்டின் தகைபெறும் அமைச்சு நாடு
புரையறும் அரணே மிக்க பொருள்படை நட்பு என்று ஓதும்
வரைசெயப் படாத யாக்கை யுறுப்புள மதித்துக் கோடி.

(விநாயக புராணம்)

தன் மகனுக்கு ஓர் அரசன் இன்னவாறு அறிவு கூறி யிருக்கிறான். உற்ற உறுப்புகள் உறுதிகள் அருளுகின்றன.

அடலுடைய படைகளும், நலமுடைய குடிகளும், நிலையான பொருள் வளமும், அறிவமைந்த அமைச்சரும், அன்பு அமைந்த நண்பர்களும், அழியாத அரண்வலியும் யாதும் குறையாமல் அரசனுக்கு நன்கு அமைந்திருக்க வேண்டும் என்க. இவ்வுறுதி நலங்களை உரிமையுடன் பேணிக்கொள்க என்பது கருத்து.

படை முதலிய உடைமைகள் நலமாக வுடையவன் சிறந்த சக்கரவர்த்தியாய் உயர்ந்து எங்கும் வியனு விளங்குவன்.

இவ்வுண்மை முசுகுந்தன்பால் உணர வந்தது.

சரிதம்

முசுகுந்தன் என்பவன் சூரியகுலத்து வேந்தன். ஆதியில் விதூமன் என்னும் கந்தருவனாயிருந்தான். முனிவர் சாபத்தால் முசுவாயினான். ஞானி மிகுந்து துன்பமுற்றான். பின்பு அச்சாபம் நீங்கியது. இறைவன் அருளால் இந்நிலவுலகத்தில் சிறந்த அரசனாய்த் தோன்றினான். தந்தை பெயர் மாந்தாதா. தாய் மங்கலவதி. இவன் நல்ல நீதிமான்; சிறந்த போர் வீரன். இறைவன்பால் நிறைந்த அன்பினன். சித்திரவல்லி என்னும் மங்கையை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து அரசை இனிது பேணி வந்தான். வருங்கால் அசுரரோடு பொருது தோல்வி யடைந்த இந்திரன் இவனிடம் வந்து முறையிட்டு உதவி புரிந்தருள வேண்டினான். இவன் வானகம் சென்று தானவரை வென்று வானவர் மானம் காத்தான். இவனது வெற்றித் திறத்தை வியந்து புகழ்ந்து விருந்து புரிந்து இந்திரன் இவனுக்குச் சிறந்த மரியாதைகள் செய்தான். இவனது அரசில் யாதொரு இடறும் நேராமல் காவலாளியாய் நின்று பாதுகாத்து வரும்படி அமரர்கோன் ஒரு மந்திர தேவதையை இவனுடன்

அனுப்பினன். அதனைத் தன் நகரில் கொண்டு வந்து வைத்து நன்கு பேணி வெற்றி வேந்தனாய் இவன் விளங்கி வந்தான்.

வெற்றி வேல் மன்னற்கு உற்றதை ஒழிக்கெனத்
தேவர் கோமான் ஏவலிற் போந்த
காவற் பூதத்துக் கடை கெழு பீடிகை. (சிலப்பதிகாரம், 5)

கொடித்தேர்த் தானைக் கொற்றவன் துயரம்
விடுத்த பூதம் விழாக்கோள் மறப்பின்
மடித்த செவ்வாய் வல்எயிறு இலங்க
இடிக்குரல் முழக்கத்து இடும்பை செய்திடும்.
(மணிமேகலை, 1)

இவனுக்கு வெற்றிப் பரிசாக இந்திரன் உதவிய மந்திர தெய்வத்தின் நிலைமையை இவை இங்ஙனம் குறித்திருக்கின்றன. வானவர்கோன் பூசித்து வழிபாடு செய்து வந்த சிவலிங்கத்தையும் இவன் உரிமையோடு உவந்து பெற்று வந்துள்ளான்.

மன்னு தொல்புகழ் வலனுயிர் கோறலால் வலாரி
என்ன ஓர் பெயர் பெற்றனன் வாகையும் எய்திக்
கொன்னு னைப்படை முசுகுந்த வேந்தனைக் கொண்டு
பொன்னகர்த் திருக் கோயிலில் புரந்தரன் புகுந்தான். (1)

காய்ந்த மாற்றலர் தம்வலி கடந்தெனைக் ககன
வேந்தன் ஆக்கினை ; வீரமும் மேதகு புகழும்
ஈந்து எனக்குநற் றுணைவனும் ஆயினை ; இதனால்
ஆந்தரங்கமாம் சுற்றம்நீ அல்லையோ என்றான். (2)

என்று மன்னனை நோக்கியே முகமன்கள் இயம்பிக்
குன்று போலுயர் தன்பெருங் கோயிலுட் கொடுபோய்
மன்றல் மாண்புனல் ஆடியே மணிக்கலை புனைந்து
சென்று மால்தொழுந் தேவனைப் பூசனை செய்தான். (3)
(கந்தபுராணம்)

இந்திரனுக்கு முசுகுந்தன் பகைவென்று தந்ததும், அவன் இவனைப் போற்றிப் புகழ்ந்துள்ளதும் இதில் பார்த்து மகிழ்கின்றோம். அங்கிருந்து கொண்டுவந்த சிவமூர்த்தத்தை இங்கே திருவாரூர் நள்ளாறு முதலிய இடங்களில் வைத்து இம் மன்னன்

பூசித்திருக்கிறான். அவை சத்தவிடங்கத்தலங்கள் என இன்றும் வழங்கப்படுகின்றன. இந்த அரசன் சரிதம் விரிவா யுள்ளது.

இவன் முருகப்பெருமான் அருள் மிகப் பெற்றவன். இவனது ஆட்சிமுறை திவ்விய மகிமை யுடையதாய்ச் சிறந்தது. நாடு எங்கணும் செழித்துக் குடிசனங்கள் பெருவளமுடையராய்ப் பெருகி வந்தனர். மதியூகமும் அதிவீரமும் உடைய மந்திரிகளும் இவனுக்கு உரிமையுடன் அமர்ந்து துணை புரிந்து நின்றனர். அமைச்சு அரண் பொருள் படை குடி முதலிய நிலைகளில் தலைமை பெற்றிருந்தமையால் திகிரி மன்னர் வரிசையில் இவன் முதல்வனாய் விளங்கினான். அங்கங்கள் ஆறும் நன்கு அமையப் பெற்றவன் அரசருள் ஏறு என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். இவனது பேரும் சீரும் பெருகி மிளிர்கின்றன.

அங்கங்கள் யாவும் அமையின் அவனரச
சிங்கமென நிற்பன் சிறந்து.

சேனை முதலிய உறுப்புக்கள் இதனால் குறிக்கப்பட்டன.

---

382. அன்று புரஞ்சயன்பால் அஞ்சாமை ஈகையொன்றும்
குன்றாத தென்னே குமரேசா! என்றுமே
அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு. (2)

இ-ள்.

குமரேசா! அஞ்சாமை ஈகை ஆண்மை வீரம் முதலிய குணநலங்கள் புரஞ்சயனிடம் ஏன் என்றும் குன்றாமல் இருந்தன? எனின், அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் என்னும் இந்நான்கும் எஞ்சாமை வேந்தற்கு இயல்பு என்க.

இறைவனுக்கு இயல்பாக உரியன தெரிய வந்தன.

சிறந்த ஆண்மை உயர்ந்த கொடை தேர்ந்த அறிவு ஆர்ந்த ஊக்கம் ஆகிய இந்நான்கு தன்மைகளும் நன்கு நிறைந்திருப்பவனே நல்ல வேந்தன் ஆவான்.

அரசுக்கு உரிய சிறந்த அங்கங்கள் ஆறு என முன்பு வரைந்து குறித்தார்; அரசனிடம் இயல்பாக அமைந்திருக்க வேண்டிய குண நலங்களை இதில் தொகுத்து உணர்த்துகின்றார்.

மலர் தலை உலகினுக்கு உயிர் என அமைந்திருக்கும் அரசனுக்கு உறுதியான அமைதிகள் உரிமையாய் நிறைந்தவரின் அவன் எவ்வழியும் செவ்வையாய் உயர்ந்து விளங்குவான்.

படை முதலிய ஆறும் அரசனுக்குப் புறத்து உறுப்புக்கள்; அஞ்சாமை முதலாகக் குறித்தன எல்லாம் அகத்து உறுப்புக்கள். உள்ளும் புறமும் மன்னனிடம் மன்னியிருக்க வேண்டிய நிலைகளை எண்ணி வருகின்றோம். இருவகை நிலைகளும் ஒருமுகமாய் ஈண்டு உணர வந்தன.

அஞ்சாமை = மனத்திண்மை. அரிய பெரிய காரியங்களை உறுதியுடன் செய்யும் நிலைமையுடையவன் ஆதலால் அரசன் நெஞ்சம் யாண்டும் திடமாய் நிலைத்திருக்க வேண்டும். மனத் திட்பத்தின் அளவே வினைத் திட்பங்கள் மருவி வருகின்றன.

கருவிலேயே திருவுடைய சிறந்த செல்வச்சீமான் ஆதலால் அவர்க்கும் ஈந்து அருளுதல் அரசனுக்கு இயற்கை உரிமை ஆயது. வீரமும் கொடையும் வியனிலை யுடையன.

காலம் வலி இடம் முதலிய நிலைகளை அறிந்து, மதிமந்திரிகள் கூறும் ஆலோசனைகளை ஆராய்ந்து தெளிந்து தொழில் புரிய உரியவன் ஆதலின் உயர்ந்த அறிவாளியாய் வேந்தன் தேர்ந்து நிற்க வேண்டும் என்பது ஓர்ந்து கொள்ள நேர்ந்தது.

ஊக்கம் = உள்ளக்கிளர்ச்சி. ஆட்சி முறைகளில் யாதும் தளராமல் எவ்வழியும் ஊக்கி நிற்றல் என்க. இவ்வூக்கமே கருதிய கருமங்கள் எல்லாவற்றிற்கும் உறுதியாதல் தெரிய இறுதியில் நின்றது. முதலும் ஈறும் உயர் வீறுகளாயின.

இந்நான்கும் எஞ்சாமை வேந்தற்கு இயல்பு.

என்றது அரச மாட்சிகளாய் அமைந்துள்ள இவை கோக்குடிப் பிறந்த குலமகனிடம் இயல்பாக அமைந்திருக்கும் என்னும் நிலைமை உணர வந்தது. இந்த இயல்புகள் இல்லாதவன் சிறந்த அரசனாய் விளங்கி நில்லான் என்பது குறிப்பு.

எஞ்சாமை = குறையாமை. இஃது எஞ்சுதல் என்னும் வினையடியாய்ப் பிறந்த எதிர்மறைப் பெயர். குறித்த குணமாண்புகள் யாதும் குறையாமல் எப்பொழுதும் அரசனிடம்

இசைந்திருக்கும் என்றதனால் அங்ஙனம் இசையாவழி அவனுக்கு அது பெரிய வசையாம் என்பது பெறப்பட்டது.

நல்ல வழியில் உள்ளம் தளராமல் உறுதி பூண்டு ஊக்கி நிற்பதே அஞ்சாமை என அறிய நின்றது. நெஞ்சம் கலங்காத நிலைமையே தலைமையான அரசின் வலிமையான தகைமையாம்.

அச்சம் உலோபம் மடமை மந்தம் என்னும் இவை அஞ்சாமை முதலியவற்றோடு நேரே மாறுபட்டன. இந்த இழி புலைகள் உயர்குல வேந்தரை எவ்வழியும் யாதும் அணுகலாகா.

வேந்தன் என்ற பெயர் விழுமியோனாய் மேலான நிலைமையில் இருப்பவன் என்னும் பொருளை யுடையது. மாந்தருள் உயர்ந்த தலைமை வாய்ந்தவன் வேந்தன் என நேர்ந்தான்.

> தண்சுடர்க் கடவுள் போலத் தாரகைக் குழாங்கள் தாமே
> விண்சுடர் விளக்க மாக விளங்கல வேந்தர் போல
> மண்சுடர் வரைப்பின் மிக்க மக்களும் இல்லைக் கண்டாய்
> கண்சுடர் கனலச் சீறும் கடாமுகக் களிற்று வேந்தே!
>
> [சூளாமணி]

விண்ணுலகில் சந்திரன் மேன்மையாய் விளங்கி நிற்றல் போல் மண்ணுலகில் வேந்தன் தலைமையாய் உயர்ந்து எவ்வழியும் சிறந்து நிலவியுள்ளான் என இது உணர்த்தி யுள்ளது.

அஞ்சாமை ஊக்கம் முதலிய இயல்புகள் உயர்ந்த குல வேந்தனிடம் இயல்பாகவே அமைந்து உயர்வாய் ஒளி மிகுந்து விளங்கி வரும். இவ்வுண்மை புரஞ்சயன் பால் உணர வந்தது.

சரிதம்

புரஞ்சயன் என்பவன் சூரிய குலத் தோன்றல். சுசாந்தன் என்னும் வேந்தனுடைய அருமைத் திருமகன். பேரழகன்; சிறந்த போர் வீரன். பூதங்கள் அஞ்சும் கலங்கினும் அஞ்சாத நெஞ்சினன். வண்மை திண்மை உண்மை ஊக்கம் முதலிய உயர் நலங்கள் இவனிடம் இயல்பாகக் குடிகொண்டிருந்தன. திருவயோத்தியிலிருந்து இவன் அரசு புரிந்து வருங்கால் அமரருக்கும் அசுரருக்கும் அமர் விளைந்தது. அதில் அமரர் தோல்வி யுற்றனர். திருமால் வாயிலாக இவன் பெருமையை உணர்ந்து இந்திரன் தேவர் சிலருடன் இவனிடம் வந்தான். உற்றதை

உரைத்து உதவிசெய்ய வேண்டினன். இவ் வெற்றி வீரன் விரைந்து போர்க் கோலம் பூண்டு புரந்தரனோடு பொன்னுலகு ஏகினன். இரு நாள் கழிந்து போர்நாள் மூண்டது. இவன் போர்க்களம் புகுந்தான். அசுரர் கண்டார் "ஒரு மனிதனோ நம்மை வெல்ல வந்துள்ளான்" என்று எள்ளி நகைத்தார். உடனே திரண்டார். கடல் என விளைந்து அடலுடன் பொருதார். தானவர் புரிந்த அக்கொடிய போரை நோக்கி வானவரும் அஞ்சினர். இவன் அஞ்சாது புகுந்து அடுசமர் ஆடினன். இவனது போர் வேகம் அதிசய நிலையில் எதிரேறிச் சென்றது. அவ்வாறு செல்லுங்கால் இவன் ஏறி நின்ற தேர் இடையே உடைந்தது. இந்திரன் விடை போல் விரைந்து இவன்பால் ஓடி வந்தான். ஆளிபோல் பாய்ந்து அவன் மேல் ஏறி ஊழித்தீ என இவன் உடன்று பொருதான். அசுரர் உடைந்து ஓடினர். அமரர் உவந்து சூழ்ந்து இவனைப் புகழ்ந்து கொண்டாடினர். அமரர் கோன் வாகனமாய் நின்று தாங்கின தனால் இவனுக்கு இந்திர வாகனன் என்று ஒரு பெயர் எழுந்தது. பிடரியில் அமர்ந்திருந்தமையால் ககுத்தன் எனவும் பெற்றான். ககுத்தம்=எருத்தின் பிடர். இவன் மரபில் தோன்றினமையால் இராமன் காகுத்தன் என நேர்ந்தான். வீரமூர்த்தியாகிய இராமனும் தன் பேரோடு தொடர்பு உடைய இவன் சீரோடு சிறந்து நின்றான்.

இந்திரன் இவ்வாறு இயைந்து ஒரு விடையாய்
 ஏந்தலை வெரிநிடைத் தரிப்பப்
புந்திநொந் தவுணர் இரிதரப் பொருது
 புரஞ்சயன் பொன்னுல களித்தான்;
நந்தலின் றமரர் புரந்தர னோடு
 நண்ணினர் உவந்து வீற்றிருந்தார்;
அந்தநல் விடையின் முரிப்பு உறைந்ததனால்
 அன்னவன் ககுத்தன் என்றுயர்ந்தான்.

(பாகவதம், 9-4, 6,)

தான்தனக்கு வெலற்கரிய தானவரைத் தலைதுமித்து என்
வான்தரக்கிற் றிகொலென்று குறைஇரப்ப வரம் கொடுத்தாங்கு
ஏன்றெடுத்த சிலையினனாய் இகல்புரிந்த இவர் குலத்து ஓர்
தோன்றலைப்பண்டு இந்திரன்காண் விடை ஏறாய்ச் சுமந்தானும்.

(இராமாயணம், குலமுறை கிளத்துபடலம்)

இவனது சரித்திரத்தை இவை இங்ஙனம் குறித்திருக்கின்றன. இவனுடைய உள்ளத்திண்மையும் உறுதி நிலையும் உதவி நலனும் இவற்றால் உணரலாகும். யாதும் அஞ்சாமல் மீதேறிச் சென்று அவுணரை வென்று அமராபதியைக் கைக்கொண்டு அதனை இந்திரனுக்கே ஈந்துவந்த இவனது ஊக்கப்பாட்டை உம்பரும் இம்பரும் ஒருங்கே வியந்து புகழ்ந்தார். இவன் ஆட்சி முறை மாட்சி மிகுந்திருந்தது. கருதியதைக் கடைபோகச் செய்யும் உறுதியுடையான் என மறுபுல மன்னரும் புகழ இவன் மகிமை மிகுந்து அரச குல திலகமாய் நிலவி நின்றான். அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் முதலியன உயர் குல அரசனிடம் இயல்பாக அமைந்திருக்கும் என்பதை உலகம் இவன்பால் நலமாய் உணர்ந்து நின்றது.

ஊக்கம் அமைதி உறுதி வினையாண்மை
ஆக்கம் அரசுக் கணி.

அரசுக்கு உரிய அணிகள் இதனால் கூறப்பட்டன.

---

383. திண்டோட் புரூரவனேன் தேவரினும் முன் துணிவு
கொண்டுவென்று மீண்டான் குமரேசா — மண்டியே
தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு. (3)

இ-ள்.

குமரேசா! புரூரவன் தேவரினும் சிறந்த துணிவுடையனாய் ஏன் விழிப்பாய் விளங்கி யிருந்தான்? எனின், தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும் நிலன் ஆள்பவற்கு நீங்கா என்க.

உலகத்தை ஆளுகின்ற அரசனுக்கு ஊன்றிய கவனமும் உயர்ந்த கல்வியும் உறுதித் திறமும் யாண்டும் நிலையாயிருக்கும்.

அரசகுல மாட்சியை வரிசையாக் கூறி வருகின்றமையால் அவ்வரவு முறையில் இவை ஈண்டு உறவுரிமைகளாய் வந்தன.

இம் மூன்றும் என்றதில் உம்மை முன் சொன்ன அஞ்சாமை முதலிய நான்கையும் தழுவி நின்றது. தேச அதிபதியிடம் வாசமாய் மருவி யிருக்க வேண்டிய குண நலங்கள் பல உள எனினும் இங்ஙனம் வகையாய்ச் சில நிலைகளை வரைந்து காட்டினார்.

படை முதலிய ஆறு அங்கங்கள் போல் அஞ்சாமை முதலிய எழு குணங்களும் இயல்பாக அமைந்திருக்க வேண்டும் என்க. தூங்காமை என்றது காரியங்களை விரைந்து செய்யும் தன்மையை.

தூங்கல்=சோர்தல், தாழ்தல், சோம்பல்.

அரச காரியங்கள் பல வகை நிலைகளைக் கருதியுள்ளமையால் விரைவும் கவனமும் விவேகமும் அரசியல் பின் வரிசைகளாயின.

தூங்கல் என்னும் வினையடியாய்ப் பிறந்த எதிர்மறைப் பெயரை ஈங்கு முதலில் குறித்தது, அரசன் யாண்டும் கண்விழிப் புடையனாய்க் கருமம் காணும் உரிமை காண.

நிலன் ஆள்பவன் என அரசனை இங்ஙனம் சுட்டி உரைத்தது விரிந்த பூமண்டலத்தை ஆளுகின்றவன் தூங்கி இருந்தால் பாங்கு சிதைந்து பழுது பல படியும் ஆதலால் அங்ஙனம் யாதொரு தீதும் படியாவகை கடிது காத்து நெடிது வாழ வேண்டிய நிலைமை தெரிய. கருதிய கருமங்களை யாதும் தளரா மல் துணிந்து செய்வது துணிவு என வந்தது. இந்த மன வுறுதி வினை புரியும் வகையில் மேன்மையை விளைத்து வியன் பயன் தருகின்றது. தன்மைகள் உயர நன்மைகள் விளைகின்றன.

இனிய அமளிகளில் தூங்கி இன்ப நலங்களையே எங்கணும் ஏகபோகமாய் நுகர்ந்து நாளும் தன் பாடு பார்ப்பதே அரசியல்பு எனக் கண்பாடு மண்டிக் கழிந்து போகாமல் சில பண்பாடுகளை நண்போடு இங்ஙனம் உரிமையாக் காட்டியருளினர்.

"திண்புகழ் படைப்பதும், பகையைத் தேய்ப்பதும்,
மண்புரந் தளிப்பதும் மன்னர் பேரணி;
வெண்கலை மூசுதல் கவரி வீசுதல்
புண்களும் படைத்திடும் புனலும் ஆடுமே"
(செவ்வந்திப் புராணம்)

உள்ளே உயர்ந்த நீர்மைகள் இன்றி வெளி மரியாதைகளில் மட்டும் களித்திருக்கும் அரசை இது பழித்திருக்கிறது. அரிய பெரிய காரியங்களை ஆற்றி வருவதே ஆட்சியாளரின் மாட்சியாம்.

கரும வீரங்களே மன்னனுக்கு அருமை அணிகள். அந்த எழில் அணிகளை இனிது பூண்டவனே விழுமிய அழகனாய் விளங்கி வருகிறான். காரிய ஆற்றல் சீரிய ஏற்றமாகிறது.

ஆட்சி முறையில் யாண்டும் கவனமாய் ஆற்றல் புரிந்து வரின் எவ்வழியும் ஏற்றமும் இசையும் பெருகி எங்கும் மாட்சி மிகுந்து வரும். வினை புரிய வியனான மகிமைகள் விளைகின்றன.

நீங்காத கருமக் காட்சிக்குத் தூங்காமை உரிய துணையாய் நின்று அரிய பல நன்மைகளை ஆக்கி யருளும். ஆகவே அந்த உறுதியான ஊக்கமும் நோக்கமும் ஈண்டு முதன்மையாய் முன்னுற அறிய வந்தன. தூங்காமை = யாதும் அயராமை.

தூங்காமை அரணுடைமை படையுடைமை
துணிவுடைமை தூய்மை கேண்மை
நீங்காமை அறிவுடைமை நாணுடைமை
பொறைமைபுன்மை நெறிச்செலாமை
பூங்காமை எனக்கொடுக்கும் கொடைமடமை
இவைதழுவிப் புரவு பூண்டோன்
தீங்காம்ஐ வகைப்பயம் தீர்த்து ஆறகற்றி
ஏழ்நிலம்கோல் செலுத்தா நின்றான்.
(திருவாப்பனூர்ப் புராணம்)

அரசனுக்கு உரிமையாய் அமைந்திருக்க வேண்டிய குண நலன்களைத் தொகுத்து இது குறித்துள்ளது. குறிப்பு நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். நாயனார் வாய்மொழியை நயந்து கொண்டே இந்நூலாசிரியர் இவ்வாறு பாடியிருக்கிறார். இறை மாட்சிகளைத் துறைகள் தோறும் முறையே காவியங்களில் கவிகள் கவனமாய்க் காட்டி வருகின்றனர்.

நாடும் நாட்டு மக்களும் உயர்ந்து சிறந்து உவந்து வருவது அந்த நாட்டை ஆளுகின்ற அரசனுடைய வினைத் திறங்களாலும் விவேகக் காட்சிகளாலுமே யாம். உலக உயிர்களின் உயர் வாழ்வுகள் எல்லாம் அனது வினையாண்மைகளுள் விரவி நிற்றலால் வேந்தன் எவ்வழியும் செவ்வியனாய்ச் சிறந்து செயல் புரிந்து யாண்டும் இயல் உயர்ந்து வரவேண்டும்.

காரிய நோக்கு கலை ஞானம் மனத்திண்மை வினைத்திட்பம் என்னும் இவை வீரிய வேந்தனுடைய சீரிய நீர்மைகளாம்.

அரிய இனிய இந்த இயல்புகளைக் காணியாகப் பேணி வருபவனே எவ்வழியும் பெரிய மேன்மைகளைப் பெற்று வருகிறான்.

வெளியெழுந்த போதுதான் வெய்யோன் கிரணம்
ஒளிபரந்து எவ்வுலகும் ஓங்கும் — தெளிவுடைய
வேந்தும் துணிந்து வினையாற்றின் அப்பொழுதே
போந்து விளங்கும் புகழ்

(தரும தீபிகை 772)

நிலன் ஆளும் வேந்தனுக்கு உலக ஒளி இதில் உவமையாய் வந்துளது. ஒப்புமையின் நுட்பங்கள் உய்த்துணரத் தக்கன.

சூரியன் அரிய பெரிய சோதிகளை யுடையனாயினும் ஒதுங்கி மறைந்திருந்தால் அவன் ஒளி வெளியே தெரியாது; ஊக்கி மேலே எழுந்த போதுதான் எங்கும் ஒளி பரந்து எழில் மிகுந்து பொங்கிப் பொலிந்து விளங்குவான். அதுபோல் அறிவு திரு ஆண்மை முதலியவற்றால் அரசன் பெரிதும் நிறைந்திருந்தாலும் கருமம் கருதித் துணியாமல் தூங்கியிருந்தால் அவை யாவும் மங்கி மழுங்கி மடிந்து கிடக்கும்; தூங்காமல் துணிந்து முயன்றால் இயைந்த பான்மைகள் எல்லாம் உயர்ந்த மேன்மைகளாய் ஒளி பெற்று வரும்; அவனும் அதிசய மன்னனாய் எங்கும் இசைகள் பொங்கி வரப் பொலிந்து விளங்குவான்.

தூங்கினவன் ஏங்கி இழிகின்றான்.
தூங்காதவன் ஓங்கி உயர்கின்றான்.

ஒரு குடும்பத்தை ஆளும் தலைவன் புலையாய்ச் சோம்பியிருந்தால் அந்தக் குடும்பம் நிலை குலைந்து போம். ஒரு நில மண்டலத்தை ஆளும் அரசன் துணிவின்றித் தூங்கியிருந்தால் அதில் வாழும் மக்கள் மறுகித் தாழுவர்.

பெரும்பூட் சிறுதகைப் பெய்ம்மலர்ப் பைந்தார்க்
கருங்கழல் வெண்குடையான் காவல் — விரும்பான்
ஒருநாள் மடியின் உலகின்மேல் நில்லாது
இருநால் வகையார் இயல்பு.

(புறப்பொருள் : 178)

தன் காப்பு முறையை மறந்து மன்னன் ஒரு நாள் மடிந்திருப்பின் உலகில் உயர்ந்த நீர்மைகள் நில்லாமல் நீங்கிப் போம் என இது குறித்துள்ளது. காவலன் நிலை காண வந்தது.

பயிர்களுக்கு வேலி போல் உயிர்களுக்கு வேந்தன். காவலன் என அவனுக்கு வாய்ந்துள்ள பேர் அவனது பாது காப்பின் சீரைத் துலக்கிச் சிறப்பை விளக்கி நிற்கிறது.

உள்ளம் தளராமல் உறுதி பூண்டு யாண்டும் நல்லன பரவி வர நாடு ஆள்வோரே பீடும் பெருமையும் பெற்று வருகிறார்.

தேவர் நிலைகடவார் மேலோர் திறம்பிழையார்
நாவில் இரண்டுரையார் நன்கல்லவை புரியார்
காவல் முறைதிறம்பார் காமச் செயல்பெருக்கார்
பூவலயம் காவல் புரியும் புரவலரே. (1)

குரவர் தமைக்காப்பர் செய்ந்நன்றி சொல்வார்
கரவடரைக் காய்வர்பழி கண்ணோட்டம் செய்யார்
இரவலருக்கு ஈவர் எதிர்ந்தோர் முனையின்
விரவு தமதுயிரும் எண்ணார்கள் வேந்தரே. (2)

[பிரமோத்தர காண்டம்]

நிலம் ஆளும் அரசருடைய நீர்மை சீர்மை நிலைமை தலைமை களை இவை துலக்கியுள்ளன. இனிய இயல்புகள் அரிய உயர்வுகள்.

கல்வி யறிவும் நல்ல துணிவும் கருமக் காட்சியும் தருமத் தன்மையும் மன்னனுக்குப் பெருமையா மன்னிய மாட்சிகளாம்.

இவ்வுண்மை புரூரவன் பால் தெரிய வந்தது.

## சரிதம்

புரூரவன் என்பவன் சந்திரகுலத் தோன்றல். புதனுடைய அருமைத் திருமகன். தாய் பெயர் இளை. இவன் காமனும் காமுறும் கட்டழகுடையவன். எல்லாக் கலைகளிலும் வல்லவன். அருளும் ஆண்மையும் அமைந்த நெஞ்சினன். சிறந்த போர் வீரன். மன வுறுதியும் மதி நலனும் கொடையும் தயையும் இவனிடம் அதிசய நிலையில் குடி கொண்டிருந்தன. இவன் இள வரசனாய் இருக்கும் பொழுது பிரதிட்டானபுரம் என்னும் நகரை அடுத்திருந்த ஒரு குளிர் பூஞ்சோலையில் அரமகளிர் சிலருடன் வந்து ஊர்வசி உலாவிக் கொண்டிருந்தாள். பேரழகுடைய அத் தெய்வ மங்கையை அசுரர் சிலர் கண்டார். கடுங் காதல் கொண் டார். வலிந்து கவர்ந்து மேல் விரைந்து சென்றார். அவ் வழகி நடுங்கி அலறி அழுதாள். அமரர் கண்டும் அவரோடு அமர்

செய்ய அஞ்சி அகன்று நின்றார். அவளது அபயக் குரலை இக் குலமகன் கேட்டான். வில்லுடன் விரைந்து போய் நில் என்று மறித்தான். எல்லாரும் இவனை வளைந்து கொண்டார். அப் பொல்லாத அசுரரனைவரையும் ஒல்லையில் பொருது தொலைத்து அந் நல்லாளை மீட்டி அமரர்கோன் பால் அமர விடுத்தான். இவனுடைய அருந் திறலையும் பெருந் தன்மையையும் வீர பராக் கிரமங்களையும் வியந்து மகிழ்ந்து அப் பருவ மங்கையை இவ னுக்கே உரிமையாக இந்திரன் உவந்து கொடுத்தான். அவளை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து அரசு புரிந்து வருங்கால் ஒரு புதல்வன் பிறந்தான். அவனுக்கு ஆயு என்று பெயர். அரச திருவிலும் ஆட்சி முறையிலும் போக போக்கியங்களிலும் இவன் தலைசிறந்து நின்றான். இவனது நிலைமை உயர் தலைமையா யுலாவியது. தேவரும் இவனை வியந்து புகழ்ந்தனர்.

பொருப்பினைச்சிற கரிந்தவன் புரத்துமங் கையருள்
உருப்பசிப் பெயர் ஒண்டொடி உருவினில் சிறந்தாள்
தருப்பொழிற் பயில் காலையில் தானவர் காணு
விருப்புறக்கவர்ந் தேகினர் அவளுடன் விசும்பில். (1)

கொண்டு போதலும் அபயம்என்று உருப்பசி கூவ
அண்டர் யாவரும் அஞ்சினர் அவருடன் அடுபோர்
வண்டு சூழ்குழல் அணங்கை இம் மதிமகன் மகனும்
கண்டு தேர்நனி கடவினன் அசுரர்மெய் கலங்க. (2)

நிறந்தருங்குழல் அரிவையை நிறுத்திவாள் அவுணர்
புறந்தரும்படி புரிந்தபின் புரந்தரன் தூதால்
மறந்தருங்கழல் மன்னவன் மண்மிசை அணைந்து
சிறந்த அன்பொடு அத்தெரிவையை நலம்பெறச்
சேர்ந்தான். (3)

மாயன் ஊருவில் வந்தருள் அந்தமான் வயிற்றில்
ஆயு என்றொரு செம்மலை அம்மகன் அளித்தான்;
தேயு வும்பல தேவரும் மகிழமற் றிவனே
மேய வண்புகழ் வேந்தரில் வேள்வியால் மிக்கோன். (4)
[பாரதம்]

குருகுல அரசர் மரபில் இவன் சரிதம் இங்ஙனம் குறிக்கப் பட்டுள்ளது. இளமையில் இவன் புரிந்த வீரப் பிரதாபங்களை விண்ணும் மண்ணும் எண்ணி மகிழ்ந்தன. கருமச் சூழ்ச்சியும்

கல்வித் தேர்ச்சியும் தைரிய சீலங்களும் என்றும் இயல்பாக வுடைய இவனது புகழ் எங்கும் ஒளி வீசி நின்றது. தூங்காமை கல்வி துணிவுடைமைகள் நிலன் ஆள்பவரிடம் நீங்காதிருக்கும் என்பதை உலகம் இவன் பால் உணர்ந்து மகிழ்ந்தது.

கலைபலவும் கற்றவர்க்குஓர் கண்ணுறய கல்வியினன்
இலைஎனவாய் உரைத்தல்பெயர் எனக்கொடுக்கும் கரதலத்தான்
அலைகடல்சூழ் நெடும்புடவி அனைத்தும்ஒரு குடை நிழற்றிப்
புலைமிடிவேர் அறக்களைந்து போக்கியெழும் விறல்வீரன். (1)

உரைப்பார்வாய் உரைப்பவைதன் புகழேயாம் படியுயர்ந்தான்
தரைப்பால்வாழ் உயிர்க்கன்றித் தரியலரே யானுர்க்கும்
விரைப்பால்வண் கற்பகத்தார்மிலைச்சுவான் கொடுத்துவப்பான்
திரைப்பால்மால் விழிவளரத் திசையுருட்டும் நேமியினன். (2)

ஒருபுடைவெவ் அராக்கொளினும் ஒருபுடையால் உலகனைத்தும்
கருகிருள்தீர் தரவிளக்கும் கடவுள்மதிக் குலத்துதித்தான்
இருநிலத்தில் உயிர்வருத்தம் தன்வருத்தம் எனக்கொண்டே
பொருதளித்திட் டவையுவப்ப உவப்பெய்தும் புந்தியினன். (3)

ஆன்றபல பெருங்கேள்வி அமைச்சர்புரோ கிதராதி
ஏன்றஅர சுரிமையுடைச் சுற்றத்தார் எலாம் சூழத்
தோன்றமதிக் குடைநிழற்றித் துன்னலர்வெம் பகைமுருக்கித்
தேன்ததும்பு வாகைகொளீஇச் செய்யகோல் நடாத்திடுவான்.
(திருப்பெருந்துறை)

கல்வி கொடை வீரம் நீதி கருதியதை முடிக்கும் திறம் முதலியன இம்மன்னனிடம் மன்னியிருந்த மாட்சிகளை இன்னவாறு மேலோரும் நூலோரும் போற்றி யுள்ளனர்.

ஆளும் வேந்தன் அறநெறி யாளனுய்
நாளும் மாந்தரை நாடி நலமுடன்
கேளும் கேண்மை கிளர்ந்து புரந்திடின்
நீளும் ஆட்சி நெடிது நிலவுமே.

வீரம் கொடைநீதி மெய்யமைதி வென்றியருள்
ஈரம் அரசின் இயல்பு.

தீர தைரியங்கள் அரசனுக்குச் சீரிய நீர்மைகளாம்.

———

**384.** வீரமிகு உக்கிரப்பேர் வேந்தன் குலமானம்
கூர நின்றான் என்னே குமரேசா — நேரும்
அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. (4)

இ-ள்.

குமரேசா! அறம் மானம் முதலிய நிலைகளில் உக்கிர குமார பாண்டியன் ஏன் உயர்ந்து விளங்கினார்? எனின், அறன் இழுக்காது அல்லவை நீக்கி மறன் இழுக்கா மானம் உடையது அரசு என்க.

அரசனது அரிய உரிமைகள் அறிய வந்தன.

அறநெறிகளில் வழுவாமல் நின்று பழி நிலைகளை ஒழித்து வீரம் குன்றாத விழுமிய மானம் உடையவனே உயர்குல வேந்தன். இறைமையின் உடைமை இனிது தெரிய வந்தது.

அரசன் கரும வீரனாய்ச் சிறந்திருக்க வேண்டும் என்று முன்பு கூறினார்; இதில் தரும வீரனாய் அவன் உயர்ந்து நிற்க வேண்டும் என்கிறார். எவ்வழியும் வீரம் இறைமையின் உயர் நிறை.

கரும தருமங்கள் இருமைக்கும் முறையே உரிமைகளாகின்றன. இகமும் பரமும் அவற்றால் சுகமாய் வருகின்றன.

அறம் மறம் என்பன னகர ஈறுகளை மருவி வந்துள்ளன.

அறன் என்றது அரச தருமங்களாய் அமைந்துள்ள நீதி நலங்களை. நெறிமுறைகள் நேரே அற ஒளிகளாகின்றன.

மறன் என்றது மனவுறுதி மருவிய நல்ல வீரத்தை.

மறன் இழுக்கா மானம் = வீரம் வழுவாத மேன்மை.

ஈனம் உறாத இனிய மாட்சி மானம் என வந்தது. தாழ்வு நேராதபடி தன்னை யுடையானைப் பாதுகாத்து வரும் தகைமை யுடையதே மானம் என்னும் பேரை மகிமையா எய்தியுளது.

அல்லவை என்றது களவு கொலை முதலிய தீமைகளை.

நல்ல நெறிகளுக்கு மாறானவைகள் அல்லவை என நேர்ந்தன. பாவ இருள் ஒழியவே, புண்ணிய ஒளி விரிகிறது.

நல்லவை ஓங்கிவர அல்லவை நீங்கி ஒழிய ஆட்சி புரிபவனே மாட்சிகளை மருவி வருகிறான். அறனில் நிலைத்து, அல்லவை

தொலைத்து, மறனில் உயர்ந்து, மானத்தில் சிறந்து நிற்பின் அந்த மன்னன் புகழ் வானத்தை அளாவி வளரும்.

அறனில் இழுக்கி நின்றவன் அல்லலை நீக்க இயலாது; மறனும் இழுக்கி, மானமும் இழக்க நேரும் ஆதலால் தரும நீதியில் அரசன் உறுதியாய் நிலைத்து நிற்க வேண்டும் என்பதை முதலில் வலியுறுத்தித் தலைமையா உணர்த்தினர்.

எந்த அரசன் தருமத்தைத் தலைமையாத் தழுவி வருகிறானோ அவனிடம் எல்லா மகிமைகளும் எளிதே வந்து சேருகின்றன. புண்ணியம் எண்ணரிய இன்பங்களை ஈகின்றன.

அரசனுடைய ஆட்சியும் மாட்சியும் அறத்தின் வழியே அதிசய ஒளிகளை அடைந்து யாவரும் துதி செய்ய வருகின்றன.

அறநெறி முதற்றே அரசின் கொற்றம். (புறம்)

வெற்றித் திருவோடு வேந்தன் யாண்டும் உயர்ந்து விளங்க வேண்டுமானல் அறத்தை அவன் எவ்வழியும் போற்றி வர வேண்டும் என மருதன் இளநாகனர் என்னும் சங்கப் புலவர் இவ்வனம் இதமாய் இனிது போதித்துள்ளார்.

என்ன இடர் நேர்ந்தாலும் தருமம் தவருமல் ஒழுகி வருபவனே விழுமிய கோமகனுய எங்கும் விளங்கி வருகிருன்.

பிறத்தல் என்று உற்றபின் பெறுவ யாவையும்
திறத்துளி உணர்வதோர் செம்மை யுள்ளத்தாய்!
புறததுறு பெரும்பழி பொதுவின் றெய்தலும்
அறத்திறம் மறத்தியோ? அவலம் உண்டெனு. (1)

நிறப்பெரும் படைக்கலம் நிறத்தின் நேருற
மறப்பயன் விளைக்குறும் வன்மை அன்றரோ
இறப்பினும் திருவெலாம் இழப்ப எய்தினும்
துறப்பிலர் அறம்எனல் சூரர் ஆவதே. (2)

கான்புறம் சேறலின் அருமை காண்டலால்
வான்பிறங் கியபுகழ் மன்னர் தொல்குலம்
யான்பிறந்து அறத்தினின்று இழுக்கிற் றென்னவோ?
ஊன் துறந்து உயிர்குடித்து உழலும் வேலினுய்! (3)

(இராமா: 2-5)

அறத்தை அரசன் போற்றி வரவேண்டிய திறத்தைக் குறித்து இராமபிரான் இவ்வாறு சுமந்திரனிடம் வலியுறுத்தி யிருக்கிறார். கவிகளில் மருவியுள்ள கருத்துக்களைக் கருதிக் காணுங்கள். யான் அறத்தின் நின்று இழுக்கிற்று என்னவோ! என்னும் இது இங்கே நன்கு சிந்திக்க வுரியது

அறன் இழுக்காதவர்; அல்லவை நீக்கினவர்; மறன் இழுக்காத மானம் உடையவர் இக் கோமகன் என்பதைச் சிவிய ஓவியங்களாகக் காவியங்கள் காட்டி வருகின்றன. அந்தக் காட்சிகளைக் காணும் தோறும் அரசகுல மாட்சிகளை யாவரும் அறிந்து உவந்து வருகின்றனர். தேவரும் புகழ்ந்துள்ளனர்.

மன்னன் புண்ணிய சீலன் ஆயின் அவன் எண்ணிய நலன் கள் எல்லாம் எளிதே எய்துகின்றன. வெற்றியும் புகழும் விளைந்து வருகின்றன. மறுமை இன்பங்களும் உரிமைகளா கின்றன. அறனுடையான் அதிசயம் உடையான்.

அறம்பொருள் இன்பம் இம்மை மறுமை
திறம்பாப் புகழே மதிப்பென்று ஏழும்
பெருஞ்செங் கோலின் நெறியின் தன்னிலே.
(பிங்கலந்தை)

செங்கோல் வேந்தன் சேரவுரிய நிலைகளை இது கூறி யுளது. மன்னவன் ஆட்சிமுறை மாட்சிகளுடையது.

இருளை நீக்கி ஒளியை விரித்துச் செங்கதிரோன் உலகத்தை வாழ்ந்துவரச் செய்கிறான்; அல்லவை நீக்கி நல்லவை ஆக்கிச் செங்கோல் வேந்தன் உயிர்களை உவந்துவரப் புரிகிறான்.

வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்
நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்துய்ப்பத் துறக்கம்வேட்டு எழுந்தாற்போல்
பல்கதிர் ஞாயிறு பகல்ஆற்றி மலைசேர. [கலி, 118]

துயர்களை நீக்கி உயிர்களைப் பாதுகாத்த அரசன் அந்தப் புண்ணியப் பயனை அநுபவிக்க விண்ணுலகம் புக்கது போல் பக லில் ஒளி செய்து உலகத்தை ஓம்பி வந்த கதிரவன் மாலையில் மலைச் சிகரத்தைச் சேர்ந்தான் என்னும் இது இங்கே ஓர்ந்து உணர வுரியது. மான வேந்தன் வான ஒளியாய் வயங்கியுள்ளான்.

விரியிருட் பகையை ஓட்டித் திசைகளை வென்று மேல்நின்று
ஒருதனித் திகிரி யுந்தி உயர்புகழ் நிறுவி நாளும்
இருநிலத்து எவர்க்கும் உள்ளத்து இருந்தருள் புரிந்துவீய்ந்த
செருவலி வீரன் என்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான்.
(இராமா, 2-6)

நீதிநெறி நின்று உலகத்தைப் பாதுகாத்து வந்த தசரத மன்னன் இறந்து போனது போல் சூரியன் மறைந்து போனான் என்று அவனது சிறந்த நிலையை விளக்கி இது குறித்துள்ளது.

சீரரசு ஆண்டுதன் செங்கோல் செலநாள் செலீஇக் கழிந்த
பாரரசு ஒத்து மறைந்தது நாயிறு. (திருவிருத்தம் 80)

செங்கோல் அரசனைச் செஞ்ஞாயிறு என இது கூறியுள்ளது.

வல்லமை மிகுந்த பகைவரையும், பொல்லாத குறும்பரையும் அடக்கி ஒடுக்கி நல்ல குடிகளை நன்கு பாதுகாக்க வல்ல அரசனுக்கு வீரம் தலைமையாய் நிலவி நிற்க வேண்டும். அந்த நிலைமை தெரிய மறனும் மானமும் இறுதியில் மருவி நின்றன.

மானம் உயிரினும் சிறந்தது; அதற்கு யாரேனும் குறை புரிய நேரின் கோபம் மூண்டு கொதித்து எழும்; அவ்வாறு சினம் மீறி எழுந்த பொழுதும் அறத்துறை நழுவாமல் தழுவிய அமராடல் புரிவது குல வீரர் இயல்பாம்.

அறத்துறை அன்று; வீரர்க்கு அழகும் அன்று; ஆண்மை அன்று;
மறத்துறை அன்று; சேமம் மறைந்துறைந்து ஒதுங்கி வாழ்தல்;
நிறத்துற வாளி கோத்து நேர்வந்து நிற்கும் ஆகின்
புறத்துற எதிரே வந்து போர்தரப் புகறி என்றான்.
(இராமா, அங்கத, 12)

தனக்குக் கொடிய துயரத்தைச் செய்துள்ள இராவணனுக்கு இவ்வாறு இராமன் வீரவாதம் கூறி விடுத்துள்ளான். பொருது தோல்வியடைந்து அவன் குன்றி நின்ற போதும் இன்று போய் நாளை வா! என்று விளம்பி விடுத்தது எத்தகைய சுத்த வீரம்! எத்துணை நீதி! இத்தகைய மானவீரம் மருவியிருத்தலினாலே தான் வீரமூர்த்தி என இத் தீரன் விளங்கி நிற்கின்றான்.

கல்வி கொடை நீதி முதலியவற்றால் அடையும் புகழைக் காட்டிலும் வீரத்தால் பெறுகின்ற புகழே அரசனுக்கு மிகவும் உயர்ந்ததாம். அருந்திறல் இசை அரியபெரிய அதிசயமுடையது.

மாதிரம் பனிக்கும் மறம்வீங்கும் பல்புகழ்
கேட்டற்கு இனிது. (பதிற்றுப்பத்து 12)

திசைகள் தோறும் இசை பெற்று வருவது வீரப்புகழே. அதுவே வேந்தனுக்கு மெய்யான கீர்த்தியாம் என இது விளக்கியுளது. வியனுண சீர்த்தி நயமா அறிய வந்தது.

மடங்கா மயிலூர்தி மைந்தனை நாளும்
கடம்பம்பூக் கொண்டேத்தி அற்ருல் — தொடங்கமருள்
நின்றிலங்கு வென்றி நிரைகதிர்வேல் மாறனை
இன்தமிழால் யாம்பாடும் பாட்டு (1)

செங்கண் நெடியான்மேல் தேர்விசையன் ஏற்றியபூப்
பைங்கண்வெள் ஏற்ருன்பால் கண்டற்ருல் — எங்கும்
முடிமன்னர் சூடியபூ மொய்ம்மலர்த்தார் மாறன்
அடிமிசையே காணப் படும். (2)

(முத்தொள்ளாயிரம்)

பாண்டிய மன்னனுடைய வீரப் புகழைக் குறித்து இவை சுவையா விளக்கியுள்ளன. குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க. வெற்றிவேல் மாறன் விறலறிய வந்தது.

தரும சீர்மையும் கருமச் சீர்மையும் சுத்த வீரமும் உத்தம மானமும் அரச குணங்களுள் தலை சிறந்தன. அதிசய மேன்மைகளான இவற்றை உரிமையாக உடைய மன்னன் எவ்வழியும் ஒளி மிகப் பெற்று யாண்டும் பெருமையாய் விளங்குவான்.

இவ்வுண்மை உக்கிர குமார பாண்டியன்பால் உணர வந்தது.

சரிதம்

இந்த வீரக் குரிசில் மதுரையில் இருந்து அரசு புரிந்த சோமசுந்தர பாண்டிய மன்னனுடைய அருமைத் திருமகனுர். குமார தெய்வத்தின் கூருய் இவர் அவதரித்தார். அழகு அறிவு அமைதி ஆண்மை வீரம் கொடை நீதி வாய்மை முதலிய சீர்மைகள் எல்லாம் இவரிடம் உரிமையாக் குடிகொண்டிருந்தன. இத் தென்னுடு செய்த புண்ணியப் பயனுல் மன்னர் பிரானுய் இவர் மன்னி விளங்கினுர். இவரைக் கண்டவர் எல்லாரும் தெய்வ பிண்டம் எனக் கருதி வணங்கி உருகி மகிழ்ந்தனர். மறுபுல மன்னரும் இவர்பால் உழுவலன்புடையராய்த் தொழுது நின்றனர். விழுமிய நிலைகளை வியந்து யாவரும் புகழ்ந்து போற்றினர்.

வழுதியர் பெருமான் தன்பால் கந்தனே வந்தான் என்பார்;
பழுதறு கற்பி ஞள்தன் பாக்கியம் இதுவே என்பார்;
அழகினல் மதனும் பெண்மை அவாவுறும் இவன்கோல் ஆணை
எழுகடல் உலகோ வையம் ஏழையும் காக்கும் என்பார். (1)

மனிதர்வான் தவமோ தென்பார் வைகுவோர் தவமோ வானப்
புனிதர்வான் தவமோ வேள்விப் பூசுரர் தவமோ கேள்வி
முனவர்வான் தவமோ ஈறு முதலிலா முதல்வன் உள்ளக்
கனிதரு கருணை போல்இக் காதலன் தோற்றம் என்பார். (2)

தருமமா தவத்தின் பேறே அருத்தமா தவத்தின் பேறே
பெருமைசால் காமம் நோற்ற பெருந்தவப் பேறே எய்தற்கு
அருமையாம் வீடு நோற்ற அருந்தவப் பேறே இந்தத்
திருமகன் என்று தம்மில் விளுய் மகிழ் சிறப்பச் சென்றார். (3)
(திருவிளையாடல் 11)

இன்னவாறு உலகம் உவந்து போற்றிவர இம் மன்னர் பிரான் மாட்சி மீதூர்ந்து வந்தார். பருவம் எய்தியபின் காந்திமதி என்னும் கன்னியை மணந்து கதிர்முடி புனைந்து அரியணை அமர்ந்து அரசுபுரிந்தருளினர். இவரது ஆட்சியில் குடி சனங்கள் பெரு மகிழ்ச்சி யுடையராய்ப் பெருகி வந்தார். தன் நாட்டை இவர் காத்துவருகிற காட்சியைக் கண்டு பொன் னாட்டு மன்னனும் பொறாமை மீக் கொண்டான். காவாகச் சில இடையூறுகளைச் செய்துவந்த இந்திரன் முடிவில் நேரே போருக்கு நேர்ந்தான். சேனைச் செருக்கோடு செயிர்த்து வந்த அமரர்கோனை அமர் முனையில் இவர் அடர்ந்து வென்றார். மணிமகுடம் இழந்து அவன் மறுகி மீண்டான்.

காய்சின மடங்கல் அன்னன் கைவளை சுழற்றி வல்லே
வீசினன் குலிசம் தன்னை வீழ்த்தது விடுத்தான சென்னித்
தேசினன் மகுடம் தள்ளிச் சிதைத்தது சிதைத்த லோடும்
கூசினன் அஞ்சிப் போனன் குன்றிறகு அரிந்த வீரன்.
(திருவிளையாடல் 14)

மகுடபங்கம் அடைந்து இந்திரன் படைகளோடு உடைந்து போயுள்ளதை இதில் உணர்ந்து கொள்கிறோம். இங்ஙனம் எங்கும் குன்றாத வென்றியாளராய் விளங்கியிருந்த இவர் உலகத்தை இனிது பாதுகாத்து வந்தார். இவரது ஆட்சியுள்

அல்லன யாவும் அகன்று ஒழிந்தன; நல்லன எல்லாம் நண்ணி வந்தன. அறத்தில் வழுவாமல் நின்று அல்லவை கடிந்து நல்ல மான வீரங்களோடு சிறந்து வருவோனே உயர்ந்தகுல வேந்தன் என்பதை உலகம் இவர்பால் நன்கு உணர்ந்து வந்தது.

தானம் தருமம் தகவு தனிவீரம்
மானம் அமைதி மதியூகம் — ஆன நலம்
யாவும் உடைய அரசன் அவனிக்குத்
தேவின் அமுது தெளி.

தருமம் தழைக்கத் தனிநீதி ஆற்றும்
கருமம் அரசின் கடன்.

அறமும் நீதியும் ஆட்சியின் மாட்சிகள்.

---

385. அன்றேன் பெருவளத்தை ஆக்கிப் பிருதுநலம்
குன்றுமல் காத்தான் குமரேசா — நன்று
இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. (5)

இ-ள்.

குமரேசா! அரிய பெரிய வளங்களை ஈட்டிப் பிருது மன்னன் ஏன் உயிர்களைக் காத்தான்? எனின், இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த வகுத்தலும் வல்லது அரசு என்க.

அரச காரியங்களின் வரிசை தெரிய வந்தது.

வருவாய்க்கு உரிய வழிகளை உளவாக்கிப் பொருள்களைத் தொகுத்துப் பாதுகாத்துத் தக்க வகைகளில் மிக்க கவனமா வகுத்தருள வல்லவனே பகுத்தறிவுடைய நல்ல அரசன்.

தருமமும் வீரமும் மானமும் உடையவனாய் மன்னன் மன்னி இருக்கவேண்டும் என்று முன்னம் உரைத்தார்; இதில், பொன்னும் பொருளும் இன்ன வகையில் ஈட்டி இன்னவாறு இனிது போற்றவேண்டும் என உணர்த்துகின்றார். அறம் தோய்ந்து பொருள் வாய்ந்து வர ஆட்சி மாட்சியாய் ஓங்கி வருகிறது.

இயற்றல் = பொருள் வருதற்குரிய துறைகளை உளவாக்குதல். இயல்பாக முதலில் ஆற்றுவது இயற்றல் என இசைந்தது.

நீர் நிறைந்து வருதற்கு வாய்க்கால் தோண்டுதல் போல் பொருள் பெருகி வருதற்கு வழிகளை வளமாச் செய்து கொள்ளின் அந்த நிலை வருவாய்த் துறைகள் எல்லாவற்றிற்கும் மூல காரணமாய் முதன்மை எய்திச் சாலவும் பயனுயுளது.

நாட்டிலும் காட்டிலும் மலையிலும் கடலிலும் வருவாய்கள் பெருவாரியாய்ப் பெருகி வர அரசன் அறிவாற்றலுடன் ஆக்கிக் கொள்ள வேண்டும். அந்த ஆக்கம் ஆட்சிக்கு அதிசய மாட்சியாம். முயற்சிகளின் அளவே உயர்ச்சிகள் ஓங்கி வருகின்றன.

நிலத்துள் கரந்து பரந்திருக்கும் நீர் போல் பொருள்கள் எங்கணும் மறைந்து விரிந்துள்ளன. அவை எவ்வழியும் செவ்வையாய்ச் சுரந்து வர விரைந்து வினைசெய்துகொள்ளின் அந்த வேந்தன் பெருந் திருவாளனாய்ச் சிறந்து திகழ்வன்.

ஊக்கி முயன்றவரின் ஆக்கம் பெருகி வரும்.

ஈட்டல்=பல வருவாய்களிலிருந்தும் நிலையாக நாடி நேரே நிறையச் சீரோடு பொருளைத் தொகுத்தல்.

காத்தல்=சேர்த்த பொருளை நன்கு பாதுகாத்துவைத்தல்.

வகுத்தல்=தொகையை வகையாகச் செலவு செய்தல்.

செல்வங்களை இவ்வாறு பல்வழிகளிலும் செவ்வையாகப் பெருக்கி நல்வழிகளில் பரப்பி நாட்டைப் பாதுகாத்து வருபவன் உயர்குல வேந்தனாய் எவ்வழியும் ஒளி மிகப் பெறுகிறான்.

நிதி நிறைந்து வரப் பதி சிறந்து வரும் என்பது பழமொழி. பொருள் நிறைய எல்லா நலன்களும் ஒருங்கே நிறைகின்றன.

மேலே கூறிய வகைகளை எல்லாம் நன்கு ஆற்றிக் காரிய சித்திகள் கைவரப் பெற்றவனே சீரிய செல்வனாய்ச் சிறந்து வீரிய மன்னனாய் விளங்கி நிற்பன். இந்த நிலைமை தலைமையாகத் தழைத்து வர உழைத்து வருபவனே உத்தமமான கொற்றவன். வினையாண்மையே அரசுக்கு மேலான மேன்மை.

வல்லது அரசு = இயற்றலாதிகளில் வல்லவனே நல்ல அரசன். கரும வீரனிடம் தருமங்கள் உரிமையா நிறைகின்றன.

அரிய வன்மைகள் எல்லாம் அரசுக்கு உரிய தன்மைகள்

ஆதலால் அவனுடைய ஆண்மை ஆற்றல்கள் மேன்மையாய் அறிய வந்தன. அரிய முயற்சி பெரிய உயர்ச்சிகளை அருளுகிறது.

இயற்றல் முதலிய இந்த நான்கு துறைகளிலும் முறையே திறலுடன் வினையாற்றும் தீரனே வெற்றி வேந்தனாய் விறலுடன் விளங்கி நிற்கின்றான். கருமங்களை ஆற்றி வரும் அளவு அரச தருமங்கள் எங்கணும் ஏற்றமாத் தழைத்து வருகின்றன.

வல்லது அரசு என்று வகுத்துள்ளமையால் அங்ஙனம் அல்லது அரசு ஆகாது என்பது மருமமாய் அறிய நின்றது.

மணிமுடி புனைந்து அரியணை அமர்ந்து அழகுக் காட்சிக்காக வீற்றிருப்பவன் என்று தன்னை மன்னன் எண்ணலாகாது. இன்ன வகைகளில் தேறி இன்னவாறு அவன் இசை பெற்றிருக்க வேண்டும் என நன்னயமாக ஈண்டு நவின்றருளினார்.

முன்னோர் முதன்மையா வைத்துள்ள அரசுரிமையைக் கைக்கொண்டவன் தானாக முயன்று செய்ய வேண்டிய கடமைகளை அவன் உணர்ந்து கொள்ளும்படி இது உயர்ந்து வந்துள்ளது. பழம்பெருமைகளை நினைந்து உளம் களிகூர்ந்து இளங்கோ இழிந்து போகலாகாது; தானும் சுயமாய் முயன்று தன் அரசை வானும் புகழ்ந்துவர மான வீரங்களோடு மன்னன் வினைகளை வியனா ஆற்றி நயமாப் போற்றி வர வேண்டும்.

ஏரி குளங்களில் பெருகிய நீரை விளைபுலன்களுக்கு உழவன் அளவறிந்து விடுதல் போல் சேர்ந்த பொருளை அறம் புகழ் இன்பங்கள் ஆகிய நெறிகளில் அரசன் வரைப்பு செய்துவிட வேண்டும். அவ்வாறு செவ்வையாகத் தேர்ந்து செய்பவனே செங்கோல் வேந்தனாய் எவ்வழியும் இசை பெற்று வருகிறான்.

படைகள் விறலுடன் கிளர்ந்துவரக், குடிகள் வளமுடன் வாழ்ந்துவர, அமைச்சு முதலிய உரிமைச் சுற்றங்கள் எவ்வழியும் பெருமையாய் உயர்ந்துவர, தரும நீதிகள் எங்கணும் செழித்துத் தழைத்துவர, நிதியறைகள் என்றும் நிறைந்துவர மதிமாண்புடன் கருமங்கள் புரிந்துவரும் அதிபதியே பரமபதியின் அருளைப் பெற்று இருமையும் இன்பம் மிகப்பெறுகிறான்.

செல்வத்தை வளமாகத் தேடவும் அதனை நல்ல வழிகளில் செலவு செய்யவும் அரசன் வல்லவனாய் இருக்க வேண்டும்.

உலக வாழ்வும் மதிப்பும் பொருளால் பொலிந்து வருத லால் அதனைப் போற்றி வருந்திறங்கள் அரச உரிமைகளா யுள்ளன. யாவும் எங்கும் தழைத்துவர நன்கு உழைத்து நாட்டைப் பாதுகாத்து வருதலே நரபதியின் கடமையாம்.

இன்புடை அறங்கள் நல்லோர் இளையவர் குரவ ராகத்
தன்பெரும் கிளைகள் சுற்றம் மந்திரத் தலைவ ராக
மன்பதை கனிக ளாகத் தானைகள் மணிவீழ் ஆக
அன்பெலாம் வடிவ மாக அரசுமேல் வளரு மன்றே..
(செவ்வந்திப் புராணம்)

பொருள்வரு வாயினைப் புரியு மாட்சியும்
இருநிலம் காவலும் இருவா வேந்தரை
மருவுறச் சந்துசெய் மறுவில் வண்ணமும்
கருதிய மன்னரால் கைக்கொள் வாரரோ.
(விநாயக புராணம்)

சத்திரம் சோலை சாலைகள் குளங்கள்
தண்நதி மதகொடு ஆலயங்கள்
வித்தியா சாலை மாடகூ டங்கள்
வேறுவேறு அமைத்துவே ளாண்மை
சத்தியம் அகலா வாணிகம் ஆதி
சகலநல் தொழில்அவர் அவர்கள்
நித்தியம் முயல இத்திசை புரக்கும்
நிருபனே நிருபனும் மன்னே. (நீதிநூல்)

உரிய துறைகள் தோறும் பொருள்கள் வளமாய்ப் பெருகி வரப்புரிதல், அவற்றைக் கருத்தோடு யாண்டும் கவனமாய்ச் சேர்த்து நிறைத்தல், அவ்வாறு நிறைத்த தானியக் களஞ்சியங் களையும் நிதி அறைகளையும் சேமமாய்ப் பாதுகாத்து வைத்தல், பின்பு தக்க வழிகளில் நாட்டுக்கும் மக்களுக்கும் நல்ல அறங் களுக்கும் நன்கு பயன்படும்படி வகுத்து அருளுதல் ஆகிய செயல்களை உயர்வாகச் செய்பவனே உத்தம வேந்தன் என இவை உணர்த்தி யுள்ளன. உறுதி நலங்கள் உணர வுரியன.

இயற்றல் முதலிய வினைத் திறங்களாலேயே அரசுக்கு உயர்ச்சியான மாட்சிகள் யாண்டும் நீண்டு உளவாகின்றன.

இவ்வுண்மை பிருது மன்னன்பால் தெரிய வந்தது.

**சரிதம்**

பிருது என்பவன் சூரியகுல வேந்தனாகிய வேனனுடைய அருமைத் திருமகன். இவன் தோற்றம் மிக்க அற்புதம் உடையது. இவன் தோன்றிய பொழுது இந்நிலவுலகில் பல நலங்கள் தோன்றின. தெய்வத் திருவருளுடைய இவன் பால் தேவர்கள் ஆவல் கொண்டு ஆதரவு புரிந்தனர். இந்திரன் குபேரன் வருணன் வாயு முதலிய அமரர் பலரும் உவந்து அணிகளும் மணிகளும் படைக்கலங்களும் இவனுக்கு விழைந்து கொடுத்தனர். பல கலைகளையும் பழுதற இவன் பயின்று தெளிந்தான். அழகிலும் அறிவிலும் வீரத்திலும் தலைசிறந்து விளங்கிய இவன் பருவம் எய்தியவுடன் கந்தவருச்சி என்னும் மங்கையை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து அரசை இனிது பேணி வந்தான். பகைவர் கொடியர் மடியர் கள்வர் புல்லர் என்னும் பொல்லா நிலையினர் தன் ஆட்சியில் எங்கும் இல்லை என்று சொல்லும்படி இவன் செங்கோல் செலுத்திச் சீர் பல புரிந்தான். இவனுடைய குண நலங்களும் ஆட்சித் திறமும் மாட்சிகள் நிறைந்து யாண்டும் இசை மிகுந்து வந்தன.

சந்திரன் உயிர்க்கெலாம் தாபம் நீக்கலான்
இந்திரன் உலகினி தளிக்கலான் எனச்
சுந்தர அரசனை முனிவர் சொற்கொடு
வந்தியர் முதலினோர் வழுத்தல் மேயினார். (1)

மாற்றலர்க்கு அணுகுரு மாட்சியான் ; அனல்
கூற்றுவன் அறம்பிழைத் தோரைக் கோறலான் ;
ஏற்ற நல் தூதரால் எங்கும் நாடலான்
காற்றினுக்கு இறைஎனக் கருத லாகுமே. (2)

அளவிடற் கரியநல் ஆற்றல் மேவலான்
வளமலி வாரிதி ; வருணன் ஈகையான் ;
ஒளிதரும் இருநிதிக்கு உறையுள் ஆகையான்
களிசெயும் அளகையர் காவ லாளனே. (3)

(பாகவதம், 4-4)

பிருது மன்னனுடைய நீர்மை சீர்மைகள் இவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளன. இங்ஙனம் அரிய தன்மைகளும் பெரிய நன்மைகளும் அமைந்திருந்த இவன் அரசு புரிந்து வருங்கால்

பூமியில் ஒரு முறை வளம் குறைந்து போயது. வறுமை வளர்ந்தது; குடிகள் தளர்ந்தன. நெறி முறை வழுவாமல் நீதி செய்து வந்தும் தன் ஆட்சியில் இவ் வண்ணம் அவலம் நேர்ந்ததே! என்று இவ் வேந்தன் சிந்தை நொந்து சீறி எழுந்து போர் வில் எடுத்துப் பூமிதேவியைப் பொருது வரம் பெற உறுதி பூண்டு உருத்து மூண்டான். இவனது நிலைமையை நோக்கிய நிலமகள் ஒரு பசு வடிவமாகி விரைவுடன் ஓடினாள். இவன் விடாது தொடர்ந்தான். முடிவில் நெருங்கி "ஓ பார் மகளே! என் அம்பால் நின்னை அழிப்பேன் பார்!" என்று அடுகணை பூட்டினான். இவனது அருந்திறலை வியந்து பூதேவி எதிரே தோன்றி நீ கருதிய வரங்களைத் தருகின்றேன் என்று கருணை புரிந்தாள். "உலகம் முழுவதும் இனிய வளங்கள் நிறைந்து உயிரினங்கள் சுகமாக வாழ வேண்டும்" என இவ் ஆண்டகை வேண்டினான். அவ்வாறே ஆகுக என அவள் அருளி அகன்றாள். அதன்பின் எங்கும் வளங்கள் பொங்கி மலிந்து பொலிந்து திகழ்ந்தன. இவன் புகழ் யாண்டும் நீண்டது.

"ஆதித்தன் குலமுதல்வன் மனுவினையார் அறியாதார்?
பேதித்த உயிரனைத்தும் பெரும்பசியால் வருந்தாமல்
சோதித்தன் வரிசிலையால் நிலமடந்தை முலைசுரப்பச்
சாதித்த பெருந்தகையும் இவர்குலத் தராபதிகாண்."

(இராமாயணம்)

இராமனது குல முறையைக் குறித்துச் சனகனிடம் கோசிகர் கூறிவருங்கால் இப் பிருது மன்னனை இவ்வாறு குறித்திருக்கிறார். அரசு புரியும் அரிய மாட்சிக்கு இவன் ஓர் பெரிய காட்சியாய்ப் பெருகியுள்ளான். அதிசய நலங்களை நிலத்தில் உளவாக்கி வந்தமையால் இவன் பெயரால் பிருதுவி என இப் பூமிக்கு ஒரு பெயரும் வந்தது. வருபொருள் ஈட்டி அறநெறிகளைப் பேணி வையம் காத்த இவன் தெய்வீக மாட்சியில் சிறந்து விளங்கினான். இயற்றலும் ஈட்டலும் காத்தலும் வகுத்தலும் வல்லவனே நல்ல அரசன் என்பதை உலகம் காண இவன் யாண்டும் நலமாய் உணர்த்தி நின்றான்.

நிதிபலவும் ஈட்டியே நீதிநிலை நாட்டிக்
கதிகாட்டல் வேந்தன் கடன்.

பொருள் ஈட்டி அரசு அருள் காட்ட வேண்டும்.

386. மண்டுபுகழ் அத்திமன்னன் மாநிலத்தை ஏனுலகோர்
கொண்டு புகழ்ந்தார் குமரேசா — கண்டுமகிழ்
காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம். (6)

இ-ள்.

குமரேசா! அத்தி மன்னன் ஆண்ட நிலத்தை ஏன் உலகம் மிகவும் புகழ்ந்து கூறியது? எனின், காட்சிக்கு எளியன் கடும் சொல்லன் அல்லனேல் மன்னன் நிலம் மீக்கூறும் என்க.

மன்னன் = மன்னுயிர் புரப்பவன்.

எளிய காட்சி அரசுக்கு அரிய மாட்சி என்கிறது.

தன்னைக் காண வந்தவர்க்கு எளிய காட்சி தந்து இனிய உரைகள் கூறுவனாயின் அந்த அரசனை உலகம் மிகவும் புகழ்ந்து போற்றும். இசை பெற வாழ்வதே இறை வாழ்வாம்.

புகழ் பொலிந்துவரும் வழி தெரிய வந்தது.

அரசன் அரிய பெரிய மாட்சிகளை உடையவன் ஆதலால் குடி சனங்கள் நேரே வந்து எளிதாக அவனைக் காண அஞ்சுவர். அவ்வாறு அஞ்சாதபடி யாரும் எப்பொழுதும் தங்கள் குறைகளையும் முறைகளையும் நேரே தெளிவாகத் தெரிவித்துக்கொள்ளும் வண்ணம் மன்னன் இனிய நீர்மையனாய் எளிது அமைந்திருப்பின் அது அவனுக்குப் பெரிய சீர்மையாம்.

காரியம் கருதித் தன் பால் வந்தவரை விரைந்து கண்டு மலர்ந்த முகத்தனாய் அவர் வேண்டியதை உவந்து கேட்டு உரியதை உடனே செய்தருள வேண்டும் என வேந்தனது கடமையை இங்ஙனம் நன்கு விளக்கியருளினார்.

பெற்ற பிள்ளைகளைத் தந்தை சிந்தையுவந்து காணுதல் போல் தன் தேசத்தில் உற்ற மக்களை அரசன் உரிமையுடன் கண்டு உசாவி அறிந்து உதவி புரிந்து வரின், அவனை இறைவன் என்றே கருதி யாவரும் மகிழ்ந்து புகழ்ந்து வருவர். செயலும் சொல்லும் இனிமை தோய்ந்துவர எல்லா மகிமைகளும் உயர்வாய் ஓங்கி எவ்வழியும் இசைகள் பெருகி வருகின்றன.

எளிய காட்சி உருவிலும் இனிய சொல் உரையிலும் மருவி மிளிர மன்னன் நன்னயமாய் நன்கு ஒழுகி வரவேண்டும்.

குடிகளின் குறைபாடுகளையும் முறையீடுகளையும் பரிவுடன் விரைந்து கேட்டு நெறிமுறையே நீதி புரியும் அரசன் நெடிய கீர்த்தியுடன் நிலவி யுயர்கின்றான்.

முறைவேண்டு பொழுதில் பதன்எளியோர் ஈண்டு
உறைவேண்டு பொழுதில் பெயல்பெற் றோரே.

(புறம் 35)

மாந்தர் முறை வேண்டி வந்த பொழுது வேந்தன் எளிய காட்சியனாய் இதம்புரிந்தருளின் அவன் கருதிய பொழுது மழை அங்கே உரிமையுடன் உவந்து பொழிந்தருளும் என இது மொழிந்துளது. உறை=நீர்த்துளி. பெயல்=மழை.

நெறி முறையே நீதி புரிந்து வரும் அரசனிடம் தெய்வத் தன்மை தோய்ந்து வருகிறது; வரவே அவன் வேண்டியபோது மழை பெய்து ஈண்டிய வளங்களை அருளி வருகிறது.

"குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்
பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு
முறைவேண்டு நர்க்கும் குறைவேண்டு நர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி
இடைத்தெரிந் துணரும் இருள்தீர் காட்சிக்
கொடைக்கடன் இறுத்த கூம்பா உள்ளத்து
உரும்பில் சுற்றமோடு இருந்தோன்."

[பெரும்பாண்]

தொண்டைமான் இளந்திரையன் என்னும் மன்னன் எளிய செவ்வியனாயிருந்து எவர்க்கும் இனிய காட்சி தந்து அளிபுரிந்து அரசு ஆண்டு வந்துள்ள நீர்மையை இது சீர்மையா விளக்கியுளது. குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க.

வறுமை முதலிய துயரங்களால் வாடி வந்தவரது குறை பாடுகளையும், வலியரால் நலிவடைந்து மெலிந்து நொந்தவர் களுடைய முறையீடுகளையும் விரைவில் கேட்டு நீதி புரிய உரிய அரசன் எளிய காட்சியனாய் இலனாயின் நொந்து வந்தவர் சிந்தை தளர்ந்து தியங்கி மயங்குவர்; மக்கள் அங்ஙனம் மறுகி அயரின்

அது அரசுக்கு அவகேடாம். அவ்வாறு கேடு நேரா வகை காட்சிக்கு எளியனாயிருந்து அளியுடன் அவன் காத்தருள வேண்டும்.

"இன்சொல் எண்பதத்தை ஆகுமதி பெரும!" (புறம் 40)

இனிய மொழியுடன் எளிய செவ்வியனாய் இருந்தருள்! என்று சோழ மன்னனை நோக்கி ஆவூர் மூலங்கிழார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் அறிவு நலம் கூறியிருக்கிறார்.

சுலப சீலமும் மதுர வாக்கும் மன்னனுக்கு இன்னுயிர்த் துணைகளாய் எவ்வழியும் செவ்விய இசை புரிந்தருளுகின்றன.

கேட்பவர் உள்ளம் வருந்த உருத்து வருகிற வார்த்தை கடுஞ்சொல் என வந்தது. கடிய சொல்லனை உலகம் கொடியன் என்று இகழும். இனிய சொல்லனை எவ்வழியும் மகிழ்ந்து புகழும். மீக் கூறும் = மேலாகப் புகழ்ந்து போற்றும்.

எளிமையும் இனிமையும் தழுவி வருபவனை விழுமிய வேந்தன உயர்ந்தோர் விழைந்து புகழ்ந்து யாண்டும் உவந்து வருவர் என்பார் நிலம் மீக்கூறும் என்றார்.

பாணர் பாடுநர் பரிசிலர் ஆங்கவர்
தமதெனத் தொடுக்குவர் ஆயின் எமதெனப்
பற்றல் தேற்றாப் பயங்கெழு தாயமொடு
அன்ன வாகநின் ஊழி நின்னைக்
காண்டல் வேண்டிய அளவை வேண்டார்
உறுமுரண் கடந்த ஆற்றல்
பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயோ!

(புறம் 135)

ஆய் வள்ளலை மோசியார் இவ்வாறு உள்ளம் உவந்து பாடியுள்ளார். நல்ல நீர்மைகள் தோய்ந்தவன் ஆதலால் எல்லாரும் அவனைப் புகழ்ந்து போற்றியுள்ளனர். மீக் கூற்றத்து நாடு கிழவோயே! என்னும் இது ஈண்டு எண்ணி நோக்கவுரியது.

இறை மீக்கூறிய வென்றி. [பெருங்கதை 3, 6]

மீக் கூறுதல் இதன் கண்ணும் வந்துள்ளது காண்க.

தன் நாட்டில் உள்ள மக்களை மன்னன் எவ்வழியும் உரிமையுடன் பேணிவரின் அவனை எந் நாட்டவரும் விழைந்து புகழ்ந்து போற்றி வருவர். இனிய குண நலன்களோடு நெறி முறைகள் தழுவி ஒழுகிவரும் அளவே வேந்தன் விழுமிய மேன்மையனாய் விளங்கி வருகிறான். மாந்தரும் அவனை மகிழ்ந்து வருகின்றனர்.

முடிபுனைந்தசீர் மன்னவர் நெறியினால்,
முன்னவர் தவத்தால்பைந்
தொடிமடந்தையர் கற்பினால் மதிதொறும்
சொரிதரு மும்மாரி
வடிபெருந்துளி மாரியால் பலபயிர்
வளம்தரும் பயிர்தம்மால்
குடிவளந்தரும் குடியினால் மன்னர்செங்
கோல்முறை தழைத்தோங்கும்,

(திருக்குற்றால புராணம்)

நீதி நெறியால் அரசரும், தவத்தால் அந்தணரும், கற்பினால் பெண்களும், மழை வளத்தால் பயிர்களும், பயிர்களின் விளைவால் குடி சனங்களும், குடிகளின் ஒழுக்கத்தால் செங்கோலும் செழித்துத் தழைத்து ஓங்கும் என்னும் இது ஈண்டு நுனித்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வுரியது.

குடி மகிழ்ந்து வரும் அளவு கோன் உயர்ந்து வருகிறான். மக்கள் மகிழ்ச்சியாய் வாழ்ந்துவர இனிய பண்புகள் சார்ந்து ஓர்ந்து புரிபவன் உத்தம வேந்தனாய் ஒளி மிகப் பெறுகிறான்.

இவ்வுண்மை அத்தி மன்னன்பால் அறிய வந்தது.

சரிதம்

அத்தி என்பவன் சந்திரகுல வேந்தன். சுகோத்திரன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். இவன் அருந் திறலாளன். மிக்க மதி நலமும் தக்க சூழ்ச்சியும் வாய்ந்தவன். கலைகள் பலவும் நன்கு பயின்று உலக நிலையை ஓர்ந்து கொண்டவன். வில் வலியிலும் மல் வலியிலும் வியத்தகு நிலையில் இவன் விளங்கியிருந்தான். ஆட்சிக்கு உரிய மாட்சிகள் எல்லாம் இயல்பாகவே இவனிடம் இனிது அமைந்திருந்தன. குடி மகிழ்ச்சியே கொற்றவன் உயர்ச்சி என்பதைக் கூர்ந்து தேர்ந்து

யாரிடமும் அன்பு புரிந்து இவன் ஆதரித்து வந்தான். தன் நாட்டைப் பல வகையிலும் வளப்படுத்தித் தன் ஆட்சியை மாட்சிபெற நடத்தினன். தனக்கு இனிய இராசதானியாக அதிசயமான புதிய நகரம் ஒன்றை உண்டாக்கினன். அது இவன் பேரோடு மருவி அத்தினபுரி என வழங்கப்பட்டது. அமரரும் வியக்கத்தக்க அற்புத நிலையில் அமைந்திருந்த அப் பதியில் அமர்ந்து இவன் அரசு புரிந்தான். திசைகள் எங்கனும் இவனுடைய இசைகள் பரவி எழுந்தன. மறுபுல மன்னர் எல்லாரும் உரிமை மீக்கூர்ந்து இவனை உவந்து கொண்டாடினர். ஆட்சி முறையில் மாட்சி மிகுந்து நின்றமையால் இவனால் இவனுடைய மரபுக்கு மிகவும் பெருமை வளர்ந்தது.

மூக்குலத்தினும் மதிக்குலம் முதன்மைபெற் றதுஎன்று
எக்குலத்தினில் அரசும்வந்து இணையடி இறைஞ்ச
மைக்குலத்தினில் புட்கலா வர்த்தமாம் எனவே
அக்குலத்தினில் அத்தி என்பவன்அவ தரித்தான். (1)

கொண்டல் வாகனும் குபேரனும் நிகர்எனக் குறித்துப்
புண்ட ரீகன்முன் படைத்தஅப் புரவலன் அமைத்தது
எண்டி சாமுகத் தெழுதுசீர் இயக்கர்மா நகரும்
அண்டர் தானமும் உவமைகூர் அத்தின புரியே. (2)

(பாரதம்)

கண்ணின்மணி நமக்கென்று கலைமகளால் அவாவுநரும்
எண்ணின்அளப் பரியவளம் இயல்பமைந்த மாநகரம்
விண்ணின்அம ராவதிதன் நிலைவழீஇ வீழ்ந்து உவரி
மண்ணின்அமர்ந் திருந்தென்ன வயங்குறும் அத்தினநகரம்.

(புரூரவம்)

இவ் வேந்தனது பெருமையும் இவன் இயற்றிய நகரத்தின் அருமையும் இங்ஙனம் நயமாக் குறிக்கப்பட்டுள்ளன. "எக் குலத்து அரசும் அடி இறைஞ்ச" என்றதனால் இவன் முடி புனைந்து ஆண்ட முறைமை அறியலாம். குறைபாடுகளும் முறையீடுகளும் தன் குடிகளிடம் யாதும் நிகழாதபடி நாளும் இவன் கருதிக் காத்து வந்தமையால் யாவரும் இவனைத் தேவன் என்று புகழ்ந்து ஆவலோடு போற்றி வந்தார். காவல் மன்னவரும்

இவனது காப்புத் திறத்தை வியந்து அம் முறையைக் கைமாண்டு உடர்சிர் அடைந்தார். எவருடைய குறைகளையும் விரைவில் நீக்கி எவ்வுயிரையும் தன் உயிர்போல் இவன் இனிது பேணி அருளினன். குடிகள் எளிது காண அளிபுரிந்து மலர்ந்த முகத்தனாய் இனிது மொழிந்து என்றும் இதம் புரிந்துவந்த இவனது நீதி முறைமையையும் நிலவலயத்தையும் மாதவரும் மகிழ்ந்து நின்றனர். காட்சிக்கு எளிமையும் கடுஞ்சொல் இன்மையும் உடையனாயின் அம் மன்னனை யாவரும் உவந்து போற்றுவர் என்பதை உலகம் காண இவன் நன்கு உணர்த்தி நின்றான்.

தாய்முகத்தைக் காணும் தனயர்போல் தன்குடிகள்
வாய்முகத்தைக் காணும் வழிபுரிந்து — நோய்முகத்தை
நீக்கி அருளும் நிலவேந்தை எவ்வுலகும்
தூக்கி மகிழும் தொடர்ந்து.

நாடி அடைந்தார் நலனழிந்து நன்மைசெயின்
தேடி அடையும் திரு.

எளிய செவ்வி அரசுக்கு அரிய செல்வம்.

---

387. தண்டாத இன்சொலொடு தண்ணளிசேர் போசனேன்
கொண்டான் உலகைக் குமரேசா — கண்டனைய
இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு. (7)

இ-ள்.

குமரேசா! இனிய சொல்லும் ஈகையும் உடைய போசன் ஏன் இவ்வுலகை உரிமையாக் கொண்டான்? எனின், இன்சொலால் ஈத்து அளிக்க வல்லாற்கு இவ்வுலகு தன் சொலால் தான் கண்டனைத்து என்க.

உலகம் வசமாகும் உளவு தெரிய வந்தது.

இனிய மொழியுடன் உவந்து கொடுத்தருளவல்ல மன்னனுக்கு இந்த உலகம் தனி உரிமையாய் இனிது வந்து அவன் சொல்வழியே தோய்ந்து தொடர்ந்து நிற்கும்.

முன்பு, காட்சிக்கு எளிமையும் கடுஞ்சொல் உரையாமையும் ஆட்சியாளர்க்கு மாட்சியாம் என்றார்; இதில், இனிய சொல்லும் ஈகையும் அவர்க்கு உயர் நலபாரம் என்கிறார்.

நல்ல குண நீர்மைகள் மனிதனை எல்லா வகையிலும் உயர்வுறச் செய்கின்றன. சொல்லும் செயலும் இனிமையும் இதமும் தோய்ந்துவரின் அந்த மனிதனை யாவரும் உவந்து புகழ்ந்து போற்றி வருகின்றனர். மாநிலம் ஆளும் மன்னனுக்கு நாநலம் முதலியன எவ்வழியும் நலம் பல தருகின்றன.

சாதாரணமான ஒரு பொது மனிதன் இனியவன் ஆயின் அவன் அளவில் உயர்வினையடைவன். உலகை ஆளும் அரசன் நல்ல நீர்மையாளனாய் நண்ணி வரின் எல்லாரும் யாண்டும் அவனைப் புண்ணிய மூர்த்தி என்று திசை நோக்கித் தொழுது துதித்து உரிமையோடு வழிபாடு செய்து வருவர்.

அளிக்க = அருள் சுரந்து ஆதரித்துவர.

வல்லான் என்றது இனிய தன்மைகள் தோய்ந்த அந்த நல்ல வன்மை அமைதல் அரிது என்பது தெரிய வந்தது.

ஈத்து = ஈதலைச் செய்து.

ஈந்து என்னாது ஈத்து எனப் பிறவினையால் உரைத்தது அரசனது கொடை வரிசை தெரிய. விரும்பி வேண்டியவர்க்கு வேண்டியவற்றை ஏவலரைக் கொண்டும் கொடுப்பிப்பான் ஆதலால் ஈத்து என்றார். ஈகை வழியே வாகை விளைகிறது.

இன்சொல்லை முதலில் குறித்தது ஈதலினும் முந்துற அது இன்பம் பயத்தல் கருதி. உள்ளங்குளிர வருவது முன்னுற உணர வந்தது. முகம் மலர அகம் மலர்கிறது.

அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின். (குறள் 92)

முன்னர் வந்துள்ள இது ஈண்டு எண்ணியுணர வுரியது.

இன்சொல்லும் ஈகையும் எவரையும் வசப்படுத்திக் கொள்ளும். இந்த இனிய நீர்மைகள் மன்னனிடம் மன்னியிருப்பின் மாநிலம் முழுவதும் அவனிடம் உரிமையாய் மருவியிருக்கும். அவனது ஆட்சி யாண்டும் மாட்சிமையாய் நீட்சி யடைந்து நெடிது நிலவி நிற்கும். உள்ளம் கனிய உலகம் கனிகிறது.

இனிய சொல்லினன், ஈகையன், எண்ணினன்,
வினையன், தூயன், விழுமியன், வென்றியன்,
நினையும் நீதி நெறிகடவான்எனின்,
அனைய மன்னற்கு அழிவும் உண்டாங்கொலோ?

(இராமாயணம்)

இன்னவாறான இனிய தன்மைகள் மன்னரிடம் இயல்பாய் மருவியிருக்க வேண்டும் என வசிட்ட முனிவர் இராமபிரானுக்கு உணர்த்தியிருக்கிறார். இன்சொல்லும் ஈகையும் இதில் முதன்மையாய் வந்துள்ளன. இவ்வுண்மையை நுண்மையா நோக்கிக் கொள்க. தண்மையும் வண்மையும் தருமங்களாகின்றன.

இத்தகைய குண நலன்களையுடைய அரசன் எத்திசையும் புகழ உத்தம சீலனாய் உயர்ந்து திகழ்கின்றான். அவனது அரசு நித்தியமாய் நிலைத்து நெடிய வளங்களுடன் நிலவுகின்றது.

ஆழிசூழ் உலகெலாம் அரசு செய்துநீ
ஊழியும் வாழ்கஎன்று உவந்து போற்றினார்.

வையமாந்தர் இராமனை இவ்வாறு உள்ளம் கனிந்து உரிமையுடன் வாழ்த்தியுள்ளனர். நல்ல நீர்மைகள் தோய்ந்த வேந்தனை மாந்தர் எல்லாரும் மகிழ்ந்து புகழ்ந்து போற்றி வருவதை நீதி மன்னர் சரிதைகளில் நேரே பார்த்து வருகிறோம்.

அகல்வையத்துப் பகல் ஆற்றி
மாயாப் பல்புகழ் வியல்விசும் பூர்தர
வாள்வலி யுறுத்துச் செம்மை பூஉண்டு
அறன் வாழ்த்த நற்காண்ட
விறன் மாந்தரன் விறன்மருக!
ஈரம் உடைமையின் நீரோர் அனையை
அளப்பருமையின் இருவிசும்பு அனையை
கொளக்குறைபடாமையின் முந்நீர் அனையை
பன்மீன் நாப்பண் திங்கள் போலப்
பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை
ஆறிய கற்பின் தேறிய நல்லிசை
வண்டார் கூந்தல் ஒண்தொடி கணவ!
நின்நாள், திங்கள் அனைய வாக திங்கள்
ஆண்டோர் அனைய வாக, ஆண்டே

15 ஊழி அனைய வாக, ஊழி
வெள்ள வரம்பின ஆகென உள்ளிக்
காண்கு வந்திசின் யானே; செருமிக்கு
உருமென முழங்கு முரசின்
பெருநல் யானை இறைகிழ வோயே!

(பதிற்றுப்பத்து)

இரும்பொறை என்னும் சேர மன்னனுடைய சீர்மை நீர்மைகளை இதில் கூர்மையாய் ஓர்ந்து கொள்கிறோம். பெருங்குன்றூர் கிழார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியுள்ளார்.

பாட்டில் படிந்துள்ள பான்மை மேன்மைகள் பல முறையும் சிந்திக்க வுரியன. ஈரம் இரக்கம் பாதுகாப்பு முதலிய அரிய இனிய இயல்புகள் இவனிடம் பெருகி யிருந்தமையால் உலகம் இவனை உவந்து வந்துள்ளது. புலவர்களும் இவனைப் புகழ்ந்து வாழ்த்தி எவ்வழியும் வியந்து போற்றி யுள்ளனர்.

தான் கண்ட அனைத்து என்றதில் அகராம் ஒருவி நின்றது. குண நலமுடைய அரசன் கருதியபடியே எல்லாச் செல்வங்களையும் எளிதே அடைந்து கொள்வன் என்பதை இதில் தெளிவாய்த் தெரிந்து நீர்மை சீர்மைகளைத் தேர்ந்து கொள்கிறோம்.

இனிய பண்புகள் நிறைந்து வருகிற வேந்தனிடம் உலகம் உரிமையாய் உவந்து விரைந்து வந்து சேர்ந்து கொள்ளும் என்பது இங்கே ஓர்ந்து உணர்ந்து கொள்ள வந்தது.

நல்ல இயல்புகள் எல்லா உயர்வுகளையும் ஒருங்கே அருளுகின்றன. அந்த மன்னன் அதிசய மகிமைகளுறுகிறான்.

இவ்வுண்மை போசன்பால் நேரே தெரிய வந்தது.

சரிதம்

போசன் என்பவன் சிந்துலன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். சிறந்த மதிமான். இவனது காலம் இற்றைக்குத் தொளாயிரம் ஆண்டுகளுக்கு முன்னராகும். இவன் பாலனாய் இருக்கும் பொழுதே தந்தையார் காலம் ஆயினார். தன் பிதாவுடன் பிறந்த சிறிய தந்தை ஒருவன் இருந்தான். அவன் பெயர் முஞ்சன். கடிய நெஞ்சன். கொடிய வஞ்சன். இளவரசனாகிய இவனுக்குத் தலைமையாளனாய் அமர்ந்து

அவன் ஆட்சி புரிந்தான். இக் குலமகன் கலைகள் பலவும் கற்று நலமுடன் வளர்ந்து வந்தான். இங்ஙனம் வருங்கால் ஒருநாள் சமந்தன் என்னும் சிறந்த நிமித்திகன் அரசவையை அடைந்தான். சாமுத்திரிகம் என்னும் உருவக் கலையில் உயர்ந்த பண்டிதனாகிய அவன் இக் குமரனைக் கண்டான். வியந்து நோக்கினான். அங்க அமைதிகளையும் திருமுகப் பொலிவையும் கருதி மகிழ்ந்து அரசனை நோக்கினான். "உலகம் முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆளும் தலைமை நிலைமை இக் குலமகனிடம் குடிகொண்டுள்ளது" என்று கூறிச் சென்றான். முஞ்சன் நெஞ்சம் திரிந்தான். இவன் பருவம் எய்தினால் தன் பதவி போய்விடுமே என்று பயந்தான். சதி செய்யத் துணிந்தான். கொலைஞர் நால்வரை அழைத்தான். இவனைத் தனியே கொண்டுபோய்க் கொன்றுவிடும்படி குறித்து விடுத்தான். அவரும் விரகு புரிந்து உறவுடையவர்போல் கரவுடன் இவனைக் கைக்கொண்டு சென்றார். கருதிய இடத்தை அடைந்தார். கருத்தை முடிக்க விரைந்தார். கொலை புரியும் நோக்கோடு அலமந்து நிற்கின்ற அவரது குறிப்பை இவன் கூர்ந்து நோக்கினான். நிலைமையை ஓர்ந்து கொண்டான். அது பொழுது அவரிடம் இவன் உரைத்த உரைகள் என்றும் எவரும் நினைந்து சிந்திக்க உரியன. அயலே காண்க.

"மனுமுதலோர் பலகோடி மன்னர்வந்துஇம்
மண்ஆண்டு மாண்டே போனார்;
இனிதாக ஒருவரும்இங்கு இருந்ததுஇலை;
எந்தைமட்டும் இருப்பார் ஆயின்,
மனமார எனதுயிரை வடிவாளுக்கு
இரையிடுங்கள் மகிழ்ந்து நானும்
தனியாக இறக்கின்றேன் தளராமல்
எறிமின்என்று சாற்றி நின்றான்." (போசன்)

இளவரசன் பரிவுடன் கூறிய இப் பொருள் மொழிகளைக் கேட்டதும் அப் பொல்லாதவர்களும் உள்ளம் உருகினார், உணர்வு கலங்கினார். சிறிய துக்கைத அரச பதவியை விழைந்து தன்னைக் கொலை செய்யத் தூண்டியுள்ளமையைக் குறிப்பால் உணர்ந்து உரைத்த இந்த வார்த்தைகளை அறிந்து அவர் அஞ்சி நடுங்கினார்; விரைந்து முஞ்சனிடம் போய் நிகழ்ந்ததை நேரே

பரிந்து மொழிந்தார். அதிபாதகச் செயலைத் துணிந்து நின்ற அவனும் மதிமயக்கினான். கொலை விரும்பிய அவனது உள்ளமும் உயிரும் இக் குலமகன் உரைகளை உணர்ந்து துடித்தன. தேச ஆசையால் எவ்வளவு தீசச் செயலை நினைந்தேன்! என்று அலறி ஓடி வந்து போசனை அணைந்து எடுத்தான். அழுது இரங்கினான். பின்பு அணிநகர் கொண்டுபோய் இவனுக்கு மணிமுடி சூட்டினான். தன் பாதகம் தீர அவன் மாதவம் நாடினான். நீதியும் தருமமும் எங்கும் நிலவி உலாவ அரியணை அமர்ந்து இவன் முதுநிலம் புரந்தான். உயிர்களிடம் உரிமை பூண்டு அரசை இவன் பேணி வந்த முறை ஆட்சியாளர்க் கெல்லாம் அரிய இனிய ஒரு காட்சி யாய் நின்றது. அழகு அறிவு ஆண்மை மேன்மை கொடை அளி முதலிய குண நலங்களில் இவனுக்கு நிகரானவர் எவரும் இலர் என உலகம் உவந்து புகழ இவன் உயர்ந்து விளங்கினான். வட மொழியில் இவன் பெரிய புலமை யுடையவன். கலைஞர்களையும் கவிஞர்களையும் கண் எனக் கருதி இவன் காதலித்து வந்தான். புலவர்களுக்கு வாரி வழங்கி யாரிடமும் இன்சொல் இயம்பி வந்த இவனது சீரும் சிறப்பும் திசைகள் தோறும் பரவி நின்றன. கலைக்கு உதவிவந்த வள்ளல்களுள் இவன் நிலைக்கு இதுவரை எவரும் ஏறவில்லை. பரிசில் வண்மைக்கு இக் குரிசில் தலைசிறந் திருந்தமையால் கொடையில் சிறந்தவனைப் போசன் என்று உலகம் பேச நேர்ந்தது. இவனை ஈசனோடு எதிர் நிறுத்திப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இதன் அடியில் வருவது.

"ஒருபாதி மால்கொள மற்றொரு பாதி உமையவள்கொண்டு
இருபாதி யாலும் இறந்தான் புராரி; இருநிதியோ
பெருவாரி தியில் பிறைவானில் சர்ப்பம் பிலத்தில்கற்ப
தருவான போச! கொடைநின்கை; ஓடுஎன்கை தந்தனனே."

சிவன் இன்ன காரணத்தால் செத்துப் போனான்; போகவே அவன் கையிலிருந்த நிதியங்கள் யாவும் கடலில் மறைந்தன; சந்திரன் வானில் போயிருந்தான்; பாம்பு பாதலம் புகுந்தது; கொடையை உன் கையில் கொடுத்து வைத்தான்; ஓட்டை என் கையில் தந்தான்; உன்னை நாடி வந்தேன்; என்னை ஆதரித்தருள் எனப் பாடியிருக்கும் இந்தப் பாட்டின் அழகைப் பார்க்க.

கற்பக தருவை ஒத்தவன் எனப் போசனை இதில் குறித்திருத்தலால் இவன் ஈந்து வந்துள்ள இயல்பும் உயர்வும் அறியலாகும். ஈசன் கொடை போசன் கையில் ஏறியுள்ளது என்றது இவனது வாசி தெரிய வந்தது. புவி அரசனாகவும் கவி அரசாகவும் பொருந்தியிருந்து எவரிடமும் இன்சொல் இயம்பி ஈகை புரிந்து குடிகளை இனிது பேணிவந்த இவன் உலகம் முழுவதையும் தனி உரிமையாகப் பெற்று ஐம்பத்தாறு ஆண்டுகள் யாண்டும் இன்புற ஆண்டு வந்தான். இன்சொல்லால் ஈந்து அளிக்கவல்லானுக்கு நிலவுலகம் இயல்பாகவே தனி உடைமையாம் என்பதை எவரும் காண இவன் நன்கு உணர்த்தி நின்றான்.

மனம்வாய் இனிமையுறு மன்னன்பால் வையம்
தனதாய் உறுமே தனி.

இன்சொல்லும் ஈகையும் அரசுக்கு இரு பெரு நிதியம்.

---

388. திண்டோள் மனுவினைஏன் தெய்வமென் றெல்லாரும்
கொண்டாடி நின்றார் குமரேசா — கொண்ட
முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறைஎன்று வைக்கப் படும். (8)

இ-ள்.

குமரேசா! நீதிமுறை செய்த மனுவினை ஏன் யாவரும் தெய்வம் என்று புகழ்ந்து போற்றினார்? எனின், முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும் என்க.

இது நீதி மன்னன் ஆதி தேவன் என்கின்றது.

நீதிமுறை புரிந்து உயிர்களை நன்கு பாதுகாக்கின்ற அரசன் உலக மக்களுக்கு ஒரு தெய்வம் என்று போற்றப் படுவான்.

முறை = நீதி; ஒழுங்கு; நெறி நியமம்.

முறை செய்தலாவது, தன் நாட்டில் வாழும் குடிகள் யாதொரு குறையும் நேராதபடி எவ்வழியும் செவ்வையாக ஆராய்ந்து யாண்டும் நீதிநெறி கோடாமல் ஆட்சிபுரிந்து வருதல்.

மனித சமுதாயம் இனிது வாழ்ந்துவர ஆய்ந்து சூழ்ந்து தொழில் புரிந்து வருபவனை விழுமிய வேந்தனாய் விளங்கி வருகிறான். செய்யும் வினையின் சீர்மை அளவே தெய்வ நீர்மை சேர்ந்து வருகிறது. செயல் உயர உயர்வுகள் இயல்பாய் உளவாகின்றன. இனிய கருமம் அரிய தருமம் ஆகிறது.

முறைமை செய்து வருபவன் இறைமை எய்தி வருகிறான்.

இறை = தெய்வம்; கடவுள்.

எங்கும் நிறைந்து எல்லாவற்றையும் அறிந்து உயிர்கள் செய்துவரும் வினைகளுக்குத் தக்கபடி இறைவன் முறையே பலன்களை அருளி நலன்களை நோக்கி வருகிறான்.

தன் தேசத்தில் வாழ்ந்து வருகிற மக்களுடைய செயல் இயல்களை ஒற்றர்கள் மூலம் உய்த்துணர்ந்து தக்கவாறு அளியும் தெறலும் புரிந்து வேந்தன் முறைசெய்து யாண்டும் நெறி நியமங்களுடன் நடந்து வருதலால் இறைவன் என நேர்ந்தான்.

நேரே கண்கண்ட தெய்வமாய்க் காட்சி தந்து ஆட்சி புரிந்து வருகிற மன்னவன் மாட்சியை இன்னவாறு மகிமையாக் காட்டியருளினார். வையம் உய்ய வழிகோலி வருபவன் தெய்வமாய்த் திகழ்கிறான். செய்யும் செயல்வழி சீர்த்தி விளைகிறது.

உயிரினங்களைக் காத்தருளுவது கடவுள் இயல்பே. அவ்வாறு காப்பாற்றும் தன்மையைக் கைக்கொண்டுள்ள வேந்தனை இறைவன் என்று வையம் உவந்து வாழ்த்தி வருகிறது.

அகில உலகங்களுக்கும் அண்ட சராசரங்களுக்கும் அதிபதியாயிருக்கிற அந்த அதிசய இறையினும் வேறுபாடு தெரிய மன்னவன் மக்கட்கு இறை என்று தக்கவாறு குறித்தார்.

நெறி வழுவாமல் நின்று நீதிமுறை புரிந்து உலகத்தைப் பாதுகாத்து வருகிற அரசனைக் கடவுள் என்று கருதி மக்கள் உள்ளம் உருகி உரிமையுடன் எவ்வழியும் பெருமையா உவந்து போற்றி வருவர். அந்த உண்மை ஈண்டு ஊன்றி உணர வந்தது.

முறை செய்பவனை இறை என்றதனால் அவ்வாறு செய்யாதவனது சிறுமையும் ஈங்கே தெளிவாய்த் தெரிய நேர்ந்தது.

முறைமுறை ஆய்ந்து முயன்றிலர் ஆகில்
இறையிறை யார்க்கும் இருக்க அரிது ;
மறையது காரணம் மற்றொன்றும் இல்லை
பறையறை யாது பணிந்து முடியே.

(திருமந்திரம்)

குலமகட்குத் தெய்வம் கொழுநனே ; மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும் ; அறவோர்க்கு
அடிகளே தெய்வம் ; அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை.

(நீதிநெறி விளக்கம்)

ஒருமையால் துன்பம் எய்தும் ஒருவனை ஒருமை யாலே
திருமையால் முயங்கும் செல்வச் செருக்கொடு திளைப்ப நோக்கி
இருமையும் ஒருமையாலே இயற்றலின் இறைவன் போலப்
பெருமையும் உடைய தெய்வம் பிறிதினி இல்லை யன்றே.

(சூளாமணி)

யாவ ராயினும் நால்வரைப் பின்னிடின்
தேவர் என்பது தேறும்இவ் வையகம்
காவல் மன்னவர் காய்வன சிந்தியார்
நாவி னும்உரை யார்நவை அஞ்சுவார்.

(சீவக சிந்தாமணி)

அரச னேஉல கினுக்குஉயிர் ; அரசனே தருமம் ;
அரச னேபெருங் கடவுளும் ; அவன்இலை என்னில்,
விரைசெய் மாலையாய் ! மின்னனார் கற்பும் மெய்ப்பொருளும்
உரைசெய் முன்னரில் தீர்தரும் ; என்கொலோ உளவாம் ?

(பாரதம்)

திருவுடைமன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்
உருவுடைவண்ணங்கள்காணில் உலகளந் தான்என்று துள்ளும்
கருவுடைத் தேவில்கள் எல்லாம் கடல்வண்ணன் கோயிலே என்னும்
வெருவிலும் வீழ்விலும் ஓவாக் கண்ணன் கழல்கள் விரும்புமே.

(திருவாய்மொழி)

அரசனுடைய மகிமை மாண்புகளை இவை குறித்து வந்துள்ளன. உலகினுக்கு உயிர் அரசனே ; அவனே தெய்வம் ;

கண்கண்ட கடவுளான அவன் இல்லையானால் நீதி முறைகள் யாதும் இல்லாமல் மக்கள் நிலை குலைந்து போவர் என இவை உணர்த்தியிருக்கின்றன. பொருள் நிலைகளையும் குறிப்புகளையும் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து தெளிந்து கொள்ள வேண்டும்.

முறையும் வாய்மையும் முயலு நீதியும்
அறையும் மேன்மையோடு அறனும் ஆதியாம்
துறையுள் யாவையும் சுருதி நூல்விடா
இறைவர் ஏவலால் இயைவ காண் ஐயா!

(இராமாயணம்)

தம்பி பரதனை நோக்கி இராமபிரான் இவ்வாறு இறைமாட்சியைப் போதித்திருக்கிறார். முறை அறம் முதலிய அரிய சீர்மைகள் எல்லாம் அரசர் ஏவலால் இயங்கி வருகின்றன என்பது ஈண்டு எண்ணி உணரவுரியது. மன்னவரை இறைவர் என்று மகிமை தோன்றக் குறித்திருக்கிறார்.

முறைசெய்து காக்கின்ற அரசனிடம் தெய்வம் குடிகொண்டிருக்கின்றது. அந்த முடிமன்னனை இந்த உலகில் ஒரு மனிதன் என்று எண்ணிவிடாதே; அரிய புண்ணியத் தெய்வம் என்று போற்றி யாண்டும் கண்ணியமா வழிபட்டு ஒழுகுக.

அடியவர் உளத்துஇருள் அகற்றலின் விளக்கும்,
எழுமலை பொடித்தலின் அனல்தெறும் அசனியும்,
கருங்கடல் குடித்தலின் பெருந்தழல் கொழுந்தும்,
மாஉயிர் வெளவலின் தீவிழிக் கூற்றும்,
என்உளம் இருத்தலின் இயைந்துஉணர் உயிரும்,
நச்சின கொடுத்தலின் நளிர்தரு ஐந்தும்,
கருவழி நீக்கலின் உயர்நிலைக் குருவும்,
இருநிலம் காத்தலின் மதியுடைவேந்தும்,
ஆகிய மணிவேல் சேவல்அம் கொடியோன்:
வானக மங்கையும், தேன்வரை வள்ளியும்,
இருபுறம் தழைத்த திருநிழல் இருக்கும்
ஒருபரங் குன்றம் மருவிய கூடல்.

[கல்லாடம் 58]

தான் வழிபடு கடவுள் ஆகிய முருகப் பெருமானைக் குறித்துக் கல்லாடர் இவ்வாறு பாடியிருக்கிறார். பாட்டில் படிந்துள்ள

பொருள் நிலைகளை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். விளக்கு முதலாக விளக்கி யிருப்பதை விழைந்து தெளிக.

இரு நிலம் காத்தலின் மதியுடை வேந்தும் என்றது இங்கே சிந்திக்க வுரியது. உலகத்தை உரிமையுடன் பாதுகாத்து வரு கிற மன்னனே மதியும் மாண்பும் நெறியும் நீதியும் உடையனாய் நிலவி நிற்கிறான். அந்த நிலைமையும் தலைமையும் ஈண்டு அறிய வந்தன. முறைசெய்து காப்பவன் இறையாய் விளங்குகிறான்.

காப்பு ஆற்றும் என்றது உயிரினங்கள் துயருறாமல் யாண் டும் காத்தருளும் ஆற்றல் நிலை ஏற்றமாத் தெரிய நின்றது.

எந்த வேளையினும் நொந்தவர் துயர்கேட்டு
இடர் இழைப்பவன் தனது ஏக
மைந்தனே எனினும் வதைத்திட ஒல்கான் ;
மாக்களின் சுகநலம் அன்றிச்
சிந்தனை மற்றோர் பொருளினில் செலுத்தான் ;
தீமொழி கனவிலும் புகலான் ;
தந்தைபோல் தாய்போல் எவரையும் ஓம்பும்
தன்மையனே இறை அன்றோ. (நீதிநூல்)

இந்தக் கவியை இங்கே நன்கு சிந்தனை செய்து கொள்ள வேண்டும். மன்னவனை இறை என்று சொல்ல வேண்டுமானால் அவன் என்ன நிலைகளில் உயர்ந்து எவ்வாறு தலைமை எய்தியிருக்க வேண்டும் என்பதை ஈண்டு இதில் உணர்ந்து தெளிகின்றோம்.

முறைசெய்து காப்பாற்றுகின்ற மன்னவனே மக்கட்கு இறை; அவ்வாறு காவாதவன் புவிக்குப் பெரிய பொறையே.

காவலன் என்று அரசனுக்கு ஒரு பேர் அமைந்துள்ளது. அளிபுரிந்து காக்கும் அளவே அரசு ஒளி மிகுந்து வருகிறது.

நீதி நெறியுடன் உலகினை ஆளும் அரசன் கடவுளாகவே யாவராலும் உரிமையோடு உவந்து கருதப்படுவான்.

இவ்வுண்மை சுவாயம்பு மனுவின் பால் அறிய வந்தது.

சரிதம்

சுவாயம்பு என்பவர் அரசர்குல முதல்வனாய் நின்று இவ் வுலகை நலமுற ஆண்டவர். கலைகள் பலவும் நிலைகண்டு உணர்ந்

தவர். உருவிலும் திருவிலும் அறிவிலும் ஆண்மையிலும் உயர் தனித் தலைவராய் இவர் ஒளிசெய்து விளங்கினர். இவருடைய அருமை மனைவி பெயர் சதரூபை. அதிரூபவதியான அப் பேரழகியோடமர்ந்து பெரும் போகங்களை நுகர்ந்து இரு நிலம் முழுவதும் ஒருகோல் ஓட்சி இவர் அரசாட்சி புரிந்து வந்தார். இவரது காவல் முறை அதிசய நிலையில் எவரும் துதிசெய்துவர எவ்வழியும் ஒளி மிகுந்து வந்தது. மன்பதை மாண்புற்று வாழும்படி அன்புற்று ஆட்சி புரிந்து வந்த இவர் அரசநீதிகளை வகுத்து அரிய நூல் ஒன்று செய்தருளினர். அரசனது இயல்பு களும் உலக வுயிர்களோடு அவனுக்கு அமைந்துள்ள உறவுரிமை களும், அவற்றை ஆளும திறமைகளும், நாளும் புரிய வேண்டிய முறைகளும் துறைகள்தோறும் அறவொளிகள் வீசிவர அந் நூல் வெளிவந்துள்ளது. மனுநீதி முறை என்று மன்னர் பல ரும் கன்னயமாக அதனைப் போற்றிப் புகழ்ந்து வந்துள்ளனர். இவரது ஆட்சியின் மாட்சி அதிசயக் காட்சியாய் நிலவி நின்றது. அரிய அரசநீர்மைகளுக்கெல்லாம் இவர் இனிய தனி நிலையமாய் நிலவி நின்றார். சிறந்த குண நலன்களால் உயர்ந்திருந்த இவரைத் தருமமூர்த்தி என்று வையத்தவர் பெருமையா வாழ்த்தி எவ்வழியும பரிவுடன் ஏத்தி வந்தனர்.

அன்பமைதி அருள்நீர்மை ஆண்மை வீரம்
அறிவூக்கம நெறிநியமம் ஆர்ந்த பண்பு
முன்பமைந்திவ் வுலகாண்ட வேந்தர் வேந்தன்
முடிமன்னர் மரபுக்கோர் இரவி போல்வான்
இன்பநலம் எல்லாமே எய்தி வாழ்ந்தோன்
இசைதிசைகள் எங்கணுமே ஏற நின்றோன்
தன்பெயரை ஓதினர் எவரும மேன்மை
தழைத்துவரச் செழித்துவந்த தருமமூர்த்தி.

இன்னவாறு மாந்தர் யாவரும் மகிழ்ந்து புகழ்ந்துவர இவ் வேந்தர்பிரான் விளங்கி வந்தார். பிரிய விரதன், உத்தான பாதன் என்னும் புதல்வர் இருவர் இவர்பால் தோன்றினர். அவர் பருவம் அடைந்த போது அரசுரிமையை அவரிடம் அருளிவிட்டு இவர் அருந்தவ நிலையில் அமர்ந்திருந்தார். இவரது பெருந் தகைமைகளையும் உயிர்களைப் பேணிவந்த உயர் நிலைகளையும்

உணர்ந்து தெய்வம் என்றே யாவரும் இவரைப் போற்றி நின்றனர். முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும் என்பதை உலகம் இவர்பால் நேரே தெளிந்து நின்றது. இவரது சரிதம் அதிசய மாட்சியுடையது.

கண்எதிரே கண்ட கடவுளென வேந்தனிம்
மண்எதிரே நின்றான் மலிந்து.

**நெறியுடை அரசனை இறைவன் என்றே கருதுக.**

---

389. மண்டுபுகழ் விக்கிர மார்க்கன் அமைச்சுரையேன்
கொண்டு பொறுத்தான் குமரேசா — கொண்ட
செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு. (9)

இ-ள்.

குமரேசா! விக்கிரமார்க்கன் ஏன் அமைச்சர் சொல்லைப் பொறுத்து ஆண்டான்? எனின், செவிகைப்பச் சொல் பொறுக்கும் பண்புடை வேந்தன் கவிகைக்கீழ் உலகு தங்கும் என்க. தங்கல் = நிலைத்து நிற்றல்.

அரசனுக்கு உரிய அரிய நீர்மை இதில் அறிய வந்தது.

அறிஞர் கூறுகிற உறுதிமொழிகளைப் பொறுமையுடன் கேட்கும் தகைமையுடைய மன்னன் ஆட்சியுள் உலகம் உவந்து நிற்கும். பண்பு = பயன் அறிந்து ஒழுகும் நீர்மை.

இங்கே சொல் என்றது நீதிமுறை மருவிய அறிவுரைகளை.

தன்னலம் கருதாமல் மன்னன் நலத்தையே கருதி வருகிற மதிமந்திரிகள் கூறும் உறுதி நலன்கள் ஈண்டு மருமமாய் உணர வந்தன. பதிநலம் வாய்ந்த சொல் விதிமுறை தோய்ந்து வரும்.

செவி கைப்ப = காது வருந்த.

உள்ளம் கடுத்து வெறுப்பதைச் செவிமேல் ஏற்றி உரைத்தார். முன்னதாக இன்னல் உறுவதால் இன்னவாறு கூற நேர்ந்தது. கசந்து கடுப்பது கைப்ப என வந்தது.

இனிப்புக்கு மாறுனது கசப்பு. நாவின் சுவை செவிமேல் ஏறி நின்றது. புலன் மாறி வந்த உபசார வழக்காய் இலக்கணத்தில் இது இடம் பெற்று ஆட்சிக்கு வந்துள்ளது.

நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பதோர்
கூற்று உண்டோ? சொலாய் கூற்றுறழ் வேலினுய்!
(இராமா: 1, 7, 63)

மூக்கால் நுகாவுரிய வாசனை செவிமேல் ஏறி வந்துள்ளது.

மருளறு காரணம் காரியம் பேரொடு வந்துறழும்;
இருளறும் ஒண்குணப் பேர்குணிப் பேர்வினை யோடினையயும்;
பொருள்வினை மற்றேர் பொருளினும் தோன்றும்; புலத்தொடு
தெருளுறு பண்பு புலன் இவை மாறியும் சேர்ந்திடுமே. [மாம்;
(பிரயோக விவேகம் 48)

புலன் மாறி வருகிற மரபுகளை இதனுல் அறிந்து கொள்கிறேம். அறிவின் சுவை இதில் மருவி வருகிறது.

அரசனுக்குச் செவி கண் என்பது பழமொழி.

பல வகையான மொழிகளாலேயே உலக நிலைகளை ஓர்ந்து தேர்ந்து அவன் ஒழுங்கு செய்ய நேர்கிறன். நாலறிவுடைய மேலோர் தொடர்பு ஞாலம் காக்கும் காவலனுக்குச் சாலவும் நலம் பயந்து யாண்டும் துணைபுரிந்து வருகிறது.

புலவர்கள் மந்திரிகள் முதலிய பெரியோர்கள் இடித்து வலியுறுத்திச் சொல்லும் வார்த்தைகள் அப்பொழுது கேட்பதற்கு வெறுப்பாயிருந்தாலும், அவற்றின் குறிக்கோள்களைக் கூர்ந்து நோக்கி அரசன் பொறுத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு மதியுரையை மதித்துக் கேட்கும் மதிமான் மகிதலம் முழுவதையும் விதி முறையே வியனுய் நெடிது ஆளுவான்.

நல்லோர் சொல்லைப் பொறுமையாய்க் கேட்டு நடப்பவன் எல்லா நலங்களிலும் பெருமையாச் சிறந்து விளங்குவான்; அவனது ஆட்சி யாண்டும் நீட்சியடைந்து மாட்சியாய் உயர்ந்து வரும் ஆதலால் உலகம் அவன் கவிகைக் கீழ்த் தங்கும் என்றார்.

கவிகை = குடை.

கவிந்து குவிந்து இருப்பது கவிகை என வந்தது. அரசசின்னங்களுள் இது தலைசிறந்து நிலையுயர்ந்துள்ளது.

வெயில் வெப்பம் மேலே விழாமல் குளிர் நிழலைத் தந்து மனிதனுக்குக் குடை இனிமை செய்வது போல் உலகம் முழுவதையும் யாதொரு துயரும் அணுகாதபடி இனிது பாதுகாத்தருளுவேன் என்பதற்கு அடையாளமாக வேந்தன் கவிகையை ஏந்தி நிற்கிறான். அந்த நிலைமையை இது தலைமையாய் விளக்கியுளது. எங்கும் இதம் புரியும் அறிகுறி இங்கே துலங்கி நின்றது.

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர் தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
அங்கண் உலகளித்த லான். (சிலப்பதிகாரம்)

வேந்தனது வெண்குடை போல் சந்திரன் எங்கும் இனிமை சுரந்து, இதம் புரிந்து உலகைப் புரந்து வருதலால் அதனை உவந்து போற்றுதும் என இளங்கோவடிகள் இங்ஙனம் திங்களை ஏத்தியிருக்கிறார். கவிகையும் மதியும் காண வந்துள்ளன.

மண்ணிடை உயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்
தண்ணிழல் பரப்பவும் இருளைத் தள்ளவும்
அண்ணல்தன் குடைமதி அமையும் ஆதலால்
விண்ணிடை மதியினை மிகையிது என்னவே.

[இராமாயணம்]

தசரத மன்னனுடைய வெண்கொற்றக் குடை வளர்தல் தேய்தல் மறு முதலிய குறைபாடுகள் யாதும் இன்றி எவ்வழியும் இடர்நீக்கி யாண்டும் இன்பம் சுரந்து வருதலால் விண்மதியினும் அது மேன்மை மிகவுடையது எனக் கவிகையைக் குறித்துக் கவிச்சக்கரவர்த்தி இவ்வாறு சுவையாக விளக்கியிருக்கிறார்.

விரிந்த நிலமண்டலம் முழுதும் ஆளவுரிய அரசன் சிறந்த பண்புடையனாய் அமர்ந்திருக்க வேண்டும். அரிய பொறுமை பெரிய நீர்மை யாதலால் அந்தச் சீர்மை தோய்ந்து வரும் அளவு மேன்மை ஓங்கி வேந்து முறை விளங்கி வருகிறது.

மருந்து கசந்தாலும் அதன் விளைவை நோக்கிப் பொறுத்து ஒருவன் உண்பான் ஆயின் அவன் நோய் நீங்கி இன்பம் அடைவன்; அதுபோல் அறிஞர் கூறும் உறுதிச் சொல் தன் செவிக்கு வெறுப்பா யிருப்பினும் அதன் பயனை உணர்ந்து அரசன் சகித்துக் கேட்பின் பிழைபாடுகள் நேராமல் பெருமை மிகப் பெறு

வான். நயனுடைய அவன் ஆட்சியும் வளர்பிறை போல் உயர்ந்து வியனிலையை அடைந்து யாண்டும் மாட்சி மிகுந்து வரும்.

அரசன் தனித் தலைமையாளன் ஆதலால் பிறர் இடித்துச் சொல்வதை அவன் பொறுத்துக் கேட்பது அரிதாம்; ஆகவே அந்தப் பொறுமையின் அருமையும் பெருமையும் தெரியப் பண்புடை வேந்தன் என்றார். திருந்திய பண்பும் பெருந்தகைமையும் பொருந்தியிருப்பவனே எதையும் சிந்தித்து அறிஞர் கூறுவதை அமைதியாய்க் கேட்டு ஆவதை ஆற்றுவான்.

பெற்றிடு திருவினில் பிறந்த வெஞ்சினம்
கற்றவர் உணர்வையும் கடக்கும் அன்னது
முற்றுறு கின்றதன் முன்னம் அன்பினோர்
உற்றன கூறியே உணர்த்தல் வேண்டுமால்.

மன்னவர் செவியழல் மடுத்த தாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவர் அமைச்சர்கள்; துணைவர்; மேலையோர்;
ஒன்னலர் விழைந்தவாறு உரைக்கின் றார்களே.

(கந்த: சூரன் அமைச்சு; 91, 92)

சூரபன்மனை நோக்கிச் சிங்கமுகன் இவ்வாறு கூறியிருக்கிறான். பொருள் நிலைகளைக் கருதிக் காண வேண்டும். மன்னவர் செவி அழல் மடுத்ததாம் என நன்னெறி நீதியைச் சொல்பவரே உண்மையான உறவினர்; அவன் விரும்பியவாறு செவி இனிக்கப் பேசுபவர் கொடிய பகைவரே, நெடிய வஞ்சகரே எனக் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்க வுரியது.

செவிசுடச் சென்றாங்கு இடித்து அறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா — கவிழ்மதத்த
கைம்மா வயத்ததோ பாகுமற்று எத்திறத்தும்
அம்மாண் பினவே அமைச்சு. (நீதி நெறி 45)

மதம்கொண்டு நிலைமீறிச் செல்லுகின்ற யானையைப் பாகன் தோட்டியால் மாட்டி அடக்குதல் போல், உள்ளக் களிப்பால் எல்லை கடந்து செல்ல நேர்ந்த அரசனை வலிய சொல்லால் அமைச்சர் அடக்க வேண்டும் என இது அறிவுறுத்தியுள்ளது.

செவி கைப்பச் சொல்லும் சொல், தன் நன்மைக்கே என்று வேந்தன் உணர்ந்து தெளிந்து உள்ளம் திருந்தவேண்டும்.

மதிநலம் கனிந்த முதியோர் சொல்லை மதித்து நடப்பதே விதிமுறை புரியும் அதிபதிக்குப் பெரிய மதிப்பாம்.

உமைக்கு நாதற்கும் ஓங்குபுள் ஊர்திக்கும்
இமைப்பில் நாட்டம்ஓர் எட்டுடை யானுக்கும்
சமைத்த தோள்வலி தாங்கினர் ஆயினும்
அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே.

(இராமா : 2; 2-15)

தேவ தேவர்களைப்போல் அரிய பெரிய அதிசய ஆற்றல்கள் அமைந்திருந்தாலும் மந்திரிகள் சொல்வழி ஒழுகுதலே வேந்தர்க்கு மேலான ஆற்றலாம் என வசிட்ட முனிவர் இராமபிரானிடம் இன்னவாறு அரசநீதியைக் கூறியிருக்கிறார்.

ஆற்றல் என்று ஓதப்பட்ட அரசர்கட்கு அவற்றின் மிக்க
ஆற்றல்தான் சூழ்ச்சி என்பது; ஆதலால் அதனை ஆயும்
ஆற்றலார் அமைச்சர் ஆக அமைச்சரோடு அமர்ந்துசெல்லும்
ஆற்றலான் அரசன் ஆகின் அரியது ஒன்று இல்லை அன்றே.

(சூளாமணி)

அரசு முறை அதிமதி யூகமாய்க் கருத்து ஊன்றிச் செய்யும் சிறப்பினை யுடையது. அந்தச் சூழ்ச்சித் துறையில் தனிப் பயிற்சி பெற்று அமைச்சர் உயர்வுடன் அமைந்துள்ளனர்: அத்தகைய உரிமையாளர் கூறும் அறிவுரைகளைப் பொறுமையுடன் கேட்டு நடந்தால் அரசனுக்கு அது அதிசய ஆற்றலாய்ப் பெருமகிமை தருவதாம். உரிய உறுதித் துணைவர் கூறின மொழிவன கருத்துடன் கேட்க வுரியன.

அமைச்சர் சொல்லுக்கு அரசன் அமைதியாய்ச் செவி சாய்த்து வரவேண்டும் என்றது புவி ஆட்சியின் பொறை நோக்கி வந்தது. மந்திரி மொழி மந்திர ஒளியாம்.

ஆயிரம் கதிருடை அருக்கன் பாம்பினால்
ஆயிரம் கதிரொடும் அழுங்கக் கண்டுகொல்
ஆயிரம் கண்ணுடை அமரர் கோனும் ஓர்
ஆயிரம் அமைச்சர்சொல் வழியின் ஆயதே.

[சாந்தி புராணம்]

இந்திரன் இறைமையும் ஈரைஞ் ஞூற்றுவர்
தந்திரக் கிழவர்கள் தாங்கச் செல்லுமே.

(சூளாமணி)

ஆரறி விகழ்தல் செல்லா ஆயிரம் செங்க ணானும்
கூரறி வுடைய நீரார் சொற்பொருள் கொண்டு செல்லும்
பேரறி வுடையை நீயும் பிணையனுட்கு அவலம் செய்யும்
ஓரறி வுடையை என்றான் உருத்திர தத்தன் என்பான்.

(சீவக சிந்தாமணி)

பேரறிவுடைய இந்திரனும் மந்திரிகள் சொல்லை மதித்துக் கேட்டு நடந்துள்ளான். அத்தகைய மதியுடைய நீ காதலால் கருத்து அழிந்து கடுந்துயரடைய நேர்ந்து நிற்கின்றாயே! என்று தன் அரசனை நோக்கி உருத்திரதத்தன் என்னும் அமைச்சன் இவ்வாறு உருத்து இடித்து உரைத்திருக்கிறான்.

செவி கைப்ப வந்துள்ள இத்தகைய சொற்களைக் கேளாமல் அவமதித்து நின்றமையால் அரசை இழந்து அவன் அவலமாய் மாண்டான். நல்லவர் சொல்வழி நடவாதவர் நாசமடைவர்.

தந்தை சொல்லைக் கேளாத மைந்தனும், மந்திரி சொல்லை மதியாத மன்னனும் இன்னலுழந்து இழிந்து கழிவர்.

பொறுமையின் நன்மையும் தன்மையும் தெரியப் பொறுக்கும் பண்பு என்றார். பொறை ஆடவர்க்கு நிறைபூண்.

நரஸ்யாபரணம் ரூபம் ரூபஸ்யாபரணம் குண :
குணஸ்யாபரணம் ஞாநம் ஞாநஸ்யாபரணம் க்ஷமா.

உருவ அழகு மனிதனுக்கு அணி; அந்த அழகுக்கு அணி குணம்; குணத்துக்கு அணி ஞானம்; ஞானத்துக்கு அணி பொறுமை என வான்முறையே இது குறித்துளது.

பொறுமை மெய்யுணர்வின் பயனைப் மேவியுள்ளது. அவ்வுண்மையை ஈண்டு நன்கையாய் உணர்ந்து கொள்ளுகிறோம்.

நல்ல மந்திரி சொல்லை நயமாய்க் கேட்டு நடக்கும் அரசனுக்கு உலகம் எல்லாம் உரிமையா வந்து இனிது வசமாம்.

இது விக்கிரமார்க்கன் பால் அறிய வந்தது.

சரிதம்

இம் மன்னன் அதிசய மதிமான். சந்திர சருமன் என்னும் சுந்தரனுடைய அருமைத் திருமகன். தாய் பெயர் சுருதகீர்த்தி. இவன் அரிய பல கலைகளை ஆய்ந்து தெளிந்தவன். அரசியல் முறைகளையும் துறைகளையும் வழுவறத் தெரிந்த விழுமிய மதி இவனிடம் கிழமையாய்ச் செழுமி யிருந்தது. உச்சயினி என்னும் நகரிலிருந்து இவன் அரசு புரிந்து வந்தான். இவனது ஆட்சி யாண்டும் மாட்சி மிகுந்து வந்தது. எவ்வழியும் யாவரும் செவ்வையாய் இனிது வாழ்ந்துவர முறை புரிந்து வந்தமையால் மாந்தர் எல்லாரும் இவ் வேந்தனை விழைந்து புகழ்ந்து உவந்து போற்றி வந்தனர். இவனுடைய மந்திரிகளுள் பட்டி என்பவன் தலைசிறந்தவன். அதிமதி யூகியான அவனுடைய அறிவுரைகளை யாண்டும் உரிமையுடன் கேட்டு உறுதியை ஓர்ந்து யூகமுடன் ஒழுகி வந்தான். இவனது அரசாட்சியில் தருமமும் நீதியும் பெருமையாய் விளங்கின. நல்லவர் வாய்ச் சொல்லை நயந்து பேணி உலகை ஓம்பி வந்த இவன் புகழ் எங்கும் ஓங்கி நின்றது.

பட்டிஎன்று உயர்பெயர் படைத்த மந்திரி
சுட்டிய சொல்வழி சுருதி நூன்முறை
ஒட்டியிவ் வுலகினை ஓம்பி வந்தனன்
கட்டிய புகழுடைக் காவல் வேந்தனே.

மாந்தர் மகிழ்ந்து வாழ முறை புரிந்து வருபவனே உயர்குல வேந்தனாய் ஒளி மிகுந்து வருவான் என்பதை இவன் ஆட்சியிலே யாண்டும் காட்சியாய்க் காட்டி வந்தது. அரிய சிந்தனையாளனை உரிய மந்திரியுடன் உரிமை கூர்ந்து வந்த இவனது பெருமையை எவரும் வியந்து புகழ்ந்து வந்தனர். அறிவும் திருவும் அறமும் வீரமும் மருவி நின்ற மாட்சி போல் அமைச்சும் அரசும் கூடியிருந்ததை நாடும் நகரமும் பாடி மகிழ்ந்தன.

"நண்பின் மாட்சியும் கல்வியது அகலமும்
பண்பின் தொழிலும் படைத்தொழில் மாண்பும்
காயும் மாந்தர் ஆயினும் யாதும்
தீயவை கூறப் படாத திண்மையும்
இவற்கு அலது இல்லை; இவனால் பெற்ற
அவற்கு அலது இல்லை அரசின் மாட்சி."

[நரவாணம்]

இன்னவாறு மக்கள் மகிழ்ந்து புகழ்ந்துவர இம்மன்னன் மாட்சியாய் ஆட்சி புரிந்தருளினன். மதி மந்திரியோடு அளவளாவி யாண்டும் அவர் சொல்லைத் தழுவி ஒழுகி வந்தமையால் நிலமண்டலம் எங்கணும் இவனது அரசாட்சி நீண்டு பரந்து நிலவி நின்றது. உறுதிநலனை உணர்பவன் உயர்குல அரசனாகிறான்.

செவிகைப்பச் சொற் பொறுக்கும் பண்புடை வேந்தன் கவிகைக்கீழ் உலகம் உரிமையுடன் தங்கும் என்பதை எவரும் இவனிடம் கண்டு உவகை மீதூர்ந்து நின்றனர்.

உற்றவர் கூறும் உறுதி மொழிகேட்டுக்
கற்றவரைக் கண்ணாகக் கைதழுவி—நற்றவரைப்
பேணி ஒழுகும் பெருவேந்தன் இவ்வுலகம்
காணியாக் காணும் கனிந்து.

கண்ணை இமைகாக்கும் காட்சிபோல் காத்தருளும்
அண்ணல் அவனே அரசு,

நல்லவர் சொல்லை நயந்து கேள்.

---

390. திண்டோட் பரதனையேன் தேர்வேந்தர் தம்முள்ளே
கொண்டார் ஒளியாக் குமரேசா — கொண்ட
கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி. (10)

இ-ள்.

குமரேசா! சந்திரகுல வேந்தன் ஆன பரதனை அரசர் குலம் ஏன் அதிசய சோதி என வியந்து கொண்டது? எனின், கொடை அளி செங்கோல் குடி ஓம்பல் நான்கும் உடையான் வேந்தர்க்கு ஒளியாம் என்க.

ஒளி பெறும் வழிகளை இது தெளிவாக்கி யுளது.

ஈகை இரக்கம் நீதிமுறை பாதுகாவல் ஆகிய இந்நான்கு தன்மைகளும் உடையவன் அரசருள் விழுமிய சோதியாய் விளங்குவன்.

இனிய இயல்புகளால் மனிதர் உயர்நிலைகளை அடைகின்றனர். மாந்தருள் தலைசிறந்துள்ள வேந்தன் இயல்பாகவே

உயர்ந்த குணநலன்கள் தோய்ந்து வரவேண்டும். அவ்வாறு வாய்ந்து வரின் வையம் அவனைத் தெய்வமா வாழ்த்தி வரும்.

மலர்க்கு மணமும் மணிக்கு ஒளியும் போல் மன்னனுக்குக் குணங்கள் மகிமை புரிந்து வரும். வண்மை தண்மை எண்மை திண்மை உண்மை முதலிய இனிய நீர்மைகள் அரிய பெரிய சீர்மைகளாம். நல்ல பண்புகள் படிந்து வரும் அளவே எல்லா மகிமைகளும் மகிபதியைத் தொடர்ந்து வருகின்றன.

கொடை=ஏற்றவர்க்கு இனிது கொடுப்பது.

அளி=எவ்வுயிர்க்கும் இரங்கி அருளுவது.

செங்கோல்=நீதிநிலை கோடாமல் நெறிமுறை புரிவது.

குடிஓம்பல்=நாட்டு மக்களை நன்கு பாதுகாப்பது.

இந்நான்கும் என்று இறுதியில் சுட்டியது முன்னே குறித்த செயல் இயல்களைக் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து கொள்ள.

கொடையை முதலில் நிறுத்தியது அதன் நிலைமை தெரிய.

புகழ் புண்ணியங்களை விளைத்து இருமையினும் பெருமை தரும் அருமையுடையது கொடையே. வண்மையின் உண்மையை நுண்மையா யுணர்ந்து கொள்ள அது முன்னுற வந்தது.

ஈகைக் குணம் அரசனுக்குத் தனியுரிமையாய் இனிது அமைந்திருக்க வேண்டும். எவரையும் வசப்படுத்தி எவ்வழியும் எவர்க்கும் மகிமை தரும் கொடை அரசர்க்கு அதிசய மேன்மையாம். வள்ளலின் புகழ் வெள்ளமாய் வருகிறது.

மணிமுடியும் செங்கோலும் வெண்கொற்றக் குடையும் பிறப்புரிமையா வேந்தன் பெற்றிருப்பினும், பிறர்க்கு உவந்து கொடுக்கும் கொடையே அவனுக்கு எல்லாச் சிறப்புகளையும் எல்லையில்லாமல் உாண்டும் இனிது அருளுகிறது.

தன்பால் இரந்து வந்தவர்க்கே அன்றி இரவாது நிற்கின்ற பிறர் இடத்தும் எளிய பிராணிகளிடமும் தண்ணளியுடையனாய் மன்னன் ஒழுக வேண்டும் என்பது தெளியக் கொடையின் பின் அளி அமைந்தது. பொருளால் மக்களுக்கு உதவி செய்கிறான்; அருளால் எவ்வுயிர்க்கும் எவ்வழியும் இதம் புரிகின்றான்.

ஈகையும் இரக்கமும் இவ்வாறு உடையனுயினும் அரசு முறை புரிவதில் நீதி யாதும் வழுவாமல் நேர்மையுடன் நின்று எங்கும் சீர்மை புரிய வேண்டும் என்பது செங்கோல் என்றதனுல் தெரிய வந்தது. நேரிய நெறிமுறை சீரிய இறைமையாம்.

தன் நாட்டில் வாழுகின்ற குடிசனங்கள் வறுமை களவு பகை பஞ்சம் முதலிய சிறுமைகளால் யாண்டும் யாதும் இடர் உருதபடி எவ்வழியும் கண்ணூடிச் செவ்வையாக் காத்தருள வேண்டும் என்பார் குடிஓம்பலை முடிவில் வைத்தார்.

இந்த நான்கு நிலைகளும் ஒரு நிலையாய் அமைந்த பொழுது அந்த அரசன் பதினறு கலைகளும் நிறைந்த பூரண சந்திரன் போல் சுந்தரச் சோதியாய்த் துலங்கி எங்கும் விளங்கி நிற்பன் என்பது ஒளி என்ற மொழியால் உணர வந்தது.

வேந்தர்க்கு ஒளி என்றது மாந்தர்க்கு அளி புரிந்து வருகின்ற இவ் வேந்தன் மன்னர் எல்லார்க்கும் நன்னயமான நல்ல விழி ஒளியாய் நின்று இனிய வழிசெய்து அருளுதல் கருதி.

இறை மாட்சிக்கு இவன் ஒரு சால்பான காட்சியாம்.

விளக்கு அயல் எங்கும் ஒளி வீசி இயல்பாய் விளங்குதல் போல் இவன் அரசுகுலம் எங்கும் உணர்வொளி பரப்பி உயர்வாய் விளங்குவன். நீதிநெறி நெடிய சோதியாய் நிலவுகிறது.

உலக ஒளியான சூரியன் இருளை நீக்கி எல்லா வுயிர்களுக்கும் இன்பம் தருகின்றுன் வேந்தர்க்கு ஒளி யான இச் சீரியன் இடர்களை நீக்கி மாந்தர்க்கு யாண்டும் அருள்கின்றுன்.

கண் எனப் படுவ மூன்று காவலன் கல்வி காமர்
விண்ணினைச் சுழல ஓடும் வெய்யவன் என்னும் பேர ;
எண்ணினுள் தலைக்கண் வைத்த கண்ணது இல்லை ஆயின்
மண்ணினுக்கு இருளை நீக்கும் வகைபிறி தில்லை மன்னே.
(சூளாமணி, மந்திர; 30)

உலக உயிர்களுக்கு வழிகாட்டி நடத்துகிற கண்கள் மூன்று உள்ளன. அவை எவை? அரசன், கல்வி, ஆதவன். முதலில் உள்ள மன்னவன் இல்லையானுல், பின் உள்ள இரண்டால் பயன் இல்லை என இது குறித்துள்ளது. குறிப்புகளையும் உண்மை நிலைகளையும் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

தெருண்ட சிந்தனை மன்னவன் நீதிநூல் திசையின்
உருண்ட தேரினன் என்றுமூ விழிகள் உண்டுஉலகில்
மருண்டு மன்னனும் விழிஒளி மறைந்திடின் மற்றை
இரண்டு கண்ணினும் பயனிலை யாகுமே என்றான்

(செவ்வந்திப் புராணம்)

மன்னவன் அருளிழந்த மருளன் ஆனால், நீதி நூலும் சூரியனும் இருந்தாலும் உலகம் இருளடைந்தே யிருக்கும்; உயிரினங்கள் சுகமாய் வாழமுடியா என இது முடிவுசெய்துளது.

உலகத்தைப் பாதுகாக்கும் அரசன் இனிய குண நலன்களையுடையனாய்த் தனி நிலையில் உயர்ந்து நின்ற பொழுதுதான் அவனது நாடு பெருமை அடையும்; மக்களும் மிக்க மகிழ்வுடன் பக்கம் சூழ்ந்து வாழுவர்; அரசும் நெடிது நின்று நிலவும்.

உடலுக்கு உயிர்போல் உலகிற்கு அரசன் உயர்ந்த ஆதாரமாய் அமைந்து நிற்கின்றான். அவன் நல்ல நீர்மைகள் உடையனாயின் எல்லாம் எவ்வழியும் நலமாம்; அவ்வாறு இல்லையேல் யாண்டும் அல்லல்களாய் நீண்டு எங்கும் அவலமே மிகும்.

நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்.
அதனால், யான் உயிர் என்பது அறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே.

(புறம், 186)

மோசிகீரனார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியுள்ளார். உணவாலும் நீராலும் உயிர்கள் வாழ்ந்து வருகின்றன. உயிராதாரமான அவை வளமாய் வாய்ந்திருந்தாலும், வேந்தன் நலமா அமையவில்லையானால் மாந்தர் அமைதியாய் மகிழ்ந்து வாழ இயலா. மன்னுயிர்க்கு மன்னவன் இன்னுயிர் என்பதை உணர்ந்து இனிய நீர்மையாளனாய் அவன் உயர்ந்து கொள்ள வேண்டும் என்று அரசர்க்கு உரிய கடமையைக் கவிஞர் இவ்வாறு உரிமையுடன் உணர்த்தியிருக்கிறார். இத்தகைய பொறுப்பும் சிறப்பும் உடைய அரசன் எத்தகைய உத்தம குணங்களுடன் ஒளி மிகுந்திருக்க வேண்டும் என்பதை ஈண்டு நாம் உய்த்துணர்ந்து வேந்தின் நிலைமையை வியந்து கொள்கிறோம்.

குன்றென உயரிய குவவுத் தோளினன்
வென்றியந் திகிரிவெம் பரிதி யாம்என
ஒன்றென உலகிடை உலாவி மீமிசை
நின்று நின்று உயிர்தொறும் நெடிது காக்குமே.
(இராமா; 1; 5-11)

தசரத மன்னன் உயிர்களைப் பாதுகாத்து வந்துள்ள நிலைமை நீர்மைகளை இது சீர்மையாய்த் தெளிய விளக்கியுளது.

ஏதமது அகற்றி உலகினுக்கு உயிராய்
இருந்தனன் இறைகுலோத் துங்கன்.
(திருவிளையாடல் 25 - 44)

குலோத்துங்க பாண்டியன் என்னும் மன்னன் உலகினுக்கு உயிராயிருந்து ஆண்டு வந்துள்ளமையை ஈண்டு அறிந்து கொள்கிறோம். நிலத்தை ஆள்பவன் நிலைமை தெரிய வந்தது.

உலகம் உடல்; அரசன் உயிர்.

இந்த உவமைக்குறிப்பால் அரசனது நிலைமை தலைமைகள் தெளிவா வெளியாயுள்ளன. குடி ஓம்பிவர முடி ஓங்கி வருகிறது.

கொடை அளி முதலிய குண நீர்மைகளை உடையான் ஒளி என்றதனால் அவை இல்லாதவன் இளிவு தெளிவாயது. அருள் நீதி இல்லாத அரசு இருள் சூழ்ந்த பொல்லாத புலையாம்.

இறை மாட்சியுள் ஈகை, கொடை என ஈரிடங்களில் ஆர்வமாய்க்குறித்துள்ளார். எளியவர்க்கு இரங்கி ஈதல்; தக்கவர்க்குத் தகவாய்க் கொடுத்தல் என இவற்றின் கூறுபாடுகளைக் கூர்ந்து ஓர்ந்து வண்மை வழியைத் தேர்ந்து கொள்க.

ஈத்து அளிக்க வல்லான் எனவும் சொல்லியுள்ளமையால் கொடையின் அரிய பெரிய மகிமைகளை அறியலாகும். அறிவு வீரம் முதலிய ஆற்றல்களினும் கொடை ஏற்றம் மிகவுடையது. வீரன் என்று பேர் பெறுவதினும் வள்ளல் என்று பேர்பெறுவதில் சீர்மையும் சிறப்பும் உள்ளே செறிந்துள்ளன.

யுத்தயந்தே பக்ஷி பசவ: படந்தி சுகசாரிகா:
தாதும் சக்நோதி யோ வித்தம் ஸ சூரஸ்ஸ ச பண்டித:

"பறவை மிருகங்களும் உக்கிரமாய்ப் போர்புரிகின்றன; கிளி மைனாக்களும் படித்துப் பேசுகின்றன. ஆகையால் வீரமும்

கல்வியும் அரியன அல்ல; தன்செல்வத்தை எவன் பிறர்க்குக் கொடுக்கின்றானோ அவனே உண்மையான வீரன்; அவனே எல்லாம் அறிந்த பண்டிதன்'' என இது குறித்துள்ளது.

கொடை எவ்வளவு அருமையுடையது! என்பதை இதனால் அறிந்துகொள்கிறோம். இத்தகைய அற்புத நிலையில் இருந்தலினாலேதான் கொடை வள்ளலை உள்ளம் உவந்து உலகம் கொண்டாடிவருகிறது. அரசனுக்குப் பிறப்புரிமையாய் இது பெருகி யிருக்கவேண்டும். பிரபு என்பதின் மரபு தெரிக.

இரந்து வந்தவர்க்கு உவந்து கொடு; எவர்க்கும் இரங்கி அருள்; நீதி நெறியில் நட; அடுத்தவரை ஆதரி எனப்பொது மக்களுக்கும் இந்த அரச தருமத்திலிருந்து உரிய போதனைகள் மருவியிருக்கின்றன. உறுதி நலன்கள் கருதியுணர வந்தன.

தன் ஆட்சியிலுள்ள குடி சனங்கள் எவ்வகையிலும் சிறந்து உள்ளம் உவந்து வாழ்ந்துவர ஆழ்ந்து சூழ்ந்து ஆற்றி வரின் அந்தவேந்தனை மாந்தர் எல்லாரும் மதித்துத் துதித்துப் போற்றிவருகின்றனர். இனிய பான்மைகள் அரிய மேன்மைகளை அருளுகின்றன.

குடிதளர் வுற்ற காலைக் கொள்பொருள் ஆறில் ஒன்றும்
விடுவது செய்து தங்கள் விழுக்குறை முறைசொல்வார்க்குத்
தடையறக் காட்சி நல்கித் தண்ணிய இன்சொல் காட்டி
வடுவற இடித்துச் சொல்வார் வன்மொழி பொறுத்தல்
[வேண்டும்.
[விநாயக புராணம்]

இளவரசனை தன் மகனுக்கு ஓர் அரசன் இவ்வாறு ஆட்சி முறைகளைப் போதித்திருக்கிறான். மக்கள் மகிழச் செங்கோல் செலுத்துபவனே எங்கும் தக்க வேந்தனாய்த் தலைசிறந்து திகழ்கிறான். காப்பு முறை கடவுளின் கலையாய் மருவியுளது.

அருள் நலங்களையுடைய நீதி மன்னன் அரசருள் ஒரு சோதியாய் விளங்குவான். இது பரதன்பால் அறிய வந்தது.

சரிதம்

இவன் சந்திர குல வேந்தன். துஷ்யந்தனுடைய அருமைத் திருமகன். தாய் பெயர் சகுந்தலை. இவன் சிறந்த அழகன்.

தேர்ந்த மதிமான். பல கலைகளிலும் நல்ல புலமையுள்ளவன். இசை நூலில் மிகவும் வல்லவன். மக்கள் உள்ளத்தில் கருதும் எண்ணங்களை உடல் உறுப்புக்களின் குறிப்பால் உணர்த்தும் கலைக்கு இவன் ஓர் உயிர் என இருந்தான். அபிநயம் என்னும் அரிய கலையில் அதிவிநோதனாய் இருந்தமையால் பரதம் என்று இன்றும் இவன் பெயரால் அது வழங்கப்படுகிறது. கலை ஞானம் கருணை கொடை வீரம் நீதி முதலிய நீர்மைகள் எல்லாம் இவனிடம் சீர்மையாய் நிறைந்திருந்தன. உயிரினங்களை எவ்வழியும் இவன் இனிது புரந்து வந்தான். இவனது ஆட்சியின் மாட்சியை அமரரும் போற்றினர். வானவருக்கும் தானவருக்கும் ஒரு முறை போர் மூண்டது. அதில் தோல்வி தோன்றவே வானவர் கோனான இந்திரன் வந்து இந்த மான வீரனிடம் உதவி வேண்டினன். இவன் விரைந்து சென்று அசுரரை வென்று அமரரை ஆதரித்தான். இவனுடைய பெரும் புகழும் புத்தேளுலகம் எங்கணும் புகுந்து உலாவின. அதிசய நிலையில் ஒளி மிகுந்திருந்தமையால் நாலோரும் மேலோரும் இவனைத் துதிசெய்து வந்தனர்

விரதம் மிஞ்சிய வேள்வியால் கேள்வியால் மிக்கான்
சுரத மங்கையர் முலைக்குவ டணைவரைத் தோளான்
பரதன் என்றொரு பார்த்திவன் பரதமும் இசையும்
சரதம் இன்புற அக்குலம் தனில்அவ தரித்தான். (1)

சுரச மூகமும் சுராரிகள் சமூகமும் சூழ
விரசு பூசலின் வாசவன் நடுங்கிவெந் நிடுநாள்
அரசர் யாவரும் அறுமுகக் கடவுள்என்று அயிர்ப்ப
புரசை நாகமுன் கடவினன் நாகமும் புரந்தோன். (2)

(பாரதம்)

நீரகம் பொருந்திய நித்தி லத்தொடு
தேரகம் பொருந்துசெங் கதிரின் மாமணி
ஆரக முடிபுனைந்து ஆழி ஏழும்சூழ்
பாரகம் புரந்தனன் பரதன் என்பவே. (1)

வாழிவா னவர்பகை மாய்த்து வார்திரை
ஆழிசூழ் புவிமுழு தாண்டு நல்லறம்
சூழுநூல் முறைவழி துரங்க வேள்விஈர்
ஏழுநூ றுயிரம் இயல்பின் ஆற்றினான். (2)

நிரைத்தமா மணிக்கடல் நிலத்தை அன்பொடு
பரித்ததார்ப் புயத்தினன் பரதனுக்கு இணை
தெரித்தநூல் வழிவினைத் திறத்தர் மூன்றென
உரைத்தகா லத்தினும் ஒருவர் இல்லையால். (3)

(பாகவதம்)

இவனுடைய அருந்திறலாண்மைகளையும் பெருந்தகைமைகளையும் இன்னவாறு பலரும் பாராட்டியுள்ளனர். பரதனுக்கு இணை முக்காலத்தினும் ஒருவர் இல்லை என்று சொல்லும்படி இவன் உயர்ந்திருத்தலை இதில் உணர்ந்து கொள்கிறோம். அரிய பல பண்புகளோடு குடிகளை இனிது பேணி வந்தமையால் மான வேந்தருள் இவன் ஒரு வான ஒளியாய் வயங்கி நின்றான். கொடையும் அளியும் செங்கோலும் குடி ஓம்பலும் சிறப்பாக வுடையவன் அரச குல சோதியாய்த் திகழ்வன் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து மகிழ்ந்தது.

### அரச குல நீர்மைகள்

நீதியும் வீரமும் கொடையும் மன்னர்க்குச்
சாதியின் தருமமாய்ச் சார்ந்து நின்றுள;
ஓதிய மூன்றினில் ஒன்று குன்றினும்
போதிய அரசியல் புகழ்பெ றுதரோ. (1)

வீரமே பகைவரை அடக்கும்; மெய்க்கொடை
வாரமே புகழினை வளர்க்கும்; நீதியின்
சாரமே தரணியைத் தாங்கும்; இந்தமுச்
சீரமை அரசனே தேவன் ஆவனால். (2)

வீரமில் மன்னனும், விளைவில் பூமியும்,
நீரமில் குளமும், நல் நிறையில் பெண்மையும்,
தாரமில் வாழ்க்கையும், தகவில் நெஞ்சமும்,
நேரென லாயிழி நிலையில் ஆழுமே. (3)

### உயிர்களைக் காப்பது

செயிருறு களைகளைச் செகுத்து நீக்கிநற்
பயிர்களைக் காத்தல்போல் படுவெம் பாதக
வயிரரைச் சுட்டற மடித்து மாண்புறும்
உயிர்களைக் காப்பதே உலகம் காப்பதே. (4)

**நீதி கலையின் நிலை குலையும்**

நீதியை இழந்தவன் நிதியி ழந்துதன்
ஆதியின் நலமிழந்து அரசி ழந்துமுன்
ஓதிய உயர்வெலாம் ஒருங்கி ழந்துபின்
ஏதிலர் இகழ்ந்திட இழிந்து போவனால். (5)

**நெறியால் நேர்வது**

ஆதலால் அரசினுக்கு உறுதி ஆகிய
நீதிநன் னெறியினில் நிலைத்து நித்தலும்
பூதலம் புரந்திடும் புனிதன் பொங்கிய
சாதலும் பிறத்தலும் இன்றித் தங்குவான். (6)

**விண்ணவர் போற்றுவார்.**

மண்ணவர் மகிழ்வுற மதியின் ஆய்ந்துயர்
தண்ணளி தகவுடன் தரும நீதியாய்க்
கண்ணமை இமையெனக் காக்கும் வேந்தனை
விண்ணவர் மகிழ்ந்துளம் வியந்து போற்றுவார். (7)

(வீரபாண்டியம்)

**அளிபுரிந் தாளும் அரசன் உலகில்**
**ஒளிவிரிந்து நீளும் உயர்ந்து.**

அளியும் நீதியும் அரசர்க்கு ஒளியாம்.

---

இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

படை முதலியன நலமா உடையவன் அரசர்பெருமான்.
அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் அரசன் இயல்புகள்.
கல்வியும் துணிவும் கவனமும் காவலன் அணிகள்.
வீரமும் மானமும் வேந்தன் நீர்மைகள்.
செல்வச் சேர்க்கைகள் அவனுக்கு நல்ல உரிமைகள்.
எளிய காட்சி அரசுக்கு அரிய மாட்சி.
இனிய சொல்லும் ஈதலும் உலகத்தை வசப்படுத்தும்.
நீதி மன்னன் மனிதர்க்குத் தெய்வம் ஆகிறான்.
உணர்வுரை கேட்பவன் உயர்ந்து திகழ்கிறான்.
அளியுடை வேந்தன் ஒளிமிகுந்து உயர்கின்றான்.

39-வது இறைமாட்சி முற்றிற்று.

---

# நாற்பதாவது அதிகாரம்

## கல்வி

அஃதாவது கற்றற்கு உரிய நூல்களைக் கற்றுத் தெளிதல். பொருள் முதலிய எல்லா நலங்களையும் எய்தி இன்புறுதற்கு ஏதுவாய் உள்ளது அறிவு. அந்த அறிவு கல்வியால் ஒளிமிகுந்து விளங்குகின்றது. இத் தகைய கல்வியை அரசன் அதிக உரிமையுடன் பருவம் தவறாமல் கற்று உயர்ந்து கொள்ள வேண்டும். கல்லாமல் கழிந்து நிற்பின் அவன் ஆட்சி பொல்லாததாய் இழிந்து புலைபடிந்து நிலைகுலைந்து ஒழிந்து போம்.

கல்லா அரசனும் காலனும் நேர்ஒப்பர்;
கல்லா அரசனிற் காலன் மிகநல்லன்;
கல்லா அரசன் அறம்ஓரான்; கொல்என்பான்;
நல்லாரைக் காலன் நணுகிநில் லானே.

(திருமந்திரம்)

அரசன் கல்லான் ஆயின் உலகிற்கு உளவாகும் அல்லல்களை இதனால் ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகின்றோம். எல்லாரையும் நன்கு பாதுகாக்க உரிய நிருபன் சிறந்த கல்விமானாய் உயர்ந்து விளங்கிய போதுதான் அவனது ஆட்சிமுறை எவ்வழியும் செவ்வையாய் மாட்சி மிகுந்து வரும். அவ் வரவும் உறவும் தெரிய இறை மாட்சியின் பின் கல்வி காட்சியாய்க் கலந்து நின்றது. மன்னனுடைய நீதிமுறைகள் எல்லாம் கல்வியறிவால் மன்னிவரும் என்பதை ஈண்டு முன்னதாக உன்னி உணர்ந்து உறுதியுண்மைகளைத் தேர்ந்து கொள்கிறோம்

391. கற்ற பெருவழுதி கற்றபடி யேநின்று
கொற்றமுற்றார் என்னே குமரேசா— முற்றவே
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. (1)

இ-ள்.

குமரேசா! கற்றற்கு உரிய நூல்களை எல்லாம் வழுவறக் கற்று உக்கிரப்பெருவழுதி ஏன் நெறியே

ஒழுகி நின்றார்? எனின், கற்பவை கசடு அறக் கற்க; கற்றபின் அதற்குத் தக நிற்க என்க.

கல்வியின் நயனும் பயனும் காண வந்தன.

கற்றற்கு உரிய விழுமிய நூல்களை வழுவறக் கற்றுக் கொள்க; பின்பு அதன்படி நலமாய் ஒழுகி உயர்க.

இரண்டு போதனைகள் ஈண்டு திரண்டு எழுந்துள்ளன. இவற்றைச் சாதனை செய்து கொள்பவர் வேதனைகள் நீங்கி விழுமியராய் விளங்கி வருவர்.

கல், நில் என்று கடிந்து சொல்லாமல் கற்க! நிற்க! என மரியாதை மருவிய வியங்கோளால் விளம்பியருளினார். பரிவு கூர்ந்து அறிவு கூறியுள்ள அருமை கருதியுணர வுரியது.

கல்லுதல் என்னும் வினையடியாகப் பிறந்து கல்வி என்னும் பேர் வந்துளது. கல்லுதல் = தோண்டுதல். உள்ளத்திலிருந்து ஊன்றி அகழ்ந்து வர ஆன்ற கல்வி வெளியே தெளிவாய் அமைந்து வருகிறது.

கற்க என்று முதலில் கட்டளை யிட்டார். எதைக் கற்பது? எப்படிக் கற்பது? என்னும் வினாக்களை எதிர் நோக்கி விடைகள் வந்துள்ளன. மானச மருமங்கள் மதி நலம் சுரந்து விதிமுறையே சிறந்து திகழ்கின்றன.

கற்பவை என்றது கற்கத் தக்க நல்ல நூல்களை.

பலவகை நிலைகளில் நூல்கள் பரந்து விரிந்து உள்ளமையால் பன்மையில் குறித்தார். நயமான நல்ல நூல்களை நாடிப் பயிலுக எனப் பயிற்சியின் உயர்ச்சியை உணர்த்தினார். சார்ந்து பயின்றபடியே உயிர்கள் நேர்ந்து வருதலால் நல்ல சார்புகளை நயமாக் காட்டினார்.

கசடு=குற்றம்; குறை; வழு; பிழை. அற=நீங்க.

குற்றம் அற்று ஒழிய நன்கு கற்ற பொழுதுதான் அக் கல்வி குணம் உடையதாய் மணம் அடைகிறது.

கற்பது ஏது கொல்?
கசடறக் கற்பதே கல்வி. (பாரதம்)

தெளிவான கல்வி நிலையைக் குறித்து அறக்கடவுள் வினவிய போது தருமர் இவ்வாறு விடைகூறியிருக்கிறார்.

கசடு அறக் கற்பதே கல்வி என்றதனால் அவ்வாறு கல்லாதவன் கற்றவன் ஆகான் என்பது தெரிய வந்தது.

கல்விக்கு அழகு கசடுஅற மொழிதல். (நறுந்தொகை)
மாசு அறக் கற்பதே கல்வி. (மூதுரை)

அதி வீர ராமரும், ஔவையாரும் இவ்வாறு கல்வி நலனைக் குறித்துக் கூறியுள்ளனர். வழுவறக் கற்றுப் பிழையறப் பேசிக் கிழமையுடன் ஒழுகி வருபவனே விழுமிய மனிதனாய் விளங்கி வருகிறான்.

கல்வியைக் கசடு அறக் கற்றவன் உள்ளக் கசடும் அற்று ஒளிபெற்று உயர வேண்டும் என்பார் அதற்குத் தக நிற்க என்றார். நிலை இலையேல் கலை புலையாம்.

நிற்றல் ஆவது நெறிமுறையில் நிலையாய் ஒழுகி வருதல். ஒழுக்கம் உயர்வை அருளுகிறது.

தான் கற்ற கல்விக்குத் தக்கபடி நல்ல ஒழுக்க நெறியில் ஒருவன் சரியாய் நிற்க வில்லையானால் அக் கல்விப் பயனை இழந்து புல்லியனாய் அவன் இழிந்து போவன் ஆதலால் அந்த இழிவு நேராவகை தெளிவு கூறினர். அரிய கல்விக்கு உரிய பயன் ஈண்டு உணர வந்தது. கண்ணுக்கு ஒளிபோல் கல்விக்கு ஒழுக்கம்.

நூலறிவு சீல நிலையால் சிறந்து திகழ்கின்றது.

மாடு ஆடு முதலிய விலங்கினங்களினும் மனிதன் உயர்ந்து நிற்பது அறிவினாலேயாம். இயல்பான அந்த அறிவு கல்வியால் உயர்வாய் ஒளிமிகப் பெறுகிறது. அவ் வுணர்வொளி உயிர்க்கு உய்தி புரிவது ஒழுக்கத்தாலேயாம்.

மாசறக் கற்று மனம் மாசு அற்றபோதுதான் உயிர் தேசு மிகப் பெற்று ஈசன் அருளை எய்துகிறது.

தேசும் திறனறிந்த திட்பமும் தேர்ந்துணர்ந்து
மாசு மனத்தகத் தில்லாமை—ஆசின்றிக்
கற்றல் கடனறிதல் கற்ருர் இனத்தராய்
நிற்றல் வரைத்தே நெறி.

எப்பிறப் பாயினும் ஏமாப்பு ஒருவற்கு
மக்கட் பிறப்பிற் பிறிதில்லை--அப்பிறப்பில்
கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண்
நிற்றலும் கூடப் பெறின். (அறநெறி: 127, 142)

கற்பவை கற்று, கற்றபடி நிற்றலை ஒருவன் பெறின் அவன் பெற்ற பிறப்பு பெருமகிமை யுடைய தாம் என முனைப்பாடியார் இப்படி உணர்த்தி யிருக்கிருர். குறித்துள்ள குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து நேர்ந்து வந்து நிற்கும் நிலைகளைத் தேர்ந்து கொள்ள வேண்டும்.

கற்குமது உண்டு களித்தது அல்லால் நின்னருளில்
நிற்குமது தந்ததுண்டோ? நீதான் பராபரமே.
(தாயுமானவர்)

கற்றபடி நிற்றலே கல்விப்பயன் என இது காட்டி யுளது. கல்வியைத் தெளிவாகக் கற்று நல்ல வழியில் ஒழுகி எல்லாரும் உயர்ந்து உய்தி பெற வேண்டும் என்றே தாய்மை அன்பு தோய்ந்து நாயஞர் வாய் மலர்ந்துள்ளார். பிழை படியாதபடி படி; பிழை படியாத படி வாழு என வழி கோலியிருப்பது விழியூன்றி உணர வுரியது, ஓதியுணர்வது உயர்வு புணரவே.

உள்ளம் தெளிய உணர்வு ஒளிபெற உயிர் துயர் நீங்கி உய்தியுற வுரிய நல்ல நூல்களையே எவ்வழியும் செவ்வையாய்க் கற்றுக் கொள்க என்பார் கற்பவை கற்க என்ருர். அவை எவை? நவை யுருதவை.

உணர்வு நலம் இல்லாத புல்லிய நூல்களைப் படித் தால் புன்மை புகுமே அன்றி நன்மையுருது. ஆகவே அந்த அற்பங்களை யாதும் கற்கலாகாது. நல்லதை விடுத்து நவையைக் கற்பது எவ்வழியும் அல்லலேயாம்.

உணர்வு நலம்கனிந்த ஒண்ணூல் ஒருவி
மணமிலாப் புன்னூல் மருவல்—குணமுடைய
தெள்ளமுதம் உண்ணுமல் தீயகள்ளை உண்டதுபோல்
உள்ளமது தீதாம் உணர்.

அறிவைக் கெடுத்து வெறியை விளைக்கின்ற வெய்ய நூல்களைப் படியாதே; செய்ய நூல்களைத் தேர்ந்து கொள்ளுக. நல்ல நூல்கள் அமுதம் போல்வன; பொல்லாதன புலையான கள்ளை ஒத்தன.

அறிவுலகம் பலவகைக் கலைகளையுடையது: கணிதம் சிற்பம் மந்திரம் வைத்தியம் முதலாக எத்தனையோ வித்தைகள் உள்ளன. அத்தனையும் பயில இயலா; ஆயுளும் போதாது; சாரமானதையே உய்த்துணர்ந்து கொண்டு உறுதியுடன் அதில் தேற வேண்டும்.

கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கின் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந்து அமைவுடைய கற்பவே நீர்ஒழியப்
பாலுண் குருகின் தெரிந்து. (நாலடி, 135)

நீரை நீக்கி அன்னப் பறவை பாலைப் பருகுதல் போல் சாரமான நல்ல நூல்களையே மாந்தர் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும் என இது தெளித்துளது. சத்தான கல்வி உத்தம உணர்வாகிறது.

கல்லாமல் இளமையை வீணே கழிய விடாதே; விரைந்து கற்றுக் கொள். அவ்வாறு கற்குங்கால் உயிர்க்கு உறுதி பயக்கத்தக்க நல்ல அறிவு நூல்களையே உள்ளம் தோய்ந்து பயின்று உயர்ந்து கொள்க.

கல்வியறிவு நல்ல சீலத்தோடு கலந்த பொழுது எல்லா இன்பநலன்களும் அங்கே விளைந்து வருகின்றன.

தேர்ந்த கல்வியும் ஆர்ந்த ஒழுக்கமும் அதிசய மேன்மைகளாய் வேந்தரை விளக்கியருளுகின்றன.

இவ் வுண்மை உக்கிரப் பெருவழுதிபால் உணர வந்தது.

சரிதம்

இந்த அரசன் பாண்டிய மன்னர் குல திலகனாய் நீண்ட புகழுடன் நிலவி நின்றவன். மதுரையம்பதியி

விருந்து எங்கும் செங்கோல் செலுத்திய வெண்குடை வேந்தன். அருந்திறலாண்மையும் பெருந்தகைமையும் உடையவன். அரிய கலைகள் பலவும் பயின்ற பெரிய மேதை. அறிவும் திருவும் அதிசய வீரமும் நெறி நியமங்களும் நிறையப் பெற்றவன். கலை நலம் கனிந்த புலவர்கள் பால் பேரன்புடையவன். எத்தகைய வித்தக விவேகிகளும் வியந்து புகழ விழுமிய நிலைமையில் எவ்வழியும் தலைமையாய் இவன் விளங்கி யிருந்தான்.

“கலையுணர் புலமையில் தலைமையோன் ஆகி
விதிமுறை வழாது முதுநிலம் புரக்கும்
பெருந்தகை உக்கிரப் பெருவழுதி என்னும்
தன்னிகர் இல்லா மன்னவர் பெருமான்.”

என இன்னவாறு உலகம் உவந்து புகழ்ந்து வர நீதிமுறையுடன் ஆட்சிபுரிந்து மாட்சி மிகுந்து வந்தான். உண்மை திண்மை வண்மை முதலிய உயர் குணங்கள் எல்லாம் இயல்பாகவே இக் கோமகனிடம் குடிகொண்டிருந்தன. புலவர்களோடு கலந்து கலைகளை ஆராய்ந்து மகிழ்வதையே தலைமையான வாழ்வாக இக் குலமகன் கருதி வந்தமையால் அறிஞர் யாவரும் இவனைப் புடை சூழ்ந்து போற்றி வந்தனர். தாய் மொழியான தமிழ் மொழியை வாய்மொழியளவில் பேசி வந்தவரும் சிறந்த மதிநலமுடையராய் யாண்டும் விளங்கி நின்றனர். புலவர்கள் குழுமிய சங்கத்தில் தலைமைப் புலவனாய் நிலவி யிருந்தமையால் இம் மன்னன் ஆட்சியில் கலை அறிவுகள் எவ்வழியும் செவ்வையாய்த் தழைத்து வந்தன. திருவள்ளுவப் பெருமான் சங்கத்தில் வந்து தமது நூலை அரங்கேற்றிய பொழுது அந்த அருமைத் திருக்குறளை வியந்து புகழ்ந்து இம் மதிமான் பாடிய கவி அதிசய மகிமையுடையது. அயலே வருவது காணுக.

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத் [தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த-நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சம்
சிந்திக்க கேட்க செவி. (உக்கிரப்பெருவழுதியார்)

இந்தக் கவியின் சுவையைக் கருதியுணர்க. மாந்தருடைய மனம் வாக்கு காயங்கள் புனிதமடைய வேண்டின் திருக்குறளைச் சிந்தித்து வந்தித்துச் சிரவணம் செய்து வர வேண்டும் என இவ் வேந்தன் வழிகாட்டியுள்ள காட்சியை இங்கே கண்டு மகிழ்ந்து கொள்கின்றோம். வழுவறக் கற்று நெறிமுறையே ஒழுகி வந்தமையால் இந்த இறை இருமையும் பெருமை மிகப் பெற்றான். கற்க கசடு அற; கற்றபின் அதற்குத் தக நிற்க என்பதை இம் மன்னன் நின்று உணர்த்தியுள்ளான். அந்த உண்மை இவனது சீவிய சரிதத்தில் எவ்வழியும் தெளிவாக விளங்கி ஒளிபுரிந்துளது.

உற்ற உடலுக்கு உயிர்போல் உயர்ஒழுக்கம்
கற்ற கலைக்காதும் காண்,

ஐயம் தீரக் கற்று அறிவுடன் ஒழுகுக.

---

392. காணுமிரு கண்ணிழந்தும் கற்றகவி வீரர்சீர்
கோணாத தென்னே குமரேசா—பேணுகின்ற
எண்என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு. (2)

இ-ள்

குமரேசா! கண் இழந்திருந்தும் எண்ணும் எழுத்தும் கற்ற கவி வீர ராகவர் ஏன் இசைபெற்று நின்றார்? எனின், எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ் இரண்டும் வாழும் உயிர்க்கு கண் என்க.

உயிர்க்கு உரிய உண்மைக் கண்கள் உணர வந்தன.

தருக்கமும் இலக்கணமும் இவ் வுலகில் வாழுகின்ற மக்கள் உயிர்க்கு இரண்டு கண்களாய் இசைந்துள்ளன.

என்ப என்பது இதில் மூன்று முறை வந்துள்ளது. பழமையின் வளமையைக் கிழமையா விளக்கியுள இவற்றின் வியனை நயமா உணர்ந்து கொள்க.

கற்க வுரிய நூல்களைக் கசடு அறக் கற்க வேண்டும் என்று முன்பு குறித்தார்; இதில், அதற்குரிய கருவிகளை முறையே தெரிய உரைக்கின்றார்.

எண் என்றது தருக்க நூலை. எண்ணி ஆராயும் இயல்பினது ஆதலால் இவ்வண்ணம் காண வந்தது. காட்சி கருதல் முதலியன இதில் மருவியுள்ளன.

காண்டல் அனுமானம் கதைஅருத்தா பத்தியிவை
ஈண்டிசைத்த எண்ஏனவே எண். (பரம-பானு)

தருக்கக் கலையை எண்என்று இது குறித்துள்ளது. காரணப் பெயர் பூரணமாக் கருத நின்றது.

எண் என்பது கணிதக் கலையையும் குறித்து வரும்.

எழுத்து என்றது இலக்கண இலக்கியங்களை. காதால் கேட்கும் ஒலி கண்ணால் காணும் வரிவடிவமாக எழுந்தது எழுத்து என அழுத்தமா அறிய வந்தது.

தன் கருத்தைப் பிறர்க்கு உணர்த்தவும், பிறர் கருதியதைத் தான் உணர்ந்து கொள்ளவும் மனிதனுக்கு இனிய கருவியாயிருப்பது மொழி. அது ஒலி உருவிலும் வரிவடிவிலும் தெளிவுற மருவியுளது.

அகரம் முதலாக எழுதப் படுவது எழுத்து என அமைந்தது. எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என ஐந்து வகையாய் இலக்கணக் கலை அமைந்துளது.

இந்த இலக்கணமும் தருக்கமும் கல்வியைக் கசடறக் கற்றுக் கொள்ளுதற்கு நல்ல கருவிகளாய் மருவியுள்ளன. நூலறிவுக்கு மூலங்கள் அறிய வந்தன.

வழுப்பதத்தை வாக்கினுக்கு மாற்றிவரம் ஆக்கும்
எழுத்தெழுவாய் ஐந்தும் எழுத்து. (பானு)

எழுத்தும் எண்ணும் கணக்குஎன்று ஆகும்
எண்ணே கரணமும் கணிதமும் என்ப. (பிங்கலந்தை)

எண்ணும் எழுத்தும் இயல்ஐந்தும் பண்நான்கும்
பண்ணின்ற கூத்துப் பதினொன்றும்—மண்ணின்மேல்
போக்கினாள் பூம்புகார்ப் பொன்கொடி மாதவிதன்
வாக்கினால் ஆடரங்கின் வந்து. (சிலப்பதிகாரம்)

இவை ஈண்டு எண்ணி உணர வுரியன.

அறிவுக் கலைகளைத் தெளிவாக அறிதற்கு இயலும் எண்ணும் விழிகள் போல் விளங்கி எவ்வழியும் ஒளி செய்து நிற்றலால் இவை கண்கள் என நேர்ந்தன.

எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்.

எண் எழுத்து இகழேல்.

ஔவையார் இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஏரணம் காண்என்பர் எண்ணர்;
எழுத்து என்பர் இன்புலவோர்;
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே.
(திருக்கோவையார்)

தருக்க நூலாரை எண்ணர் எனவும், இலக்கணக் கலைஞரைப் புலவர் எனவும் இதில் குறித்திருத்தலறிக.

இலக்கிய நூல்களை வழுவறத் தெளிந்து கொள்வதற்கு இலக்கணப் புலமை தலைமையாய் அமைந்துள்ளது. இந்த இயல் அறிவால் கல்வி உயர்வாய் ஒளி பெற்று வருகிறது. கல்வியறிவுக்கு எழுத்து மூல முதலாயுள்ளது. அந்த மூல முதலை அறிவதிலிருந்தே கல்வி நெறியே உருவாகி நேரே ஒளிமிகுந்து வருகிறது.

எழுத்து அறிவித்தவன் இறைவன் ஆகும்.
(நறுந்தொகை)

எழுத்தறியத் தீரும் இழிதகைமை; தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும்- மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதல்நூற் பொருளுணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்.

கற்பக் கழிமடம் அஃகும்; மடம் அஃகப்
புற்கம்தீர்ந்து இவ்வுலகின் கோளுணரும்; கோளுணர்ந்தால்
தத்துவ மான நெறிபடரும்; அந்நெறி
இப்பால் உலகத்து இசைநிறீஇ உப்பால்
உயர்ந்த உலகம் புகும். (நான்மணிக்கடிகை)

எழுத்தறிவால் விளைந்து வரும் உயர் நலன்களை இவை உணர்த்தியுள்ளன. பொருள் நிலைகளையும் குறிப்புகளையும் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து கொள்க.

மருளை நீக்கி மாசறு காட்சியை அருளுதலால் கல்வியின் அதிசய மாட்சியை அறிந்து கொள்ளலாம்.

வாழும் உயிர் என்றது மக்களை.

கல்வியைக் கற்று உயர வல்லவர் மாந்தரே ஆதலால் அவரை இங்ஙனம் குறித்தார். உயிர் வாழ்வை உயர் வாழ்வாக ஆக்குவது கல்வியே; அதனை உரிமையுடன் இளமையிலேயே தழுவி விழுமிய மதிமானாய் உயர்க என்பது தெரிய வந்தது.

இதமாய் வாழாத உயிர்களும் உள ஆதலின் அதனினும் வேறுபாடு தெரிய வாழும் உயிர் என வரைந்து காட்டினர். கல்வி தோய்ந்ததே நல்ல உயிர்.

உடலிலுள்ள கண்கள் நேரே தோன்றுகிற உருவப் பொருள்களை மாத்திரம் காணுகின்றன. உயிரின் கண் ஆகிய கல்வி யாண்டும் பரந்து விரிந்துள்ள எல்லா அருவப் பொருள்களையும் இருந்த இடத்தில் அமைதியாய் அமர்ந்து கொண்டே தெளிவாத் தெரிந்து உள்ளம் உவந்து உறுதி செய்து கொள்ளுகின்றது. ஊனக் கண்ணும் ஞானக் கண்ணும் ஒருங்கே உணர வந்தன.

கல்வியைக் கண் என்றது அதன் அருமை பெருமைகளைக் கருதியுணர்ந்து உரிமையுடன் பேணி யாண்டும் மேன்மையாய் மனிதர் இனிது உயர வேண்டியே.

கண் உயிரின் ஒளி: கல்வி உணர்வின் ஒளி.

கண்ணை இழந்தவன் குருடனா யுழலுகின்றான்.

கல்வியை இழந்தவன் மடையனா யிழிகின்றான்.

கண் இல்லையேல் உடல் ஊனமாம்.

கல்வி இல்லையேல் உயிர் ஊனமாம்.

ஊனமும் ஈனமும் உறாமல் ஞானமாய் உயர வேண்டுமானால் கல்வியை நலமாய்க் கற்றுக் கொள்ள வேண்டும். அவ்வாறு கொண்டால் எல்லா நன்மைகளையும் அது செவ்வையாக் காட்டிச் சீர்மைகளை யூட்டியருளும்.

அருள்வழி காட்டலின் இருவிழி ஆகியும்.
(கல்லாடம், 12)

கல்வியை இவ்வாறு கல்லாடர் காட்டி யிருக்கிறார்.

பேரின்ப நிலைக்கு வழி காட்டுதலால் கல்வி உயிர்க்கு இனிய விழுமிய விழி என விளக்கி யுள்ளார். அதன் காட்சிகளையும் மாட்சிகளையும் கருதி யுணர்ந்து உறுதியுண்மைகளைத் தெளிந்து கொள்கிறோம்.

துணையது வாய்வரும் தூயநற் சோதி
துணையது வாய்வரும் தூயநற் சொல்லாம்
துணையது வாய்வரும் தூயநற் கந்தம்
துணையது வாய்வரும் தூயநற் கல்வியே.
(திருமந்திரம்)

உயிர்க்கு உறுதித் துணையாய் உயர் பேரின்பம் தருவது கல்வியே எனத் திருமூலர் இங்ஙனம் அருளி யுள்ளார். ஆன்ம உய்தி மேன்மை ஆயது.

ஊன மருள் ஒழிந்து ஞான ஒளி வீசி வருவது கல்வியாலேயாம்; அந்த ஒளி விழி அதிசய நிலைகளைக் கண்டு ஆனந்தம் அடைந்து வருகிறது.

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனி. [திருவிசைப்பா]

கற்றவர் வளைத்துத் திரிபுரம் எரித்தோன்
கற்றவர் கருத்தினுல் காண்போன். [பாரதம்]

கல்வி ஆகிய ஞானக்கண் உடையவரே ஈசனை நேரே கண்டு இன்பம் அடைகின்றனர் என இவை குறித்துள்ளன. கல் = மலை. தவர் = வில்.

ஊனக்கண் போல ஒருநோக்கோ கல்விஎனும்
ஞானக்கண் கோடி நலநோக்கும்—வானக்கண்
நின்றொளிரும் ஆதவனும் நேராக இக்கண்எதிர்
நன்றொளிரும் அன்றோ நயந்து.

கல்வி ஆகிய ஞான சூரியன்எதிரே வானசூரியனும் மோனமாய் நயந்து வியந்து நிற்பன் என்றதனுல் கல்வி யின் நிலைமை தலைமைகள் தெரிய நின்றன. அவனும் நீக்க முடியாத அஞ்ஞான இருளை நீக்கி மெய்ஞ்ஞான

ஒளியைப் பரப்பி உயிர்க்கு உயர் பேரின்பம் அருளு தலால் கல்வி சீவ அமுதமாய் மேவியுளது.

அரிய பெரிய நன்மைகளை அருளிவருகிற கல்வியை உரிமையுடன் ஓம்பிவருபவரே உயர்ந்து திகழ்கின்றார்.

ஓவியம் சிற்பம் போர் ஏர் இசைஎன இன்னவாறு கல்விநிலைகள் பலவகையில் நிலவியுள்ளன. அவை எல்லாம் உள்ளத்தை உயர்த்தி உயர்வை ஒளிபெறச் செய்து உயிர்க்கு நேரே உய்திபுரியா, தத்துவ ஞானம் தழுவிய வித்தகக் கல்வியே துயர்களைநீக்கி உயிர்களை உயர்த்தி உறுதியாய் உதவி புரியவல்லது.

உண்மையான உணர்ச்சியும் உயர்ச்சியும் நூலறிவானே உளவாதலால் எழுத்து என இனம்சுட்டி விளக்கினார். வித்தும்மரமும்போல்எழுத்தும்கலையும்இசைந்துள.

ஓதி உணர்தற்கு உரிய ஆதி மூல நிலை அறிய வந்தது. மூல முதலால் முழுமுதல் தெரிய நேர்ந்தது,

"கட்புல னில்லாக் கடவுளைக் காட்டும்
சட்டகம் போலச் செவிப்புல ஒலியை
உட்கொளற்கு இடும்உருவாம் வடிவு எழுத்தே."

காணமுடியாத கடவுளை அறிதற்கு அமைந்த படிவங்கள் போல் செவிப்புல ஒலியைத் தெரிதற்கு மருவிய வரிவடிவமே எழுத்து என வழுத்த வந்துளது என்று இது குறித்திருக்கிறது. நாதப் பிரமத்தை அறிதற்கு உரிய குறியீடு என்பதை இங்கே கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். எழுத்தின் தெளிவால் யாவும் தெரிகின்றன.

தன்னை உணர்த்தின் எழுத்தாம்; பிறபொருளைச்
சுட்டுதற் கண்ணேயாம் சொல்.

எழுத்து எது? சொல் எது? என்பதை இது விளக்கியுளது. குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுக.

எழுத்து அறிந்து தமையுணர்ந்த யோகர் உள்ளத்து
இயல்அறிவாம் தருவினில் அன்பெனும்ஓர் உச்சி
பழுத்து அளிந்து மௌனநறும் சுவைமேல் பொங்கிப்
பதம்பொருந்த அனுபவிக்கும் பழமே! மாயைக்

கழுத்து அரிந்து கருமமலத் தலையைவீசும்
கடுந்தொழிலோர் தமக்கேநற் கருணை காட்டி
விழுத்துணையாய் அமர்ந்தருளும் பொருளே! மோன
வெளியில்நிறை ஆனந்த விளைவாம் தேவே!

[அருட்பா]

இந்தக் கவியின் சுவையைக் கருதிக் காணுங்கள். பொருள் நயங்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்பவர் உள்ளம் உவந்து உயர்வர். எழுத்து அறிவு எவ்வளவு பேரின்பங்களுக்கு மூலமாயுள்ளது என்பதை இதில் உணர்ந்து வியந்து மகிழ்ந்து கொள்கிறோம்.

முகத்தில் கண்போல் கல்வி அகத்தில் ஒளிசெய்து உயிரை உயர்த்தியருளுகிறது. உய்தி நலம் உதவித் தெய்வநிலை யருளுகின்ற மெய்யான கல்வியை உரிய பருவத்தே பிரியமாய்ப் பேணிக் கொள்ள வேண்டும்.

நண்ணிய நல்ல கல்வியாளர் எண்ணிய நலன்களை எய்தி யாண்டும் கண்ணியம் அடைந்து மகிழுவர்.

இவ் வுண்மை வீரராகவன் பால் விளங்கி நின்றது.

சரிதம்

வீரராகவர் என்பவர் தொண்டை நாட்டிலே பொற்களந்தை என்னும் ஊரில் இருந்தவர். இவரது காலம் இற்றைக்கு முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னராகும். வேளாளர் மரபினர். இவருடைய தந்தை பெயர் வடுகநாத முதலியார். இளம் பருவத்திலேயே இவர் கண் ஒளி இழந்தனர். மிக்க நுண்மதியாளர். நோக்கிப் படித்தற்கு நோக்குகள் இல்லையே என்று தம் நிலைமையை நினைந்து நினைந்து இவர் நொந்தார். இவரது கலைபயில் ஆர்வத்தைப் புலவர் ஒருவர் அறிந்து சில கவிகளை இவரிடம் வாய்ப்பாடமாகக் கூறினர். அவை முழுவதும் இவர்க்கு மனப்பாடம் ஆயின. இவரது மனன சத்தி அதிசய நிலையில் அமைந்து இருந்தது. எத்தகைய பாடல்களையும் ஒருமுறை கேட்டவுடனே மறுபடி திருப்பிச் சொல்லி விடுவார். எழுத்து முதலிய ஐவகை இலக்கணங்களையும் பலவகைக் காவியங்களையும் யாதொரு

மல்லவுமின்றித் தம் நெஞ்சே ஏடாக இவர் நிலைபெறக் கற்ருர். "ஏடாயிரம் கோடி எழுதாது தன் மனத்து எழுதிப்படித்த விரகர்" என்று இவர் கல்வி கற்ற நிலையை வியந்து போற்றியுள்ளனர். கம்பரது கவிகளை மனப்பாடமாகச் சொல்லி இவர் இராமாயணப் பிரசங்கம் செய்வதைக் கேட்டுப் புலவர் பலரும் வியந்திருக்கின்றனர். நல்ல புலமையோடு சிறந்த கவிகளையும் விரைந்து பாடுவதில் வல்லவராய் இருந்தமையால் அந்தகக்கவி வீரராகவன் என விந்தையான பெயர் பெற்று இவர் விளங்கி நின்ருர். குறு நில மன்னர் பெரு நிலக் கிழவர் முதலிய பலரிடமும் சென்று தம் புலமையைப் புலப்படுத்திப் பரிசில் பல பெற்ருர். ஈழ மண்டலம் சென்று அங்கே பரராச சேகரன் என்னும் மன்னன் முன்னிலையில் தமது அரிய புலமையைக் காட்டிப் பெரிய பரிசில்கள் பெற்று வந்தார். சோழ மண்டலத்தில் இவர் திரிந்து வருங்கால் ஒரு நாள் காவிரி நதியை அணுகித் தாம் கையில் வைத்திருந்த கட்டுச் சோற்றைக் கரையில் வைத்துவிட்டு நீராடச் சென்ருர். உடனே அதனை ஓர் நாய் கவர்ந்து சென்றது. குளித்து வெளிவந்த இவர் அன்னத்தைக் காணமல் கன்னத்தில் கைவைத்து நின்ருர். அருகில் நின்றவன் நிகழ்ந்ததை உரைத்தான். அப்பொழுது வயிற்றுப் பசியோடு நின்ற இவரது வாயிலிருந்து ஒரு பாட்டு வந்தது. அடியில் வருவது காண்க

"சீராடை அற்ற வயிரவன் வாகனம் சேரவந்து
பாராரும் நான்முகன் வாகனம் தன்னைமுன் பற்றிக்கவ்வி
நாரா யணனுயர் வாகனம் ஆயிற்று நம்மைமுகம்
பாரன்மை வாகனன் வந்தே வயிற்றினில் பற்றினனே."

நகைச் சுவையுடன் தம் கவிச் சுவையை இங்ஙனம் காட்டியிருக்கிருர். கவிகளுடைய கற்பனைகள் விற்பனங்களாய் விளைந்து விநய விநோதங்கள் விரிந்து வருகின்றன. பல காட்சிகளை அவை காட்டியருள்கின்றன.

வயிரவன் வாகனம்=நாய். நான்முகன் வாகனம்= அன்னம். நாராயணன் வாகனம் = கருடன். மைவாகனன்=அக்கினி. நாய் அன்னத்தை எடுத்துக் கொண்டு

பறநது போயது; என் வயிற்றில் பசித்தீ பற்றிப் பிடித்தது என்னும் கருத்தை இப்படி விசித்திரமாக உரைத்துள்ளார். இவரது கல்வித்திறத்தையும் கவி நயத்தையும் அக்காலத்திருந்த கவியரசரும் புவியரசரும் புகழ்ந்து பாராட்டிப் போற்றி யிருக்கின்றனர்.

பொங்குதமிழ் அயோத்தியில்வாழ் தசரதன்என்
போனிடத்தும், பூதூர் வேந்தன்
துங்கவடு கன்னிடத்தும் வீரரா
கவர் இருவர் தோன்றி னூரால்
அங்கொருவன் ஒருகலைமான் எய்திடப்போய்
வசைபெற்ருன் அவனி பாலன்
இங்கொருவன் பலகலைமான் எய்திடப்போய்க்
கவியிஞல் இசைபெற் ருனே. (1)

இன்னம் கலைமகள் கைமீதில் புத்தகம் ஏந்தி அந்தப்
பொன்னம் புயப்பள்ளி புக்கிருப்பாள்என்ன புண்ணியமோ
கன்னன் களந்தைக் கவிவீரராகவன் கச்சியிலே
தன்நெஞ்சம் ஏடெனக் கற்ருன் ஒருமுத் தமிழையுமே. (2)

விரகன்முத் தமிழ்க்கவி வீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெலாம்
உரகனும் வாணனும் ஒப்பத் தோன்றிஞல்
சிரகர கம்பிதம் செய்ய லாகுமே.

(தமிழ் நாவலர் சரிதை)

இவ்வாறு அரியபுகழுடன் பெரிய மேன்மை பெற்றிருந்த இவர் திருக்கழுக்குன்றப் புராணம், கழுக்குன்ற மாலை, சந்திரவாணன் கோவை, திருவாரூருலா, சேயூர்க் கலம்பகம் முதலிய நூல்களைச் செய்தருளினர்.

மாடேறு தாளும் மதியேறு சென்னியும் மாமறையோன்
ஓடேறு கையும் உடையார் தமக்கிடம் ஊருழவர்
சூடேறு சங்கம் சொரிமுத்தை முட்டைஎன் றேகமலக்
காடேறும் அன்னம் சிறகால் அணைக்கும் கழுக்குன்றமே.

(கழுக்குன்ற மாலை)

மாலே நிகருறுஞ் சந்திர வாணன் வரையிடத்தே
பாலேரி பாயச்செந் தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண்

டாலே எருவிட முப்பழச் சாற்றின் அமுதவயல்
மேலே முளைத்த கரும்போ இம் மங்கைக்கு மெய்எங்குமே.
(சந்திர வாணன் கோவை)

விசயராயன் என்னும் வேதியன் ஒருநாள் இவரைப் பல்லக்கில் வைத்துத் தன் இல்லத்திற்கு அழைத்து வந்தான். தம் சிவிகையின் பின்னே நடந்து வந்த அம் மறையவனது அன்புரிமையையும் தமிழ் ஆர்வத்தையும் வியந்து அப்பொழுதே இவர் ஒரு கவி பாடினர்.

திருமாலும் ஈசனும் பின்போயும் தூது செலத்துணிந்தும்
அருமா துரியத் தமிழ்வளர்த்தார் அவரோடு பங்காய்
வருமா மறையவன் பேர்சாதித் தேமிக வண்டமிழ்க்குப்
பெருமான் சிவிகைப்பின் சென்ருன் விசயப் பிரமனுமே.

தம் புலமையால் இவர் அடைந்துள்ள மதிப்பும் மாட்சியும் இதனுல் அறியலாகும். கண் இல்லாதிருந்தும் கல்வியுடைமையால் எல்லா நலங்களையும் எய்தி இவர் இசை மிகப் பெற்ருர். எண்ணும் எழுத்தும் உயிர்க்குக் கண் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்ருர்.

கண்ணுகக் கல்வியைக் கற்றுயர்க; கல்லாயேல்
மண்ணு யிழிவாய் மருண்டு.

கல்வி உயிர்க்குக் கண்.

———

393. காலுமிரு கண்ணுமற்ருர் கற்றுயர்ந்தார் கண்ணிருந்தும்
கோலிழந்தான் என்னே குமரேசா—மேலான
கண்ணுடையர் என்பவர் கற்ருேர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். (3)

இ-ள்.

குமரேசா! குருடும் முடமுமான இரட்டையர் கற்று உயர்ந்தார்; சந்தனு ஏன் கல்லாது இழிந்தான்? எனின், கண் உடையர் என்பவர் கற்ருேர்; கல்லாதவர் முகத்து இரண்டு புண் உடையர் என்க.

கற்ருரது உயர்வும் கல்லாரது இழிவும் காணவந்தன.

கற்றவரே உண்மையான கண்களை யுடையவர்; கல்லாதவர் முகத்தில் இரண்டு புண்களை யுடையவரே.

கல்வியைக் கண் என்று முன்னம் குறித்தார்; இதில் அதனை வலியுறுத்தித் தெளிவாக விளக்கியுள்ளார்.

கல்வியின் உயர்ந்த மாட்சியை வியந்து காணு தற்கு நல்ல காட்சி யுடையதை இணைத்துக் காட்டி உணர்த்தி யிருப்பது ஊன்றி உணரவுரியது.

கண் மிகவும் அருமையானது; பெருமை மிகவுடையது. உயிரின் ஒளி கண்வழியே வெளியே உவாவி உலக வாழ்வை நடத்தி வருகிறது. உயிரோடு உயர்வாக எண்ணி எவ்வழியும் எவரும் கண்ணை உரிமையுடன் உவந்து புகழ்ந்து போற்றி வருகின்றனர்.

எல்லாக் காட்சிகளையும் கண்டு மகிழ்தற்கும் கருதி யுணர்தற்கும் இனிய கருவியாயுள்ளமையால் அரிய பெரிய மகிமைகளை இயல்பா எய்திக் கண் உயர்வாயுள்ளது. அதிசயமான அருமைப் பொருளைக் குறித்துப் பேச நேர்ந்தபோது கண்ணையே மேலோர் உவமை கூறி யாண்டும் மேன்மையா விளம்பி வந்துள்ளனர்.

கண்ணே கருத்தே என் எண்ணே எழுத்தே
கதிக்கான மோன வடிவே!

கடவுளைக் குறித்துத் தாயுமானவர் இவ்வாறு பாடியிருக்கிருர். இறைவனைக் கருதியிருப்பது உணர வுரியது.

கண்ணின் மணியே! உயிர்க்களியே!
கருணைப்புயலே! சுகக்கடலே!

முருகப்பெருமானைச்சிதம்பர சுவாமிகள் இங்ஙனம் துதித்திருக்கிருர். இத்தகைய கண்ணையும் கல்வியையும் ஒரு துலையில் வைத்து நேரே நிறைதூக்கி உண்மை நிலையை உலகம் அறியத் தேவர் உணர்த்தியுள்ளார். கல்வியை இழந்தவன் கண்ணை இழந்த கபோதி என்றதனல் கல்லாமல் நின்றவர் எவ்வளவு அழிகேடுகளை அடைந்து பழி நிலைகளில் இழிந்து ஒழிந்து போகின்றனர் என்பது தெளிந்து கொள்ள வந்தது.

கல்லாதவர் முகத்தில் ஒளிவிழிகள் அமைந்திருந்தாலும் அவை நல்ல கண்கள் அல்ல; பொல்லாத புண்களே; புலையான புல்லிய நோய்களேயாம்.

உடம்பில் புடைத்துச் சீழும் உதிரமும் வடிய வாய்ந்திருப்பது புண் எனவந்தது; வேதனையும் அருவருப்பும் உடைய அந்தப் புண்ணைக் கல்லாதவன் கண்ணுக்கு ஒப்புக்காட்டியது ஏன்? காண உரிய அறிவு நலனைக் காண முடியாமல் பீளையும் நீரும் சோரப் பீழையாய்ப் பிழைபடிந்து முகத்தில் இழிந்திருக்கும் அதன் இழி நிலையையும் அழிபுலையையும் கருதியுணர்ந்து உறுதிகாண.

உண்மையான உறுதிக் காட்சிகளை யாதும் காணாமல் தீதுபடிந்துள்ளமையால் கல்லாதவர் விழிகண் குருடராய்ப் பழிபடிந்து இழிவடைந்து உழல்கின்றனர்.

திவா பச்யதி நோலூக: காகோ நக்தம் ந பச்யதி
வித்யாவிஹீநோ மூடஸ்து திவா நக்தம் ந பச்யதி.

கூகைக்குப் பகலில் கண்தெரியாது; காக்கைக்கு இரவில் கண்தெரியாது; கல்லாத மூடனுக்கோ பகலிலும் இரவிலும் யாதும் தெரியாது என இது குறித்துள்ளது. குறிப்புகள் கூர்ந்து ஓர்ந்து சிந்திக்க வுரியன.

மூடன் முகத்தில் உள்ள விழிகள் அழி துயரமான பீடைகளே, அகத்தில் ஒளி ஒழிதவால் இழிவாயது.

உயிர் துயர் உறாமல் உய்தற்கு உரிய அறிவுநலன்களை அறியமுடியாமல் அவலமுறுதவால் கல்லாதமூடர் பொல்லாத புலைகளாய் இழிந்து கழிந்து ஒழிந்து போகின்றனர். மேலோர்களுடைய சிறந்த எண்ணங்களே நூல்களின் வண்ணங்களாய் வந்துள்ளன. அந்த நூலறிவே கல்வி என்னும் பேரால் சால்பமைந்துள்ளது.

கால தேசங்களையும் கடந்து நோக்கி அரிய பெரிய காட்சியின்பங்களை அருளி வருதலால் கல்வி ஞானக்கண் என விளங்கி மேன்மை மிகுந்துள்ளது.

உடல்வயத் தாகும் சாதி உயர்ந்தவர் சாதி தாழ்ந்தோர்
திடமுற உயிரி னோடு செல்லுறும் கல்வி தம்மால்
அடர்தரும் பெருமை எய்தார் ஆதலால் அகக்கண் ஆகித்
தொடர்புறும் கல்வி கல்லாத் தொழிலினை விடவே வேண்டும்.
(விநாயக புராணம்)

அகக்கண் ஆகிய கல்வியால் அடையும் பெருமை யைவேறு எதனுலும் பெறமுடியாது; ஆதலால் கல்வி யை விரைந்து கற்று உள்ளம் தெளிந்து உயர்ந்து கொள்ள வேண்டும் என இஃது உணர்த்தி யுள்ளது.

அரிய மகிமைகளை அருளிப் பெரிய இன்பங்கள் தருதலால் கல்வியை உரிமையுடன் கற்றவர் எவரும் பெருமை மிகப் பெறுகின்றுர். பெற்ற பிறப்பு நன்கு சிறப்புற வேண்டின் அவர் கற்றவராக வேண்டும்.

விண்ணுடை யார்புகழ் நூபுர பாதர்வெல் வேல்நெடுங்கண்
பெண்ணுடை யார்மகிழ் தென்வெங்கை மாநகர்ப் பெண் [அணங்கே
கண்ணுடை யார்கற் றவரேகல் லார்கண் முகத்திரண்டு
புண்ணுடை யார்எனக் கூறிநம் காதலர் போயினரே.

(திருவெங்கைக் கோவை, 408)

கலை பயின்று வரத் தலைவன் பிரிந்து போயுள்ளதைத் தோழி தலைவிக்கு இவ்வாறு உரைத்திருக்கிருள். கண் உடையார் கற்றவரே; கல்லார்கள் முகத்து இரண்டு புண் உடை யார் எனக் கூறி நம் காதலர் கல்வியுறப் போயினர் என் னும் இது நாயனுர் வாய்மொழியை மருவி வந்துள்ளது.

காவியக் கவிகள் திருக்குறளை எவ்வழியும் இவ்வாறு போற்றி வருவதை ஆங்காங்கு நூல்களில் பார்த்து வருகின்றேம். பொய்யாமொழி வையக ஒளியாயுளது.

கல்வி கண்ணினும் சிறந்தது; அதனைக் கருதிப் பேணி மக்கள் உயர வேண்டும் என்றே உரிமையுடன் தேவர் உணர்த்தி யுள்ளார். உணர்த்துந் திறம் வியப் பை விளைத்து உவப்பை வளர்த்து வருகிறது.

கற்றவனே உண்மையான மனிதன்.

கல்லாதவன் புன்மையான மாடே.

கல்வியாளனே நல்ல கண்களை யுடையவன்.

கல்லாதவன் கண்கள் பொல்லாத புண்களே.

சிறந்த மனிதப் பிறப்பை அடைந்து வந்துள்ள நீங்கள் கல்லாது கழிந்தால் இழிந்த விலங்குகளாய்

ஒழிந்து போவீர்கள்; உங்கள் முகத்தில் ஒளி விழிகள் இருந்தாலும் கல்வி இல்லையேல் நீங்கள் இழி குருடர்களே என்று அருளுடன் தெளிவுறுத்தி யிருக்கிறார்.

புண்ணியக் கல்வியைப் போற்றி வருபவரே கண்ணுடையராய்க் கண்ணியம் பெற்று விளங்குகின்றார்.

கற்றறி வாளர் கருதிய காலத்துக்
கற்றறி வாளர் கருத்தில்ஓர் கண்உண்டு
கற்றறி வாளர் கருதி உரை செய்யும்
கற்றறி காட்டக் கயலுள வாக்குமே. (திருமந்திரம்)

கற்ற மாந்தரைக் கண்எனக் கோடலும். (சிந்தாமணி)

கண்இரண்டே யாவருக்கும் கற்றோர்க்கு மூன்றுவிழி
எண்ணுவிழி ஏழாகும் ஈவோர்க்கு—நண்ணும்
அநந்தம் தவத்தால் அருள்ஞானம் பெற்றோர்க்கு
அநந்தம் விழிஎன் றறி. (நீதிசாரம்)

கற்றவர் மாட்சியைக் கண்களோடு இணைத்து இவை காட்டியுள்ளன. குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து உணர்பவர் கல்வியின் நிலையைத் தேர்ந்து கொள்வர்.

அகத்தில் ஒளிசெய்து ஆனந்தம் தருகின்ற கல்வி இல்லையேல் அந்த மனிதன் முகத்தில் உள்ள கண் உயிர் அற்ற உடல் போல் ஒளி அற்று இருளுகிறது. உணர்வின் ஒளியாய் உயிர்க்கு ஏமம் செய்து வருதலால் கல்வி இங்ஙனம் அதிசய நிலையில் துதி செய்யப் பெற்றது. மணிக்கு ஒளிபோல் மனிதனுக்குக் கல்வி.

கல்வி கண்ணினும் சிறந்தது; எண்ணரிய இன்ப நலன்களை இனிது தர வல்லது; புண்ணிய நிலையமான அதனை மனிதன் புனிதமாப் போற்றிக் கொள்ள வேண்டும். அதனைப் பெற்ற அளவு பெருமையாம்.

விண்ஒளி மேதினி விளக்கும்; மேவிய
கண்ஒளி காட்சியைக் காட்டும்; கல்வியாம்
எண்ஒளி இருமையும் இனிது நல்கியே
தண்ஒளி யாயருள் தழைத்து நிற்குமே.

விண் ஒளியினும் கண் ஒளியினும் கல்வி வியன் ஒளியாய் நின்று உயிர்க்கு உயர்கதி யருளும். அந்த விழுமிய ஒளியை யுடையவரே எவ்வழியும் பெருமைகளை மருவி எழுமையும் இன்பம் அடைவர்.

என்ன நிலையினர் எனினும் கற்றவர் உயர்ந்து யாண்டும் சிறந்து விளங்குவர்; யாவும் உடையராயினும் கல்லாதவர் புல்லராய் இழிந்து புலையுழந்து படுவர்.

இந்த வுண்மை இரட்டையர் இடமும், சந்தனன் கண்ணும் முறையே நன்கு தெரிய வந்தது.

## சரிதம் 1

இரட்டையர் என்பவர் சோழ நாட்டிலே ஆமிலந்துறை என்னும் ஊரில் இருந்தவர், செங்குந்தர் மரபினர். தந்தை பெயர் சோணநாதன். இவரது காலம் அறுநூறு வருடங்கட்கு முன்னராம். இந்த இருவரும் ஒரு வயிற்றில் பிறந்தவர். சோமன், சாமன் என்னும் பேரினர். உருவம் பருவங்களில் ஒத்து ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் இருந்தமையால் இரட்டையர் எனப் பெற்றார். மூத்தவர் முடவர்; இளையவர் குருடர். தெய்வத் திருவருளால் எல்லாக் கலைகளிலும் இவர் வல்லுநராயினர். இனிய கவிகள் பாடும் அரிய புலமை இவர்பால் இயல்பாக அமைந்திருந்தது. தம் புலமை நிலையை உலகம் அறிந்து மகிழ இவர் உலாவி வந்தார். அரசர் செல்வர் முதலிய பலரும் இவரைப் பரிந்து போற்றிப் பரிசில் வழங்கி வந்தனர். முடவர் மேலிருந்து வழிகாட்டக் குருடர் அவரைத் தோளில் சுமந்து பல இடங்களுக்கும் சென்றார். இவர் கவிபாடும் முறையும் திறனும் அதிசயமான புதுமை யுடையன. தாம் நேரே கண்டதைக் குறித்து மூத்தவர் பாதி பாடுவார்; அக் குறிப்பையும் கருத்தையும் யூகித்துணர்ந்து மற்றைப் பாதியையும் இளையவர் உடனே பாடி முடிப்பார். இவருடைய பாடல்கள் பலவகைச் சுவைகளை யுடையனவாய் வியப்பும் நயப்பும் விளைந்திருக்கின்றன. ஒருநாள் இவர் வழியே செல்லுங்கால் மாங்காடு என்னும் ஊரிலிருந்த ஒரு

குயவன் தன் மகளை மருமகன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனான். அப்படிப் போகும் பொழுது பிள்ளைப் பாசத்துடன் மெய் தீண்டி அவளை அருகணைத்துச் சென்றான். அவனது மெய் அன்பைக் கண்ட முடவர் அந் நிலைமையைப் பாதி வெண்பாவில் விநோதமாக ஓதினார். அந்தப் பாட்டு ஈங்கு அறிய வுரியது.

"மாங்காட்டு வேளான் மகளை மருமகன்பால்
போங்காட்டில் இன்பம் புணர்ந்தானே!"

என்று மூத்தவர் இங்ஙனம் சொல்லி முடிக்கவே இளையவர் அதை இனிது இணைத்தார்: "ஆங்காணும்
மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு."

என்று தொடுத்து முடித்தார். அண்ணன் உரைத்த குறிப்பை உணர்ந்து இவ்வண்ணம் திருக்குறளை எடுத்துப் பொருத்தமுற இணைத்திருக்கிறார். நகையும் உவகையும் சுவை சுரந்துவர இவர் கவிகள் தொகையாய் வந்திருக்கின்றன. பரிசில் நாடிப் பல இடங்களில் அலைந்து திரிந்தாலும் துறவிகள் போலவே பாசபந்தங்களின்றி ஈசன் அருள் தோய்ந்து இவர் வாழ்ந்துள்ளனர். ஒரு நாள் அரியல் என்னும் ஊர் அருகே இருந்த குளத்தில் இவர் குளிக்கச் சென்றனர். அப்பொழுது தம் மடியில் உள்ள பணத்தைக் கரையிலிருந்த அரசடி விநாயகர் முன் வைத்தனர். குளித்து வந்து பார்க்குங்கால் பொருளைக் காணோம். "தம்பி! பிள்ளையார் வேலையைப் பார்த்தாயா? நாம் நம்பிக்கையாக வைத்த பணத்தைத் தும்பிக்கையார் திருடிக் கொண்டார்" என முன்னவர் சொன்னார்; பின்னவர் மெல்லப் போய்த் தொந்தி வயிற்றைத் தடவிப் பார்த்து "அண்ணா! திருடியது உண்மையே" என்று பெருநகை செய்தார். அவ்வமையம் இருவரும் சரிபாதியாப் பாடிய கவி அடியில் வருவது.

"தம்பியோ பெண்திருடி தாயார் உடன்பிறந்த
வம்பனோ நெய்திருடும் மாமாயன்—அம்புவியில்
மூத்தபிள்ளை யாரே முடிச்சவிழ்த்தீர்! போமோநும்
கோத்திரத்திற் குள்ள குணம்." (இரட்டையர்)

இந்தக் கவியைச் சொல்லி முடிக்கவே பிள்ளையார் துதிக்கையிலிருந்து பொற்காசுகள் பல உதிர்ந்தன. அப்பெருமான் அருளை வியந்து இருவரும் விழிநீர் சொரிந்து உருகி நின்றார். இந் நிகழ்ச்சியை முருகதாசர் பெரிதும் வியந்து புகழ்ந்து பாடியிருக்கிறார்.

"அத்தினத்தோர் குளக்கரையில் அரசடி
விநாயகன்பால் அண்ணன் கையில்
வைத்திருந்த பணமுதலா வனமறைய
முழுக்காடி வந்து பார்த்துச்
சத்தியமாய்த் தம்பியைக்கூய்ப் பணம்காணேன்
எனச்சொன்னான் சலிப்போ டன்னான்
இத்திருட்டுஇப் பகற்பொழுதில் கண்ணுள நீ
அறியாதுயார் இழைத்தார்? என்றான். (1)

தந்திமுகக் கணபதிமுன் வைத்ததுண்டு
மற்றொருவர் தாமும் ஈண்டு
வந்திடக்கண் டிலன்எனவே தமையன்உரைத்
தலுமவன்கை வழிப்பின் னோன்போய்
தொந்திமுத லியஉறுப்பு முழுமையும்தன்
கைகளினால் தொட்டுப் பார்த்து
மூந்தியதே வாமிவனே திருடிவைத்துள்
ளானிதுமெய்ம் மொழிஎன் றப்பால். (2)

தம்பியோ பெண்திருடி; தாயினுடன்
பிறந்தவனும் சண்டி மாமன்
கொம்பியல்ஆய்ச் சியர்குலைய நெய்திருடி
னோன்; உனது குலத்துக் குள்ள
வம்பிதென நான்அறிவேன்; நீயும்எந்தம்
பணம்திருடல் வழக்கோ? என்று
தும்பிமுகப் பெருமான்தன் மடிபிடித்துஓர்
முழுப்பாட்டும் சொன்னான் அன்றே. (3)

அக்கவிக்கோர் பணமும்முன்தான் எடுத்ததொரு
பணமும்இரண் டாக ஆங்கு
மூக்கணுடைக் கணபதிதன் துதிக்கையினால்
கொடுத்திடலும் முன்னோன் பார்த்து

மிக்கவிபப் படைந்துதம்பி யிணைத்தழுவி
நின்கண்ணே மெய்க்கண் ஆகும்
பொய்க்கண்முகம் தொறும்பலர்க்கும் இருந்துஎன்?எனப்
பலவாறு புகழ்ந்தான் அம்மா'' (புலவர் புராணம்)

இவரது செவ்விய பண்பும் திவ்விய மகிமையும் இதனால் அறியலாகும். உணர்வொளியுடன் உலாவி வந்தமையால் இளஞ்சூரியன், முதுசூரியன் என இவரை அனைவரும் புகழ்ந்தார். தில்லைக் கலம்பகம், ஏகாம்பர நாதர் உலா முதலிய நூல்களை இவர் செய்திருக்கின்றனர். குருடும் முடமுமாயிருந்தும் கல்வியால் பெருமை மிகப் பெற்றார். கண் இல்லாதிருந்தும் "நின் கண்ணே மெய்க்கண்'' என அண்ணன் வியந்து சொன்னது எண்ணி மகிழவுரியது. கண் உடையர் என்பவர் கற்றோர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து தெளிந்தது.

சரிதம் 2

சந்தனன் என்பவன் பாடலிபுரத்து வேந்தன் மகன். சிறந்த அழகன். இளமையில் கல்லாமல் இழிந்து நின்றான். தந்தை வெறுத்து உரைத்தமையால் இம்மைந்தன் மனம் கனன்று அயலிடம் போனான். ஏலங்குழலாள் என்னும் அரசகுமாரி ஒரு நாள் இவனைக் கண்டாள். காதல் மீக்கொண்டாள். தன் விருப்பத்தை ஒரு ஓலைச் சீட்டில் எழுதி மேல் மாடத்திலிருந்து இவன் முன் வீசினாள். அதனை இவன் எடுத்தான். எழுத்து அறியாமல் முழுத்த மூடனாயிருந்தமையால் படிக்க முடியாமல் பரிந்து நின்றான். கண்ணிருந்தும் காணாது கலங்கித் திகைத்த இவன் கற்ற ஒருவனிடம் கொண்டுபோய் அம் முறியைக் கொடுத்தான். உற்றதை உய்த்துணர்ந்த அவன் இவனை வஞ்சித்து அயல் அகற்றினான். கல்லாத இவன் அப் பொல்லாதவன் சொல்லை நம்பி நில்லாது போயினான். இரவு வரவே மையலுடன் அவன் அத் தையலிடம் பையநெருங்கினான். அயலான் என்று அறியவே அப் பருவ மங்கை உடனே உயிர் துறந்தாள். அன்றிரவு நிகழ்ந்ததை இருநாள் கழிந்து இவன் அறிந்தான். தன் கல்லா

மையால் நேர்ந்த கடுங்கேடு என்று நொந்து இவனும் மாண்டான். இவன் இறந்து பேய்வடிவாய்த் திரிந்து வருவதை அறிந்து ஔவை பரிந்து ஒரு பாட்டுப் பாடினுள்.

வெண்பா இருகாலில் கல்லாணை; வெள்ளோலை
கண்பார்த்துக் கையால் எழுதாணைப்—பெண்பாவி
பெற்ருளே பெற்ருள் பிறர்நகைக்கப் பெற்ருளே
எற்ருேமற் றெற்ருேமற் றெற்று. [ஔவையார்]

இவனது மடமையால் நேர்ந்த கொடுமையை நினைந்து பாடிய படியிது. உயர்ந்த அரச குலத்தில் பிறந்தும் சிறந்த எழில் அமைந்திருந்தும் கல்லாத ஒரு குறையால் இவன் இழிந்து தொலைந்தான். முகத்தில் நல்ல கண்கள் இருந்தாலும் கல்லாதவன் பொல்லாத குருடனே; பழியும் அல்லலும் அவன் வழியாம் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்ருன்.

விழியனைய கல்வி விலகின் மனிதன்
பழிவிலங் காகிப் பரிந்து—வழிமுறையே
பெற்ற பிறப்பும் பிழையாய் ஒழியுமே
உற்ற நிலையை உணர்.

கல்லும் மணியுமெனக் கல்லாரும் கற்ருரும்
புல்லி மிளிர்வர் புறம்.

கண் பெற்ற பயன் கற்றுக்கொள்ளலே.

---

394. மேவினர் பின்பு மிகவுள்ள ஏன்பிரிந்தார்
கோவூர் கிழார்முன் குமரேசா—யாவும்
உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். (4)

இ—ள்.

குமரேசா! தம்மை ஒருமுறை கண்டவர் பின்பு நினைந்து உருகும்படி கோவூர் கிழார் ஏன் பிரிந்து புரிந்தார்? எனின், உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல் அனைத்தே புலவர் தொழில் என்க.

புலவரது இனிய இயல்பை இது நயமா உணர்த்தியுளது. கூடலும் பிரிதலும் நாட வந்தன.

எவரும் உவகையுறும் படி கூடி நின்று பின்பு தம்மை அவர் நினைந்து வரும்படி பிரிந்து போதலே புலவர் தொழில்.

கற்றவர் கண் அனையர்; உலகமக்களுக்கு ஒளி விழி போல் வழி காட்டியருள்பவர்; அவரைக் காணும்தோறும் அவரோடு உரையாடும் தோறும் யாரும் உள்ளம்உவந்து மகிழ்வர். மகிழ்ச்சி உணர்ச்சியால் உயரும்.

செவிக்கு இனிய செவ்விய மொழிகளைக் கேட்டும் உயிர்க்கு இனிய உணர்வு நலன்களை அறிந்தும் உள்ளம் களித்துவருபவர் அவரைப் பிரிய நேர்ந்த போது பெரிதும் பரிவு கூர்ந்து நிற்பர். அவரது நிலைமையும் புலவரது நீர்மையும் இங்கே கூர்மையாய் ஓர்ந்து சீர்மையா உணர்ந்து கொள்ள நேர்ந்தன.

உவப்ப = உள்ளம் உவந்து மகிழ.

தலைக்கூடி = சேர்ந்து அளவளாவி.

கூடி என்னாமல் தலைக்கூடி என்றது அக்கூட்டத்தின் தலைமையும் நிலைமையும் தகைமையும் கருதி. நல்ல அறிவாளர் கூட்டம் நலம் பல நல்கி வருவதால் எவ்வழியும் மகிழ்ச்சியை விளைத்தருளுகிறது. உணர்வோடு கலந்து நுகர்ந்து வருவது கழிபேரின்பம் சுரந்து வருகிறது.

எண்ண என்னாது உள்ள என்றது உள்ளத்தே ஆழ்ந்து பதிந்துள்ள பரிவும் பாசமும் தெரிய. அரிய புலவரை அயலே பிரிய நேர்வது பெரிய துயரமாகிறது.

இன்னாது இனனில்லூர் வாழ்தல்; அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு. (குறள் 1158)

இனியவரைப் பிரிவது இன்னாது என இது குறித்துள்ளது. உரிய அன்பரைப் பிரிதல் பெரிய துன்பமாம். படர்மெலிந்து இரங்கல் என்க் காதல் வகையில் நோதல் தருகிற விநோதமான ஒரு துறையும் உண்டு.

படரே உள்ளல் செலவும் ஆகும். (தொல்காப்பியம்)

உள்ளல் என்பது வருத்தக் குறிப்பிலும் வரும் என்பது இந்த இயல் உரையால் தெரிய வந்தது.

கூடிய போது உவகை மீதூர்ந்து வருகிறது: பிரிந்த பொழுது பரிவு தோய்ந்து விரிகிறது: விரியவே உரிய நீர்மைகள் உரிமையுடன் அறியவந்தன.

கல்வி மனிதனைத் தனி நிலையில் உயர்த்துகின்றது. அங்ஙனம் உயர்ந்தவரைக் காணவே மக்கள் விழைந்து புகழ்ந்து மகிழ்ந்து கொள்ளுகின்றனர். உள்ளத்தில் பிரியம் மிகுந்திருத்தலால் அவர் பிரிய நேர்ந்தபொழுது அரியதை இழந்தது போல் மறுகி வருந்துகின்றனர்.

அறிவுநலம் கனிந்த இனிய மொழிகளும் விழுமிய செயல்களும் புலவரிடம் நலமாய் மருவி யுள்ளமையால் அவை பலரையும் வசப்படுத்திக் கொள்ளுகின்றன. அந்த உணர்வு நலன்களை அனுபவித்து மகிழ்ந்தவர் அவர் நீங்கிய பொழுது "இந்த மேதையை இனி மீண்டு என்று காண்போம்?" என ஏங்கி நிற்பர்: அந்தப் பரிவு தோய்ந்த பாங்கு ஈங்கு நன்கு அறிய வந்தது.

சிறந்த கல்வியாளர் சன சமுதாயத்துக்கும் அரசனுக்கும் நல்ல ஞான போதனைகளை நல்கி வருதலால் எல்லாரும் விரும்பி எதிர்கொண்டு கண்டு முதிர் அன்போடு பேண நேர்கின்றனர். அவருடைய மதுரமான உரைகளின் சுவைகளை நுகர்ந்தவர் நவைகள் நீங்கி நலம் பல காண்கின்றனர். எவ்வழியும் இவ்வாறு இதமும் இனிமையும் பயந்து வருதலால் கற்றவரைக் கண் எனக் கருதி மற்றவர் மகிழ்ந்து கொள்ளுகின்றனர். அவரோடு மருவி யிருந்தால் பெருமை மிகப் பெறுகின்றார்.

தேவர் அனையர் புலவரும் தேவர்
தமர்அனையர் ஓரூர் உறைவார்—தமருள்ளும்
பெற்றன்னர் பேணி வழிபடுவார் கற்றன்னர்
கற்றாரைக் காத லவர். [நான்மணி 76]

கல்லாரே ஆயினும் கற்றுரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளும் தலைப்படுவர் —தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு. [நாலடி 139]

கற்றவரால் உலகம் அடையும் நன்மைகளை இன்னவாறு நூல்கள் பல உணர்த்தியுள்ளன. உவமைக் குறிப்புகளை ஓர்ந்து உணர்ந்து உண்மை நிலைகளைத் தேர்ந்து தெளிந்து கொள்ள வேண்டும்.

கல்லாரே ஆயினும் கற்றுரைச் சார்ந்து ஒழுகின் நல்லறிவு நாளும் தலைப்படுவர் என்றது உள்ளிஉணரவுரியது.

புலவர் தேவர் அனையர் என்றது அறிவின் தலைமை கருதி. புலம் =கலையறிவு. புலமை என்னும் பண்படியாகப் புலவர் என்னும் பேர் பிறந்துள்ளது.

நேர்ந்துள்ள பேரால் அவரது நிலைமைகளை ஓர்ந்து கொள்கிறோம். தெள்ளியோர் சேர்க்கை உள்ளும் தோறும் உணர்வு வளர்ந்து உவகை சுரந்து வருகிறது.

நல்ல அறிவுரைகளை நயமாய்க் கூறி உலகரை உவப்புறச் செய்வதும், அக் கூட்டத்தை விட்டு விலகித் தனியேஒதுங்கி யிருந்து நூல்களை ஆராய்ந்துவருவதும் புலவர் செயலாம் எனவும் இஃது உணரவுள்ளது.

ஒத்த புலவரோடு கூடியிருந்து இலக்கியக் கலைகளை ஆராய்ந்து மகிழ்வதும், பின்பு தனியே பிரிந்து போய் அமர்ந்து அரிய அறிவு நூல்களைச் சிந்தித்து உணர்வதும் புலவர் தொழிலாம் எனப் பொருள் கொள்ளினும் அமையும்.

உவப்பக் கூடி உள்ளப் பிரிவதே புலவர் வாழ்வு என்றதனால் உலக நிலையோடு அவருக்கு உள்ள உறவு நிலை புலனும். அனைத்தே என்றதில் ஏகாரம் அவரது செயலைத் தனியே தெளிவுறுத்தி நின்றது.

செயல் இயல் என வேறு யாதும் கூறாமல் தொழில் என்றது இயற்கைப் பழக்கமாய்ச் செய்து வருகிற அவரது குல மரபின் வழக்கத்தை விளக்கி நின்றது.

உரிமையுடன் தொழுது புரியும் கடமை தொழில் எனப்படுவது. அறிவு நூல்களையும் ஆன்ம நலன்களையுமே எவ்வழியும் மருவி வருதலால் உயர்ந்த புலவர்கள் உடலுழைப்புகளை இயல்பாகவே ஒருவி விடுகின்றனர்.

கபிலர் அரிய பெரிய புலவர். வாழியாதன் என்னும் சேரமன்னனோடு ஒருநாள் இவர் உரையாடிக் கொண்டிருந்தார். அந்த அரசன் இவரது கையின் மென்மையை நோக்கி வியந்தான்: "என்கையைக் காட்டிலும் உங்கள் கை மிகவும் மிருதுவாயுள்ளதே!" என்று புகழ்ந்து கூறினன். கூறவே காரணத்தை விளக்கினர்: "என் கை யாதொரு தொழிலும் செய்து அறியாதது ஆதலால் இவ்வாறு மெல்லிதாயிருக்கிறது" என்று புலவர் பதில் சொல்லினர். அப்பொழுது அரசனை நோக்கி இவர் பாடிய பாடல் இங்கே அறிய உரியது. அயலே வருவது காணுக.

கடுங்கண்ண கொல்களிற்றால்
காப்புடைய எழுமுறுக்கிப்
பொன்னியல் புனை தோட்டியால்
முன்பு துரந்து சமம் தாங்கவும்
பார் உடைத்த குண்டகழி
நீர் அழுவ நிவப்புக் குறித்து
நிமிர் பரிய மாதாங்கவும்
ஆவம் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்
பரிசிலர்க்கு அருங்கலம் நல்கவும் குரிசில்!
வலிய வாகும் நின் தாள்தோய் தடக்கை
புலவு நாற்றத்த பைந்தடி
பூ நாற்றத்த புகைகொளீஇ ஊன்துவை
கறி சோறு உண்டு வருந்து தொழில் அல்லது
பிறிது தொழில் அறியா ஆகலின் நன்று
மெல்லிய பெரும! தாமே நல்லவர்க்கு
ஆரணங் காகிய மார்பின் பொருநர்க்கு
இருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்நிற் பாடுநர் கையே. (புறம் 14)

அரசே! நின்கைகள் யானை ஏற்றம் குதிரை ஏற்றம் போர் ஆற்றல் முதலிய அரியபல வினைகளைச் செய்கின்றன; அதனால் வலிய ஆயின; சோறு உண்ணும் தொழில் அல்லது பிறிது தொழில் அறியா ஆகலின் என் கைகள் மெல்லியனவா யுள்ளன என்று கூறியுள்ள குறிப்புகள் கூர்ந்து ஓர்ந்து சிந்திக்கவுரியன.

வேந்தர்க்கும் மாந்தர்க்கும் நாட்டுக்கும் நல்லது கூறி ஒல்லும் வாய் எல்லாம் எல்லார்க்கும் யாண்டும் இதம் புரிவதே புலவர் தொழில் என்பதை இங்கே தெளிவாய்த் தெரிந்து அவரது சீர்மையை உணர்ந்து கொள்கிறோம்.

உலக உயிர்கள் உவந்தினிது வாழப்
புலவர் உணர்ந்து புரிவர்— நலமுறவே
நாடி வருதலால் நல்லோரென் றெல்லோரும்
கூடி வருவர் குவிந்து.

கல்வி ஆகிய இனிய அமுதத்தை யுடைவர் எவர்க்கும் இனியராய் எங்கும் இதம் புரிந்து எவ்வழியும் நலமே செய்து வருவர். அவர் புகழ் ஒளி மிகுந்து வரும்.

இவ் வுண்மை கோவூர்கிழார்பால் தெரிய வந்தது.

சரிதம்.

கோவூர்கிழார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சோழ நாட்டிலே கோவூர் என்னும் ஊரில் இருந்தவர். வேளாளர் மரபினர். இளமையிலேயே அரிய நூல்கள் பலவும் பயின்று பெரிய புலவராய் இவர் விளங்கியிருந்தார். சிறந்த குண சீலர். யாவர் மாட்டும் பேரன்புடையவர். எளிய பிராணிகளிடமும் அருள் புரிந்து ஒழுகிய விழுமிய நிலையினர். இவருடைய கல்வியறிவையும் பெருந்தகைமையையும் அந்நாட்டு வேந்தன் அறிந்து இவரைத் தன்பால் அழைத்து வைத்து அன்பு புரிந்து வந்தான். நலங்கிள்ளி என்னும் அச்சோழ மன்னன் அவையில் இவர் தலைமைப் புலவராய்த் துலங்கியிருந்தார். உணர்வு நலம் கனிந்த இவருடைய இனிய மொழிகளைக் கேட்டு அரசன் முதல்

அனைவரும் உளம் மகிழ்ந்து வந்தார். முடி மன்னரும் குடி சனங்களும் பெரு மதிப்புடன் இவரைப் பேணி நின்றனர். எல்லாரும் அமைதியாய் இனிது வாழும் வகைகளையே யாண்டும் இவர் உறுதிகூறி ஒழுகினர். பெருங்கிள்ளி என்னும் அரசனுக்கும் தமது வேந்தனுக்கும் இடையே பகைமைமூண்டது. அவனை வென்றுதொலைக்க வேண்டிச் சேனைகளோடு சென்று அவன் இராசதானி யாகிய உறையூரை நலங்கிள்ளி வளைந்துகொண்டான். போர் மூண்டால் கொலைகள் பலவிழும்; குடி சனங்கள் வீணே அழிந்து படுவர் என்று இரங்கி இவர் அங்கு விரைந்து சென்று இரு பெரு வேந்தரையும் தனித் தனியே கண்டு அறிவு கூறி ஆறுதல் செய்தார். அவர் மனம் திருந்தி உறவுறுமாறு பெருந்தகவுடன் இவர் பேணியருளினர், அதுபொழுது இவர் கூறிய உணர் வுரைகள் கூரிய சீரிய நீர்மைகள் தோய்ந்து குணங்கள் வாய்ந்து வந்தன:

“இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்;
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்;
நின்ன கண்ணியும் ஆர்மிடைந்தன்றே; நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந்தன்றே;
ஒருவீர் தோற்பினும் தோற்பது உம் குடியே;
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே; அதனால்
குடிப்பொருள் அன்றுநும் செய்தி; கொடித்தேர்
நும்மோர் அன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி உவகை செய்யும்இவ் இகலே.”

(கோவூர்கிழார்)

இருவரும் சோழ மரபினர்; சேரனும் பாண்டியனும் அல்லர்; ஒரு குலத்தினரான நீங்கள் இருவரும் பொரு திறத்தினராய் மாறுபட்டுச் சீறி நிற்பது சிறுமையே; யார் தோல்வி அடைந்தாலும் இருவருக்கும் அவமானமே; மறுபுல மன்னருக்கு இது மிகவும் உவகையாம்; உலகம் இகழ்ந்து பேசும்படி கலகம் புரிவது இளிவாம்; நீவிர் இருவரும் உறவுரிமையுடன் மருவி வாழ்வதே நலம்; அதனால் புகழும் புண்ணியமும் உளவாம் என இங்ஙனம் இனிது மொழிந்தார். மதியூகியான இவருடைய மதி

மொழிகளைக் கேட்டு அந்த அதிபதிகள் இருவரும் சமா தானமாய் அமைதியுற்று வாழ்ந்தனர். இவ்வாறு எவ் வழியும் யாவருக்கும் செவ்விய நீதிகளைப் போதித்து எங்கும் இவர் சீர் பல செய்தருளினர். இவருடைய உள் ளப் பண்பும் உரை நலங்களும் பலரையும் நல்வழிப் படுத்தின. ஆவூர் மூலங்கிழார், நல்லிறையனர் முதலிய இவர் காலத்துப் புலவர் எவரும் இவர்பால் பெருமதிப்பு வைத்திருந்தனர். யாண்டும் இதமே புரிந்து வந்த இவர் பல நாடுகளையும் காண விரும்பி ஒரு முறை யாத்திரை போயினர், இவரது பிரிவை நினைந்து அரசன் பெரிதும் வருந்தினன். இவரை ஒரு முறை கண்டவர் மீண்டும் எப்பொழுது காண்போம்? என்னும் ஆவலுடையராய் யாண்டும் மேவி யிருந்தனர். அரசனது ஆர்வ நிலையை அறிந்து விரைந்து வந்து அங்கு இவர் அருள் புரிந்திருந் தார். உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல் புலவர் தொழில் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். இவரது இனிய நீர்மை அரிய சீர்மையாயுளது.

கலைமதி என்னக் கலைமதியார் இன்பம்
நிலவ மிளிர்வர் நிலம்.

உலகம் உவப்ப ஒழுகுவதே புலவர் இயல்பாம்.

---

395. தேடுபுகழ்ச் சாந்திகண்ணன் தேருதங்கன் கற்றதனல்
கூடினர்சீர் என்னே குமரேசா—நாடி
உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர். (5)

இ-ள்

குமரேசா! சாந்தி கண்ணன் உதங்கன் என்னும் இவர் ஆசிரியரிடம் பாங்காய்ப் பணிந்து நின்று ஏங்கிக் கற்று ஏன் ஓங்கினர்? எனின், உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்றார்; கல்லாதவர் கடையரே என்க.

கல்வியை எவ்வகையானும் கற்க என்கிறது.

செல்வர் முன் வறியர் போல அறிஞர் எதிரே ஏங்கி

நின்றும் கற்றவர் தலைமையாய் ஓங்கி உயர்ந்தார்; அவ்வாறு கல்லாதவர் கடையரா யிழிந்தார்.

என்னபாடு பட்டாவது யாரிடமேனும் எப்படியும் கற்றுக்கொள்க என்று உரைக்க நேர்ந்தவர் ஓர் உவமையை நயமா எடுத்துக்காட்டி இதமாயுணர்த்தியுள்ளார்.

உடையார் என்றது செல்வரை. இல்லார் என்றது வறியரை. உயர்வு தாழ்வுகள் இங்ஙனம் உணர வந்தன.

பொன் நெல் முதலிய பொருள்களையே உடைமை என்று உலகம் கருதிவருதலால் அவற்றை உடையவரை இவ்வாறு குறித்தார். கல்வியுடைமையைக் கருத்துடன் ஈட்டுக என்று சொல்லுங்கால் செல்வமுடைமையும் சேர வந்தது. இரு பேருடைமைகளும் உலகவாழ்வுக்கு உயர் பேறுகளாய் எவ்வழியும் ஒளிபுரிந்துள்ளன.

மனிதனுக்குக் கண்கள் போல மனித வாழ்வுக்குச் செல்வமும் கல்வியும் ஒளிசெய்து வருகின்றன. இரண்டும் விழிகள் போல் வழி கோலி வருதலால் எவ்வழியும் யாவரும் இந்த உடைமைகளை உரிமையுடன் ஈட்டிக் கொள்வது இயல்பான கடமைகளாய் வந்தது.

காட்சி புரிந்தருளும் காமர் விழிபோல
மாட்சி புரிந்து மனுக்குலத்தை--ஆட்சியாப்
பல்வழியும் ஊக்கிப் பயன்காட்டி நிற்றலால்
கல்வியும் செல்வமும் கண். (தருமதீபிகை551)

மனுக்குலத்தின்கண்கள் இங்ஙனம் காண வந்துள்ளன. காட்சிகளின் மாட்சிகளைக் கருதியுணர்பவர் வாழ்வின் உறுதி யுண்மைகளை ஓர்ந்து தேர்ந்து கொள்வர்.

கல்வி உயிர்க்கு உரிய உறுதித்துணை.
செல்வம் உடலுக்கு உரிமையான உதவி நிலை.

கற்றவர் பொருள் உற்றவராய் உயர்கின்றார்; கல்லாதவர் பொருள் இல்லாதவரா யிழிகின்றார். மிடியராயிருப்பதினும் மடையராயிருப்பது மிகவும் இழிவாம்.

கல்லாதவர் கடையரே என்றதில் ஏகாரம் அவரது பரிதாபமான இழிபுநிலையைத் தெளிவா விளக்கியுளது.

கல்வியறிவுடைய மேலோரைத் தொழுது வழிபட்டு எவ்வழியும் பணிவாய் ஒழுகி எப்படியும் கல்வியைக் கற்றுக்கொள்ளவேண்டும் என்பார் ஏக்கற்றும் கற்ருர் என்ருர். ஏக்கம் ஈங்கு ஆக்கமுற உற்றது.

ஏக்கறுதல் = ஆசையால் ஏங்கி அடங்கி நிற்றல்.

ஏக்கம் = கவலே; நசை; பேராசை.

அரிய ஒரு பொருளே அடைய அவாவி யாவும் துறந்து ஆவலோடு அலமந்து நிற்கும் நிலே ஏங்கல் என நேர்ந்தது. இதனடியாக ஏக்குறல் தோன்றியுள்ளது.

நோக்கின் தென்திசை அல்லது நோக்குருன்;
ஏக்குற்று ஏக்குற்று இரவி குலத்துளான்
வாக்கில் பொய்யான் வரும் வரும் என்று உயிர்
போக்கிப் போக்கி உழக்கும் பொருமலான்.
(இராமா, மீட்சி, 208)

இராமனே எதிர் நோக்கிப் பரதன் இருந்த பரிதாப நிலேயை இது குறித்துள்ளது. இதனேக் கருதிக் காண்பவர் எவரும் உள்ளம் உருகிமறுகுவர். ஏக்குற்று ஏக்குற்று என்னும் இக் குறிப்பை உள்ளச் செவியால் கூர்ந்து ஓர்ந்து உயிர்த்துடிப்பை உணர்ந்து கொள்கிருேம்.

அண்ணனேக் காணக் கருதி ஈண்டு இளேயவன் ஏங்கி இருந்தது போல் கல்வியைப் பூணக் கருதி இளேயவர் யாவரும் யாண்டும் நீண்டு இருக்கவேண்டும்.

ஏக்கமுற்றும் கற்றவர் ஆக்கம் மிகப் பெறுகின்ருர். அரிய கல்வியைப் பெற உரிய நிலே தெரிய நின்றது.

மதி ஏக்கறூஉம் மாசறு திருமுகத்து. (சிறுபாண், 157)

கடைக்கண் ஏக்கற. (சீவகசிந்தாமணி, 1622)

ஏக்கறவால் இன்னம் இரேனே. (இராமா, மாயாசன, 83)

ஏக்கற்ற கூந்தற்பிடி. (மீனுட்சியம்மை, 11)

ஏக்கற்று இருந்த தாக்கணங்கு. (முத்துக் குமாரசுவாமி, 45)

இவற்றுள் ஏக்கறவு உணர்த்திநிற்கும் பொருளே அறிக.

உயிர்க்கு உறுதியான கல்விப்பொருளை உரியவரி டம் பிரியமாய் நடந்து கற்றுக் கொள்ளவேண்டும். அவ்வாறு கற்றபோது தான் மனிதப் பிறவியைப் பெற்ற பயனை எவரும் எவ்வழியும் உறவாப் பெறுகின்றார்.

இல்லாதவன் வாழ்வு அல்லல்பல அடைந்து இழிந்து படுதல் போல் கல்லாதவன் வாழ்வும் இழிவாய்க்கடைப் படும் ஆதலால் இல்லாமையும் கல்லாமையும் இனமா எண்ணவந்தன. குறிப்புகள் கூர்ந்து உணர வுரியன.

ஆசிரியருடைய உள்ளம் மகிழ நடந்தும் ஊழியங்கள் புரிந்தும் உரிய பொருளைக் கொடுத்தும் அரிய கல்வி கற்று வருபவர் அறிவு நலம் பெற்றுப் பெரிய மதிப்புகளோடு யாண்டும் சிறப்பாப் பெருகி வாழ்கின்றார்.

உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே;
பிறப்பு ஓரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயுமனம் திரியும்;
ஒருகுடிப் பிறந்த பல்லோர் உள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்;
வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே. (புறம்; 183)

நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் இவ்வாறு பாடியிருக்கிறார். கல்வியை எவ்வகையும் கற்று மக்கள் மிக்க சிறப்போடு வாழவேண்டும் என்று இவ்வேந்தன் உரிமையுடன் கருதியுள்ளான். அவ்வுண்மையை உரைகளில் ஓர்ந்து கொள்கிறோம். பொருள் நயங்களையும் குறிப்புகளையும் பண்டிருந்த மன்னர்களின் பண்புகளையும் கூர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

எப்படியும் கல்வியைக் கற்றுக் கொள்ளவேண்டும் என்று எல்லாரும் இப்படிச்சொல்லி வருதற்குக்காரணம் என்ன? அதனால் மனித வாழ்வு பலவகையிலும் மாட்சியடைந்து மகிழ்ச்சி தோய்ந்து வருதல் கருதியேயாம்.

கைப்பொருள் கொடுத்தும் கற்றல்,
கற்றபின் கண்ணும் ஆகும்;
மெய்ப்பொருள் விளக்கும் நெஞ்சின்
மெலிவிற்கு ஓர் துணையும் ஆகும்
பொய்ப்பொருள் பிறகள் பொன்னும்
புகழுமாம் துணைவி ஆக்கும்
இப்பொருள் எய்தி நின்றீர் இரங்குவது
என்னை? என்றான். (சீவகசிந்தாமணி 1595)

தோணி இயக்குவான் தொல்லை வருணத்துக்
காணின் கடைப்பட்டான் என்றிகழார்—காணாய்
அவன்துணையா ஆறுபோய் அற்றேநூல் கற்ற
மகன்துணையா நல்ல கொளல். (நாலடியார் 136)

திரியழல் காணின் தொழுப விறகின்
எரியழல் காணின் இகழ்ப ஒருகுடியில்
கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றான்
இளமைபா ராட்டும் உலகு. (நான்மணி 66)

கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே. (நறுந்தொகை 35)

இவை இங்கே சிந்திக்கத்தக்கன. கல்வி கண் அனையது; உயிர்க்கு இனிய துணை; அரிய மகிமைகள் பலவும் அருள்வது; இருமையும் இன்பம் தருவது; பெருமை மிகவுடைய அதனை எவ்வகையானும் உரிமையுடன் பெற்று உயர்க என இவை ஈங்கு நன்கு உணர்த்தி யுள்ளன.

செல்வத்தில் சிறந்து குலத்தில் உயர்ந்திருந்தாலும் கல்லாதவன் இழிந்தவன் ஆகின்றான்; யாதும் இல்லாதவனாயினும் கற்றவன் எல்லா மேன்மைகளும் எய்தி யாண்டும் உயர்ந்து ஒளி மிகுந்து விளங்குகின்றான்,

செல்வத்திமிர்கொண்டு குலமானம் பாராட்டி வீணே இழிந்து நில்லாதே; கற்றவர் யாவராயினும் அவரிடம் தலை வணங்கி நின்று தாள் பணிந்து பேணித் தகவுடன் கலை பயின்று நிலை உயர்ந்து கொள்க,

கல்வி புனிதமான சிறந்த செல்வம் ஆதலால் அதனைப் பெறுதற்கு உரிய நல்ல தன்மைகள் நயமா அமைந்

இருக்க வேண்டும், தக்க தகுதிகள் இல்லையேல் ஆகாதவராய் அவர் தவிர்க்கப் படுவர்.

களிமடி மானி காமி கள்வன்
பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்னூற்கு அஞ்சித்
தடுமாறு உளத்தன் தறுகணன் பாவி
படிறன் இன்னோர்க்குப் பகரார் நூலே.

கற்கவுரிய நல்ல தகுதியில்லாதவரை இது காட்டியுளது.

மேலோர் பால் நூலைக் கற்க நேர்ந்தவர் இனிய இயல்புகள் தோய்ந்து இதநலங்கள் வாய்ந்து யாண்டும் பணிவுடன் புனிதமாய் ஒழுகி வர வேண்டும்.

கோடல் மரபே கூறும் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன் குறிப்பில் சார்ந்து
இருஎன இருந்து சொல் எனச் சொல்லிப்
பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகிச்
சித்திரப் பாவையின் அத்தகவு அடங்கிச்
செவிவாய் ஆக நெஞ்சுகளன் ஆகக்
கேட்டவை கேட்டவை விடாது உளத்து அமைத்துப்
போஎனப் போதல் என்மனார் புலவர். (நன்னூல்)

ஆசிரியர் முன் அடங்கியிருந்து கற்கும் முறைகளை இதில் அறிந்து கொள்கிறோம். இவ்வாறு பண்புடன் கற்றவர் பின்பு உயர்ந்து இன்புடன் வாழ்கின்றார்.

கல்லாதவர் கடையரே என்றது கற்றவரது தலைமையை விளக்கி அவரது நிலைமையைத் துலக்கிநின்றது.

கல்வியைச் சம்பாதிக்கும் துறைகளிலுள்ள மிறைகளுக்கு அஞ்சி ஒதுங்கி நின்றவர் மூடராய் இழிந்து படுவர். அந்த இழிவு யாதும் நேராமல் விழுமிய மகனாயுயர்ந்து திகழ வேண்டின் கல்வியை விழைந்து கொள்க.

செல்வத்தை நாடி இரத்தல் சிறுமையே;
கல்வியை யாரிடமும் கால்பணிந்து—மெல்லியனாய்
நின்று பயின்று நிலைதெளியின் நீணிலத்தில்
என்றுமே கண்டான் இசை.

உரிமையுடன் பொறுமையாய்க் கற்றவர் எங்கும் பெருமை மிகப் பெற்று இருமையும் இன்பம் உறுவர்.

இவ் வுண்மை சாந்தி, கண்ணன், உதங்கன் பால் உணர வந்தது. இவர் கல்வி பயின்ற நிலை எவரும் கருதித் தெளிந்து உயர்ந்து கொள்ளவுரியது.

சரிதம்.

சாந்தி என்பவர் விசிகன் என்னும் ஒரு வேதியன் புதல்வர். அருளும் பொறையும் அமைதியும் உடையவர். கல்வியை நன்கு கற்க விரும்பி நல்ல ஆசிரியரை எங்கும் நாடித் திரிந்தார். முடிவில் பூதி என்பவரை அடைந்தார். அவர் சிறந்த புலவராயினும் கொடுஞ் சினமுடையவர். கடுங் கோபியான அவரை அணுக எவரும் அஞ்சுவர். அவரிடம் அமைதியாய் அமர்ந்து வணங்கி வழிபாடுகள் செய்து இவர் வருந்திக் கற்றார். அவர் இன்னல் பல புரியினும் இவர் இனியராயிருந்து பயின்று வந்தார். ஒரு நாள் அவர் புரிந்து வந்த வேள்வியில் நெருப்பு அவிந்து போயது. அருகே நின்ற இவரைக் கனன்று நோக்கினர். இவர் அக்கினி தேவனை வேண்டினர். அணைந்து நின்ற தீ உடனே கொழுந்து விட்டு எழுந்தது. அவர் வியந்தார். "சாந்த சீலனை இந்தச் சாந்தியின் வேண்டுகோளுக்கு இணங்கி அருளினேன்; உனது சினக் கொதிப்பை ஒழித்து இவனது மனப்பண்பை மதித்து நட" என வானிலிருந்து ஒரு ஒலி எழுந்து மறைந்தது. ஆசிரியர் அஞ்சி நாணி அன்று முதல் யாதும் வெகுளாமல் ஆர்வம் மீதூர்ந்து அரிய கலைகள் பலவும் உரிமையுடன் இவர்க்கு ஓதியருளினர். இவர் பெரிய மேதையாய் அரிய புகழ் பெற்றார். கல்வியின் மேலுள்ள ஆசையால் அல்லல்கள் பலவற்றையும் சகித்துக் கொண்டு கற்று வந்தமையால் உலகம் வியந்து போற்றும்படி இவர் உயர்ந்து விளங்கினர். உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்க வேண்டும் என்பதை யாரும் காண இவர் காட்டி நின்றார். விரிவை மார்க்கண்டேயத்தில் காண்க.

### கண்ணன்

கண்ணன் யது குல மன்னன். வசுதேவன் புதல்வனுய் அவதரித்தமையால் **வாசுதேவன்** என உலகம் இவரை அழைத்து வந்தது. இவர் இளமையிலேயே கல்வியை விழைந்து கற்ருர். **சாந்தீபன்** என்னும் பெரியவரிடம் இவர் பயின்று வந்தார். குசேலர் இவருடைய பள்ளித் தோழர். அரசகுமாரனு யிருந்தும் குருவினிடம் இவர் பெரிதும் பணிவுடையராய் வணங்கி ஒழுகினர். காட்டில் போய் கொஞ்சம் விறகு கொண்டு வரும்படி அவருடைய மனைவி ஒரு நாள் இவரிடம் உரைத்தாள். உடனே இவர் உவந்து சென்ருர். குசேலரும் கூடப் போனர். மாலையில் பெருமழை பெய்தமையால் மீள முடிய வில்லை. அங் கோர் சோலையில் தங்கியிருந்து மறுநாள் காலையில் வந்தார். அந்த நிகழ்ச்சி சிந்தையில் நிலைத்திருந்தது.

பயிற்று நான்மறைக் குரவன்அம் மனையவள் பணியால்
வெயிற்கு வெம்பிய கானிடை விராய்தரற்கு ஏகிப்
புயற்கு அசைந்து ஒரு பொதும்பரில் இரவுநாம் இருந்தது
அயர்த்தி போலும்? என்று அளவளாய் உசாவினன் அன்றே.
(பாகவதம், 10-45)

கண்ணன் துவாரகையில் அரசு புரிந்திருக்கும் பொழுது தன்னைக் காணவந்த குசேலரிடம் இளமையில் நிகழ்ந்ததை இவ்வாறு உவந்து கூறிப் பள்ளித் தோழமையை நினைந்து அளவளாவி யிருக்கிருர். மணிமுடி புனையும் திருமுடியில் ஆசிரியருக்காக விறகும் சுமந்து வந்த இவரது செயல் கல்வியை எவ்வகையானும் வழி பட்டு வருந்திக் கற்க வேண்டும் என்பதை உலகர்க்கு உணர்த்தியுள்ளது. உய்தி தருவதை உரிமை செய்க.

### உதங்கன்

இவர் பிருகு முனிவர் மரபில் வந்தவர், அரிய குண நலங்கள் அமைந்தவர். வறியராயினும் மறுமை நோக்கம் உடையவர். கல்வியே உயிர்க்கு உறுதித்துணை என்று நன்கு தெளிந்தவர். கலைகள் பலவும் கற்க அவாவி அய லிடங்களுக்கும் சென்ருர். இறுதியில் **பயிலவர்** என்னும்

முனிவரை அணுகி நுணுகிப் பயின்றார். அந்த ஆசிரியருக்குப் பலவகையான பணிவிடைகளைச் செய்து நாளும் கருத்தூன்றிக் கற்று வந்தார். இவருடைய வணக்கத்தையும் வழிபாடுகளையும் உதவி நிலைகளையும் நினைந்து அம் முனிவர் பெரிதும் மகிழ்ந்தார். குருவருளும் திருவருளும் மருவி நின்றமையால் அரிய கலை ஞானங்கள் பலவும் இவர் எளிதே கற்றுத் தெளிந்தார். அக் காலத்திலிருந்த புலமையாளருள் இவர் தலை சிறந்து விளங்கினார். இளமையில் இவருடன் பழகியிருந்த சிலர் கல்வியை விரும்பிக் கல்லாமையால் புல்லியராய் இழிந்து நின்றார். கற்றவர் மேதையராய் உயர்வர்; கல்லாதவர் பேதைகளாய் இழிவர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. விரிவைப் பாரதத்தில் காண்க.

ஓதி உணர்ந்தார் உயர்வர் உணராதார்
ஏதம் அடைந்தே இழிவரெனும்—நீதிமொழி
கேட்டும் கலையைக் கிளர்ந்து பயிலாமல்
மாட்டுமதி ஆதல் மடம்.

**கற்றார் உயர்ந்து கதிகண்டார்; கல்லாதார்**
**அற்றார் இழிந்தார் அயல்.**

எற்றேனும் கற்று உயர்க.

---

396. சீராரும் கீரருமேன் தென்முனிபால் கற்றபின்பே
கூரறிவு மிக்கார் குமரேசா—நேராகத்
தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. (6)

இ-ள்

குமரேசா! கல்வியால் சிறந்திருந்த நக்கீரரும் அகத்தியரை அணுகி ஏன் மேலும் கற்றார்? எனின், மணல் கேணி தொட்டனைத்து ஊறும்; மாந்தர்க்கு அறிவு கற்றனைத்து ஊறும் என்க.

இது, கல்வியால் அறிவு பெருகி வரும் என்கிறது.

தோண்டிய அளவு மணல்கேணியில் நீர் ஊறி வரும்;

கற்ற அளவு மனிதருக்கு அறிவு மிகவும் பெருகிவரும்.

ஊறும் = ஊர்ந்து மேலே கிளர்ந்து வரும்.

சிறந்த அறிவாளியாய் ஒருவன் உயர்ந்து திகழ வேண்டுமாயின் நல்ல நூல்களை நாளும் அவன் கருத்தூன்றிக் கற்று வரவேண்டும். கல்வியும் அறிவும் கருமமும் தருமமுமாய் உரிமையுடன் மருவியுள்ளன.

ஆற்று மணலுள் நீர் நிறைந்திருந்தாலும் அதனைத் தோண்டிய அளவுதான் நீர் நேரே சுரந்து வரும்; தோண்டுதல் இன்றேல் அது தோன்றலும் இன்றாம். மாந்தர் அகத்தே அறிவு மருவியிருந்தாலும் கற்ற அளவு தெளிவாய் அது ஒளி வீசி வருகிறது. கல்லாது ஒழியின் அது காணமல் மறையும்.

மணலைத் தோண்ட நீர் சுரந்து வரும்; மனத்தைத் தோண்ட மதி தெளிந்து கதி விளைந்து வரும்.

அறிவை நீரோடு ஒப்ப வைத்தது, அதன் நீர்மை சீர்மைகளைக் கூர்மையா ஓர்ந்து உணர்ந்து கொள்ள. மணலைப் பறிக்கப் பறிக்க நீர் கிளர்ந்து வருதல் போல் நூல்களைப் படிக்கப் படிக்க மனிதர்க்கு அறிவு வளர்ந்து வருகிறது. ஒருவன் கல்லிய ஊற்று நீர் எல்லார்க்கும் இனிது பயன் படுகிறது. அதுபோல் ஒருவன் கற்ற கல்வியறிவுஉலகுக்கெல்லாம்உவகையூட்டியருளுகிறது.

மணல் கேணி மனத்துக்கும், நீர் அறிவுக்கும், தோண்டல் கற்றலுக்கும், ஊறல்அறிவின் தேறலுக்கும் ஒப்பாம். அதுபோல என உருபு வெளிப்படாமல் வந்துள்ளமையால் இது எடுத்துக் காட்டும் உவமையாம்.

அறிவு வெளியே இல்லை; உன் உள்ளத்திலேயே உள்ளது. முயன்று பயின்று உயர்ந்த பயனை அடைந்து கொள். உரிய முயற்சி அரிய உயர்ச்சியாம்.

படித்தல் பயிலல் கற்றல் என்னும் வினைக் குறிப்புகளால் கல்வியின் வடிவமும் வண்ணமும் வளமையும் அருமையும் தெளிவாக அறியலாகும்.

தொட்ட அனைத்து கற்ற அனைத்து என வரவுரியன அகரம் தொக்கு இவ்வாறு வந்துள்ளன.

கையால் தொட்டும் கருவியால் வெட்டியும் மணலை அகழ்ந்து கொள்ளுவர் ஆதலால் அச் செயல் நிலை தெரிய வந்தது. கல்விப் பயிற்சிகள் கருத நின்றன.

கேணி என்றது இங்கே ஊற்றுக் குழியை. கிணறு குளங்களையும் உணர்த்தி வரும். ஊரார் உண்ணுதற்குக் கேண்மையோடு நீர் உதவி வருதலால் கேணி என வந்தது. உற்றபெயர் உயர்வை விளக்கியுளது.

நிலம் கிளைக்க நீர் ஊறும் என்னுமல் மணலைக் குறித்தது ஏன்? மனத்தின் அண்மையும் எண்மையும் தண்மையும் தன்மையும் தெரிய. இனிய ஊற்றுநீர்போல் உள்ளத்திலிருந்து நல்லஅறிவு நயமாய் ஊறி வருகிறது.

மணற்கிளைக்க நீர்ஊறும் மைந்தர்கள் வாய்வைத்து
உணச்சுரக்கும் தாய்முலை ஒண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்கு
ஆய்தொறும் ஊறும் அறிவு. (திருவள்ளுவமாலை 31)

திருக்குறளை ஆயும் தோறும் அறிவு ஊறிவரும் என்பதற்கு இவ்வாறு இரண்டு உவமைகளை உருத்திர சன்மகண்ணர் என்னும் புலவர் குறித்துக் காட்டி யிருக்கிறார். தொட்ட அனைத்து மணல் கேணி நீர் ஊறும் என நாயனர் கூறியதை அவரது குறள் ஆய்வுக்கே உரிமை யாக்கி யுள்ளார். பிள்ளை பருகுந்தோறும் முலைப்பால் சுரந்து வருதல் போல் வள்ளுவர் நூலைப் பயிலும் தோறும் புலவர்க்கு அறிவு பெருகிவரும். உலக அறிவும் பர ஞானமும் குறளால் உளவாகும் என்பதை ஈண்டு உரிமையுடன் ஓர்ந்து கொள்கிறோம். தாய்ப்பால் பருகாத பிள்ளையும் முப்பால் அறியாத மனிதனும் எப்பாலும் இளைத்தே கழிவர் என்பது தெளிவுற வந்தது.

சுரிக்கின்ற நுண்மணல் ஊற்று ஒக்கும்
தோண்டச் சுரத்தலினே. (சடகோபரந்தாதி)

கம்பரும் இந்த உவமையை இவ்வாறு கூறியிருக்கிறார்.

நீர் நிலத்தில் நிலைத்திருத்தல் போல் அறிவு மனிதன் ...ளத்தில் மருவியுளது. எல்லையில்லாமல் உள்ள அறி...வைக் கல்வியால் வெளிசெய்து கொண்டவர் ஒளிமிகுந் ...வராய் உயர்ந்து தெளிவுடன் திகழ்கின்ருர்.

இதயத்தில் உள்ள புதையல் நிதியை எய்தி மகிழ்க.

கற்ற அனைத்து அறிவு ஊறும் என்றது கருதியுணர ...ந்தது. கல்வியைச் சிறிது பயின்று நின்று விடாதே; நாளும் தொடர்ந்து கருத்து ஊன்றி நன்கு கற்க வேண்டும் எனக் கலையின் நிலையைக் காட்டியருளினர்.

நீர்அளவே ஆகுமாம் நீர்ஆம்பல் தான்கற்ற
நூல்அளவே ஆகுமாம் நுண்ணறிவு. (மூதுரை)

கல்விக்கும் அறிவுக்கும் உள்ள உறவுரிமையை ஔவையாரும் இவ்வாறு கூறியுள்ளார். கல்விப்பயிற்சி நலமாய்ப் படிந்து வர உணர்வின் உயர்ச்சி வளமாய் ஓங்கி எவ்வழியும் தெளிவுற வருகிறது.

முயற்சி பொருளைத் தரும்; பயிற்சி அறிவை அருளும். தோண்டச்சுரக்கும் நீர்; தீண்டச்சுரக்கும் தெளிவு; வேண்டச் சுரக்கும் விளைவு; ஈயச் சுரக்கும் சீர்: கறக்கச் சுரக்கும் பால்; கற்கச் சுரக்கும் அறிவு; நிற்கச் சுரக்கும் நெறி. உரிய கருமங்கள் அரிய பலன்களை அருளுகின்றன.

கருதி வருகிற மனமே உறுதியான உணர்வாம்.

நூறு நாள் ஓதி ஆறு நாள் விடினும் அது மாறுபட நேரும். நாளும் பழகி வருவதே நீள நிலைத்து வருகிறது.

சிலநாள் பழகின் சிலவும் பலியா;
பலநாள் பழகின் பலிக்கும் என்க;
விரைவால் பார்க்கின் தெரியாது ஒன்றும்
விரையாது ஏற்கின் கருகாது என்க;
வருவதில் கருத்தினை மட்டுப் படுத்தி
வந்ததில் சிந்தையைச் சிந்தாது இறக்குக
நூலினை மீளவும் நோக்க வேண்டா
சூத்திரம் பலகால் பார்க்கவே துணிக
மாரிபோல் கொடுப்பினும் மந்தனை விட்டுக்
கூரியன் உடனே கொடுத்தும் பழகுக

வேறொரு கருமத் திணைமனத்து எண்ணின்
ஆரியன் ஆயினும் அப்பொழுது ஒழிக
சொற்பயில் விப்பவன் எப்படிச் சொற்றனன்
அப்படி ஒழுகி அரும்பொருள் பெறுக.
(இலக்கணக் கொத்து)

கற்க உரிய முறையை இது நன்கு காட்டியுள்ளது. யாவும் கூர்ந்து ஓர்ந்து சிந்தனைசெய்து கொள்ளவுரியன.

கல்வியை நாளும் பழக்கமாகப் பயின்றுவரின் அறிவு வழக்கமாக வளர்ந்து வரும். கருத்து ஊன்றி எவர் கற்று வருகின்றனரோ அவர் மேலான அறிவுடையராய் விருத்தியடைந்து விளங்கி வருகின்றார்.

கலையில் ஆர்வம் உடையவர் எப்பொழுதும் அரிய அறிவு நூல்களையே படித்து வருவர்; இரவிலும் உறங்காமல் உறவுடன் அவர் விழித்துப் பயிலுவர்.

முற்ற உணர்த்தும் முதுகாப்பியம்புணர்ப்பான்
உற்றவர்தம் கண்போன்று உறங்காவால்-இற்பிரிந்தால்
நல்லியலார் வந்தனைசெய் நாவிறன் மால்வரைமேல்
மெல்லியலார் இன்ப விழி. (மாறனலங்காரம்)

தலைவனைப் பிரிந்த தலைவி அவனையே கருதி விழித்திருப்பது போல் காவியக் கவிஞன் கவியின் சுவைகளையே கருதிக் கண்ணுறங்காமல் எண்ணியிருப்பான் என்னும் இது ஈண்டு எண்ணியுணர வுரியது.

நிலத்துள் நீர் நிறைந்திருத்தல் போல் மனத்துள் அறிவு மறைந்துள்ளது. அதனை ஓர்ந்து கவர்ந்து கொள்வதையே கல்வி என்று உலகம் புகழ்ந்து வருகிறது.

Education is the manifestation of the perfection already in man. Knowledge is inherent in man, no knowledge comes from outside; it is all inside. (Vivekananda)

"அறிவு வெளியிலிருந்து வருவதன்று: உள்ளேயே இயல்பாயுள்ளது; அகத்துள் முன்னமே நிறைந்துள்ள அந்த அறிவை வெளிப்படுத்திக் கொள்வதே கல்வி ஆம்" என **விவேகானந்தர்** இவ்வாறு கூறியுள்ளார்.

அறிவைத் தோய்ந்து வருவதே கல்வி என்று வெளி யே அறிய வந்துளது. அறிவே தெய்வம்; இறைவன் போல் என்றும் அது நித்தியமாயுள்ளது. பரமான்மா வின் உறவாயுள்ள சீவனிடம் அறிவு இயல்பாக இயைந் துளது. அதைக் கருதி அறிவதே பெரிய பேரின்பமாம்.

அறிவுக்கு அழிவில்லை; ஆக்கமும் இல்லை;
அறிவுக்கு அறிவல்லது ஆதாரம் இல்லை;
அறிவே அறிவை அறிகின்றது என்றிட்டு
அறைகின் றனமறை ஈறுகள் தாமே. (திருமந்திரம்)

அறிவின் அருமை பெருமைகளையும், நிலைமை தலை மைகளையும் **திருமூலா்** இவ்வாறு விளக்கியிருக்கிறார்.

இத்தகைய வித்தக அறிவு கல்வியால் ஒளிபெற்று மனிதனிடம் எவ்வழியும் அதிசய மகிமைகளை விளைத் தருளுகிறது. அதனைப் பெற்றவர் பெரியவராகின்றார்.

கலைகளைக் கற்ற அளவு அறிவு தலைசிறந்து விளங் கும். இவ்வுண்மை நக்கீரர்பால் விளங்கி நின்றது.

சரிதம்.

புலவர் திலகராய் விளங்கியிருந்த **நக்கீரா்** இறைவ னோடு வாதாடிய பின்னர் தமது நிலைமையை உணர்ந் தார். நெடுநாண் கொண்டார்: "**கற்றது கைமண் அளவு; கல்லாதது உலகு அளவு**" என்னும் உண்மையை ஓர்ந்து கண்டார். மேலும் கற்க விழைந்தார், தக்க குருவை நாடினர். அகத்திய முனிவரை அடைந்தார். அரிய கலை கள் பலவும் அப்பெரியவரிடம் பயின்றார். இலக்கணம் முதலிய கருவி நூல்களோடு அறிவு நூல்களையும் வழு வறக் கற்றார். தெளிவு மிகப்பெற்றார். அறிவுக்கு யாதும் எல்லை இல்லை. மனிதன் பயின்ற அளவுக்கு அது வெளிப் படுகின்றது என விழிப்படைந்து கொண்டமையால் முன்னம் கொண்டிருந்த கல்விச் செருக்கை நினைந்து பெரிதும் வருந்தினர். சிறிது கற்று விட்டு எல்லாம் தெரிந்ததாக இறுமாந்து திரிவது இழிமடமையாம் எனக் கழிவிரக்கமுற்று இவர் உரைத்த மொழிகள் உணர்ச்சிகளை விளைத்துள்ளன. சில அயலேவருகின்றன.

கற்ற கீரனும் பின்புதான் முன்செய்த கவிகள்
முற்றும் ஆய்ந்துசொல் வழுக்களும் வழாநிலை முடிபும்
உற்று நோக்கினன் அறிவின்றி முழுதுஒருங்குணர்ந்தோன்
சொற்ற பாடலில் பொருள்வழுச் சொல்லினேன் என்று: (1)

மறையின் அந்தமும் தொடாததாள் நிலம்தொட வந்த
நிறைபரஞ்சுடர் நிராமய நிருத்தற்குப் பிழைத்தேன்;
சிறிய கேள்வியோர் கழியவும் செருக்குடையோர் என்று
அறிஞர் கூறிய பழஞ்சொல் என் அளவிற்றே அம்ம. (2)

(திருவிளையாடற்புராணம் 54)

அகத்திய முனிவர்பால் கற்றுத் தெளிந்த பின் கீரனர் இவ்வாறு கூறியிருக்கிறார். உள்ளம் ஊன்றி உணரும் தோறும் கல்வியறிவு பெருகி வருதலால் அதற்கு ஓர் அளவு இல்லை என்று தெரிந்தது; தெரியவே முற்றும் அறிந்ததாக முன்னம் தருக்கி நின்றது முழு மூடம் என மறுகி மொழிந்தார். சிறிய கேள்வியர் கழியவும் செருக்குவர் என்னும் இது ஓர் அரிய பழமொழி யாய்ப் பெரிய அறிவொளியை வீசி மிளிர்கின்றது. கற்ற அளவு அறிவு ஊறும்; யாரும் என்றும் கருதிக் கற்க வேண்டும் என்பதை உலகம் கண்டு தெளிய இவர் நன்கு உணர்த்தி நின்றார்.

பெற்ற மகவென்னப் போற்றிவை யாவருக்கும்
கற்ற கலையருளும் காண்.

நாளும் நயந்து கற்க.

---

397\. சென்றஇடம் எல்லாம் சிறந்தேன் குமரகுரு
குன்றாச்சீர் பெற்றார் குமரேசா—நின்றஇடம்
யாதானும் நாடாமால் ஊராமால் என்ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு. (7)

இ—ள்.

குமரேசா! தாம் சென்ற இடம் எல்லாம் குமரகுருபரர் தம் சொந்த நகர் போல் ஏன் சிறந்து விளங்கினர்? எனின், யாதானும் நாடு ஆம்; யாதானும் ஊர் ஆம்; சாம் துணையும் ஒருவன் கல்லாத வாறு என் என்க.

கல்வியின் மாட்சிகள் காட்சிக்கு வந்தன.

கற்றவருக்கு எந்த நாடும் தம் நாடே; எந்த ஊரும் தம் ஊரே; இந்த மகிமைகளைக் கண்டும் சாகும் வரையும் ஒருவன் கல்லாமல் கழிவது பொல்லாத் துயரமே.

இனிய ஒளியை எய்தாமல் கொடிய இருளில் மருளராய் மாந்தர் மறுகி யுழல்வது நெடிய துன்பமாய் நெஞ்சை வருத்தியுளது. அப் பரிவு இங்கே தெரிய வந்தது.

கல்லாத ஆறு = கல்வியைக் கருதிக் கல்லாமல் மூடனாய்க் கழிந்து இழிந்து ஒழிந்து போகும் போக்கு.

ஆறு = ஒழுகி வரும் வகை. மடமையான நிலையில் மதிகேடனாய்த் தொடர்ந்து நடந்து ஒழிவதை நினைந்து பரிந்து வருந்தி யுள்ளார். அந்த உண்மையை உரைக் குறிப்பில் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம்.

**என்!** என்னும் வினா வியப்பில் விளைந்தது. தன்னை உரிமையுடன் பேணிக் கொண்டவனுக்கு அரிய பெரிய மகிமைகளையும் இனிய சுக போகங்களையும் அருளவல்லது கல்வி. இத்தகைய தெய்வத்திருவை விழைந்து விரைந்து உரிமைசெய்துகொள்ளாமல் மனிதன் மடியாய் மாறுபட்டு இழந்திருப்பது வியந்து சிந்திக்கவந்தது.

**ஒருவன்** என்றது மனித உருவில் மருவியுள்ள அருமைகருதி. மாடு ஆடு முதலிய இழிந்த பிறவிகளில் விழுந்து தொலைந்து போகாமல் உயர்ந்த மனிதப் பிறப்பைச் சிறப்பாக அடைந்திருந்தும் அதற்கு உரிமையான கல்வியை விரைந்து பயின்றுகொள்ளாமல் அவமே மறந்திருப்பது அவலமான பரிதாபமே.

யாது ஆனும் = எந்த நாடு ஆயினும்.

தான் பிறந்த சொந்த நாடே அல்லாமல் வேறு எந்த நாடுகளுக்குப் போனாலும் கற்றவனை அங்குள்ளவர் யாவரும் புகழ்ந்து போற்றி உவந்து உபசரிக்கின்றனர். உணவு முதலியன உதவுவதோடு பொருளும் தருகின்றனர். இவ்வளவு மாட்சிகளைக் காட்சியாக் கண்டும்

கல்வியைக் கல்லாமல் கைவிட்டிருப்பது பொல்லாத புலை மூடமே. மூட இருள் கேடு மிகவுடையது.

கல்வி கண்ணினும் சிறந்தது; உயிர்க்கு உற்ற துணையானது. எல்லாமேன்மைகளையும் ஒருங்கே அருளி இருமையும் இன்பம் தரும் இனிமையது எனக்கல்வியை உள்ளம் உவந்து போதித்து வந்தவர் ஆதலால் அதனை இழந்து நிற்பவரை நினைந்து உளைந்துவருந்தினர். மனித சமுதாயம் மதி மாண்புகளுடன் வாழ்ந்து கதி காணவேண்டும் என்றே யாண்டும் கருணை கூர்ந்து உறுதிநலன்களை உரிமையுடன் உணர்த்தி வருகிறார்.

பிறந்த பிறவிக்கு உரிய பெரிய பயனை விரைந்து பெறுபவரே மேலான விவேகிகளாய் விளங்கி வருகின்றனர். பொழுதைப் பழுதே கழிப்பவர் இழுதைகளாய் இழிந்து எவ்வழியும் தாழ்ந்து படுகின்றனர்.

**சாம் துணையும்** என்றது இறந்துபடும் அளவும் கல்லாது கழிந்து நின்ற அவனது பொல்லாத புலைநிலையை நொந்து வந்தது. சாதலைக் காட்டியது ஆதலை அறிய.

இளமையில் கல்லாமல் கழிந்து நின்றவன் முதுமையில் கற்பதால் என்ன பலன்? எனின், என்றும் எவர்க்கும் கல்வி நலமே செய்தருளுதலால் எவ்வகையிலும் எந்த நிலையிலும் அதனைப்பயின்று கொள்வது பயனும் என்க. மூத்த கிழவனுக்கும் கல்வி வாய்த்த துணையாம்.

முதியனாய் மாலையில் சாகப்போகின்றவன் அன்று காலையில் ஓர் எழுத்தைப்படித்து அறிந்து செத்துப்போனாலும் அந்த எழுத்தறிவு அழுத்தமாய் உயிரில் பதிந்து கொள்கின்றது; கொள்ளவே அவ்வுயிர் செல்லுகின்ற மறு பிறவிகளில் எல்லாம் இந்தச் சிறிய கல்வி அறிவு பெரிய வாசனையாய்ப் புகுந்து அரிய தேசு புரிந்தருளுகின்றது. **கல்வி எழுமையும் ஏமாப்புடைத்து** என அடுத்த குறளில் இந்த உண்மையை உணர்த்தியிருத்தலை ஈண்டு நுனித்து உணர்ந்து கொள்ளவேண்டும்.

விட்ட குறையும் தொட்ட குறையும் விடாமல் ஒட்டி வருகின்றன. ஒரு பையன் இளமையிலேயே எளிதாக எதையும் கற்றுக்கொள்கிருன் என்ருல் அவன் முன்னமே கல்வியோடு தொடர்புடையவன் என்பதையூகித்து உணர்ந்து கொள்கிரும். மற்ற ஒரு சிறுவனுக்கு எத்தனைமுறை சொல்லிக்கொடுத்தாலும் யாதும் நெஞ்சில் ஏருமல் மாட்டு மதியாய் மறுகி நிற்கிருன். அகர எழுத்தை அறிந்து கொள்ள ஆறுமாதம் ஆயது எனின் அவன் பலசன்மங்களில் யாதும் படியாமல் படுமுட்டாளாய் இருந்து வந்துள்ளமையை உலகம் அறிந்துகொள்ளச் செய்கிருன். உரியநிலையால் உண்மை தெரியவருகிறது.

இளமையிலேயே வளமையாய்ப் படித்துக் கொள்வது நல்லது; அங்ஙனம் படியாமல் மடிமண்டி மறந்து இருந்து விட்டாயானல் சாகும் போதாவது கொஞ்சம் படித்துக் கொண்டு இறந்து போ என்பார் சாதலை ஈண்டு நோதலோடுஇணைத்துஆதரவுடன்உணர்த்திஞர்.

ஆன்ம அமுதமாய் அமைந்துள்ள கல்வியின் மேன்மையை நன்கு தெளிந்தவர் ஆதலால் மக்கள்பருவத்தே படித்துக்கொள்ள வேண்டும் எனக் கருணைத்தாய்போல் நாயஞர் உரிமையுடன் பலவகையிலும் நலமா உரைத்து வருகிருர். உரைகள் விநய விவேகமாய் வருகின்றன.

கற்றவர்களுக்கு உளவாகும் பெருமைகளைச் சுட்டிக் காட்டிக் கல்லாமையின் பொல்லாமையை விளக்கிக் கல்வியைப் போதித்திருப்பது யூகித்து உணருந்தோறும் உவகை சுரந்து உணர்வொளி மிகுந்து வருகின்றது.

கல்வியை இழந்து விட்டால் மனிதன் மாடாயிழிந்து மறுகியுழலுகிருன். மடமையும் மூடமும் அவனைக் கடையனுக்கி விடுகின்றன. அரிய பெருமைகளை அடையவுரியவன் சிறிய ஒரு மறதியால் சீரழிந்து ஒழிகிருன்.

சென்றஇடம் எல்லாம் சிறப்பருளும் கல்வியைநேர்
ஒன்ற உணர்ந்துள் உயராமல்—நின்ற
இருகால் எருதுபோல் ஈண்டு மனிதன்
பெருகல் பெரிதும் பிழை.

இதனைக் கருதியுணர்பவர் உள்ளம் உருகி மறுகுவர். கல்லாமல் கழிவது பொல்லாத பழியே.

கற்றவர் மற்றவரினும் மதிநலம் வாய்ந்தவர்; இனிமையும் இதமும் தோய்ந்தவர்; உறுதி யுண்மைகளை உரிமையுடன் உரைப்பவர்; ஆகவே சனசமுதாயம் அவரை எவ்வழியும் பிரியமாய்ப் போற்றி மதித்துப் பேருபசாரங்களை நேரே செய்து வருகின்றன. வரவே எந்த நாடும் எந்த ஊரும் அவருக்குச் சொந்தம் என வந்தன.

மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனில் கற்றோன் சிறப்புடையன்—மன்னற்குத்
தன்தேசம் அல்லால் சிறப்பில்லை; கற்றோற்குச்
சென்றஇடம் எல்லாம் சிறப்பு. (மூதுரை 26)

ஆற்றவும் கற்றார் அறிவுடையார்; அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை—அந்நாடு
வேற்றுநாடு ஆகா; தமவேயாம்; ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில். (பழமொழி 55)

கற்றவர்க்கு எந்த நாடும் தம் நாடே; எந்த ஊரும் தம் ஊரே; அவர் சென்ற இடம் எல்லாம் சிறப்பே; எத்திசையும் அவரை ஏத்திப் போற்றும் என ஔவையாரும், முன்துறையரையரும் இவ்வாறு கூறியுள்ளார்.

யாதும் ஊரே; யாவரும் கேளிர். (புறம் 193)

**பூங்குன்றனார்** என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் குறித்துள்ளார். எவரையும் உரியவராக்கி எவ்வழியும் யாண்டும் கல்வி உயர் நலன்களை அருளுகிறது.

வித்வத்வம் ச ந்ருபத்வம் ச நைவ துல்யம் கதாசந
ஸ்வதேசே பூஜ்யதே ராஜா வித்வாந் ஸர்வத்ர பூஜ்யதே.

கற்றவன் கொற்றவனிலும் சிறந்தவன்; தன் தேசத்தில் மாத்திரம் அரசனுக்கு மரியாதை; கற்றவனை எல்லா நாடுகளும் எல்லா இனங்களும் விழைந்து வியந்து புகழ்ந்து போற்றும் என இது குறித்துளது.

வித்யா ரக்ஷதி மாதேவ பிதேவ ச ஹிதா ஸதா
தேசாந்தரே பந்துதேவ பசுரேவ தயா விநா.

கல்வி தாயைப்போல் காப்பாற்றுகிறது; தந்தையைப்போல் எப்போதும் இதமே புரிகிறது; எந்த நாட்டுக்குப்போனாலும் அங்கே பந்துவைப்போல் உபசரிக்கிறது; இத்தகைய கல்வியை இழந்து நிற்பவன் முழு மாடே என்னும் இது இங்கே கூர்ந்து சிந்திக்கவுரியது.

வீடு ஊர் நாடு என்னும் இவைகளால் மனிதர் இடம் பிரிந்துள்ளனர். அவரவருக்கு உரிய நிலைகளிலேயே அவர்வலிமையும் உரிமையும் பெருமையும் பெறுகின்றனர், அயலிடம் போனால் நலிவாய் மெலிவுறுகின்றனர்.

**தன் ஊரில் அன்னம்; அயல் ஊரில் காகம்.**

என்பது பழமொழி. இடவலியின் நிலைமையை இது நயமாய் விளக்கியுளது. இந்த நிலையைக்கற்றவர்கடந்து நிற்கின்றனர். எந்த நாடும் அவரைச் சொந்தமாகப் போற்றி மகிழ்கிறது. இதற்குக் காரணம் என்ன? ஆன்ம ஒளியாகிய அறிவு அவரிடம் உரிமையாக மருவியுள்ளமையால் எவரும் அவரைத் தேவர் என ஏத்தி ஆவலுடன் மகிழ்ந்து போற்றி வருகின்றனர்.

நாட்டை முதலில் குறித்தது அதன்பரப்பின் சிறப்பு நோக்கி. மனிதர் உரிமையாய் ஊர்ந்து வருவது **ஊர்** என வந்தது. அரசர் நாட்டமாய் நாடிக்கொண்டது **நாடு** என நேர்ந்தது. விடாய் விடுதல் வீடு என நின்றது.

தன்னை யுடையவனை மன்னவனிலும் மகிமைப் படுத்திக் கல்வி யாண்டும் மாண்புறுத்தி வருகிறது. இதனை உரிமையுடன் எவரும் இளமையிலேயேபயின்று வளமையாய் உயர்ந்து கொள்ள வேண்டும்.

சிறந்த கல்வியாளர் சென்ற இடங்கள் எங்கணும் மதிப்பும் மாண்பும் பெற்று மகிழ்ச்சி மீதூர்ந்து திருவுடன் உயர்ந்து விழுமிய நிலையில் விளங்கி வருவர்.

இவ்வுண்மை குமர குருபரர்பால் விளங்கி நின்றது,

சரிதம்.

இவர் பாண்டிநாட்டிலே ஸ்ரீ வைகுண்டம் என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே **சண்முக சிகாமணிப்**

**பிள்ளை** என்பவருக்குப் புதல்வராய்த் தோன்றினர். தாய் பெயர் **சிவகாம சுந்தரி.** இவர் பிறந்து ஐந்து வயது வரையும் யாதும் பேசாமல் ஊமையாய் இருந்தார். பிள்ளை ஊமையாய் உள்ளதே! என்று பெற்றோர் இருவரும் உள்ளம் வருந்தினர். ஒருநாள் இவரை அழைத்துக் கொண்டு **திருச்செந்தூரை** அடைந்து முருகக்கடவுள் திருமுன் உய்த்து ஊமைநீங்க அருள்புரியுமாறு உளம் உருகி வேண்டி விரதம் பூண்டிருந்தார். குமரன் அருளால் அது விரைவில் நீங்கியது; இக்குமரர் பேசும் திறமைபெற்றார். பெற்றோர் முதல் யாவரும் பெரு வியப்புற்றார். பேச வாய்திறந்த உடனேயே எம்பெருமானது கருணையைப் புகழ்ந்து பாடநேர்ந்தார். அன்பால் உருகிப்பாடிய அப் பாடல் **கந்தர் கலிவெண்பா** என்னும் பேரால் இது பொழுது வழங்கி வருகின்றது. செந்திற்பெருமான் திருவருள்பெற்றுப் புலவர் பெருமானாய் வெளிஏறிய இவர் பல தலங்களுக்கும் சென்றார். மதுரையை அடைந்து மீனாட்சி அம்மை மீது பிள்ளைத்தமிழ் என்று ஒரு பிரபந்தம் பாடினர். அக்காலத்தில் அங்கு அரசு புரிந்திருந்த **திருமலை நாயக்கர்** இவரது மதி நலத்தையும் கவி நயத்தையும் கண்டு பெருமகிழ்ச்சிகொண்டு ஒரு முத்துமாலையை இவர் கழுத்திலிட்டுச் சிவிகை முதலிய அரிய பல வரிசைகளும் செய்து ஆர்வத்தோடு ஆதரித்தருளினர். அங்கிருந்து பெருஞ்சிறப்புடன் எழுந்து தருமபுரம், சிதம்பரம், வைத்தீசுவரன்கோவில் முதலிய திருப்பதிகளைத் தரிசித்து முடிவில் காசியை அடைந்தார். ஆண்டிருந்த மகமதிய மன்னனும் இவரது புலமை நிலையை அறிந்து பெருமதிப்புடன் பேணி பரிசில் பல தந்து ஒரு நிலப்பகுதியை என்றும் உரிமையாக உதவி இவரை உபசரித்து நின்றான். அந்த இடத்தில் அழகிய ஓர் ஆலயமும் மடமும் அமைத்துத் தெய்வவழிபாடு செய்து சைவ சீலங்களுடன் இவர் தமிழ்ப் பிரசங்கங்கள் புரிந்திருந்தார். அந்த மடம் இன்றும் இவர்பெயரால் நன்கு நடந்து வருகின்றது. அயல் நாட்டு மன்னனும் முடிவணங்கி அடிபணிந்து தம்பால் அன்பு செய்தருளியதை நினைந்துஉரு

யக் கல்வித் தெய்வத்தை இவர்போற்றித் துதித்தார்.

"மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னரும் என்
பண்கண் டளவில் பணியச்செய்
வாய்! படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண்
டேனும் விளம்பில் உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ
சகல கலாவல்லியே!"

(சகலகலாவல்லிமாலை, 10)

கல்வியால் இவர் அடைந்துள்ள அதிசய மாட்சிகளை இது காட்டியுள்ளது. நீதிநெறிவிளக்கம், மதுரைக்கலம்பகம், சிதம்பர மும்மணிக் கோவை, திருவாரூர் நான்மணிமாலை, காசிக்கலம்பகம், பண்டார மும்மணிக் கோவை முதலிய நூல்களை இவர் இயற்றியிருக்கிறார்.

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவல் ஒன்று
உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை. (நீதிநெறிவிளக்கம், 2)

கல்வி எல்லா நலங்களையும் அருளவல்லது; உயிர்க்கு இனிய உறுதித்துணை அதனினும் வேறு யாதும் இல்லை என இங்ஙனம் இவர் முடிவு கூறியுள்ளார். கல்வியால் அரிய பல மகிமைகளை நேரே அனுபவித்தவராதலால் அதன் சீர்மையை ஆர்வத்தோடு பேசலானார். தாம் பிறந்த நாட்டிலேயன்றி மறு புலங்களிலும் புகழும் பொருளும் பெற்று இப்புலவர்பெருந்தகை தலை சிறந்து விளங்கினார். எந்த நாடும் எந்த ஊரும் கற்றவருக்குச் சொந்தமாம்; கல்வியைப் பெற்றவர் பேரின்பம் உற்றவர் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

கொற்ற முடிவேந்தர் கோல்கொண்ட தேசமன்றி
மற்ற இடத்தில் மதிப்பில்லை—கற்றவரோ
சென்றஇடம் எல்லாம் சிறந்து கதிர்மதிபோல்
என்றும் திகழ்வர் இனிது.

**கற்ருன உயிருற்ருன்; கல்லாதான் பொல்லாத**
**வெற்றுடம்பே யாவன் விரிந்து.**

கல்லாமல் இருப்பது கடையாம்.

---

398. பற்றிரளு முன்கவிகள் பாடினர் சம்பந்தர்
குற்றமற என்னே குமரேசா—உற்ற
ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து. (8)

இ-ள்

குமரேசா! பல் முளைக்கும் பாலப் பருவத்திலேயே கல்வியில் சிறந்து ஞானசம்பந்தர் ஏன் கவிகள் பாடினர்? எனின், ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு எழுமையும் ஏமாப்பு உடைத்து என்க,

இது, கல்வியின் தொடர்பை உணர்த்துகிறது.

ஒரு பிறப்பின் கண் ஒருவன் கற்றுக் கொண்ட கல்வி ஏழு பிறவிகளிலும் உறுதியாய்த் தொடர்ந்து உரிமையுடன் அவனுக்கு இன்பம் புரிந்தருளும்.

தன்னை யுடையானை உலகம் எல்லாம் உவந்து போற்றும்படி கல்வி உயர்த்தியருளும் என முன்னர் உரைத்தார்; இதில், எழுமையும் தொடர்ந்து நின்று உரிமையாய் உயிர்க்கு அது உதவி புரியும் என்கிருர். ஒருமுறை கற்றது ஊழியும் உற்ற துணையாய்த் தோய்ந்து உயர் இன்பம் வாய்ந்து வருகிறது.

கல்வி உடைத்து=கல்வியறிவு உடையது.

ஏமாப்பு=சேமமான பாதுகாப்பு.

உள்ளக் களிப்பால் ஊர்ந்து வரும் உறுதி நிலையை ஓர்ந்து தெளிய இங்ஙனம் இஃது உணர்த்தியுளது.

ஏமம்=சேமம்; காவல்; இன்பம்.

இதன் அடியாகப் பிறந்து ஏமாப்பு வந்துளது.

ஏமாப்பு ஒருவற்கு மக்கட் பிறப்பு. (அறநெறி, 142)

ஏமாப்ப முன்னே. (பழமொழி 51)
ஏமாப்பச் செய்வதாம். (பழமொழி 289)
ஏமாப்ப இன்துயில் துறந்து. (மதுரைக் காஞ்சி 575)
என்நெஞ்சு ஏமாப்ப. (பொருநர் 98)
நெஞ்சம் ஏமாந்து உவப்ப. (புறம் 198)
ஏமாப்பு உற்றேன். (இராவணவதை 242)
உடைமைகொண்டு ஏமாப்பார். (நீதிநெறி 63)
இற்சார்வின் ஏமாந்தேம். (நாலடி 182)
அருந்த ஏமாந்த. (மணிமேகலை 18)
விடிவுற்று ஏமாக்க. (பரிபாடல் 7)
ஏமாப்பான் முயலும். (முத்துக்குமார-55)
ஏமாப்போம்; பிணியறியோம். (தேவாரம்)
ஏமாப்புச் செம்மாப்பு. (பிங்கலந்தை)

இவற்றுள் ஏமாப்பு உணர்த்தி நிற்கும் பொருள்களைக் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம்.

உறுதியான உள்ளத் துணிவோடு நல்ல வழியில் உவந்து களித்து உயர்ந்து வருவதே ஏமாப்பு என்னும் குறிப்பு மொழியால் கூர்ந்து உணர வந்தது.

கல்வியை விரைந்து கற்றுக் கொள்ளுங்கள்; அது உயிர்க்கு உறுதித் துணையாய் எவ்வழியும் தொடர்ந்து யாண்டும் இன்பம் பயந்து வரும் எனக் கலையின் நிலையான நிலைமையையும் காப்பின் தலைமையையும் நலமாயுணர்த்தி யிருப்பது நயந்து சிந்திக்கவுரியது. மானச மருமங்கள் உரைகளில் மருவி வந்துள்ளன.

பழகிய வாசனை எதுவாயினும் உள்ளத்தில் பாய்ந்து உயிருள் தோய்ந்து கொள்ளுகிறது; கொள்ளவே யாண்டும் அது தேயாமலும் யாதும் மாயாமலும் நீண்டு படர்ந்து நேரே படிந்து நிலைத்து வருகிறது. அறிவு நலம் தோய்ந்த அந்த இன்பவரவு ஆன்ம ஆதரவாய் இங்கே நன்கு தெரிய வந்தது.

எடுத்துள்ள இந்தப்பிறவியில் ஒருமனிதன் படித்து

வருகிருன்; உள்ளம் ஓர்ந்து கற்ற அந்தக் கல்வியறிவு உயிருள் சாரமாய்ச் சேர்ந்து கொள்ளுகிறது; அவ்வுணர்வின் புணர்வு மலரின் மணம்போல் மருவி நிற்றலால் பிறவிகள் தோறும் பிரியாமல் உறவுரிமையுடன் குணகுணியாய்க் குலாவி வருகிறது.

ஒரு பிறவியில் பெற்ற அறிவு ஏழு பிறவிகளிலும் விடாது தொடர்ந்து உயிருடன் கிழமையாய் ஒளிபுரிந்து வரும் என்பது எழுமை என்றதனுல் தெரிய வந்தது.

ஒருமை எழுமை என்பன தன்மைகளைக் குறியாமல் எண்ணல் அளவுகளை உணர்த்தி நின்றன. உற்றஉடலை விட்டு உயிர்பிரிந்து போனுலும் அது புக்குழி எல்லாம் கற்ற அறிவும் கலந்து புகும்; உலப்பில்லாத அந்தக் கலப்பு என்றும் உறவாயுற்று வரினும் ஏழு பிறவிகளை ஊழ்முறையே எடுத்துக் காட்டி ஓரளவு கூறினர்.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து. (குறள் 126)

ஒருமைச் செயல்ஆற்றும் பேதை எழுமையும்
தான்புக்கு அழுந்தும் அளறு. (குறள் 835)

ஒருமையும் எழுமையும் இவ்வாறு கிழமை தோய்ந்து வளமை வாய்ந்து மரபுமுறையாய் வந்துள்ளன.

நல்லதாயினும் தீயதாயினும் ஒருபிறவியில் செய்தது ஏழு பிறவிகளிலும் விடாது தொடரும் என்பதை இவற்ருல் உணர்ந்து கொள்கிருேம். யாண்டும் இன்பமே வேண்டும் என்று எண்ணிவருகிற மனிதன் என்றும் குன்ருத இன்ப நிலையமான கல்வியை உரிமையுடன் இளமையிலேயே ஓர்ந்து தேர்ந்து கொள்ளவேண்டும்.

தான் கற்ற என்றது மனிதன் படித்தஅளவே பயன் பெறுகிருன். படியாது விடின் அது அவனது குற்றமாய் முடிகிறது. உற்றஉருவம் கற்றகலையால் ஒளியுறுகிறது.

மனிதப்பிறவி இயல்பாகவே அறிவுநலம் வாய்ந்தது ஆதலால் உயர்வான கலைகளைக் கற்று ஒளி பெற்று உயர்ந்து வர அது மிகவும் உரிமையுற்றுள்ளது.

கல்வி என்னும் சொல்லே அதன் நிலைமையை உணர்த்தியுளது. பல்வகையான நல்ல உணர்வு நலன் களையே கல்வி என மேலோர் குறித்து வருகின்றனர். கலையறிவு கனிந்துவரும் அளவே மனிதன் தலைமையாய் உயர்ந்து எவ்வழியும்தெளிவுடன் ஒளிபுரிந்து வருகிறான்.

அரிய தவங்களைச் செய்து கடவுள் அருளைப் பெற்றுள்ள பெரியோர்களுடைய எண்ணங்களையும் உணர்வு நலன்களையும் மொழிகள் மருவியுள்ளன. அவை விழுமிய நூல்களாய் வெளிப்பட்டிருக்கின்றன. அவற்றைச் சால்போடு கற்றுவருவதே கல்வியைப் பெற்று வருவதாம்.

உணர்வின் ஒளியாய் நின்று உயிர்க்கு என்றும் உறுதி புரிந்து வருதலால் கல்வியாண்டும் அழியாத யாதும் குறையாத அரிய பெரிய ஒரு அதிசய செல்வம். எழுமையும் இனிய துணையான இந்த விழுமிய சேமநிதியைப் பெற்றவன் பெரிய பாக்கியவானாய் இருமையும் பெருமை அடைகின்றான். பெறாதவன் பெரு மிடியனாய் முழுமடையனாய் எவ்வழியும் சிறுமை அடைந்து பழி படிந்து வழி வழியே சீரழிந்து இழிவுறுகின்றான்.

அருமையாக மருவிவந்துள்ள இந்த உயர்ந்த பிறப்பில் ஓதி உணர்ந்துகொள்; பின்பு யாதும் ஓதாமலே எல்லாக் கலைகளையும் எளிதே தெளிந்து கொள்ளலாம். ஒரு முறை மறந்து நழுவவிடின் பிறந்த பிறவிப்பயனை இழந்த படியாம். இழவு படியாமல் விழைவுடன் படி.

ஒரு மனிதன் கல்லாது கழிந்து நிற்பின் அவன் இழிந்து படுவதோடு அவனுடைய சந்ததிகளும் கல்வி நலனை இழந்து படநேர்கின்றனர். ஒல்லையில் கல்லாமல் நிற்பவன் தன் குலத்துக்கே பொல்லாங்கைச் செய்தவன் ஆகிறான். தலைவன் மூடமானால் குலமும் மூடமே.

படிப்பு வாசனை அற்ற குடியில் பின்பு அது பற்றுவது அரிதாம். படித்ததே யாண்டும் படிந்து வருகிறது. படியாதது அடியோடு படியாமல் போகிறது.

கல்வி யறிவுடைய முதிய வேதியன் ஒருவன் ஒரு நாள் ஓர் ஆற்றில் தவறிவிழுந்து விட்டடான். வெள்ளம்

அவனை ஈர்த்துக்கொண்டு போயது. நதியின் நீர்ப்பெருக்கில் சிக்கித் தத்தளித்துத் தவித்து உயிருக்கு மன்றாடி அவன் துயரோடு சென்றான். அப்பொழுது அயலே கரைமேல் ஆடுகளை மேய்த்துக் கொண்டு நின்றஒருவன் அவனது நிலையைக் கண்டான். விரைந்து நீரில் பாய்ந்து நீந்திப்போய் அந்த மறையவனைப் பிடித்துக் கரையில் கொண்டுவந்து சேர்த்தான். ஆற்றித்தேற்றினான். சிறிது ஆறுதலடைந்த அவன் பெரிதும் ஆர்வத்தோடு அந்த மேய்ப்பனைப் பார்த்து "அப்பா! எனக்கு நீ உயிர் உதவி புரிந்து என்னைக் காப்பாற்றினாய்; உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?" என்று நன்றியறிவோடு நயந்து கூறினான். கூறவே "நீங்கள்யார்? எந்தஊர்? எங்கேபோகும்படி இங்கே வந்தீர்கள்?" என்று ஆயன் கேட்டான். "நான் கொஞ்சம் படித்திருக்கிறேன்: உபாத்தியாயர் வேலை பார்த்துள்ளேன்: ஆற்றுக்கு அப்பால் உள்ள ஊரில் போய்ப் பள்ளிக்கூடம் வைத்துப் பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிக்கலாம் என்று வந்தேன்; இடையே இந்த ஆபத்து நேர்ந்தது" என்று அம் முதியவன் மொழிந்தான். அப்படியானால் என்வீட்டில் வந்திருந்து என் பையனுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுங்கள் என்று அவன் விரும்பி வேண்டினான். அப்பொழுது அந்த இருவருக்கும் இடையே நேர்ந்த உரையாடல்கள் மிகவும் சுவையுடையன: அயலே அறிய வருகின்றன.

வேதியன்: நீ என்ன படித்திருக்கிறாய்?

மேய்ப்பன்: நான் ஒன்றும் படிக்க வில்லை.

வேதியன்: ஏன் படியாமல் நின்றாய்?

மேய்ப்பன்: என்னைப் படிக்க வைக்க வில்லை.

வேதியன்: உன் தந்தை படித்திருக்கிறாரா?

மேய்ப்பன்: அவரும் படிக்க வில்லை.

வேதியன்: உன் பாட்டனாராவது படித்துள்ளாரா?

மேய்ப்பன்: அவருக்கும் படிப்புத் தெரியாது.

வேதியன்: அப்படியானால் என்னை இந்த ஆற்று வெள்ளத்திலேயே தள்ளி விடு; அதுதான் நல்லது.

இந்தச் சொல்லைக் கேட்டதும் அவன் திகைத்தான்; காரணம் தெரியாமல் விழித்தான். சிறிது நேரம் மறுகி நின்றான்; பின்பு யாதும் பேசாமல் விலகிப் போனான்.

கல்வி வாசனை தன் தலைமுறையிலும் இல்லாத ஒருவனுக்குக் கற்பிப்பது மிகவும் கடினம்; அவனுக்குப் படிப்பு ஏறாது; அந்த மடையனுக்குச் சொல்லிக் கொடுப்பது மரண வேதனையாம் என்பதை இந்தச் சரிதம் மருமமாய் விளக்கி மானச தத்துவத்தைத் துலக்கியுளது.

உரிமையுடன் ஒருவன் கல்லான் ஆயின் அது அவன் குடிக்கெல்லாம் மடமையான கொடிய சிறுமையாம். ஒரு பிறவியில் கற்றவனே வருபிறவிகள்தோறும் கல்வியில் உறுதியாய்ப் பெருமை மிகப் பெறுகிறான்.

ஒருபிறவி ஓதி உணர்ந்தார் தமக்கே
வருபிறவி தோறும் வலிதாம்—இருள்தீர்
கலைவாணர் எல்லாம் கழறினர்காண் நெஞ்சில்
மலைவாகக் கொள்ளேல் மதித்து. (ஔவையார்)

ஒருமையில் கற்றது எழுமைக்கும் இனிய துணை ஆம் என்னும் கருத்தை இது திருத்தமா விளக்கி வந்துள்ளது. இருள்தீர் கலைவாணர் என்று இதில் குறித்திருப்பவரைக் கூர்ந்து சிந்தித்துத் தேர்ந்து கொள்க.

கல்வி அரிய பல பெருமைகளை உதவி அதிசய இன்பங்களை அருள வல்லது. ஒரு பிறவியில் கற்றது பல பிறவிகளுக்கும் உறுதியான பெரிய பலனாம்.

போதம் பொலிந்து முன்பு ஓதியுணர்ந்து வந்தவர் பின்பு யாவும் ஓதாது தெளிவா உணர்ந்து கொள்வர். இவ் வுண்மை திருஞானசம்பந்தர்பால் தெரிய வந்தது.

சரிதம்.

இவர் சோழ நாட்டிலே சீகாழிப் பதியிலே சிவபாத இருதயர் என்னும் அந்தணரின் அருந்தவப் புதல்வராய் அவதரித்தார். தாய் பெயர் பகவதியார். இவர் தெய்வத் திருவருளினர்; சைவத் துறைகளை வளர்த்து உலக மக்களுக்கு உய்வைத் தர வந்தவர். கலை ஞானங்கள் பல

வும் இவரிடம் இயல்பாகவே நிறைந்திருந்தன, பிறவியிலேயே சிவஞான சீலராய்ப் பிறந்து வந்தமையால் **ஞானசம்பந்தர்** என இவர் விளங்கி நின்றார். யாரிடமும் படியாமல் எல்லாக் கலைகளையும் இளமையிலேயே தெளிந்து கொண்டார். அதனால் ஓதாது உணர்ந்த உத்தம உணர்வினர் என உலகம் புகழ ஒளிமிகப் பெற்றார். இவரது கல்வி நிலையும் கவித்திறனும் அதிசயமுடையன. பலகாலமும் பயின்று தெளிந்த பெரும் புலவர்களும் வியந்து நோக்கத் தக்க சிறந்த கவிகளை ஐந்து வயது நிரம்பு முன்னரே இவர் விரைந்து பாடினார். ஏகபாதம், மாலைமாற்று, யாழ்முறி முதலிய சித்திரக் கவிகளையும் விசித்திரமாய்ப் பாடியிருக்கின்றார். பரமனை நினைந்து பத்திப் பரவசராய் இவர் பாடியுள்ள பாடல்கள் **தேவாரம்** என மேவியுள்ளன. அழகிய பூமாலை போலக் கடவுளுக்கு விழுமிய பாமாலை என்பதை அப் பேர் விளக்கி நிற்கின்றது. இவரது கவிகள் புலமை நலம் கனிந்து இனிய சுவைகள் நன்கு சுரந்துள்ளன.

"புலன்ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட்டு ஐமேல் உந்தி
அலமந்த போதாக அஞ்சேல் என்று
அருள்செய்வான் அமரும் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழை என்று அஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரம்ஏறி
முகில்பார்க்கும் திருவை யாறே."

(சம்பந்தர் தேவாரம்)

இது திருவையாறு என்னும் பதியில் எழுந்தருளியிருக்கும் பரமனைக் குறித்துப் பாடியது. இவ்வாறே தலங்கள் தோறும் சென்று பாடியிருக்கிறார். இவருடைய பாடல்கள் சில அற்புதங்களைச் செய்திருக்கின்றன. மதுரையில் சமணர்கள் எதிர்த்து வாதாடியபோது இவர் பாடல் ஒன்று பாடி அப்பாட்டை எழுதிய ஏட்டை வையை ஆற்று வெள்ளத்தில் விட்டார். அந்த ஏடு நீர் ஓட்டத்தோடு போகாமல் மேல் ஓட்டமாய் நேரே எதிர்

ஏறி வந்தது. புனல் கனல் முதலிய பலவகை நிலைகளில் இவர் கவிகள் அதிசய புதுமைகள் செய்துள்ளன.

"புனலில் ஏடுஎதிர் போகெனப் போகுமே;
புத்தனார் தலை தத்தெனத் தத்துமே;
கனலில் ஏடிடப் பச்சென் றிருக்குமே;
கதவம் மாமறைக் காட்டில அடைக்குமே;
பனையில் ஆண்பனை பெண்பனை ஆக்குமே;
பழைய என்புபொற் பாவையது ஆக்குமே;
சின அராவிடம் தீர்எனத் தீருமே;
செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே."

இதனால் இவரது அரிய சித்தியும் பெரிய புலமையும் தெரியலாகும். வருந்தி முயலாமல் திருந்திய கலைஞராய் இளமையிலேயே இவர் சிறந்து விளங்கினமையால் கருவிலே திருவுடைய பரம பாக்கியசாலி என்று பலரும் இவரை வியந்து புகழ்ந்தனர். ஒருமைக்கண் கற்ற கல்வி எழுமையும் உரிமையாய் ஒருவற்கு உதவியருளும் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். இவரது ஞானம் வான ஒளியா வயங்கியுளது.

ஒருகாலும் நீங்கா உயர்கல்வி யின்றேல்
இருகால விலங்கே இவண்.

கல்வி உயிர்க்கு அமுதம்.

---

399. கண்டார்எல் லாமகிழக் கண்டுகண்டு கல்வியின்பம்
கொண்டாரேன் ஔவை குமரேசா— தண்டாமல்
தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். (9)

இ-ள்

குமரேசா! தமது கல்வியறிவை உலகத்தார் உவந்து மருவுவதைக் கண்டு ஔவையார் ஏன் மகிழ்ந்து வந்தார்? எனின், தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு கற்றறிந்தார் காமுறுவர் என்க.

கல்வி இன்பத்தை இது காட்டுகின்றது.

தாம் இன்புற்று வருகிற கல்வியறிவுக்கு உலகத்தாரும் இன்புறுவதை நோக்கிக் கற்றுத் தெளிந்தவர் அதனை மேலும் மேலும் விழைந்து மகிழ்வர்.

தாம் என்றது பல நூல்களையும் பயின்று தேர்ந்த புலவர்களை. அவரது இன்ப நுகர்ச்சியும் மகிழ்ச்சியும் இங்கே தெரிய வந்தன. அறிவின் சுவை அதிசய போகமாயுளது. அதனை நுகர்பவர் அமரராயுளர்.

கல்வி எழுமையும் ஏமாப்புடையது என முன்பு குறித்தார்; இதில் எவர்க்கும் என்றும் அது நிலையாய் நின்று உலவா இன்பம் தரும் என்கின்றார்.

செல்வமும் கல்வியும் மனிதருடைய இன்ப அனுபவங்களுக்கு இனமாயுள்ளன. இருப்பினும் இரு வேறு வகையாய்ப் பிரிவுற்று நிற்கின்றன. செல்வத்தை ஒருவன் சேர்ந்து அனுபவிக்குங்கால் மற்றவர் மகிழ்வதில்லை. கல்வியை ஒருவன் கலந்து இன்புறுங்கால் எல்லாரும் சேர்ந்து இன்புறுகின்றனர். ஓர்ந்து உவந்து புகழ்கின்றனர். அரிய பண்பும் அதிசய இன்பமும் கல்வியின் கண்ணேயே கனிந்து சுரந்திருக்கின்றன.

செல்வத்தின் போகங்கள் தன்னலமுடையன: கல்வியின் போகங்கள் பலரும் ஒருங்கே நுகர்ந்து வர உயர்ந்து நிறைந்துள்ளன. அது மடமை மருள்களோடு மருவி மடிகிறது; இது மதிநலன்களோடு பெருகி எவ்வழியும் அதிசய சுகமாய் இனிது மிளிர்கிறது.

அது வீண வழியில் விரிந்து படுகிறது.

இது ஞான ஒளியில் நடந்து வருகிறது.

அது பொறிவெறிகளில் புலையாய் உழல்கிறது.

இது அறிவு நெறிகளில் நிலையாய் உயர்கிறது.

அது அனுபவிக்கும் தோறும் குறைந்து போம்.

இது அனுபவிக்கும் தோறும் நிறைந்து வரும்.

அது உடலளவில் ஊர்ந்து வருகிற ஊனச்சுவை.

இது உயிரோடு தோய்ந்து வருகிற ஞானச்சுவை.

அது ஊனைப் பெருக்கி ஈனப் படுத்தும்.
இது உணர்வைப் பெருக்கி ஒளிமிகச் செய்யும்.
அதன் நுகர்ச்சி அயலார்க்கு இகழ்ச்சியாம்.
இதன் நுகர்ச்சி எல்லார்க்கும் மகிழ்ச்சியாம்.

இவ்வுண்மைகள் ஈண்டு நுண்மையா யுணர வுரியன.

உள்ளே அறிவால் ஆயுந்தோறும் வெளியே வாயால் பேசும் பொழுதும் தனக்குப் பேரின்பம் சுரந்து வருகிற கல்விக்குப் பொருளும் கொடுத்துப் பூசனைகளும் புரிந்து புகழ்ந்து போற்றித் தன்னை உலகத்தார் உவந்து விழைந்து வருவதைப் புலவன் வியந்து மகிழ்ந்து கொள்கிறான். இத்தகைய மதிப்பு மாண்புகளைத் தனக்கு அருளிவரும் கல்வியை ஆர்வத்தோடு மேன்மேலும் காதலித்து அவன் உவந்து போற்றி வருகிறான்.

கண்டு = நேரே பார்த்து. அரிய இனிய அனுபவக் காட்சி இவ்வாறு மாட்சியாய் ஈண்டு அறிய வந்தது.

காமுறுவர் = காதல் மீதூர்ந்து கல்வியைப் பேணி வருவர். இன்பம் தருவதில் அன்பு பெருகியது.

ஐயம் உறுவர் என்பது ஐயுறுவர் என்றாற் போல் காமம் உறுவர் என்பது காமுறுவர் என நின்றது. காமம் என்னும் சொல் பெண் ஆசையையே பெரும் பாலும் குறித்து வரும். அதனை இங்கே வழங்கி யிருப்பது உளங் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வுரியது.

பேரழகுடைய தன் காதலியை ஒரு காதலன் காதலிப்பதினும் தனக்கு எவ்வழியும் இன்பம் பயந்து வருகிற கல்வியைக் கவிஞன் பெரிதும் காதலிப்பான் என்பது இங்கே மருமமாய்த் தெரிய வந்தது.

> கல்வியே கற்புடைப் பெண்டிர்அப் பெண்டிர்க்குச்
> செல்வப் புதல்வனே ஈர்ங்கவியாச் — சொல்வளம்
> மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்தும்
> செல்வமும் உண்டு சிலர்க்கு. (நீதிநெறி 4)

நல்ல உத்தமனுக்குக் கல்வியே கற்புடைய மனைவியாய் இன்ப சுகம் தரும் என இது குறித்துள்ளது. உள்

ளம் உவந்துவர உணர்வு தெளிந்துவர உயிர் உயர்ந்து வரப் பேரின்ப வெள்ளமாய்க் கல்வியறிவின் சுவை கவிஞன் அகத்தே கனிந்து சுரந்து வருகிறது.

இம்பர் நாட்டில் செல்வம்எல்லாம்
எய்தி அரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டில் கற்பகக்கா
ஓங்கு நீழல் இருந்தாலும்
செம்பொன் மேரு அனையபுயத்
திறல்சேர் இராமன் திருக்கதையில்
கம்ப நாடன் கவிதையிற் போல்
கற்றோர்க்கு இதயம் களியாதே.

இந்த உலகத்தில் சிறந்த அரச போகமும், அந்த உலகத்திலுள்ள உயர்ந்த இந்திர போகமும் கம்பன் கவிச் சுவைக்கு ஈடாகா. கற்றோர் இதயத்தைக் களிக்கச் செய்வது கவியின்பமே; அதனையே அவர் விழைந்து வருவர் என்பதை இதனால் அறிந்து கொள்கிறோம்.

கல்வி யின்பத்தைக் கற்றோர் இவ்வாறு துய்த்து வருகின்றனர். அறிவானந்தம் ஆத்துமானந்தம் போல் அதிசய இன்பமாம். கற்றவர் இங்ஙனம் இன்புற்று வருங்கால் மற்றவரும் அவரோடு கூடி மகிழுகின்றனர்.

நுண்ணுணர்வி னாரோடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே ஒக்கும் விழைவிற்றால் — நுண்ணூல்
உணர்விலர் ஆகிய ஊதியம் இல்லார்ப்
புணர்தல் நிரயத்துள் ஒன்று. (நாலடி 233)

நுண் அறிவுடைய கல்வி யாளரோடு கலந்து அனுபவிப்பது விண்ணுலக இன்பத்தினும் விழுமிய நிலையதாம்; கல்லாத அறிவிலிகளுடன் சேர்வது நரக துன்பமாம் என உணர்வு தெளிய இது உணர்த்தி யுளது.

கற்றறிந்தாரது இன்ப நிலையும் கல்லாதவரது துன்பப் புலையும் இதில் தெரிய வந்துள்ளன. அரிய இனிய அறிவு நலன்கள் உள்ளே சுரந்து வருதலால் கற்றவருடைய காட்சியும் பேச்சும் மற்றவருக்கு மகிழ்ச்சி

ைளை யூட்டி வருகின்றன. புலவர் தேவர் அனையர் ஆத லால் அவர் நுகர்வில் யாவரும் இன்புறுகின்றனர்.

ஊர் இன்புறுவது என்னுமல் உலகு இன்புறுவது என்றது உலக மாந்தர் பலரும் உவந்து வருகிற அந்த நிலைமை தலைமைகள் தெரிய. தமது மகிழ்ச்சியில் பிற ரும் மகிழ்கின்றனர். மகிழவே கல்வியாளரை யாவரும் ஆவலோடு புகழ்ந்து போற்றுகின்றனர்.

இனிய சாரம் நிறைந்த கரும்பைத் தின்கின்ற ஒரு வனுக்குக் கூலியும் கொடுத்தது போல் கரும்பினும் இனிய கல்விச் சுவையை நுகர்ந்து வருபவனுக்கு எல் லாரும் விரும்பிப் பொன்னும் பொருளும் கொடுத்துப் பூசித்து வருகின்றனர். இயல்பாய் நிகழ்கின்ற இந்தப் பூசனை முறைகளைக் காணவே கல்வியை நுகர்ந்து வரு பவர் மேலும் அதன் மேல் ஆசை மீதூர்ந்து ஆர்வம் கூர்ந்து பயின்று தேர்ந்து உயர்ந்து வருகின்றனர்.

தீங்கரும்பு தின்பவர்க்குச் சேர்ந்துதரும் கூலிபோல்<br>
மான்கரும்பாம் கல்வியின்பம் வாய்ந்தவர்க்குப்—பாங்கரும்பிப்<br>
பூசை புரிந்து பொருளீந்து போற்றுதலால்<br>
ஆசைஅதில் ஆர்வார் அவர்.

தம் கல்வியை எவ்வழியும் கற்றவர் உவந்து காத லித்து வருதற்கு உரிய காரணங்களை இங்கே கண்டு கொள்ளுகிறோம். கலைகளை உண்மையாக ஓர்ந்து கற் றுத் தேர்ந்துள்ள புலவர்கள், செல்வம் அதிகாரம் முத லிய உலக ஆடம்பரங்களை யாதும் விரும்பாமல் எப் பொழுதும் கல்வியிலேயே கருத்தைச் செலுத்தி உல் லாசமாயிருந்து வருகிறார்களே! இந்த இருப்புக்கும் விருப்புக்கும் காரணம் என்ன? என்று வியந்து வின வினர்க்கு விடை கூறியபடியாய் இது வடிவமைந்து வந்துள்ளது. குறிப்பு நிலையைக் கூர்ந்து தெளிக.

கல்வியில் கனிந்து வருகிற காமம் உள்ளத்துக்கு உவகையும், உணர்வுக்கு ஒளியும், உயிர்க்கு உயர்கதி யும், உலகுக்கு நலமும் உதவி யருளுகின்றது. மற்ற

வழியில் மருவி வருகிற காமம் மதியைக் கெடுத்து வெறியைவிளைத்து ஆன்மாவை அவலப்படுத்தி விடுகிறது.

மனித வாழ்க்கையில் கல்வி செய்து வருகிற மாட்சிகளைக் காட்சியாக் கண்டு வருகிறோம். கருதியுணர்கிறோம். அறிவின் தெளிவு இருமையும் இன்பம் புரிகிறது.

உணவை உண்டு உடலை வளர்ப்பதோடு ஒழிந்து போகாமல் உணர்வின் சுவைகளை நுகர்ந்து உயிரை வளர்க்க வேண்டும். அங்ஙனம் வளர்ப்பவரே பிறவிப் பயனைப் பெற்றவராகின்றார். தாம் அனுபவித்து வருகிற அனுபவங்களால் மனிதருடைய நிலைகள் மதிக்கப் படுகின்றன. பான்மை அளவே மேன்மைகள் விளைகின்றன. மதிநலம் மருவியது கதிநலமாகிறது.

தேனுகரும் வண்டென்னத் தீங்கல்வித் தெள்ளமுதை
ஞானமுடை யார்பருகி நண்ணுவார் — ஊனமுறு
பொல்லாப் பொறியின் புலைச்சுவையில் புக்கழுந்திக்
கல்லார் கழிவர் களித்து.

கல்வி யின்பம் தலைமையானது ஆதலால் அதனை விழைபவர் உயர்நிலையாளராய் எவ்வழியும் ஒளி மிகுந்து யாண்டும் சிறந்து திகழ்கின்றார்.

அறிவின் சுவையை நுகர்ந்து வருகிற மனிதன் அதிசய மேதையாய்ச் சிறந்து வருகிறான். புத்தி தத்துவத்தில் துய்த்து வருவது புனித யோகமாய்ப் பொலிந்து திகழ்கிறது. ஆன்ம போகம் மேன்மை யோகம்.

In the pursuit of intellectual pleasures lies
every virtue ; of sensual, every vice. *(Goldsmith)*

அறிவின்பம் நுகர்வதில் தருமங்கள் பெருகி வருகின்றன : பொறி நுகர்வில் பாவங்கள் படர்ந்துள்ளன என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணர வுரியது. புலன் நுகர்வு புலை நுகர்வாகிறது.

ஊன வழிகளில் இழிந்து ஒழியாமல் ஞான ஒளியில் உயர்ந்து வருக. அவ்வரவே ஆருயிர்க்கு அதிசய இன்பமாம். அந்த உண்மை இங்கு உணர வந்தது.

பெண்விழைந்து பின்செலினும் தன்செலவில் குன்றாமை;
கண்விழைந்து கையுறினும் காதல் பொருட்கின்மை;
மண்விழைந்து வாழ்நாள் மதியாமை இம்மூன்றும்
நுண்விழைந்த நூலவர் நோக்கு. (திரிகடுகம் 29)

நுண்ணிய நூல் இன்பம் நுகர்ந்தவர் பெண், பொன், மண் முதலிய வேறு எந்த இன்பங்களையும் விரும்பார் என நல்லாதனார் இங்ஙனம் நவின்றுள்ளார்.

கற்றவர் கல்விச் சுவையையே கருதி மகிழ்வர்.

இவ்வுண்மை ஔவையார் பால் அறிய வந்தது.

சரிதம்

ஔவையார் என்பவர் செவ்விய ஒரு தவமுதுமகள். சிறந்த கல்வியும் உயர்ந்த குண நலங்களும் ஒருங்கே நிறைந்தவர். பிறர்க்கு இதம் புரிவதே பிறவிப் பேருகக் கருதியிருந்தார். இவரது புலமைநிலை உலகம் நலமுற ஒளி செய்துள்ளது. இவர் பெயரை எவரும் அறிவர். துறவி போல மறுமை நோக்குடன் வாழ்ந்து வந்தமையால் எங்கும் சென்று எல்லார்க்கும் இத நலங்களை இனிது போதித் தருளினர். இவர் உயர்ந்த வரகவி. அருளும் அமைதியுமுடைய இவரது பாடல்கள் எளிமையும் தெளிவும் இனிமையும் சுரந்து சிறந்த பொருள் நலங்கள் பல பொலிந்து திகழ்கின்றன. கம்பர், ஒட்டக்கூத்தர் முதலிய கவிச் சிங்கங்களும் இவருடைய கவிச் சுவைகளைக் கண்டு வியந்து புகழ்ந்து வந்தனர். அரியபொருள்களை இனிய மொழிகளில் பொதிந்து எவ ரும் தெளியுமாறு எளிய நடையில் இவர் உணர்த்தி யிருக்கின்றார். அக்கவிகள் சிறிய பாலருக்கும் பெரிய பண்டிதர்களுக்கும் உரிய நிலையில் பொருள்களைப் புலப்படுத்தி யருளுகின்றன. இவரது மதி நலம் அதி சாதுரியமானது. “கோடிபொன் பெறும்படி ஒரு பாடல் பாடுமின்!” என்று புலவர்களை நோக்கிப் பாண்டிய மன்னன் ஒரு முறை உல்லாசமாய் வேண்டினன். அவ் வளவு பெரிய பாடலை எவ்வாறு பாடுவது? என அனை வரும் மயங்கி அயர்ந்து நின்றார். இம் முதுமகள் அறிந்

தாள் ; அந்த அதிபதி முன் போய், "அடி ஒன்று கோடி பொன் பெறும்படி பாடுவேன்" என்றாள். பாண்டியன் வியந்தான் ; பாடுக என்றான். இவர் பாடினார்; அந்த அரிய இனிய பாடல் இதன் அடியில் வருகின்றது.

மதியாதார் முற்றம் மதித்தொருகால் சென்று
    மிதியாமை கோடி பெறும் ;
உண்ணீர் உண்ணீர் என்று உபசரியார் தம்மனையில்
    உண்ணாமை கோடி பெறும் ;
கோடிகொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மோடு
    கூடுதல் கோடி பெறும் ;
கோடானுகோடி கொடுப்பினும் தன்னுடை நாக்
    கோடாமை கோடி பெறும். (ஔவையார்)

இவ்வாறு இவர் பாடவே அரசன் கேட்டு அகம்மிக மகிழ்ந்தான். "பெறும்! பெறும்!" என்று அனைவரும் புகழ்ந்தார். மன்னவர் மகிழ்ந்து போற்றினும் அதனை ஒரு பொருளாக மதியாமல் யாரிடமும் எதனையும் விரும்பாமல் நாடு முழுவதும் திரிந்து நல்ல போதனைகளைச் செய்து வந்தார். இவருடைய கவிகளில் உணர்வு நலங்கள் ஒளி வீசித் தெளிவாயுள்ளன.

ஒன்றாகக் காண்பதே காட்சி ; புலன் ஐந்தும்
வென்றான் தன் வீரமே வீரமாம் ;—என்றானும்
சாகாமல் கற்பதே கல்வி ; தனைப்பிறர்
ஏவாமல் உண்பதே ஊண். (1)

இலக்கணக் கவிஞர்சொல் இன்பம் தேடுவர் ;
மலக்குசொல் தேடுவர் வன்கணாளர்கள் ;
நிலத்துறுங் கமலத்தை வண்டு நேரும் ; ஈ
தலைக்குறை கமலத்தைச் சாரும் தன்மைபோல். (2)

கல்வியையும் கற்றவர்களையும் இவர் கருதி மதித்திருக்கும் நிலை இவற்றால் அறியலாம். இவருடைய கவிகளையும் வாய்மொழிகளையும் கேட்டு அரசர் முதல் அனைவரும் பெரிதும் மகிழ்ந்து பரிசில் பல தந்து வரிசை புரிந்து வந்தார். எத்தகைய செல்வங்களையும் விரும்பாமல் தம் புலமையையே இவர் தலைமையாகக்

கருதி மகிழ்ந்தார். கற்றறிந்தார் கல்வி ஒன்றையே காமுறுவர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

அறிவமுதம் உண்டார் அயலே மயலார்
பொறிவெறி காணுர் புறம்.

கல்வியே நல்ல இன்பம்.

---

100. கண்டசெல்வம் பேணுமல் காடவர்கோன் கல்வியை
கொண்டு மகிழ்ந்தார் குமரேசா-தண்டாத [ஏன்
கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. (10)

இ-ள்.

குமரேசா! தனது அரசு செல்வத்தையும் மதியாமல் காடவர் கோன் ஏன் கல்வியையே வியந்து உவந்து கொண்டார்? எனின், கேடு இல் விழுச் செல்வம் கல்வி ஒருவற்கு மற்றையவை மாடு அல்ல என்க.

கல்வி மெய்யான தெய்வத்திரு என்கின்றது.

அழியாத சிறந்த பெருஞ் செல்வம் கல்வியே; பிறவெல்லாம் ஒருவனுக்கு நிலையான பொருள்கள் ஆகா.

கல்வி இன்பமயமானது என்று முன்பு உரைத்தார்; இதில் அது யாண்டும் யாதும் அழிவில்லாத விழுமிய செல்வம் என அதன் நிலைமையை உணர்த்துகின்றார்.

விழுமம் = வியனான மேன்மை.

எவரும் வியந்து விழைந்து போற்றும் ஏற்றம் உடையது விழுமம் என வந்தது. ஈறு திரிந்து ஈண்டு அடையாய் நின்றது. கேடு இல் செல்வம், விழுச் செல்வம் எனத் தனித்தனி கூட்டி நுனித்து நோக்குக.

கேடில் விழுப்புகழ்க் கேசவன்.
(திருவாய்மொழி 3-10)

திருமாலை நம்மாழ்வார் இவ்வாறு குறித்திருக்கிறார்.

**கேடில் விழுச் செல்வம்** எனக் கலியிலும் வந்துளது.

வேத விழுப்பொருள் ஓதினர். (பெருங்கதை 3-14)

வேதத்தை இவ்வாறு விழுமிய நிலையில் கூறியுள்ளார்.

கேடில் விழுப்பொருள். (குறுந்தொகை 216)

ஒருமைக்கண் ஒருவன் கற்ற கல்வி யாதும் கெடாமல் எழுமையும் தொடர்ந்து உயிர்க்கு இன்பம் புரிந்து வருதலால் கேடின்மை தெரிய வந்தது. சால்புடைய மேலோரிடமே எவ்வழியும் மேவி இசை பயந்துள்ளமையால் விழுமிய நிலைமை தலைமையா விளங்கி நின்றது.

பொன் மணி முதலாக உலகத்திலுள்ள வேறு எந்தப் பொருள்களுக்கும் இந்த அரிய இயல்புகள் அமையவில்லை; அழிவின்மையும் விழுமிய தன்மையும் கல்வி ஒன்றுக்கே கிழமையாய் அமைந்துள்ளன. அரிய பெரிய மகிமைகள் வாய்ந்துள்ள இந்த அதிசய செல்வத்தை மனிதன் புனிதமாத் துதி செய்து மதியுடன் விரைந்து போற்றிக் கொள்ள வேண்டும்.

செல்வம் என்னும் சொல் உலக வாழ்க்கைக்கு உரிய பொருள்களையே பொதுவாக உணர்த்தி வரும். உண்மையான உயிர்ச் செல்வத்தின் வேறுபாடு தெரிய இரண்டு அடைமொழிகள் ஈண்டு அடுத்து வந்தன.

ஈதல் துய்த்தல் முதலிய வழிகளில் செலவு செய்தற்கு உரியதாய் இனிது சேர்ந்திருப்பது எதுவோ அது செல்வம் என நேர்ந்தது.

இன்னல் தரும்பொருளை ஈட்டுதலும் துன்பமே
பின்னதனைப் பேணுதலும் துன்பமே — அன்னது
அழித்தலும் துன்பமே அந்தோ பிறர்பால்
இழத்தலும் துன்பமே யாம். (நீதிசாரம் 46)

ஈட்டலும் துன்பமற்று ஈட்டிய ஒண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம் — காத்தல்
குறைபடின் துன்பம் கெடின்துன்பம் துன்பக்கு
உறைபதி மற்றைப் பொருள். (நாலடி 280)

தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ
மாயாத தெவ்வர் வலியாலோ — யாதாலோ

இப்பொருள்போய் மாய்கின்ற தென்றுபொருள் வைத்
எப்பொழுதும் நீங்கார் இடர். (பாரதம்) [தார்கள்

வெள்ளம் மறவி விறல்வேந்தர் தீத்தாயம்
கள்வர்என் றிவ்வாற்றில் கைகரப்பத் தீர்ந்தகலும்
உள்ளில் உறுபொருளை ஒட்டாது ஒழிந்தவர்
எள்ளும் பெருந்துயர்நோய் எவ்வம் இகப்பவே.
(வளையாபதி)

பொருளைத் தொடர்ந்து வரும் துயரங்களை இவை குறித்துள்ளன. கேடு உடையதாய்ப் பீடை படிந்துள்ளதை இங்கே அறிந்து கொள்கிறோம். எவ்வழியும் அழிவுள்ள ஊனப் பொருளும் என்றும் அழியாத விழுமிய ஞானப்பொருளும் நேரே நன்கு காண வந்தன.

கல்வி உள்ளே அறிவிலிருந்து விளைவது; ஆன்ம ஒளியாயுள்ளது; அமுத மயமானது; அடுத்தவர்க்கு அருள்வது; கொடுக்கக் கொடுக்கக் குறையாதது; எடுக்கும் தோறும் பெருகுவது; எவராலும் கவர்ந்து கொள்ள முடியாதது; என்றும் நீங்காதது; எவ்வழியும் அழியாதது; எழுமையும் தொடர்ந்து விழுமியங்களை விளைத்து வருவது ஆதலால் கேடு இல் விழுச் செல்வம் என இது பீடு பெற்று நின்றது. சீரும் சிறப்பும் உடைய இதுவே சீவ நிதியாய்ச் சிறந்துளது.

செல்வம் அயல் இருந்து வருவது; மயல் மிகுந்து சொரிவது; அல்வழியில் பெருகுவது; நல்வழியை ஒருவுவது; கொடுக்கக் குறைவது; எடுக்கத் தேய்வது; கழி செருக்கு மடுப்பது; அழிதுயர் விளைப்பது; அவலப் புலைகளில் உழல்வது; கள்வர் பகைவர் முதலானவர்களால் கவர்ந்து கொள்ளப்படுவது; விரைந்து அழிவது ஆதலால் கெடுவது எனப் பழி படிந்துள்ளது.

எய்திய பொருள்கள் எவையும் இடையே உடலோடு ஒழிந்து போம்; கல்வி மட்டும் உயிரோடு மருவி நின்று என்றும் நிலையாய் இதம் புரிந்தருளும். உறுதியாய்த் தொடர்ந்து உய்தி தருகின்ற மெய்யான தெய்வத் திருவே எய்யாமல் எவரும் எய்த வுரியது.

வைக்கும் பொருளும்இல் வாழ்க்கைப்
பொருளும் மற்று எப்பொருளும்
பொய்க்கும் பொருளன்றி நீடும்
பொருள் அல்ல; பூதலத்தில்
மெய்க்கும் பொருளும் அழியாப்
பொருளும் விழுப்பொருளும்
உய்க்கும் பொருளும் கலைமான்
உணர்த்தும் உரைப்பொருளே.

(சரசுவதி அந்தாதி 26)

கல்வியே மெய்யான செல்வம்; மற்ற எவையும் பொருளல்ல என்று கம்பர் இவ்வாறு குறித்திருக்கிறார். கலா தெய்வத்தைத் துதித்திருக்கும் துதி கருதி யுணர வுரியது. அழியாப் பொருள்; விழுப் பொருள் என்றது கேடில் விழுச் செல்வம் கல்வி என்றதைக் கருத்தில் கொண்டு இங்ஙனம் விருத்தியடைந்து வந்துள்ளது.

இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கு மருந்து. (நாலடி 131)

மாற்படு புந்தியின் மறுவில் சேதனம்
பாற்படும் உயிர்க்கெலாம் பயந்தின் மாண்பயன்
நூற்படு கல்வியின் நுவல் வளத்தினின்
மேற்படு கின்றதில் விழுமிது இல்லையே.

(கந்த புராணம்)

வெள்ளத்தால் அழியாது; வெந்தழலால் வேகாது;
வேந்த ராலும்
கொள்ளத்தான் இயலாது; கொடுத்தாலும் குறையாது;
கொடிய தீய
கள்ளத்தார் எவராலும் களவாட முடியாது;
கல்வி என்னும்
உள்ளத்தே பொருள் இருக்க உலகெங்கும் பொருள்தேடி
உழல்வ தென்னே! (விவேக சிந்தாமணி)

மைந்தருக்கு வித்தைபொருள் எழில்கீர்த்தி
சுகபோகம் மற்றும் நல்கும்;
தத்தைதாய் குருதெய்வம் தாகுைம்;
பரதேசம் தனக்கு நட்பாம்;
எந்தராசரும் மதிக்கச் செயும்; அதற்குச்
சமானம் ஒன்றும் இல்லை; மேலாம்

அந்த வித்தை கல்லாதான் அறிவிலா
மிருகசெந்து வாகும் தானே. (பர்த்துருகரி)

கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.
[ஔவையார்]

பொருவிலா இதிகாச புராணங்கள்
தெருளு மாந்தர் சிறப்புளர் ஆகுவர்;
தரும நூலும் புராணத்தின் தன்மையும்
கருதி ஓர்ந்தவ ரேகலை வல்லரே. (கூர்மபுராணம்)

வைப்புழிக் கோட்படா வாய்த்தீயின் கேடில்லை
மிக்க சிறப்பின் அரசர்செறின் வவ்வார்
எச்சம் என ஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற. [நாலடி 134]

உன்னைப் பொருள்என் றுரைக்கும் தொறும் வளர்வாய்
பொன்னைப் பொருள்என்னப் போதுமோ — கன்னமிட்டு
மன்னர் கவர்ந்தும் வளர்பொருளே கைப்பொருள்கள்
என்ன பொருளுனைப்போல் எய்தாவே. (தமிழ்விடுதூது)

தாய்போல் இனிதோம்பும் தந்தைபோல் நன்காற்றும்
தூய மனைபோல் சுகம்அருளும்—ஆயநலம்
எல்லாம் அருளி இதமளிக்கும் கல்வியிது
வல்லார்க்கு எவைதாம் வரா. (தரும தீபிகை 559)

கல்வி ஒன்றே ஆருயிர்க்குப் பேரின்பம் தருவது; என்றும் அழியாத விழுமிய செல்வம்; அதனை உரிமையாகப் பெற்றவரே இருமையும் பெருமகிமை பெறுகின்றார் என இவை கூறியுள்ளன. குறிப்புகளைக்கூர்ந்து ஓர்ந்து மெய்ப்பொருளைத் தேர்ந்து கொள்ள வேண்டும்.

Education leads to an immortal treasure (Latin)

என்றும் அழியாத செல்வத்தில் ஏற்றுமே
ஒன்றிய கல்வி யுனை.

A learned man has always wealth in himself.
(Phaedrus)

கற்றவன் உள்ளே கணிப்பில் பெருஞ்செல்வம்
உற்றுளது என்றும் உறைந்து.

கல்வி என்றும் அழியாத விழுமிய செல்வம் என மேல்நாட்டாரும் உறுதியாக் கருதியுள்ளனர். அந்த உண்மையை இவற்றால் இங்கு அறிந்து கொள்கிறோம்.

மாடு = பொருள். மனிதனிடம் உடைமையாய் மருவி யிருப்பது என அதன் பாடு தெரிய வந்தது.

மாடு பொன் பக்கம் செல்வம். (நிகண்டு)

காடு பற்றியும் கனவரை பற்றியும் கலைத்தோல்
மூடு பற்றியும் முண்டித்தும் நீட்டியும் முறையால்
வீடு பெற்றவர் பெற்றதின் விழுமிது என்றுரைக்கும்
மாடு பெற்றனென் மற்றினி என்பெற வருந்தி.
(இராமா, இரணியன்-31)

இதில் மாடு குறித்து நிற்கும்பொருளைக் கூர்ந்து அறிக.

மற்றப்பொருள் என்னுமல் 'மற்றையவை' என்றது அவற்றை ஒருபொருளாக மதியாமையை மருமமாக் காட்டி நின்றது. பொன் மணி முதலியன கல்வியோடு இனமா எண்ணப்பட்டு வருதலால் சுட்டி விலக்கினர்.

மற்றையது என்பது சுட்டிய தற்கினம். [நன்னூல்]

உயிர்க்கு உறுதியான உண்மைச்செல்வம் கல்வியே என மேலோர் கருதி மேன்மையா மேவிக் கொள்வர். இவ்வுண்மை காடவர்கோன்பால் காண வந்தது.

## சரிதம்

காடவர்கோன் என்பவர் ஒரு சிற்றரசர், தொண்டை நாட்டிலே காஞ்சிபுரத்திலிருந்து அரசாண்டவர். பல்லவர் குலத்தினர். நல்ல நீதிமான். மதி நலமும் மன நலமும் ஒரு நிலையாய் அமையப் பெற்றவர். அரச செல்வத்தில் செழித்திருந்தும் மறுமை நோக்கமே இவரிடம் மருவி யிருந்தது. அரிய கலைகள் பலவும் பயின்று உரிய அமைச்சர்களைக் கொண்டு அரசை இவர் இனிது பேணி வந்தார். வைய மையலில் ஆழ்ந்து விடாமல் எப்பொழுதும் தெய்வ சிந்தனையிலேயே இவர் வாழ்ந்து வந்தார். குடிசனங்களுடைய இதங்களையே நெடிது கவனித்துநீதி புரிந்து வந்தமையால் இவரது புகழ் எங்கும் பரவி நின்றது. மறுபுல மன்னரும் இவரை மதித்துப் புகழ்ந்தனர்.

திருமலியும் புகழ்விளங்கச் சேணிலத்தில் எவ்வுயிரும்
பெருமையுடன் இனிதமரப் பிறபுலங்கள் அடிப்படுத்துத்
தருமநெறி தழைத்தோங்கத் தாரணிமேல் சைவமுடன்
அருமறையின் துறைவிளங்க அரசளிக்கும் அந்நாளில்.
[பெரிய புராணம், 58]

இவர் அரசுபுரிந்து வந்த முறைமையையும் சிவபத்தியையும் சேக்கிழார் இவ்வாறு குறித்திருக்கிறார். இதனால் இவரது கருமவீரமும் தருமசீலமும் காணலாகும். செல்வ ஆட்சியினும் கல்வியையே மிகவும் மாட்சியாக் கருதி வந்தார். நல்ல புலவர்களோடு நாளும் அளவளாவி அறிவுச் சுவையை நுகர்ந்து கவிகள் பாடும் திறனும் பெற்றார். நுண்ணுணர்வினரோடு கூடி நுகர்வது விண்ணுலக இன்பினும் மேலானது என்பதை இவர் அனுபவித்து மகிழ்ந்தார். உலகவாழ்வில் எவ்வளவு உயர்ந்து வாழ்ந்தாலும் அது நிலை இல்லாதது என்னும் உண்மை இவர் நெஞ்சில் நிலைத்திருந்தமையால் அரசுரிமையைப் புதல்வரிடம் கொடுத்துவிட்டுப் பல தலங்களுக்கும் சென்று சிவதரிசனம் செய்து விரதசீலராய் ஒழுகிவந்தார். தாம் தரிசித்த தலங்கள் தோறும் ஒவ்வொரு பாடலை இவர் பாடியிருக்கிறார். அவை சேத்திரத் திருவெண்பா என்னும் பேரால் பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. அந்த நூலிலிருந்து சில கவிகள் இதன் அடியில் வருவன.

படிமுழுதும் வெண்குடைக்கீழ்ப் பாரெலாம் ஆண்ட
முடிஅரசர் செல்வத்து மும்மைக் —கடியிலங்கு
தோடேந்து கொன்றையந்தார்ச் சோதிக்குத் தொண்டுபட்டு
ஓடேந்தி உண்பது உறும். (1)

ஓடுகின்ற நீர்மை ஒழிதலுமே உற்றாரும்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று — நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணாமுன் நன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர். (2)

குந்தி நடந்து குனிந்தொருகை கோலூன்றி
நொந்திருமி ஏங்கி நுரைத்தேறி — வந்துந்தி
ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே!
ஐயாறு வாயால் அழை. (3)

காளையர்கள் ஈளையர்க ளாகிக் கருமயிரும்
பூளைஎனப் பொங்கிப் பொலிவழிந்து — சூளையர்கள்
ஓகாளம் செய்யாமுன் நெஞ்சமே உஞ்சேனை
மாகாளம் கைதொழுது வாழ்த்து. (4)

தொட்டுத் தடவித் துடிப்பு ஒன்றும் காணாது
பெட்டப் பிணம்என்று பேரிட்டுக் — கட்டி
எடுங்கள் அத்தா! என்னுமுன் ஏழைமட நெஞ்சே!
நெடுங்களத்தான் பாதம் நினை. (காடவர்கோன்)

மனித வாழ்வு நிலையில்லாதது; அது அழியுமுன் அழியாத பொருளை நாடி உய்ய வேண்டும் என இங்ஙனம் பாடியிருக்கிறார். இவருடைய மெய்யுணர்வும் பரிபக்குவ நிலையும் கல்வித் திறனும் பாடல்களில் வெளிப்பட்டுள்ளன. எய்தியிருந்த செல்வத்தை மதியாமல் கல்வியையே மெய்ப்பொருளாகக் கருதிப்பேணி உறுதி நலனை இவர் மருவி யிருக்கிறார். ஒருவனுக்கு என்றும் கேடில்லாத விழுமிய செல்வம் கல்வியே என்பதை உலகம் காணஉணர்த்திஉயர்ந்த கலைஞானியாய்த் தெளிவடைந்து ஒளிசிறந்து இவர் விளங்கி நின்றார்.

**என்றும் அழியா இரும்பொருள் கல்வியே**
**பொன்றும் பொருளோ புரை.**

கல்வி உய்வைத் தரும் தெய்வத்திரு.

**இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.**

கல்வியைத் தெளிவாகக் கற்றுக் கொள்க.
கல்வி கண் அனையது.
கற்றவரே கண் உடையவர்.
கல்வியாளர் எல்லார்க்கும் இனியராகின்றார்.
உலகில் அவர் உயர்ந்து திகழ்கின்றார்.
கற்ற அளவு அறிவு பெருகி வரும்.
கற்றவர்க்கு எங்கும் சிறப்பு உண்டாம்.
கல்வி எழுமையும் துணையாம்.
யாண்டும் இன்பமாம்.
கல்வியே நிலையான விழுமிய செல்வம்.

சஉ-வது கல்வி முற்றிற்று.

# நாற்பத்தோராவது அதிகாரம்

## கல்லாமை.

அஃதாவது எழுத்தறிவு பெற்றுக் கற்க வுரிய நூல்களைக் கல்லாமல் கழிந்து நிற்கும் நிலைமை. என்றும் அழியாத விழுமிய செல்வம் ஆகிய கல்வியை இழந்தவன் இருகால் விலங்காயிழிந்து படுகிறான். பொல்லாத அந்த இழிபுலை நேராமல் நல்லகலையைப் பயின்றுமக்கள்மிக்க சீருடன் வாழவேண்டும் என்றுஉரிமையோடு உணர்த்துகின்றார் ஆதலால் கல்வியின் பின் இதுவைக்கப் பட்டது. உடன்பாடும் எதிர்மறையும் அறிவுச் செல்வத்தின் உறுதி நலனைத் திடமா உணர்த்தி யுள்ளன.

401 வாட்டமிலாப் புத்தர் மணிவா சகரோடு
கோட்டிகொண் டேன் தாழ்ந்தார் குமரேசா — நாட்டில்
அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். (க)

இ-ள்

குமரேசா! நூலறிவு நிறையாத புத்தகுருக்கள் மாணிக்கவாசகரோடு வாது புரிந்து ஏன் இழிந்தார்? எனின், நிரம்பிய நூல் இன்றிக் கோட்டிகொளல் அரங்கு இன்றி வட்டு ஆடி அற்று என்க.

இது, கல்லாதவன் சொல் செல்லாது என்கிறது.

நிறைந்த நூலறிவு இல்லாதார் அவையில் பேச நேர்வது அரங்கு இல்லாமல் வட்டு ஆடியது போலாம்.

அரங்கு = அறை; வரம்பு.

வட்டு=வட்ட வடிவமான சிறு விளையாட்டுக் கருவி. சிறு பிள்ளைகள் தரையில் கோடுகள் கீறி அறைகள் அமைத்து வட்டைவீசி விளையாடுவர். நடுவே இடம் விட்டு அருகே வரம்புசெய்து வரைந்தது **அரங்கு** எனவந்தது.

அறையும் ஆடரங்கும் மடப் பிள்ளைகள்
தறையில் கீறிடில் தச்சரும் காய்வரோ?

இறையும் ஞானம் இலாத என் புன்கவி
முறையின் நூலுணர்ந் தாரும் முனிவரோ ?
(இராமா 1-10)

கல்லாச்சிறுவர் அறையும் ஆடு அரங்கும் தரையில் கீறிவிளையாடுவது போல் நூலறிவு சிறிதும் இல்லாத நான் இராமகாவியம் பாட நேர்ந்தேன்; என்புன்கவியை நிறைந்த நூலறிவுடையார் இகழ்ந்துகூறுர் எனக் கம்பர் பெருமான் இவ்வாறு அவையடக்கம் கூறியிருக்கிருர்.

அரங்கு அமைத்து ஆடும் ஆடலும் பாடலும் நிரம்பிய நூலறிவும் இங்கே இனமா னாடி அறியும்படி கூடி வந்துள்ளன. குறிப்புக்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க.

வட்டு ஆடுதல் என்பது சிறுவர்கள் சிலர் சேர்ந்து அறைவகுத்து ஆடுகிற ஒரு வகை விளையாட்டு.

ஈன்பருந்து உயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழல்
கட்டளை அன்ன வட்டரங்கு இழைத்துக்
கல்லாச் சிருஅர் நெல்லிவட்டு ஆடும்
வில்லேர் உழவர் வெம்முனைச் சீறூர் (நற்றிணை 3)

பருந்து வருந்தி உலையும் படர்ந்த வேம்பு மர நிழலில் ஒழுங்காக அரங்குகளை அமைத்துக் கொண்டு சிறுவர் வட்டு ஆடுவர் என இது காட்டியிருக்கிறது. காட்சியைக்கருதிக்காணுபவர் ஆடலைஅறிந்து கொள்வர்.

கல்லாச்சிருரும் சில வரம்புகளை வகுத்துக்கொண்டே விளையாடுகின்றனர். வரம்பின்றிச் சொல்லாடவிழைவது கல்லாதமனிதர்க்குப் பொல்லாத புலையாம். தன் வாய்ச் சொல்பழுதுபடின் அந்தமனிதன் இழுதையாயிழிகிருன்.

பேசும் இயல்பால் மனிதஇனம் உயர்ந்துள்ளது. மிருகங்கள் பேசா; மனிதனே பேசுகிருன். வாய் பேசும் வாய்ப்பிஞலேயே அவன் மாட்சிமைஅடைந்திருக்கிருன். அந்தப் பேச்சும் அறிவு சுரந்துள்ள அளவே பெருமை நிறைந்து திகழ்கின்றது. அறிவும் நூலால் சால்புறுகின்றது. நூலறிவு இல்லையாயின் புல்லிய புலையில் இழிந்து அவனது சொல் பதராய்ப் பாழ் படுகின்றது.

சொல்லுக்கு உயிராயுள்ள அறிவு கல்வியால் உயர்கின்றது. ஆகவே கல்வித் தேர்ச்சி அறிவுக்கும், அறிவு சொல்லுக்கும், சொல் மனிதனது உயர்வுக்கும் முறையே மூலகாரணமாய் மருவியுள்ளது.

இங்ஙனம் எல்லாநலன்களுக்கும் ஆதிஏதுவாயுள்ள கல்வி இல்லையானால் மனிதன் மிருகமாயிழிகிறான். அவன் வாய்ச் சொல் வெறும் பிதற்றலாய்க் கழிந்து பிழைபடுகின்றது. அந்தப்பிழைபாடு கல்லாமையால் விளைந்தது; கல்லாமை என்பது நூலறிவு இல்லாமையே ஆதலால் நூல் இன்றிக் கோட்டி கொள்ளும் மடமையை ஈண்டு எடுத்துக் காட்டி இடித்து உணர்த்தி யருளினார்.

நூல் பல கற்றுச் சால்புடன் உயர்ந்து சான்றோனாய் வாழுக; கல்லாது கழியின் எல்லாவழியும் இழிவே.

கோட்டி கொளல் = சபையில் பேசுதல்.

அல்லார் முன் கோட்டி கொளல். (குறள் 720)

பின்னரும் இன்னவாறு வந்துள்ளதை ஈண்டு உன்னி உணர்ந்து உரையாடுந்திறனை ஓர்ந்து தெளிக.

அறிஞர் பலர் கூடியிருக்கும் கூட்டம் கோட்டி என வந்தது. உணர்வு நலன்களை உரைகளால் கொடுத்தலும் கொள்ளுதலும் செய்கிற அந்த நல்ல அவைக்குக் **கோட்டி** என்னும் பேர் பின்பு நாட்டப் பெற்றது. கோட்டி என உலக வழக்கிலும் உலாவி வருகிறது.

பித்தனை வெறியனுக்கும் கோட்டி என்று பெயர். அறிவுகேடனாய்க் கோடியிருப்பவன் என்னும் ஏதுவால் இது மேவியுளது. கற்றறிந்த நல்லோர் கூடியுள்ள அவையில் கல்லாதவன் புகநேரின் யாதும் பேசாமல் அமைதியாய் அடங்கி யிருக்க வேண்டும்; ஏதேனும் அவன் பேச நேர்ந்தால் அது பிழைபாடுடையதாய் இழிவே அடையும்; ஆகவே இகழ்ச்சிக்கே இடமாம்.

புல்லா எழுத்தின் பொருளில் வறுங்கோட்டி
கல்லா ஒருவன் உரைப்பவும் கண்ணோடி
நல்லார் வருந்தியும் கேட்பரே மற்றவன்
பல்லாருள் நாணல் பரிந்து. (நாலடி 155)

கல்லா ஒருவன் நல்லோர் அவையில் சொல்லாட நேரின் அது எல்லார்க்கும் வெறுப்பாம்; அவனுக்கும் மிக்க இளிவாம் என்பதை இதில் தெளிவாக அறிந்து கொள்கிறோம். நல்லவரின் பெருந்தகைமையை ஈண்டு உள்ளி உணர்ந்து உள்ளம் உவந்து கொள்கிறோம்

தெள்ளிய நூலறிவில்லையேல்அது பயன் இல்லாத இழி சொல்லாம்; ஆகவே அதனை விழுமியோர் எள்ளி யிகழ்ந்து அயலே வெறுத்துத் தள்ளி விடுகின்றனர்.

வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்.
(சிலப்பதிகாரம், 30)

வட்டும் சூதும் வம்பக்கோட்டியும். மணிமேகலை 14-63)

வேட்டது பகரும் கோட்டி. (பெருங்கதை 1-34)

கோட்டியுள் கொம்பர்குவிமுலை நோக்குவோன்.
(பரிபாடல் 12)

கோட்டிமாக்களைக் கூவுவ போல்வன. (இராம,பள்ளி31)

கோட்டியினின் நீங்கித் தனியிடம்பார்த்து.
(சிந்தாமணி 1035)

மெய்ஞ்ஞானக் கோட்டி உறழ்வழி விட்டாங்கோர்
அஞ்ஞானம் தந்திட் டதுவாங் கறத்துமாய்க்
கைஞ்ஞானம் கொண்டொழுகும் காரறி வாளர்முன்
சொல்ஞானம் சோரவிடல். (நாலடி 311)

நாப்பாடம் சொல்லி நயமுணர்வார் போற்செறிக்கும்
தீப்புலவற் சேரார் செறிவுடையார்—தீப்புலவன்
கோட்டியுள் குன்றக் குடிபழிக்கும் அல்லாக்கால்
தோட்புடைக் கொள்ளா எழும். (நாலடி 312)

கோட்டி என்னும் சொல் இவற்றுள் குறித்து நிற்கும் பொருளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்பவர் அதன் நிலைமையைத் தேர்ந்து தெளிந்து கொள்வர்.

நூலறிவு நிறைந்தவரே அவையில் உரையாட உரியவர்; அவ்வாறு நிறையாதவர் உரையாடலாகாது: ஆசையால் பேசநேர்ந்தால் அவமானம் அடையநேர்வர்.

நிரம்பிய நூல் என்றது அறிவுநலன்கள் நிறைந்த உயர்ந்த நூல்களை. பலநூல்களின் பயிற்சியால் அறிவு உயர்ச்சியுற்று ஒளிபெற்றுவருதலால் அந்நிறைவு தெரிய உரைத்தார். நூலளவே கல்வியறிவு சால்புறுகிறது.

அரங்கு நூலுக்கும், வட்டாடல் சொல்லாடலுக்கும் ஒப்பாம். நல்ல நூல்களைக்கற்று அறிவு நிரம்பித்தெளிவடைந்த சிறந்த கலைஞன் பேசினுல் அது உணர்வுநலம் சுரந்து உவகை புரிந்துவரும். அவ்வாறு கல்லாதவன் நல்ல அவையில் பேசின் அது பொல்லாத நவையாய்ப் புலையே விரிந்து எல்லாராலும் இகழப் படும்.

நூலறிவுடைய மேலோர் சால்புடன் பேசுவதால் அவர்க்கு மரியாதையும் புகழும் உளவாகின்றன. அந்த மதிப்பை விரும்பி மதிகேடனும் பேசத் துணிகின்ருன், அதனுல் அவமதிப்பே அடைகின்ருன். பிழையான பேச்சால் எவ்வழியும் யாருக்கும் ஏச்சே விளைகிறது.

பிறப்பின் சிறப்பும் பேச்சின் பெருமையும் எல்லார்க்கும் எங்கும் நல்ல கல்வி நன்கு தருகின்றது.

கல்லாதவனுக்கு அவை இல்லாமல் ஒழிகின்றன கண்ணும் வாயும் கற்றவனுக்கு எவ்வழியும் ஒளி புரிகின்றன; மற்றவனுக்கு அவை இளிவாய்க் குற்றமுறுகின்றன. உறுவதை உணராமல் உழந்து இழிகிருன் அல்லலும் அவலமும் சொல்லால் அடைகிருன்.

கல்லாதான் ஊரும் கலிமாப் பரிப்பின்ருே;
வல்லாதான் சொல்லும் உரையின் பயன் இன்ருே;
இல்லார்வாய்ச் சொல்லின் நயமின்ருே; ஆங்கின்ருே
கல்லாதான் கோட்டி கொளல். (இன்ருே: 29)

நான்கு துன்பங்களைக் கபிலர் இங்ஙனம் காட்டியுள்ளார். நூல்இன்றிக் கோட்டிகொளல் இடர்என்ருர்தேவர்; கல்லாதான் கோட்டி கொளல் படர் என்ருர் கபிலர்.

கோட்டிகொளல் என்னும் தொடர் பழமையின் கிழமை தோய்ந்து கல்விக் கழகத்தைக் காட்டியுளது.

கல்லாமை என்றால் என்ன? நூலறிவு இல்லாமையே. இந்த உண்மையைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளும்படி முதலில் தலைமையாக் குறித்தருளினர். நூல் இன்றி என்ற குறிப்புரை கூர்மையாய் ஓர்ந்து கொள்ளவந்தது.

கல்வி கண் என எண்ணத் தக்கது; உணர்வுக்கு ஒளி தருவது; உயிர்க்கு எவ்வழியும் இனியது; இத் தகைய கல்வியைப் பெற்றவனே உத்தம மனிதனாய் ஒளிமிகுந்து வருகிறான் என்று முன்னம் உணர்த்தி யருளினர். ஈண்டு அதனை மீண்டும் எதிர்மறை முகத்தால் தெளிவாக வலியுறுத்தித் துலக்கி யிருக்கிறார்.

மனிதன் வாய்படைத்த பயனைக் கல்வியால் பெறுகின்றான்; கல்லாமல் கழிந்து நின்றால் பொல்லாத புலையிலிழிந்து நோய் படைத்தவனாய் நொந்து படுகிறான்.

நூல் இன்றிக் கோட்டிகொளல் கோட்டித்தனமாம் என்று காட்டியது நூல்களைக் கற்று மேலோனாகுக என அறிவூட்டிய படியாம். அறிவு ஒளி ஏறிவர மொழி தெளிவேறி வரும். தேசுடன் கற்றுத் தெளிவுடன் பேசுக.

கல்லாதார் அவை ஏறி ஆரவாரமாய்ப் பேசினாலும் அவர் நல்ல மதிப்படையார்; அவமானமே அடைவர்.

இது சாகர்பால் அறிய வந்தது.

சரிதம்.

சாகர் என்பவர் ஈழ நாட்டிலிருந்து சோழ நாட்டிற்கு வந்தவர். புத்த மதத்தினர். அருள் மதத்தின் பொருள் அறியாமல் மருள்மண்டி நின்றனர். மதவெறி மீறிச் சிவ நிந்தனை செய்து வந்தமையால் தில்லைவாழ் அந்தணர்க்கும் இவர்க்கும் பகைமைமூண்டது. தெய்வ வழிபாட்டில் மாறுபட்டு வெய்ய வழியில் வீறுகொண்டு நின்ற இவர் அவரை வாதுக்குஅழைத்தார். நூல்களை நன்கு கல்லாதவராயினும் வம்புபேசி வாதம் புரிவதில் வல்லவராயிருந்தனர்; அதனால் தில்லைவேதியர் இவரோடு சொல்லாட அஞ்சினர், அவ்வமையம் அங்கே மாணிக்கவாசகர் வந்தார். ஊரார் எல்லாரையும் வாதுக்கு அழைத்து ஏதம்

இழைத்து வருகிற இவரது இறுமாப்பு நிலையை அறிந்து வாதவூரர் வாதம் புரிய இசைந்தார். சபை கூடியது. அறிஞர் பலர் குழுமியிருந்தனர். சாகர் முதலிய எழுவரும் மதவாதிகளாய் எதிர்ந்து வாதாடலாயினர். விதிமுறைகளின்றி மதிகேடராய் மத உரைகள் ஆடினர்; "உங்கள் சிவன் பித்தன்; பெண் ஆசை பிடித்தவன்; தன் உடலில் பாதியை மனைவிக்குக் கொடுத்தவன்; பிச்சை எடுத்தவன்; எலும்பு அணிந்தவன்; சுடுகாட்டில் உறைந்தவன்; நஞ்சை உண்டவன்" என இன்னவாறு மனம் போனபடி வெஞ்சொல் விளம்பினர். பொருள்நிலை உணராமல் வெறுமொழி கூறுகின்ற இவரது மருள் நிலையை நோக்கி மணிவாசகர் புன்னகை செய்தார். கேட்டகேள்விகளுக்கெல்லாம் ஏதுக்களை எடுத்துக்காட்டி இனிது பதில் உரைத்தார். அந்த உணர்வுரைகள் ஞானமணம் கமழ்ந்து நலம்பல சுரந்து வான ஒளிகளாய் வந்தன.

தென்பால் உகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடீ?
பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலோ. (1)

கோயில் சுடுகாடு கொல்புலித்தோல நல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ?
தாயுமிலி தந்தையிலி தான்தனியன் ஆயிடினும்
காயில் உலகனைத்தும் கற்பொடிகாண் சாழலோ. (2)

அம்பரமாம் புள்ளித்தோல் ஆலாலம் ஆரமுதம்
எம்பெருமான் உண்டசதுர் எனக்கறிய இயம்பேடீ?
எம்பெருமான் ஏதுடுத்தங்கு ஏதுஅமுது செய்திடினும்
தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ.
[திருவாசகம்]

வாதிகள் வினாக்களுக்கு இன்னவாறு சில பொருள் நிலைகளைக் குறித்துக் காட்டி மேலும் பல உண்மைகளை வாதவூரர் உணர்த்தியருளினார். உணர்த்தவே எதிரிகள் மாறுவேறுகூறாமல் மருண்டுவெருண்டு மறுகி அகன்றார்.

மதகுருக்கள் என முன்னர் மதிப்புற்றிருந்தவர் அவையில் வந்து பேசிய பின்னர் பிழைகள் வெளியாக

வே அனைவரும் இவரை அவமதித்து இகழ்ந்தார். பயனில்லாத இவருடைய வீண்வார்த்தைகள் நகை யாடல்களாய் நவைபுரிந்து நின்றன. நூல்களை நன்கு கல்லாதவர் அறிஞர் முன் பேசவருவது பிழையாம் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து இகழ்வா ஏசி நின்றது.

**கல்வி யறிவு கனியாதான் சொல்லாடல்**
**வில்லில் கணையாய் விழும்.**

கல்லாதவன் வாய் இல்லாதவன்.

---

**402. காளிதா சன்பாட்டைக் கல்லாதாள் சொல்லிஏன்**
**கோளிழிவு கொண்டாள் குமரேசா—தாளுடனே**
**கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்**
**இல்லாதாள் பெண்காமுற் றற்று. (உ)**

இ-ள்.

குமரேசா! காளிதாசனது கவிதையைக் கல்லாதாள் விழைந்து சொல்லி ஏன் இழிந்தாள்? எனின், கல்லாதான் சொல் காமுறுதல் முலை இரண்டும் இல்லாதாள் பெண் காமுற்று அற்று என்க.

கல்லாத பேதை பொல்லாத [illegible].

கல்வியறிவில்லாதவன் நல்ல அவையில் சொல்ல விழைவது முலை இரண்டும் இல்லாதவள் பெண்மையை விழைந்தது போல் இழிந்ததாம்.

நிந்தனையில் நீண்டு வந்துள்ள இந்தஉவமை பல சிந்தனைகளை ஈண்டு விநயமாய் விளக்க நேர்ந்தது.

சொல் காமுறுதல் = சொல்லுதலை விரும்புதல்.

சொல் என்றது இங்கே பிரசங்கமுறையான பேச்சை.

உள்ளக் கருத்தை உரையால் முறையே வெளிப்படுத்தும் திறம் நல்ல கல்வி அறிவாளர்க்கே நயமாய் அமையும். கல்வி கனிந்து வரச் சொல் உயர்ந்து வரும்.

தன் பேச்சை எல்லோரும் கேட்டுத் தன்னை மதிக்க வேண்டும் என்னும் ஆசை மனிதனிடம் இயற்கையாய்

மருவியுள்ளது. இந்த நசை கல்வியால் இசை பெற்று வருகிறது; கல்லாமையால் வசையுற்று இழிகிறது.

நூல்களை நன்கு கல்லாதவன் சபையில் ஒன்று சொல்ல அவாவுதல் அரங்கு இல்லாமல் வட்டு ஆடியது போல் தட்டழிந்து படும் என்று முன்னர் உரைத்தார்; இதில் அந்த ஆசை அவலம் தோய்ந்த அவமானமேயாம் என ஓர் உவமானத்தால் நயமா உணர்த்துகின்றார்.

இளமையில் கல்லாமல் கழிந்தவன் பின்பு எவ்வளவு இழிவுகளை அடைந்து எங்கும் துன்பமுற நேர்கின்றான் என்பதை இங்கு இனமா அறிந்து வருந்துகிறோம்.

கல்லாதவனுடைய இழி நிலைகளைத் தெளிவாக விளக்குதற்குச் சில எடுத்துக் காட்டுகளை இணைத்துக் காட்டிப் பரிகாசமாப் பரிந்து உணர்த்தி வருகிறார்.

விளையாட்டுச் சிறுவர்களின் பிழைபாடுகளை முதலில் குறித்தார்; கல்லாதார் சொல்லாட விழைதற்குப் பேடியின் பிழையான நசையை இதில் கூறியுள்ளார்.

முலை இரண்டும் இல்லாதாள்.

இந்தவாசகம் இங்கே தலை நிமிர்ந்து வந்துள்ளது.

பலர் கூடியிருக்கும் சபையில் கூசாமல் பேசமுடியாத சொல்லை அடிகள் இங்கே அழுத்தமாச் சொல்லியிருக்கிறார். அவையின் கண் தகுதியாகவும் மரியாதையாகவும் பேசவேண்டும் என்று போதனை செய்ய வந்த இடத்தில் இந்தச் சோதனை மூண்டுள்ளது. திருந்திய பண்பும் பெருந்தகைமையும் சிறந்த நாகரிகமும் ஒருங்கே நிறைந்துள்ள தேவரும் இவ்வாறு கூறியுள்ளாரே! என யாவரும் வியந்து பேச இது விளைந்திருக்கிறது.

முலை என்ற உடனே பச்சையான கொச்சை மொழி என்று பலர் இலச்சைப் படுவதாகப் பாசாங்கு காட்டுகின்றனர். அந்த உறுப்பில் அவர் கொண்டுள்ள மையல் மயக்கங்களை மருமமாய் வெளிப்படுத்துகின்றனரே அன்றி விநய விவேகங்களை இதமா விளக்கி விடவில்லை.

சங்கச் சான்றோரும் பண்டைப் புலவர்களும் யாதொரு வேறுபாடும் கருதாமல் கலைநிலையில் பாடி வந்த **முலை** என்னும் சொல்லை உலகப் போக்கை நோக்கி **முல்லையின் இடைக்குறை** என்று பண்டிதர்களும் பின்பு சொல்ல நேர்ந்தனர். கிளவி ஆக்கம் கிழவி ஆக்கமாயது.

அவையல் **கிளவி** என அமைதி பெற்றுள்ள நங்கில் அகிலமும் அறிய இவ்வாறு வெளிவந்துள்ளது. **முலை இரண்டும்** எனத் தொகையும் உம்மையும் தொடர்ந்து தோன்றின. இயல் விதிகளை நோக்கி இயங்கியுள்ளன.

இனைத்து என அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்.
(தொல்காப்பியம்)

இனைத்தென்று அறிபொருள் உலகி னிலாப்பொருள்
வினைப்படுத்து உரைப்பின் உம்மை வேண்டும். (நன்னூல்)

இந்த இயல் விதிகள் ஈண்டு எண்ணத்தக்கன.

**முலை இரண்டும் இல்லாதாள்** என்றது பேடியை.

ஆணும் அல்லாமல் பெண்ணும் இல்லாமல் பொதுமையான வடிவம் உடையது பேடி என வந்தது. ஆண் தன்மையும் பெண் தன்மையும் இன்றி இடையே சில விசித்திரப் பிறவிகள் தோன்றுகின்றன. அவை **பேடி அலி** எனப் பேர்பெற்று மனித இனத்துள் வருகின்றன.

பேடி என்பது பெண் உருவம் பெருகி இருப்பது.
அலி என்பது ஆண்சாயல் மிகுந்து நிற்பது

பேடிகள் சிலர்க்கு நல்ல வடிவ அழகுகள் நயமாய் அமைந்திருக்கும்; ஆயினும் அவர்க்கு முலைகள் இரா.

வேயே திரள்மென்தோள்; வில்லே கொடும்புருவம்;
வாயே வளர் பவளம்; மாந்தளிரே மாமேனி;
நோயே முலைசுமப்பது? என்றார்க்கு அருகிருந்தார்
ஏயே இவள் ஒருத்தி பேடியோ? என்றார்
எரிமணிப்பூண் மேகலையாள் பேடியோ! என்றார்.
(சீவக சிந்தாமணி 652)

அவயவங்கள் எல்லாம் அழகாயமைந்து அணிகளும் அணிந்துள்ள ஒரு பேடியைப் பார்த்து அவையோர் இவ் வாறு கூறியுள்ளனர். பெண் என்று முதலில் மயங்கிப் பின்பு முலைகள் இல்லாமையைக் கண்டு இங்ஙனம் இகழ்ந்து வெறுத்துள்ளனர். ஆகவே அந்த உறுப்பு பெண்மைக்கு எவ்வளவு சிறப்பு! எத்துணை எழில்! என் பதை ஈண்டு ஊன்றி உய்த்துணர்ந்து கொள்கிறோம்.

பெண்மைக்கு இவ்வண்ணம் பேரழகாயுள்ள முலை கள் யாதும் இல்லாத ஒருபேடி நல்ல பெண்போகத்தை அனுபவிக்க அவாவினால் அது இனிது அமையுமா? ஒரு வேளை ஏமாந்த ஒரு ஆண்மகன் இனம் தெரியாமல் இசைந்தாலும் இன்பம் தோன்றுமா? உண்மை தெரிய வே அவனும் அருவருத்து வெறுத்து இகழ்ந்து தள்ளி எள்ளி அகன்று போவன்: போகவே வீணே மோகம டைந்த அவள் அவமானமும் அவமதிப்பும் படிந்து வருந் துவள். பொல்லாத நசை புலையான வசை.

இது உவமானக் குறிப்பு; இனி உவமேயம் வருகிறது. ஒப்புரைகள் நுட்ப உணர்வுகளுடையன.

கல்வி நலம் இல்லாத ஒரு பேதை நல்ல மேதைகள் கூடியுள்ள சபையில் பேச விரும்பினால் அந்த ஆசை நிறைவேறுமா? துணிந்து எழுந்து மேடைமேல் ஏறிநின் றாலும் அறிவு நலம் கனிந்த சுவையான இனிய பொருள் மொழிகள் அவன் வாயிலிருந்து வெளிவருமா? உருவத் தோற்றத்தின் ஆடம்பரத்தைக் கண்டு "இவனும் ஒரு கல்விமான்" என்று கருதிக் கேள்வியின்பம் துய்க்க விழைந்து ஆவலோடு நேர்ந்தவர் பதரானபாழ்வாயன் என்று அறிந்துகொள்ளவே இகழ்ந்து எழுந்து அவை யை விட்டு அகன்று போவர்; அவர் அகலவே சுவை கேடனான அவன் நவையுழந்து நாணியிழிந்து கழிந்து போவன். வீண் ஆசை வெய்ய துயரமாயது.

முலை இல்லாதாள் பெண் நலம் விழைந்து பிழைபட் டது போல் கலை இல்லாதான் சொல்நலம் அவாவி இழி

வுற்ருன் ஆதலால் அப் பேடி இம்மூடனுக்கு இங்ஙனம் ஒப்பாய் வந்தாள். உறவுகள் ஊன்றி உணரவுற்றன.

முலை, கலைக்கும்; பேடி, கல்லாதானுக்கும்; பெண்மை விழைவு, பேசும் ஆசைக்கும்; பிழைபாடு, பேரிழிவுக்கும் ஒப்பாம். இரு பால் நிலையும் எதிர் அறிய நேர்ந்தது.

பெண்ணுக்கு முலை எப்படிச் சிறந்ததோ அப்படி ஆணுக்குக் கலை சிறந்து தலைமையாய் விளங்குகிறது.

உருவின் எழிலும் அறிவின் ஒளியும் கருத வந்தன.

கலை இல்லையானல் அம்மனிதன் நிலை புலையாயிழிந்து புன்மையுறுகின்றது. கலையில்லாதவனுக்கு முலையில்லாதவளை உவமை காட்டியது அவனது நிலைமையை நினைந்து நெஞ்சம் பரிந்து நேர்ந்துள்ளதைத் தெளிய.

உவமைகள் எல்லாம் பொருள்களைத் தெளிவாக விளக்கி உணர்வு நலன்களை வளமா உதவி உவகை புரிந்து வருதலால் கலையுலகில் அவை புலமை மணம் கமழ்ந்து தலைமையுடன் பொலிந்து விளங்கு கின்றன.

உரிய நீர்மைகள் தோய்ந்து வரும் அளவே எவையும் சுவையாய் விளங்கி அரிய சீர்மைகள் வாய்ந்து பெரிய இனிமைகள் பெருகி வருகின்றன.

மங்கைக்குக் கொங்கை; மலர்க்கு மணம்; மாலை மதி;
செங்கைக்கு வண்மை; செயற்கினிமை; - அங்கதுபோல்
மக்களுக்குக் கல்விநலம் மாண்பாகும்; அஃதின்றேல்
ஒக்க விலங்காம் உணர்.

இங்கே இது கூர்ந்து ஓர்ந்து சிந்திக்க உரியது.

மதியால் வானம் ஒளிமிகுந்து விளங்குதல் போல் கலை மதியால் மனிதன் சிறந்து திகழ்கிருன். ஆறு நிலைமைகள் தலைமையாய் ஈண்டு அறியவந்துள்ளன. யாவும் ஆய்ந்து கொள்ளுக. உரிய உரிமைகளை மருவிவரும் அளவே எவையும் பெருமை பெறுகின்றன.

இயற்கை அழகும் இனிமைப் பண்பும் இன்ப நலனும் உயர்மதிப்பும் கல்வியால் உளவாகின்றன. இந்தத்

தெய்வத் திருவைப் பெற்றவனே பிறந்த பிறப்பின் சிறந்த பயனைப் பெற்றவனாகிறான்; பெறாதவன் பேதையாயிழிந்து பிழைகளுழந்து படுகிறான்.

மான மனிதனென மாண்புற்று வந்தாலும்
ஞானமுயர் கல்விநலம் நண்ணானேல்—ஈன
விலங்கா யிழிவன் இழிபழிகள் எல்லாம்
கலங்கா தவனைக் கலந்து.

கல்வியறிவை இழந்துவிடின் அந்த மனிதன் வேறு எந்த வகையில் சிறந்திருந்தாலும் இழிந்தவனாய்க் கழிந்தே போகிறான். உணர்வொளி ஒழிய யாவும் ஒழிந்து பழி பல படிந்து பாழ்படுகின்றான்.

நுண்ணுணர் வின்மை வறுமை; அஃதுடைமை
பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்—எண்ணுங்கால்
பெண்ணவாய் ஆண்இழந்த பேடி அணியாளோ
கண்ணவாத் தக்க கலம். (நாலடி 251)

கல்வியறிவு இல்லாத செல்வன் நல்ல மணியணிகளை அணிந்து பட்டாடைகளை வனைந்து ஆரவாரமாய் வெளியே மினுக்கிப் பிலுக்கிப் பகட்டுடன் வந்தாலும் அவன் ஒரு பேடியே என இது பாடியுளது.

கல்விமான் இயற்கை அழகுடைய சிறந்த மங்கை போல் உயர்ந்த இன்பநலம் சுரந்து திகழ்கின்றான்; கல்வியின்றி வெறும் செல்வம் மாத்திரம் உடையவன் செயற்கைக் கோலங்களை வெளியே போர்த்துப் பகட்டிநிற்கும் பேடிபோல் நீடிநிற்கிறான். அந்தப் புல்லிய புலைக்கோலத்தை நல்ல அறிவுடையார் யாண்டும் யாதும் மதியார்.

உள்ளே உணர்வின்பத்தை இழந்து சுவைக்கேடனாய் ஊனமுற்றிருக்கும் ஈனநிலையை இங்ஙனம் உணர்த்தியிருக்கிறார். உணர்வுரைகள் ஓர்ந்து சிந்திக்க வந்தன.

கல்வி ஆகிய ஞானஒளியை உடையவரே எவ்வழியும் அதிசய பாக்கியவான்களாய் யாண்டும் துதி கொண்டு எவ்வழியும் உயர்ந்து நிற்கின்றனர்.

போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கொள் நகையினர் வாய்ச்சேரா—தாக்கணங்கும்

ஆணவாம் பெண்மை யுடைத்துளனினும் பெண்நலம்
பேடு கொளப்படுவ தில். (நீதிநெறி: 24)

கல்லாதானைப் பேடிஎன்று இதுவும் இகழ்ந்து காட்டிக் கல்வியின் உண்மை நிலைகளை உணர்த்தி யுளது.

தாக்கணங்கு=பேரழகுடைய பெண்தெய்வம். அந்தத் திவ்விய அழகியும் விழைந்து நோக்கும் படியான சிறந்த எழில் அமைந்திருந்தாலும் பேடியிடம் பெண் இன்பம் பெறமுடியாது; அதுபோல் கல்லாதவன் செல்வம் அழகு முதலிய வேறு பல நலங்களை எய்தியிருப்பினும் அவனிடம் உண்மையான உணர்வின்பத்தைக் காணமுடியாது எனக் காட்டியிருக்கும் இதன் கருத்தைக் கருதிக் காணுபவர் ஒத்த நிலையை உய்த்துணர்வர்.

கல்லாதான் சொல்நலம் காமுறுதல் முலையில்லாதாள் பெண்நலம் காமுற்றது போலாம் என்பதை இவையும் சுவையா விளக்கி நிலைமைகளைத் துலக்கி யுள்ளன.

குறிப்புகள் யாவும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவுரியன.

முலை இல்லாள் பெண்மை விழைவு இன்னா.
(இன்னா நாற்பது 13)

கபிலரும் இவ்வாறு இன்னாமையைக் கூறியுள்ளார்.

கலை சிறிதும் கல்லாத பேதை கற்றவன்போல் சொல்லாடவிரும்புதல், முலைசிறிதும் இல்லாத பேதைச் சிறுமி நல்ல பருவமங்கை போல் காமஇன்பம் காமுற்றபடியாம். இப்படி உரை கூறுவாரும் உளர்.

இவ்வாறு பொருள் காணவும் இஃது இசைந்துள்ளது. பேதை என்பது ஏழு வயதுடைய சிறுமியை.

தகுந்த பருவம் அடையுமுன் தருண மங்கை போல் காம இன்பத்தைக் காமுறுதல் பேதைக்கு இயலாது.

உருவம் ஒத்துள்ள பேடியே பிழையாய்ப் பெண் நலம் காமுற நேரும்; ஆகவே கல்லாத மூடக்காதலுக்குப் பொல்லாத பேடிக்காதலே இங்கே கூடிக் காணவுரியது.

கல்லாதவனது சொல்லைக் கேட்க விரும்புதல் முலை இரண்டும் இல்லாதவளிடம் பெண் போகத்தை நுகர்ந்து களிக்க ஒருவன் விரும்பியது போல் விபரீதமே யாம்.

இவ்வகையிலும் பொருள் காணலாம். ஆயினும் அது கோணலாம். கல்லாமை என்னும் இந்த அதிகாரத்தில் கல்லாதவனது இழிவைக் காட்டுகிறாரேயன்றிக் கேள்வியாளரைப்பற்றி இங்கே யாதும் பேசவில்லை. இடநிலை அறிந்து இனநிலை தெரிந்து உரிமையான பொருளை உண்மையா ஓர்ந்து தேர்ந்து கொள்வதே நேர்மையாம்.

கல்வியை நன்கு கற்ற புலவன் பேசினால் அந்தப் பேச்சில் அரிய இனிய அறிவுநலன்கள் சுரந்துவரும்; பேசுகின்ற அவனுக்கும் கேட்கின்ற அவையோருக்கும் உவகையாம். சுவைகளை நுகர்ந்து மகிழ்பவர் சுகிகளாய் உயர்ந்து மதி யூகிகளாய்ச் சிறந்து திகழ்கின்றார்.

உருவநலம் கனிந்த பருவமங்கை கலவியைக் காமுறின் அவளைக் கலந்தவனுக்கும் அவளுக்கும் ஒருங்கே இன்பமாய் உயர்ந்த பலன்கள் விளைந்து வரும்.

அறிவின் நுகர்வுக்குப் பொறி நுகர்வு உறவாய் நின்றது. உயிரின் சுவையும் உடலின் சுவையும் உணர வந்தன. இருவகையும் தகவாய் வரின் உவகையாம்.

இலக்கணமும் தருக்கமும் இரண்டுகண்கள்; ஆகவே இரண்டு முலைகள் என அக்கலைகள் ஈண்டு எண்ண வந்தன. குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன.

மங்கையர் மார்பில் முகிழ்த்திருக்கும் நிலை முலை எனநேர்ந்தது. கலையறிவின் பயனைத் தெளிவா விளக்குதற்கு அது துணையாய் நின்றது. ஆண்பால் பெண்பால் என்னும் இருபாலும் ஞான ஒளியால் உய்ய வுரியன. அந்த வுரிமை ஈண்டு நன்கு உய்த்துணரவுற்றது.

முப்பதாம் ஆண்டளவில் மூன்றற்று ஒருபொருளைத்
தப்பாமல் தன்னுட்பெறுணயின்—செப்பும்
கலையளவே யாகுமாம் காரிகையார் தங்கள்
முலையளவே ஆகுமா மூப்பு. (நல்வழி 39)

தான் கற்ற கல்வியால் மையல் மயக்கம் முதலிய குற்றங்கள் அற்று உள்ளம் தெளிந்து பரமபதியைக் கருதி முப்பது வயதுக்குள் அனுபூதி ஞானியாய் ஒரு மனிதன் உய்தி பெறவேண்டும். அவ்வாறு பெறவில்லை யானால்அவனது கலையறிவு கிழவியின்முலைபோல்பயன் அற்றதாம் என ஔவையார் இவ்வாறு கூறியிருக்கிறார்.

பருவமங்கையின் முலை உரியபதியுடன் கூடி இன்பம் நுகரும்; முதியகிழவி முலை பயனிழந்துபடும்.காலம் உள்ள பொழுதே கலையறிவு இறைவனை மருவி உய்தி பெறவில்லையானால் பின்பு அது வீணே பயனற்றதாம். கலையும் முலையும் இதில் கலந்து வந்துள்ளன. நிலைகளை நினைந்து சிந்தித்து நித்திய உண்மைகளை உய்த்துணர்ந்து நேரே பெறவுரியதைப் பெற்றுக் கொள்ளுக.

பெண்மை நிலையால் உண்மை நலம் உணர வந்தது.

முலை முதிர முதிர பெண்ணுக்கு நாணம் முதிர்ந்து வருகிறது; பிறரோடு பேசக் கூசுகிறாள்; தனியே ஒதுங்குகிறாள்; அடக்கமும் அமைதியும் அமைந்து காலம் கருதி யிருக்கிறாள்; பருவம் வரவே உரிய பதியை மணந்து உவந்து கொள்கிறாள்; எல்லாம் அவனுக்கே தந்து ஏக போகமாய் இன்பம் நுகர்ந்து களிக்கிறாள்.

கலை முதிர முதிர நல்ல ஆண் மகனுக்கு உள்ளம் தெளிகிறது; விளையாட்டுத் துடுக்கு ஒழிகிறது; வீணரோடு பேசக் கூசுகிறான்; விவேகமாய் ஒதுங்குகிறான்; தனிமையில் இனிமையைக் காணுகிறான்; ஆன்ற அமைதியும் அடங்கிய தகைமையும் சான்றாண்மையும் தோய்ந்து தன்னை உணர்கிறான்; கற்ற நூலறிவு உற்ற வாலறிவனுக்கே உரியது எனத் தெளிகிறான்; யாவும் பரமபதிக்கே உரிமையாக்கி பரம சுகத்தை அனுபவித்து எவ்வழியும் பரமானந்தமாயிருக்கிறான்.

கலையறிவின் பயன் இன்ன நிலையினது என்று உன்னி உணரவே முலையினை இவ்வாறு மேலோர் சால்போடு இணைத்து நூலிடையே உணர்த்தி யுள்ளனர்.

கல்லாதான் சொற்கா முறுதல் பொருள்ஒன்றும்
இல்லாதான் இன்பமிவர்ந் தற்று.

என்று சொல்லாமல் முலையைச் சொல்லியது கலையின் நிலையைக் கருதி யுணர்ந்து உறுதியுண்மையை ஓர்ந்து உயிர்க்கு உய்தி நலம் தெளிய.

கல்லாது கழியின் முலை யில்லாதவளா யிழிவாய் ஒல்லையில் கற்று உயர் அறிவு பெற்று நல்ல நிலையில் உயர்ந்து அல்லல் உருமல் ஆக்கிக் கொள்க.

சபையில் பேசி நீ பெருமை அடைய விரும்பின் முதலில் நல்ல நூல்களை நன்கு பயின்று தெளிந்து கொள்க. தெளியாது மொழியின் இழிவே விளையும்.

கல்வி நலம் இல்லாதவன் அவையில் பேச விழைவது பெரிய பிழையாம். நெடிய பழியாம்.

கான மயில்ஆடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானும்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினல் போலுமே
கல்லாதான் கற்ற கவி. (மூதுரை 14)

கற்றவனது உயர்வையும் கல்லாதவனது இழிவையும் ஒளவையார் இவ்வாறு செவ்வையாக் கூறியிருக்கிருர். ஒப்புரைகளுள் உய்த்துணர்வுகள் உள்ளன. நல்ல அறிஞன் பேசினல் அழகிய மயில் தோகை விரித்து ஆடுவது போல் எழில் மிகுந்து திகழ்கிறது; கல்லாத புல்லன் சொல்லாடல் எள்ளலாய் இழிவுறுகிறது.

கல்லாதவன் கற்றவனைப் போல் சொல்லாடி மதிப்படைய விரும்புவது மதி கேடேயாம். அந்த நகை பொல்லாத புலையாடலாய் அவமானமே யடையும்.

இவ்வுண்மை லீலாவதிபால் தெரிய வந்தது.

சரிதம்

லீலாவதி என்பவள் விதர்ப்ப நாட்டிலே போகபுரி என்னும் ஊரில் இருந்தவள். சிறந்த அழகி. தக்க சாதுரியமும் மிக்க சாகசங்களும் உடையவள். பேசுவதில்

பெருஞ் சமர்த்தி. கவிஞர் திலகமாகிய காளிதாசரை இவள் காதலித்து வசப்படுத்திக் கொண்டாள். கலைச் சுவையில் திளைத்திருந்த அவர் இவளது காமச் சுவை யில் களித்து வந்தார். வருங்கால் போச ராசனுக்கும் காளிதாசனுக்கும் இடையே சிறிது முறிவு நேர்ந்தது. அதனால் அந்த அரசனை விட்டுப் பிரிந்து எவரும் அறி யாத தனி இடத்தே இவளோடு அவர் இனிது தங்கி யிருந்தார். போசன் சிறந்த கல்விமான் ஆதலால் இக் கவிஞர் பெருமானைப் பிரிந்திருக்க முடியாமல் பிரியம் மிகுந்து பல இடங்களுக்கும் தக்கவர்களை அனுப்பித் தேடிப் பார்த்து இவரை அழைத்து வரச் செய்தான். போனவர் அனைவரும் யாண்டும் காணாமையால் மீண்டு திரும்பி வந்தார். மன்னன் மதிநூகி ஆதலால் இவரைக் கண்டு கொள்ள வேண்டி ஓர் உபயம் செய்தான். "ஒரு பூவில் இரண்டு பூக்கள் பூத்திருக்கின்றன; இந்த அதிச யத்தை யாரேனும் கண்டது உண்டா?" என்னும் பொருளை அமைத்து ஒரு சுலோகத்தில் பாதியை முடித்து மீதியைப் பாடிக் கருதிய கருத்தைத் தெளிவு படுத்தும் கவிஞருக்குப் பதினாயிரம் பொன் பரிசில் தரப் படும் என்று ஊரில் பறையறைவித்துத் தேசம் எங்கும் அறியச் செய்தான். இந்தச் செய்தி எங்கும் பரவியது. காளிதாசர் மறைவாய்த் தங்கியிருந்த ஊரில் பெண்கள் குழுவிலும் இப் பேச்சு நிகழ்ந்தது. லீலாவதியும் அங்கி ருந்தாள்; சமுத்தியில் குறித்த பாதிப் பாட்டை மனப் பாடம் செய்து கொண்டாள்; வீட்டுக்கு வந்தாள்; கவிஞ ரிடம் உரைத்தாள். உடனே அவர் அழகாகப் பாடி முடித் தார். அந்தக் குறிப்பின் வினவும் கூறிய விடையும் பாடலில் படிந்து அயலே நயமாய் அறிய வருகின்றன.

தாமரைப் பூஒன்றில் தண்குவளைப் பூவிரண்டு
காமர் மலர்ந்திருக்கக் கண்டதுண்டோ?—மாமயிலே!
கண்டேன் இனிய கருவிழிகள் உன்முகத்தில்
உண்டே அதைநீ உணர்.

இங்ஙனம் பாடியதைக் கேட்டதும் இம் மங்கை மகிழ்ந்தாள். பரிசிலை நினைந்தாள்; பதினாயிரம் பொன்

அதிமதுரம் என்றே அகிலம் அறியத்
துதிமதுர மாகத் துதிக்கும் — புதுமைஏன் ?
காட்டுச் சரக்குலகில் காரமில் லாச்சரக்கு
கூட்டுச் சரக்கதனைக் கூறு.

**அதிமதுரம்** என்னும் பேரால் ஓர் வேர் உள்ளமையால் காட்டுச்சரக்கு என இவ்வாறு கூட்டி மொழிந்தார். இப்படி வார்த்தைகள் வளர்ந்தன ; பின்பு வாத சபை கூட்டி இருவரும் வாதம் புரிய மூண்டார். இவருடைய கூட்டாளிகள் எல்லாரும் ஒருங்கு திரண்டு நின்று மனம் போனபடி காளமேகத்திடம் பல கேள்விகள் கேட்டார். எல்லாவற்றிற்கும் அவ்வல்லாளர் எதிர்விடை தந்து அனைவரையும் கல்லாதவராக்கினர். தமது கல்வி அறிவால் அந்தக் கவி வீரர் வெற்றி பெற்றிருந்தும் இந்தக் கவிராயர் போதனையால் திருமலைராயனும் அவரை மதியாது நின்றான். அதனால் அவர் வெகுண்டு வசை பாடினர். வசைபாடக் காளமேகம் என இசைபெற்று நின்ற அவர் பாட்டால் அந்த ஊர் பாழாயது.

கோளர் இருக்குமூர் கோள்கரவு கற்றோர்
காளைகளாய் நின்று கதறுமூர் — நாளையே
விண்மாரி அற்று வெளுத்து மிகக்கறுத்து
மண்மாரி பெய்கஇந்த வான். (1)

செய்யாத செய்த திருமலைரா யன்வரையில்
அய்யா அரனே அரைநொடியில்—வெய்யதழல்
கண்மாரி யால்மதனைக் கட்டழித்தாய் தீயோரை
மண்மாரி யாலழிய வாட்டு. (காளமேகம்) (2)

என மனம் கொதித்து இவ்வாறு அவர் பாடிப்போக [illegible] அவ்வூர் பாடழிந்து பாழாய்ப் போயது. தம்மை எதிர்ந்து தருக்கி நின்றவர் நன்மை இலராய் நலிந்து தொலைந்தார். கல்லாதவராயினும் யாதும் சொல்லாமல் அங்கே வாய் அடங்கியிருந்தவர் நலம் பல பெற்றார். கற்றவர் முன் சொல்லாடாமல் அடங்கியிருப்பின் அது மிகவும் நல்லதாம் என்பதை உலகம் அன்று உணர்ந்து கண்டது. நாவின் அமைதி எங்கும் நன்மை தருகிறது.

**கற்ருர் எதிரடங்கிக் கல்லாதார் நிற்பரேல்**
**பெற்ருர் பெருமை பெரிது.**

*கல்லாதவர் சொல்லடங்கியிருப்பது நல்லது.*

---

404. ஒள்ளியனுய் வந்துநின்றும் ஓதலிலா நந்தனை ஏன்
கொள்ளவில்லை ஔவை குமரேசா-உள்ளுணர்ந்து
கல்லாதான் ஒட்பம் கழியநன் ருயினும்
கொள்ளார் அறிவுடை யார். (சு)

இ-ள்

குமரேசா! ஒள்ளிய மதிப்புடையனுய் வந்து நின்றும் நந்தனை ஏன் ஔவையார் மதிக்கவில்லை? எனின், கல்லாதான் ஒட்பம் கழிய நன்று ஆயினும் அறிவுடையார் கொள்ளார் என்க.

கல்வியில்லாதவனுக்கு நல்ல அறிவு இல்லை என்கிறது, உள்ளதை அவன் உணர்ந்து கொள்ளவேண்டும்.

கல்லாதவனது அறிவு சிலசமையங்களில் மிகவும் நல்லதாய்த் தோன்றினும் கற்ற மேலோர் அதனை நன்கு மதியார். மதியுடையார் மதிப்பது தெரிய வந்தது.

ஒட்பம்=ஒள்ளிய அறிவு. ஒளிமிகுந்து தெளிந்துள்ள அறிவு ஒட்பம் என வந்தது. ஒண்மை என்னும் பண்பு அடியாய் இது தோன்றியுள்ளது. நுண்மை கூர்மை சீர்மை முதலிய நீர்மைகளின் வழியே பிறந்து அறிவு பல வகையில் சிறந்து வருகிறது. நுட்பம் திட்பம் ஒட்பம் என்பன நுனித்து உணரவுரியன். உள்ளத்தே ஓர்ந்து தேர்ந்தது ஒள்ளியது என நேர்ந்தது.

ஒள்ளியது உணர்ந்தேன். (இராமா: அங்கதன்:1)

தம் உள்ளம் துணிந்து உறுதியாய்த் தெளிந்துள்ளதை இராமர் இவ்வாறு உரியவரிடம் தெளிவாக உணர்த்தியுள்ளார்.

இயற்கை செயற்கை என அறிவு இரு வகையில் மருவியுளது. மிருகங்களைவிட மனிதனிடம் இயல்பாகவே அறிவு மிகுதியாய் அமைந்திருக்கிறது. இயற்கையான அந்த நிலை அறிவு கலை அறிவோடு கலந்த போது

தான் தலையறிவாய்த் தழைத்துச் செழித்து மிளிர்கின்றது. நூலோடு தோய்ந்ததே மேலாகின்றது.

கல்வியின் வழியே அறிவு ஒளி வீசி விளங்குகிறது. கல்லாத போது கொழுகொம்பு இல்லாத கொடிபோல் மனித அறிவு வளர்ச்சி குன்றித் தளர்ச்சி அடைந்து மழுங்கிக் கிடக்கிறது. மழுக்கமான அது ஒரோவழி மின்மினிப் பூச்சி போல் மினுக்கி வெளியே ஒளிவிடுமாயினும் அதனைத் தெளிவுடையார் ஒரு பொருளாக மதியார்.

நன்று ஆயினும் என்றது கல்லாதவனிடம் அறிவு நல்லதாய்த் தோன்றாது என்பதைத் துலக்கி நின்றது.

கழிய என்றது அந்த ஒட்பத்தின் உயர்நிலையுணர வந்தது. கழி என்னும் உரிச்சொல் மிகுதியை உணர்த்தித் தகுதியை நன்கு துலக்கி வரும்.

கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும். (தொல்காப்பியம்)

கல்வி இல்லையேல் அங்கே நல்ல அறிவும் இல்லை யாம்.

கல்லாதவனது சொல்லின் புன்மையை மேலே கண்டோம்; இதில், அவனது அறிவின் தன்மையை அறிந்து உறுதி தெரிய வந்துள்ளோம்.

கலை பயிலாதவனிடம் நிலையான தலையறிவு நேரே தோன்றாது; ஒரு வேளை தோன்றினும் மின்னல்போல் மின்னி விரைந்து மறைந்துபோம்.

தெளிந்த மேலோர்களுடைய உயர்ந்த அறிவு நலன்களே சிறந்த நூல்களாய் வந்துள்ளன. அவற்றைக் கற்றவர் நல்ல அறிவாளிகளாய்த் திகழ்கின்றனர்; அவ்வாறு கல்லாதவர் அறிவிலிகளா யிழிந்து கழிகின்றனர்.

உண்ணும் உணவால் உடல் உரம்பெற்று எழிலுறுகிறது; எண்ணும் கலையால் அறிவு வளம் பெற்று ஒளி பெறுகிறது. உணவு உண்ணாத உடல்போல் கலை கல்லாத அறிவு நிலைகுலைந்து தளர்கின்றது. ஒளி ஒழியவே இழிவாகிறது. முயன்று பயின்றதே உயர்ந்து சிறந்து ஒளி மிகுந்து எவ்வழியும் தெளிவாய் விளங்குகிறது.

மனிதனுடைய அறிவு வளர்ச்சிக்குக் கல்வி மூல காரணமா யுள்ளது. அந்த மூல முதல் இல்லையானால் வறிய மூடனா யிழிவுறுகிறான். உழுது பயிர் செய்யாதவன் விளை பொருள்களை இழக்கின்றான்; தொழுது கல்லாதவன் அறிவை இழந்து அவலம் அடைகிறான். காரணத்தைக் கைவிட்ட போதே காரியங்கள் எல்லாம் ஒழிந்து போகின்றன. போகவே சோகமாகிறது.

இல்லான் புரிகின்ற ஈகைபோல் ஆகுமே
கல்லான் அறிவு கழிந்தென்று—நல்லார்முன்
போதித்த நீதிப் புலனறிந்து கல்வியைச்
சாதித் துயர்க தனி.

கல்வியைக் கல்லாதான் அறிவு, பொருள் இல்லாதான் ஈகைபோல் இருக்கும் என இஃது இகழ்ந்துள்ளது. உவமைக் குறிப்பை ஊன்றியுணர்ந்து உண்மைநிலையை ஓர்ந்து உறுதி நலனைத் தேர்ந்து கொள்ள வேண்டும்.

சீரிய கல்வி இல்லையேல் கூரிய அறிவும் வீரியம் இழந்து வீணே இழிந்து கழிந்து ஒழிந்து போகின்றது.

அறிவுடையார் கொள்ளார் என்றது அறிவின் தகுதியை மதிக்க வுரியவர் அவரே ஆகலின் மதிப்புடையாரை மதித்துக்காட்டினார். கல்வி கதுவிய அறிவே நல்ல வழியில் தெளிந்து விதி முறையே கதி யுறுகின்றது.

கல்லாத மதியைக் கலைமதியாளர் விலைமதியார்; செல்லாத காசாய்ச் சிறுமையுறுமே அன்றி யாண்டும் யாதும் அது பெருமை யுறாது.

கல்லாதான் கண்ட கழிநுட்பம் கற்றார்முன்
சொல்லுங்கால் சோர்வு படுதலால்—நல்லாய்!
வினாமுந் துறாத உரையில்லை இல்லை
கனாமுந் துறாத வினை. (பழமொழி 2)

கல்லாதான் கண்ட கழிநுட்பம் காட்டரிதால்
நல்லேம்யாம் என்றொருவன் நன்கு மதித்தல்என்?
சொல்லால் வணக்கி வெகுண்டடு கிற்பார்க்கும்
சொல்லாக்கால் செல்லுவ தில். (பழமொழி 367)

கல்லாமையின் பொல்லாமையை இவை காட்டியுள்ளன. கல்லாதான் கண்ட கழிநுட்பம் கற்ருர் முன் செல்லாது; சோர்வுபடும் என முன்துறையரையர் கல்லாத அறிவை இங்ஙனம் இகழ்ந்து குறித்திருக்கிருர்.

நாயஞர் வாய்மொழியை அடியொற்றி இவை வந்துள்ளன. அவ் வுண்மையை உரைகளால் உணர்ந்து இங்கு நன்கு தெளிந்து கொள்ளுகிறேம்.

இளமையில் கல்லாது நின்றவன் பின்பு மதிநலம் உடையனுய் அறிவாளர் முன் விளங்க முடியாது; ஒரு வேளை விழைந்து விளக்க முயன்ருலும் இழுக்கமே அடைந்து அவன் இழிந்து படுவன்.

பன்றிக் குருளை படாஅம் போர்த்து நிற்பினும்
வென்றிக் களிறெனை விள்ளுப யாவரே?
நன்றுகல் லார்கவி பாடினும் நாவல்லோர்
என்றும் மதிப்ப திலே. (இன்னிசை)

பன்றி சிறந்த சால்வையைப் போர்த்து நின்ருலும் யானை அதனைத் தன் இனத்துள் சேர்த்துக்கொள்ளாது; கல்லாதவன் நல்ல ஒரு கவி பாடினும் கற்றவர் அவனை மதித்துக் கொள்ளார் என இது குறித்துள்ளது.

ஒத்த பிறப்பினராயினும் கற்றவர் யானைகள்போல் கம்பீரமாய் உயர்ந்து விளங்குகின்றனர். கல்லாதவர் பன்றிகளா யிழிந்து உழல்கின்றனர். எனவே கல்லாமையால் உண்டாம் பரிதாப நிலை தெளிவாய்த் தெரிய வந்தது. கலை இழந்த போதே மனிதன் நிலை அழிந்து இழிகின்ருன். நிலைமை தெளிந்து தலைமையுற வேண்டும்.

வானமதி கலை மருவி வருகிற அளவு ஒளிமிகுந்து வருகின்றது; மான மதியும் கலைபெருகிய அளவே நிலை உயர்ந்து எவ்வழியும் தலைமையாய் மிளிர்கின்றது.

அறிவு அதிசய ஆற்றலுடையது ஆதலால் அறியாமைகளை ஒருபொருளாக மதியாமல் அஃது இகழ்ந்து விடுகின்றது. உரிய இனமே இனிய உறவாயுறுகிறது.

பொருள் இல்லாதவரைச் செல்வர் மதிப்பினும், கல்வி யில்லாதவரைக் கற்றவர் மதியார். இயற்கை நியதிகளில் மானச மருமங்கள் மருவி யிருக்கின்றன.

கற்றுயர்ந்த ஞானமதி கல்லாத புன்மதியை
எற்றும் மதியா திருவானில்—உற்ற
கதிரோன் எரிபொறியைக் கண்டாலும் காணு
மதியில் இனிதா மதித்து. (தரும தீபிகை)

சூரியன் எதிரே தீப்பொறி போலச் சீரிய கல்வியாளர் எதிரே கல்லாதான் ஒட்பம் மதிப்புருது என இது குறித்துளது. ஒளி விளக்கங்கள் உணரவந்தன.

கல்லாதான் தான்காணும் நுட்பமும், காதிரண்டும்
இல்லாதான் எக்கழுத்தம் செய்தலும்—இல்லாதான்
ஒல்லாப் பொருளில்லார்க் கீத்தளியான் என்றலும்
நல்லார்கள் கேட்பின் நகை. (சிறுபஞ்சமூலம், 5)

செவி இல்லாதவன் அழகன் எனச் செருக்கலும், பொருள் இல்லாதவன் வள்ளல் என வருதலும், கல்வி யில்லாதவன் அறிஞன் என எழுதலும் எள்ளி இகழ்ந்து சிரிக்க நேர்கின்றன என்று இது குறித்துளது. கல்லாதான் காணும் நுட்பம் கல்லார்க்கு நகையாம் எனக் காரியாசான் இவ்வாறு கூறியிருக்கிருர்.

கல்லார்க் கினனுய் ஒழுகலும் காழ்கொண்ட
இல்லாளைக் கோலால் புடைத்தலும்—இல்லம்
சிறியாரைக் கொண்டு புகலும்இம் மூன்றும்
அறியாமை யால்வரும் கேடு. (திரிகடுகம் 3)

கல்லாதாரோடு கூடுவது அறியாமையால் நேரும் கேடுகளுள் முதன்மையானது என நல்லாதனர் இவ்வாறு குறித்திருக்கிருர்.

கல்லாமல் கழிந்த போது மனிதன் எவ்வளவு பொல்லாதவனுய் இழிந்து போகிருன்! என்பதை மேலே வந்துள்ள குறிப்புகளெல்லாம் தெளிவா விளக்கி நிற்கின்றன. கலையறிவு கலையவே புலை யுறுகிறது.

நல்ல அறிவுடைய மனிதப் பிறப்பும் உரிய பருவத்தில் உரிமையுடன் கல்லாமையால் சிறுமையடைந்து

பொல்லாததா யிழிந்து புலையாடிப் போகின்றது. அங்ஙனம் போயொழியாமல் தெளிவாகக் கற்று உன் நிலைமையை நீ நன்கு பாதுகாத்துக் கொள்ளுக என மனித இனத்துக்கு இது தனியே இனிது போதித்துள்ளது.

கல்வி இல்லையேல் எவ்வகையிலும் எந்த மனிதனுக்கும் யாண்டும் நல்ல மதிப்பு இல்லை; அந்த இன்மை நேராமல் நன்மையை விரைந்து நாடி உயர்ந்து கொள்க.

கல்லாதவன் ஒள்ளிய அறிவுடையனாயினும் கற்றவர் மதியார். எள்ளி இகழ்ந்து தள்ளி விடுவார்.

இவ்வுண்மை நந்தன்பால் நன்கு தெரிய வந்தது.

சரிதம்

நந்தன் என்பவன் சோழ நாட்டில் இருந்தவன். பெரிய செல்வன். தனது மதி நலத்தால் குறு நில மன்னன் ஆகி இவன் பெருமை பெற்றிருந்தான். நல்ல கல்வி இலனாயினும் நளினமான சொல்லால் எவரையும் தன் வசம் செய்ய வல்லவன். யாரிடமும் பேருபகாரி போல் வெளியே பிதற்றுவான். உள்ளே மிகவும் பேராசை யுடையவன். நய வஞ்சகன். இத வசனங்களைப் பேசி எவரிடமும் பொருள் கவரும் கருத்தினன். ஒரு காசும் உதவாத படு உலோபமும் கெடு மதியும் இவனிடம் குடி கொண்டிருந்தன. புல்லிய நிலையில் இங்ஙனம் புலை மண்டி யிருந்தும் எல்லாரும் தன்னை மதித்துப் போற்ற வேண்டும் என்று மால் நீண்டு நின்றான். கல்லாதவனாயினும் நல்ல அறிவுடையவன் போல் நடித்து எல்லாக் காரியங்களிலும் செல்வாக்கை எய்தி வந்தான். ஒரு நாள் ஔவையார் இவன் ஊருக்கு வந்தார். புல்லரை யாதும் மதியாத அக் கல்வி மூதாட்டி ஓர் ஏழை வீட்டில் உண்டு விட்டு அயலே செல்ல நேர்ந்தார். அவரிடம் ஏதேனும் ஒரு பாடல் பெற வேண்டும் என்று விரும்பி அவரைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்து தன் மீது பாட்டு ஒன்று பாடும்படி இவன் பரிவுடன் வேண்டினான். "அரிய பிறவியைப் பெற்ற பயன் உங்கள்

போன்ற பெரியாரைப் பேணிக் கொள்வதே" என அறிவுடையவன் போல் பேசினான். இவனது நெஞ்சின் நிலையையும் வஞ்ச இயல்பையும் நன்கு அறிந்த அக் கவி அரசி இவன் கேட்டதற்குச் சுவையாக ஒரு கவி பாடினார்.

"மூவர் கோவையும் மூவிளங் கோவையும்
பாடிய என்றன் பனுவல் வாயால்
எம்மையும் பாடுக என்றனிர்! நும்மை
எங்ஙனம் பாடுகென் யானே? வெங்கட்
களிறுபடு செங்களம் கண்ணில் காணீர்!
வெளிறுபடு நல்யாழ் விரும்பிக் கேளீர்!
புலவர் வாய்ச்சொல் புலம்பலுக்கு இரங்கீர்!
அவிச்சுவை அல்லது தமிழ்ச்சுவை அறியீர்!
உடீஇர்! உண்ணீர்! கொடீஇர்! கொள்ளீர்!
ஒவ்வாக் கானத்து உயர்மரம் பழுத்த
துவ்வாக் கனிஎனத் தோன்றிய நீரே."

(ஔவையார்)

தன்னை நந்தன் பாட வேண்டிய பொழுது ஔவையார் இவ்வாறு பாடிப் போயினார். "வீரம் இல்லை; கொடை இல்லை; கல்வி இல்லை; கேள்வி இல்லை; அருள் இல்லை; ஆதரவு இல்லை; நல்ல அமைப்பான யாதொன்றும் இல்லை; இப்படி இருந்து கொண்டு என்னைப் பாடுக என்கின்றாயே! நான் எப்படி என் மனங்கனிந்து உன்னைப் பாடுவேன்?" என்று அக் கிழவி துணிந்து சொல்லி யிருக்கும் அழகை இதில் வியந்து கண்டு உவந்து கொள்கின்றோம். உண்மையான கல்வியாளரது உள்ளத் திண்மையும் உறுதி நிலையும் எவ்வழியும் செவ்வையாய் ஒளி செய்து நிற்கின்றன. கல்வியில்லாதவன் சிறந்த அறிவுடையனாய் வெளியே மினுக்கி நின்றாலும் உயர்ந்தோர் அந்த அறிவை உவந்து மதியார் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து தெளிந்து நின்றது.

**கல்லாதான் கொண்ட தெளிவுதான் காணும்கண்**
**இல்லாதான் கண்ட இளிவு.**

கல்லாத அறிவு செல்லாது.

405. கன்றிநின்ற சம்பந்தன் காளமேகங் காணக்
குன்றினன் என்னே குமரேசா—நன்ருகக்
கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். (ரு)

இ-ள்

குமரேசா! கற்றதாகக் களித்து நின்ற சம்பந்தாண்டான் காளமேகத்தின் எதிரே சொல் ஆடி ஏன் இழிந்தான்? எனின், கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து சொல் ஆடச் சோர்வுபடும் என்க.

கல்லாதவன் தன்மை புன்மையாம் என்கிறது.

கல்வி கல்லாத ஒருவனது மேன்மை கற்றவர் எதிரே பேச நேர்ந்த போது பிழையா யிழிந்து படும்.

ஒருவன் என்றது கல்லாமல் கழிந்து நின்ற அவனது இழிந்த நிலையை நினைந்து பரிந்து வந்தது. கற்றவர் பலராய்ப்பெருகி வரவேண்டும் என்று தேவர் கருதி வருதலால் கல்லாத வகையில் ஒருவன் என அருவருப்போடு வெறுத்துக் குறித்தார்.

சிறந்த மனிதப்பிறப்பை அடைந்தும் அதற்கு உரிய சிறப்பை உரிமையோடு பெருமல் இழந்து பேதையா யிழிந்து படுதல் பெரிய பரிதாபமாம்.

கல்வி யறிவை இழந்த அளவே கடையன் மடையன் எனக் கழிகிருன். அவ்வாறு கழிந்து இழிந்தும் உயர்ந்த மதிப்பை அடைய விழைந்து ஊனமா யுழல்கின்ருன்.

தகைமை = தகுதியான தன்மை.

தக்க மனிதன் என ஒருவனை எவரும் மதிக்கச் செய்வது மிக்க கல்வியறிவே; அந்தத் தகுதியை இழந்தவன் தகாதவனுயிழிகின்ருன்; இழிந்தும், தன்னை தகுதியாக எண்ணித் தருக்கி மேன்மையுற விரும்புகின்ருன். அந்நிலை நிலையாது; விரைந்து குலைந்து போம்.

கல்லாதவன் தன்னைப் பெரியவனாக மதித்திருக்கும் மதிப்பு பொல்லாததாய்ப் புலையுறும் என்பது இங்கே தெரிய வந்தது. மதிகேடனது மதிப்பு அதிகேடாய் யாண்டும் அவமதிப்பே அடைகிறது.

தலைப்பெய்து=கற்றவரை நேரே கண்டு.

கல்வியறிவுடைய மேலோரைச் சந்தித்துப் பேச நேர்ந்தால் கல்லாதவனுடைய மடமை வெளிப்பட நேரும்; நேரவே தன்னைப் பெரிய அறிவாளியாக எண்ணிச் செருக்கி இறுமாந்திருந்த அந்த இருப்பெல்லாம் நெருப்பெதிர்ப்பட்ட செத்தைகள் போல் நிலைகுலைந்து போம் ஆதலால் சொல் ஆடச் சோர்வு படும் என்றார். வாய் திறந்து பேச நேர்ந்தால் கல்லாதவன் சொல் பிழை நிறைந்து வருதலால் அது பீழையாய்த் தெரிய வந்தது. பேசாத அளவே அவன் பெருமையுறுகிறான்.

தலைப் பெய்தலும், சொல் ஆடலும் இருவருக்கும் பொது. கல்லாரும் கற்றாரும் கண்டு பேசுங்கால் இருவருடைய அறிவு நிலைகளும் அறிய வருகின்றன. உள்ளேயிருந்து துள்ளி வருகிற வார்த்தை மனிதனை வெளியே தெளிவா வார்த்துக் காட்டிவிடுகிறது. ஒருவனது உரிய தகுதியை அறிய அவன் உரையே உரைகல். வாய்வழி வாய்மை வெளியாகிறது.

அறிவுத் துறைகளில் நெறி முறையே பயின்று பழகிக் கற்றவன் தெளிவடைந்துள்ளான்; கல்லாதவன் அவ்வாறு பழகாதவன் ஆதலால் அந்த அறிவாளி வினவிய வினாக்களுக்குப் பதில் கூற முடியாமல் தடுமாறி விழிப்பன்; பேச நேரினும் பிழைகள் பெருகி வரும்; வரவே அவனது சிறுமை தெரியும்: தெரியவே உள்ளம் நாணி அவன் ஒதுங்கிப் போவன். உள்ளப் புன்மைகளை உரைகள் நேரே நன்கு உணர்த்தி விடுகின்றன.

கல்லாதவன் பெருமை எல்லாம் கற்றவனைக் கண்டவுடனே காணுமல் போம் என்றதனால் இருவருடைய காட்சிகளும் மாட்சிகளும் ஒருங்கே காண வந்தன.

எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத்தறிவார்க் காணின் இலையாம்—எழுத்தறிவார்
ஆயும் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்
வீயும் சுரநீர் மிகை. (நன்னெறி 21)

ஆகாய கங்கை ஆரவாரமாய்ப் பொங்கி வந்தாலும் சிவபெருமானைக் கண்டவுடனே அடங்கி ஒடுங்கிச் சடையில் மறைந்து நின்றது; அதுபோல் இலக்கண நூலைக் கல்லாதவரது பெருமிதம் எல்லாம் அதனைக் கற்றவர் முன் இல்லாமல் போம் எனச் சிவப்பிரகாசர் இவ்வாறு குறித்துள்ளார். உவமை நயத்தை ஊகித்து உணர்ந்து இயலறிவின் உயர் மகிமையை ஓர்ந்து தெளிக. நூலறிவாளர் வாலறிவன் அருள் வழியினர்.

காணுமல் வேணதெலாம் கத்தலாம் கற்றூர்முன்
கோணுமல் வாய்திறக்கக் கூடாதே—நாணுமல்
பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்கால்
கீச்சுக்கீச் சென்னும் கிளி. (ஔவையார்)

கற்றவர் எதிரே கல்லாதவர் வாய் பேசாமல் அடங்கி யிருப்பதே நல்லது; ஏதேனும் சொல்லாட நேரின் அவரது பொல்லாத மடமை வெளிப்பட்டு விடும்; மதிப்புக் கெட்டுப்போம் என ஔவையார் இவ்வாறு கூறியிருக்கிறூர். உவமான நிலையை ஓர்ந்து கொள்க.

கற்க வுரிய அரிய நூல்களைக் கசடு அறக்கற்று நல்ல நெறியில் ஒழுகி எல்லார்க்கும் இதம்புரிந்து வருவதே கல்வியின் பயன். அவ்வாறு கல்லாமல் போலியாய்ச் சில கற்றுக் கேலிகள் பேசி வெளிப்பகட்டா வீணே மினுக்கித் திரியும் பிலுக்கர்கள் பிழையுற்றிழிவர்.

பெண்டுகள் மெய்க்கப் பிழையாச் சிலகற்று
கண்ட படிமினுக்கிக் கற்றவர்போல்—மண்டிப்
புலையாய்த் திரிகின்ற போலிகள் பொன்றி
இலையாய் ஒழிவர் இழிந்து.

கல்லாத போலிகள் மேட்டிமை யிழந்திழிவதை இது காட்டியுளது. வேளி வேடம் என்றும் இளி கேடே.

தக்க மதிப்பும் மிக்க மேன்மையும் கல்லாதவர்க்கு இல்லை. இந்த உண்மையை உணர்ந்து எல்லாரும் கற்று உயர வேண்டும். கல்வி மனிதனைத் தெய்வம் ஆக்கி மாண்புறுத்துகின்றது; கல்லாமை அவனை மிருகமாக்கி ஈனப்படுத்துகின்றது. ஈனம் உரூமல் எவ்வழியும் மானமா உயர்த்துவது ஞானமான நல்ல கல்வியே.

கல்லாமையால் உளவாகும் இழிவுகளைப் பலவகை நிலைகளிலும் சுட்டிக்காட்டிக் கல்வியை நல்ல முறையில் ஒல்லையில் கற்று உயருமாறு தேவர் உணர்த்தியுள்ளார். உண்மையை ஓர்ந்து ஊன்றி யுணர்ந்து நன்மை யுறுக.

கல்லாப் புல்லர் சொல்லாடச் சோர்வு படுவர்.

இவ்வுண்மை சம்பந்தாண்டான் பால் அறிய வந்தது.

## சரிதம்

சம்பந்தாண்டான் என்பவன் திருவண்ணாமலையில் இருந்தவன்; சமணம் புத்தம் சைவம் முதலிய மதவாதங்களையே மிதம் மீறிப் பேசுபவன். எவரிடமும் வாது புரிவதையே வழக்கமாகக் கொண்டவன். சிறிது கற்றவன் ஆயினும் பெருஞ் செருக்கு உற்றவன். தனது கல்வியறிவைப் பொல்லாத வழிகளில் செலுத்தி எல்லாரையும் வாயடக்கி இறுமாந்து திரிந்தான். உள்ளே நல்ல ஒழுக்கம் இல்லாதிருந்தும் வெளியே ஆடம்பரமான ஆசாரங்கள் பூண்டிருந்தான். துறவி போல் தலையை முண்டிதம் செய்து விரதிபோல் விளங்கினனாயினும் விலைமகளிரிடமே தனது பொழுது முழுதும் போக்கி வந்தான். ஒருநாள் காளமேகப் புலவரைக் கண்டான். இடக்கும் குறும்புமே பேசும் இயல்பினன் ஆதலின் அவரிடமும் தனது செயலினை இவன் காட்டினன். "புலவரே! **மன்னு, மலுக்கு** என்னும் இரண்டு மொழிகளை முதலிலும் முடிவிலும் அமைத்து ஒரு வெண்பாப் பாடும்" என்றான். மயிர் வினைஞன் அதுபொழுது இவனுக்குச் சவரம் செய்துகொண்டிருந்தான் ஆதலால் அதனையே நயமாக

மருவிச் சொன்ன சொற்களை முன்னும் பின்னும் சொருகி அக்கவிஞர் உடனே பாடினர். அந்தப் பாடல் இவனுடைய சிறுமைகளைத் தெளிவாக விளக்கி நகைச் சுவையோடு ஒளிவீசி வந்தது. அயலே வருவது காணுக:

மன்னுதிரு வண்ணு மலைச்சம்பந் தாண்டாற்குப்
பன்னு தலைச்சவரம் பண்ணுவதேன்—மின்னின்
இளைத்தஇடை மாதர் இவன்குடுமி பற்றி
வளைத்திழுத்துக் குட்டாம லுக்கு. (காளமேகம்)

இந்தப் பாட்டைக் கேட்டதும் இவன் சினந்து எழுந்தான். தனது தூர்த்தத்தனத்தைக் குறித்திருத்தலால் வெறுத்து வைதான்; "வெறுங் கவிபாடித் திரிகின்ற நீ என் பெருமையை உணராமல் என் ஊரில் வந்து நீ சிறுமை அடைய நேர்ந்தாய்!" என்று பெருமிதமாய்ப் பேசினன். தனது அதிகாரத்தால் புலவருக்கு அல்லல் விளையும் என்று அச்சுறுத்தி வல்லவன் போல் இவன் சொல்லிக் காட்டவே அவர் மெல்லச் சிரித்தார்.

கல்வி யுடையனெனக் கண்டவர்கள் காண நின்றாய்
கல்வியிடை ஒற்றழிவே கண்டுவந்தாய்!—சொல்லில்
உனது சிறுமை உலகறியச் செய்தேன்
எனது பெருமை இது.

தனது பெருமையை அறியவில்லை என்று இவன் கருவம் கொண்டு பேசியதற்கு இது விடையாய் வந்தது. கல்வியிடை ஒற்று அழிவு என்றது கலவியை. நீ கலவியில் வல்லான்; கல்வியில்லான் என்று அவர் சொல்லிப் போனர். உள்ளம் நாணி இவன் உளைந்து நின்றான். கல்லாதவன் தகைமை கற்றவன் கண்டு சொல்லாடச் சோர்வுபடும் என்பதை எல்லாரும் அன்று இவன் பால் கண்டார்.

**கதியுணர்ந்து கல்லார் கடுகி யிழிந்து**
**மதியழிந்து நின்றார் மருண்டு.**

கல்லாதவன் மதிப்பு இல்லாதவன்.

---

406. உண்டென்னு மாத்திரமே ஓங்கினர் கீசகர்முன்
கொண்டிலர்சீர் என்னே குமரேசா—மண்டி
உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர். (சு)

இ-ள்.

**குமரேசா!** வலியுடையராயிருந்தும் கல்லாதகீசகர் ஏன் எல்லாரும் எள்ளி இகழ இழிந்து நின்றார்? எனின், கல்லாதவர் உளர் என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக் களர் அனையர் என்க.

கல்வி இலனேல் அவன் மனிதன் அலன் என்கிறது.

கல்லாதவர் உருவமா யிருக்கிறார் என்னும் அளவினரே அன்றி யாதும் விளையாத களர்நிலம் போல் இழி நிலையரே.

மான மனிதனாய் மருவியிருந்தும் ஈன நிலையில் இழிய நேர்ந்தது ஞான நலனை இழந்தமையாலேயாம். உவமானத்தால் அவமானம் அறிய வந்தது.

களர் = உவர் நிலம் : பாழிடம்.

பயிர் பச்சைகள் யாதொன்றும் விளையாமல் உவர் பொங்கிப் பாழாய்க் கழிந்து இழிந்து கிடக்கும் அளர் நிலம் களர் என வந்தது.

களர்ப்படு கூவல். (புறம் 311.)

களரியம் பறந்தலை. (புறம் 225.)

வெள்ளிடைக்களர். (பெருங்கதை 1-52)

இவற்றுள் களர் குறித்திருக்கும் நிலையை அறிக.

கல்லாதவரைக் களர் என்றது பயனற்ற அவரது இழிநிலை தெரிய. உவர்மண் என அவர் எண்ண நின்றார். உள்ளே இனிமை ஒழிய வெளியே பழி விரிந்தது. அரிய கல்வி இல்லையேல் பெரிய அல்லலே.

அன் என்னும் உவம உருபிடைச் சொல்லடியாகப் பிறந்த அனையர் என்னும் குறிப்பு முற்று அவருடைய அவல நிலைகளை யெல்லாம் கருதியுணர நின்றது.

களர் நிலத்தில் எந்த வித்தும் முளைக்காது; உணவுக்குரிய யாதொரு பொருளும் விளையாது; ஆகவே எவரும் அதனை விரும்பமாட்டார்; உலக மக்களுக்குப் பயன் படாமல் பாழாய்க் கிடத்தலால் பயவாக் களர் என அது இழிக்கப்பட்டது. பயன் அற்றது பழியுற்றது.

அறிவின் சாரம் உள்ளே இல்லாமையால் கல்லாதவன் எவர்க்கும் பயன் இல்லாதவன் ஆகிறான்; ஆகவே யாதும் பயன் இல்லாத களரோடு அவன் ஒப்ப நின்றான்.

நிலத்துக்கு உரிய இனிய நீர்மை நேரே இல்லாமையால் அது அளர் என இழிந்தது; மனிதனுக்கு உரிய அரிய மதிமாண்பு குன்றியதால் கல்லாதவன் பயனற்ற பதர் எனப் பழி படிய நேர்ந்தான். கல்வி ஆகிய ஒளி ஒழியவே மனிதனை இளிவடைந்து கொள்ளுகின்றது.

களர் கழிக்கப்பட்டது; கல்லாதவன் இழிக்கப் பட்டான். உழுது பண்படுத்தி நீர்பாய்ச்சிப் பலவகைகளிலும் விளை நிலம் உரிமையோடு இனிது பேணப்படுகிறது; யாரும் யாதும் பேணாமல் களர் நிலம் வீணே இழிந்து பாழ் படிந்து கிடக்கின்றது.

நெல் முதலியன விளைகின்ற நல்ல விளை நிலம் போல் கல்வியாளன் உலகிற்குப் பலவகையிலும் நலமாய்ப் பயன் படுகின்றான்; அதனால் அவனை எல்லாரும் புகழ்ந்து போற்றி உவந்து உபசரித்து யாண்டும் பூசித்து நேசித்து வருகின்றனர். கல்லாதவன் களர் நிலம் போல் ஒரு பயனுமின்றி வறிதே யிருத்தலால் அவனை எவரும் பேணாமல் யாதும் மதியாமல் எள்ளி இகழ்ந்து எங்கும் என்றும் தள்ளி விடுகின்றனர்.

அறிவின் ஒளி உள்ளே மருவி யுள்ளமையால் கற்றவன் எவ்வழியும் திவ்விய மகிமைகளுடையவனாய்ச் சிறந்து திகழ்கின்றான்; கல்லாதவனிடம் மடமையிருள் மண்டியிருத்தலால் யாண்டும் அவன் மடையனாயிழிந்து கடையனாய்க் கழிந்து படுகின்றான்.

நூலறிவு தோய்ந்துள்ள நுண்புலவன் மேலான
வாலறிவன் காண வயங்கியுளான்—நூலறிவுள்
இல்லாதான் பொல்லாதான் என்ன இழிந்தென்றும்
கல்லாதான் ஆனுன் கழிந்து.

கற்றவனுடைய உயர் நிலைகளையும், கல்லாதவனுடைய இழிபுலைகளையும் இதில் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். இதில் மருவியுள்ள பொருள் நயங்கள் கருதியுணரவுரியன. உணர்ந்த அளவு உண்மை தெரிகிறது.

அரிய மனிதப் பிறவியும் உரிய கல்வி இல்லை ஆனால் அது பாழாய் ஒழிகின்றது. தன்னைப் பாழாக்காமல் கல்வி விளக்கேற்றி வாழ்வை ஒளி செய்து கொண்டவன் வழிவழியே உயர்ந்து கொள்கிருன். ஒரு முறை வழுவினவன் பின்பு தெளிவின்றி ஊழியும் இழிகின்ருன்.

உலகப் பொருளைக் கண்டு களித்தற்கு உடலில் கண் அமைந்துள்ளது போல் பரம்பொருளை நோக்கி மகிழ்தற்குக் கல்வி ஆகிய கண் உயிரில் மருவியுள்ளது. அந்த அகக்கண் காட்சி அதிசய மாட்சிகளை அருளி வருகிறது. கற்றவரது அறிவில் முற்றறிவன் கலந்து திகழ்கிருன். மற்றவர் அறியாதபடி மறைந்து நிற்கிருன்.

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணை மா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண்டு உள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே. (திருவிசைப்பா)

சேந்தனர் என்னும் பெரியவர் இறைவனை இவ்வாறு துதித்திருக்கிருர். கற்றவர் விழுங்கும் கனியைக் கண்டு கண்டு உள்ளம் குளிர்ந்தேன் என்னும் இந்த அனுபவ உரை இனிது சிந்தித்து உணரவுரியது. மற்றவர்

**அறியா மாணிக்க மலை** என்றது கல்லாதவரது பொல்லாத புலையை எல்லாரும் அறியத் துலக்கி நின்றது.

எல்லாம் அறிய வல்ல இறைவனைக் கல்வியறிவு ஓரளவு காட்டி யருளுகிறது. அருளே வ மேலும் தெளிந்து உள்ளம் ஒளி பெற்ற ஞானக் காட்சியால் ஈசனை உணர்ந்து உயிர் உயரின்பம் பெறுகிறது.

இந்த அரிய இன்பப்பேறு கல்லாமைக்கு இல்லாமல் போகிறது; போகவே அது பொல்லாத புன்மையாய்ப் புலைபடிந்து எல்லா வழிகளிலும் இழிந்து என்றும் எவரும் வருந்திவரப் பெருந் துயரமா நிற்கிறது. கல்லாத நெஞ்சம் கல்லா யிழிகின்றது.

கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத்து அழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலம்மன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதும்காண் அம்மானாய்.

(திருவாசகம்)

ஈசன் தன்னை ஆட்கொண்டு அருளியுள்ள கருணைத் திறத்தை **மாணிக்கவாசகர்** இவ்வாறு மனம் உருகித் துதித்திருக்கிறார். **கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனைக் கல்லைப் பிசைந்து கனி ஆக்கியது** போல் ஆண்டவன் என்னை ஆக்கிக் கொண்டான் என்னும் இது ஈண்டு நோக்கி யுணரவுரியது. கல்லாத போது அந்த மனிதன் கல்லாயிழிகிறான்; கற்ற அளவில் கனியாய் உயர்கிறான்.

கல்வி, உள்ளத்தை உயர்த்தி உணர்வை ஒளி செய்து வருதலால் உணர்வு மயமான கடவுள் அங்கே உரிமையோடு ஒளி வீசி விளங்குகிறார். கல்லாத மனம் இருள் மண்டி யிருத்தலால் இறைவன் அருளை அது மருவாமல் இழந்து இழிவடைந்து ஒழிகிறது.

கல்லாதார் மனத்துஅணுகாக் கடவுள் தன்னைக்
கற்றார்கள் உற்றுஓரும் காதலானை. (அப்பர்)

கல்லா நெஞ்சில் நில்லான் ஈசன்
சொல்லா தாரோடு அல்லோம் நாமே. (சம்பந்தர்)

எல்லா இடத்தும் உளன் எங்கள் தம்இறை
கல்லா தவர்கள் கலப்பறி யாரே. (திருமூலர்)

கல்லாமையால் நேருகின்ற இழவுகளை இவை தெளி வாக் காட்டியுள்ளன. கற்றறிந்த ஞானிகள் தாம் கண்ட இன்ப நிலையை மற்றவரும் பெற்று உய்யும்படி இவ் வாறு வழிகாட்டியிருக்கின்றனர். கல்வியே எவ்வழியும் தெளிவாய் ஒளி வீசி இன்பம் அருளியுளது; கல்லாமை அல்லல் இருளாய் எங்கும் அவலமே புரிகின்றது.

ஒன்றுக்கும் உதவாமல் பாழ்பட்டு இழிந்துள்ள களர் நிலத்தைக் கல்லாதவர்க்கு ஒப்புக் காட்டியிருப் பதில் நுட்பக் காட்சி ஒன்றை உய்த்துணர்வாக வைத் திருக்கிறார். யூகித்து உணர்பவர் உண்மை தெரிந்து நன்மைகளை நன்கு ஓர்ந்து கொள்ளுகின்றார்.

களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோர் ஆயினும் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும். (நாலடி 133)

களர் யாதும் விளையாத கழிநிலம்; அதிலிருந்து உப்புத்தான் தோன்றும் என்பதை இதனால் அறிந்து கொள்கிறோம். விளையாத ஒன்றில் விளைந்துள்ளதை விழைந்து கண்டு உள்ளம் உவந்து நிற்கின்றோம்.

இழிந்த களரில் பிறந்த உப்பை உயர்ந்த வயலில் பிறந்த நெல்லினும் மேலாக மதித்து உலகம் விரும்பிக் கொள்கிறது. அதுபோல் தாழ்ந்த குலத்தில் பிறந்த வராயினும் அவர் கற்றவரானால் உயர்ந்த குலத்தில் பிறந்தவரினும் சிறந்தவராக அவரை எவரும் போற்றிக் கொள்வர். ஒப்புரையுள் ஓர் உண்மையை உணர்கிறோம்.

கல்லாமல் கழிந்து இழிந்த மூடனிடமிருந்து பிறந்த வனே எனினும் கற்றவன் ஆனால் அந்த மகன் மேலானவ

ரெல்லாராலும் விழைந்து போற்றப் படுவான் என்பதை இங்கே ஓர்ந்து உணர்ந்து தேர்ந்து கொள்கிறோம்.

கல்வி தெய்வ ஒளி, கல்லாமை பேயிருள்.

ஒளி படிந்தவர் உயர்ந்து திகழ்கின்றார்; அது படியாதவர் இழிந்து ஒழிகின்றார். எவ்வகையானும் இனிது பயனுறும் அளவே எவனும் நயனுடையனாய் வியனடைகிறான். அரிய கல்வி பெரிய பயனை அருளி வருகிறது. அதனை இழந்தவன் கல்லாத மடையன் என்று பொல்லாத பழி படிந்து எவ்வழியும் இழிந்து போகிறான்.

கல்லாமல் நீண்டவர் யாண்டும் எல்லாராலும் எள்ளப்படுவர். அவர் இருப்பும் இறப்பும் ஒன்றே.

இவ்வுண்மை கீசகர் பால் தெரிய வந்தது.

## சரிதம்.

இவர் மச்ச நாட்டிலே விராட நகரத்தில் இருந்தவர். அந்த நாட்டு மன்னனுக்குத் தானைத் தலைவனாயிருந்த கீசகன் தம்பியர். மிகுந்த தேகபலம் உடையவர்; நூற்று மூவர் என்னும் தொகையினர். உருவிலும் வலியிலும் ஒரு நிகரானவர். செல்வ வளத்தில் சிறந்து தேக போகங்களையே நுகர்ந்து செழித்துக் களித்து வந்தார். இளமையிலேயே நல்ல கல்வியை நாடிக் கல்லாமல் பொல்லாத வழிகளிலேயே பொங்கித் திரிந்தாராதலால் கல்லாத மூடக்கூட்டம் என்று எல்லாரும் இவரை எள்ளி இகழ நேர்ந்தார். பாண்டவர்களோடு அஞ்ஞாத வாசமாய் வந்து அங்கே அரசன் அரண்மனையின் அந்தப்புரத்தில் தங்கியிருந்த துரோபதையை விழைந்தமையால் கீசகன் வீமனால் மாண்டொழிந்தான். தம்முடைய அண்ணன் இறந்தமைக்குக் காரணமாயிருந்தவள் என்று கடுத்து எழுந்து அந்த வண்ணமகளை இந்த மூடர் மூண்டு கொல்ல நேர்ந்தார். நேரவே வீமன் விரைந்து வந்து அனைவரையும் கொன்று தொலைத்தான்.

இத்தீயவர் இறந்து ஒழிந்ததை அறிந்ததும் அவ்வூரார் அனைவரும் உவந்து நின்றூர். பீடைகள் தொலைந்தன என்று நாடுமுழுவதும் பாடி மகிழ்ந்தது. கல்லாதவர் களர்போல் யாதொரு பயனும் இல்லாதவர்; அவர் இருந்தாலும் யாரும் மதியார்; இறந்தாலும் எவரும் வருந்தார் என்பதை உலகம் இவர் பால் உணர்ந்து நின்றது. பொல்லாத புலைகளில் இழிந்து நின்றவர் கொலை புரிய மூண்டு எல்லாரும் ஒருங்கே அழிந்து ஒழிந்த அவல நிலைகளை அயலே காண வருகிறோம்.

வெருவ ருங்கருங் கங்குலில் வெங்கொலை
நிருபர் என்னை நெருப்பிடை வீழ்த்துவான்
கருதி ஞர்கள்மெய் காக்கும் கடவுள்காள்!
வருதிர் என்றுகண் வார்புனல் சோரவே. (1)

மடைப்பெரும்பள்ளி எய்திய மாருதி
கிடைப்ப தன்றிக் கிளர்பெரும் போர்எனுத்
துடைப்ப ரும்பவ னத்தனல் சோர்தரப்
புடைப்ப ஓடினன் போர்மத மாவனன். (2)

அகப்பொழில்கண்ட அம்மரம் யாவையும்
மிகப்பி டுங்கினன் வேரொடும் கோட்டொடும்
உகப்புடைத்தன ன் ஓடத் தொடங்கினர்
தகச்செ யாமதிக் கீசகன் தம்பிமார். (3)

போன போன திசைதொறும் போய்த்தொடர்ந்து
ஆன வானவன் ஒக்கஅக் கோட்டினல்
மானமும்அவர் ஆவியும் வாங்கினன்
ஏனை யோர்களும் தம்முனை டெய்தினர். (4)

துவன்ற கற்புடைத் தோகையை விட்டுமுன்
நுவன்ற கீசகர் நூற்றொரு மூவரும்
அவன்றன் வாகு வி ஞல்அழி வுண்டபின்
கவன்ற தால்அக் கடிநகர் எங்குமே. (5)

கற்கும் யாழுடைக் கந்தரு வர்க்கெதிர்
நிற்ப ரோவுட னேர்பொர மானவர்?
கிற்கு மைந்துடைக் கீசகர் யாவரும்
தற்கி ஞல்மடிந் தார்தக வொன்றிலார். (6)

என்று மாநகர் யாவும் நடுங்கிடத்
துன்று கங்குலில் சோரர்தம் ஆருயிர்
பொன்று வித்த பொருநனும் பூவையும்
சென்று தத்தம சேர்விடம் நண்ணினர். (7)

(பாரதம் : கீசகன்)

கல்லாத புலை நிலையர் பொல்லாத கொலை புரிய மூண்டு முனைந்து மாண்டு மடிந்துள்ளனர். அவ்வுண்மையை ஈண்டு இதில் ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம்.

**விழியிருந்தும் கல்லார் விளிந்தார் கொடிய**
**பழியுழந்து வீழ்ந்தார் பவம்.**

*கல்லார் களரா யிழிவர்.*

---

407 தெள்ளியநூல் கல்லாரைத் தேர்புலம்சேர் சண்பகமேன்
கொள்ளா திகழ்ந்தாள் குமரேசா— கொள்ளுகின்ற
நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று. (எ)

இ-ள்.

குமரேசா! நுண்ணிய அறிவு இல்லாதவரை ஏன் சண்பகம் எண்ணாது இகழ்ந்தாள்? எனின், நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம் மண்மாண் புனை பாவை அற்று என்க.

இது, கல்வியறிவே நல்ல எழில் என்கிறது.

நுண்ணிய மாண்புடைய கூரிய அறிவு இல்லாதவனது நல்ல அழகு மண்ணால் மாண்புற வனைந்த பாவையின் அழகு போல்வதாம்.

அறிவும் அழகும் ஈண்டு அறிய வந்துள்ளன.

புலம் = அறிவு. கல்வியுடன் புல்லிப் பொலிந்த அறிவு புலம் என வந்தது. புலமை, புலவர் என்பன இத னடியாய் வந்துள்ளன. கலைநலம் தழுவியது விழுமிய அறிவாய் விளங்கியுளது. அதன் தலைமை நிலைமைத் தகைமைகளை அடைமொழிகள் நன்கு விளக்கியுள்ளன.

நுண்மை, மாண்பு, நுழைவுகள் இங்கே விசேடணங்கள். அறிவு நிலைகளைத் தெரியத் துலக்கியுள்ளன.

நுண்புலம், மாண்புலம், நுழைபுலம் எனத் தனித் தனி கூட்டித் தகுதிகளை நுனித்து உணர்ந்து கொள்ள வேண்டும். உணர உணர உணர்வு ஒளியுறுகின்றது.

நுண்புலம்=நுட்பமாய்க் கூர்ந்து ஓர்ந்து உணர்வது.

மாண்புலம்=மாண்புடையதையே மதித்துத்தெளிவது.

நுழைபுலம்=எதையும் ஊடுருவித் துருவித் தெரிவது.

கூர்மை சீர்மை ஓர்மைகள் நேர்மையாத் தெரிய வந்தன. சிலர்க்கு நுண்புலம் இருக்கும் மாண்புலம் இராது; சிலரிடம் மாண்புலமும் இருக்கும் நுழைபுலம் இராது. மூன்றும் சேர்ந்த போதுதான் அஃகி அகன்ற ஆன்ற பேரறிவாய் விளங்கி நிற்கும். கூரிய சீரிய ஓரிய அறிவே உயர் தலைமை யுடையதாய் ஒளிபுரிந்துவரும்.

மாட்சியை நடுவில் வைத்தது அதன் காட்சி கருதி. உள்ளம் தெளிந்து உயிர் உயர்ந்து உய்திபெறச் செய்வதே உயர் மாண்புடைய மெய்யறிவாம். இந்த வித்தக விவேகமே தத்துவ ஞானமாம். ஆன்மாவையும் பரமான்மாவையும் கருதியுருகி வருவதே உண்மையுணர்வாய் ஒளி பெற்று உயர்ந்து மிளிர்கிறது. எதைக் காண வேண்டுமோ அதைக் காண்பதே மாணறிவாம்.

கரடிக்கு மயிர் எவ்வளவு உள்ளன? என்று எண்ணி அறிய நேரின் அது மாண்புலமாய் மகிமையுறாது. உயிர் துயர் நீங்கி உய்யப் புரிவதே உயர் அறிவாம். அறிவு மாண்பு படிந்து வரின் அந்த மனிதன் மாட்சிமை அடைந்து வருகிறான். நுதி இழை மதி என இராமன் அறிவைக் கவி வியந்து புகழ்ந்து துதித்திருக்கிறார்.

மேலான நூல்களில் நுண்ணிதாய் நுழைந்து எதையும் துருவி நோக்கி நுனித்து உணர்ந்து உறுதி நலன்களை ஓர்ந்து தெளிந்த மதிமான்கள் தேர்ந்த மேதைகளாய்ச் சிறந்து உயர்ந்து திகழ்கின்றார்.

நுண்ணுணர் மன்னன் தன் ஒப்பாகிய
கண்ணுளர் நுட்பத்துக் கருத்து நோக்கி
நூற்கண் நுனித்த நுண்ணுணர்வு எண்ணத்தன
யூகி தன் வயின். (பெருங்கதை, 2-10)

நூற்படு புலவன் சொன்ன
நுண்பொருள் நுழைந்து. (சிந்தாமணி, 554)

இவை ஈண்டு எண்ணி உணர வுரியன.

நுணுகிச் சிறந்து பல நூல்களிலும் நுழைந்து பரந்து மிளிர்ந்த அறிவு கல்வியால் விளைந்து வருகிறது. கலை நலங்களைக் கருதிக் கல்லாதவன் தலைமையான இந்த அறிவை இழந்து விடுகிறான். விடவே அவனுடைய உயர் நிலைகளை எல்லாம் இழந்து இழிவடைந்து பழி படிந்து தாழ்ந்து படுகின்றான்.

கல்லாத மனிதனது உருவத் தோற்றம் கடையாம் என்று முன்னம் குறித்தார். இதில், அவனது வடிவ அழகு இழிவாம் எனா இகழ்ந்திருக்கின்றார்.

எழில் = பேரழகு. இளமையும் பொலிவும் வளமையாய் எழுச்சியடைந்து மேலும் மேலும் வளர்ந்து கிளர்ந்து வரும் அழகு எழில் என வந்தது.

அதிசய அழகு; அழியா அழகு.

இராமபிரானது உருவ எழில் இவ்வாறு புகழப் பட்டுளது. உள்ளம் கவர்வது உயர்வா உணர வந்தது.

உருவப் பொலிவு மனிதனுக்குக் காட்சியளவில் மாட்சிதரும் ஆதலால் வெளியே மிளிர்கின்ற அந்த எழில் இங்கே கல்வியோடு நேரே அளவு செய்து நோக்கி உளவு காண நேர்ந்தது.

மணிக்கு ஒளிபோல் கல்வி உயிர்க்கு ஒளிபுரிந் துளது. இந்த உயிரழகுக்கு ஈடாக எந்த உடலழகும் நேராகாது. நேரிலாத பேரெழில் நேரே தெரிய வந்தது.

குலம் செல்வம் அழகு முதலியன யாதும் இலன் ஆயினும் கல்வியுடையவன் எல்லா நலன்களும் நிறைந்து யாண்டும் உயர்ந்து திகழ்கிறான். எவரும் அவனை வியந்து நோக்கி விழைந்து புகழ்ந்து உவந்து

கொண்டாடுகின்றனர். உரிய கல்வியே அரிய தெய்வத் திருவாய்ப் பெரிய அழகாய் அவனுக்கு எவ்வழியும் பெருமகிமைகளை உரிமையோடு அருளி வருகின்றது.

குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு. (நாலடி 131)

இடைவனப்பும் தோள்வனப்பும் ஈடின்வனப்பும்
நடைவனப்பும் நாணின் வனப்பும்—புடைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பல்ல எண்ணோடு
எழுத்தின் வனப்பே வனப்பு. (ஏலாதி 75)

செல்வி வளர்திருக் கோடீச்சு ரேசர் செழுங்கிரிமேல்
சொல்விறல் உற்ற அறமுதல் நான்கும் தொகஇயற்றும்
பல்வித மான புகழ்நல்கும் வேந்தர் பாவச்செயும்
கல்வி அழகே அழகாம் எவருக்கும் காரிகையே!
(கோடீச்சுரக்கோவை 421)

கல்வியே மனிதனுக்கு உண்மையான நல்ல அழகு என இவை குறித்துள்ளன. இந்த உயிரழகு இல்லையானல் அந்த உடல் அழகு கடையாம். மலர்க்கு மணம் எனக் கல்வி உயிர்க்கு மணமாம். வாச மலர் போல் தேசம் எங்கும் கல்விமான் சிறந்து திகழ்கின்றான்.

உருவ அழகு பொருள்வளம் குலமாட்சி முதலிய உயர்நலங்கள் எல்லாம் ஒருவனுக்கு ஒருங்கே வாய்ந்திருந்தாலும் கல்வி ஒன்று இல்லையானல் அவன் கல்லாப் புல்லன் என எள்ளலடைந்து இழிகின்றான்.

குலமிக உடையர், எழில்மிக உடையர்,
குறைவில்செல் வமுமிக உடையர்,
நலமிக உடையர் என்னினும் கல்வி
ஞானம் அற்பமும்இலா தவரை

வலமிகு திகிரிச் செங்கையாய்! முருக்கின்
மணம்இலா மலர்என மதிப்பேன்
சலமிகு புவியில் என்றனன் வாகைத்
தார்புனை தாரைமா வல்லான்.
(பாரதம்: பழம்பொருந்து 19)

தான் உறுதியாக் கருதியுள்ள கருத்தை நகுலன் இன்னவாறு கண்ணனிடம் கூறியிருக்கிறான். முருக்கம் பூ பெரியதாய்ச் சிவந்து பார்வைக்கு அழகாயிருக்கும்; அதில் மணம் இராது. உருவத் தோற்றத்தில் வெளியே எழில் மிகுந்திருந்தாலும் உள்ளே கல்வி யில்லையானால் அவனை யாதும் யான் மதியேன் என்பான் இவ்வாறு மணம் அற்ற மலரைச் சுட்டிக்காட்டி உரைத்தான்.

ரூபயௌவந ஸம்பந்நா விசாலகுல ஸம்பவா ;
வித்யாஹீநா நசோபந்தே நிர்கந்தா இவ கிம்சுகா :

இளமை எழில் குலநலம் செல்வவளங்களையுடைய ராயினும் கல்வி இல்லையானால் மணம் அற்ற முருக்க மலர் போல் அவன் இழிக்கப்படுவான் என இதுவும் குறித்துள்ளது. குறிப்புகளைக் கூர்ந்து உணர்பவர் கல்லாமையை எம்மொழியாளரும் எள்ளி இகழ்ந்துள்ள மையை நன்கு தெளிந்து கொள்ளுவர்.

மண்பாவை = மண்ணால் செய்த பதுமை.

நல்ல வெண்மையான சுண்ணச் சாந்தால் மனி தனைப் போல் உருவம் அமைத்து எழிலுறப் புனைந்து காட்சிச் சாலையில் வைப்பது வழக்கம். காண்பவர் வியந்து நோக்கும்படி நன்றாக அலங்கரித்து வைத்திருப் பர். ஆதலால் புனைபாவை என அதன் நிலைமையைத் துலக்கி யருளினர். வெளியே அழகா யிருந்தாலும் உள்ளே உயிர் இல்லை ஆதலால் அது கல்வி யில்லாத மனிதனுக்கு நேரே இங்கு உவமையாய் வந்தது.

மண்ணில்செய் பாவைமீது வயங்குபொற் பூச்சோ, தண்பூங்,
கண்ணியை மாற்றில் சூடும் காட்சியோ, பழம்பாண்டத்தில்
பண்ணிய கோல மோநற் பண்பொடு ஞானம் கல்வி
புண்ணியம் ஏதும் இல்லான் பூண்டபேர் எழில் உடம்பே.
(நீதிநூல்)

பழம் பாண்டத்தில் பண்ணிய கோலம், விளக்க மாற்றுக்குச் சூடிய பூமாலை, மண்பாவையில் மாண்புற வனைந்த அலங்காரங்கள் போல்வனவே கல்லாதான்

மேலுள்ள எழில் என இது குறித்துள்ளது. இந்தக் குறளைக் கருத்தில் கொண்டே இவ்வாறு இது விருத்தி அடைந்து திருத்தமுற வந்திருக்கிறது.

மனைக்குப்பாழ் வாணுதல் இன்மை; தான் செல்லும்
திசைக்குப்பாழ் நட்டோரை இன்மை—இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை இன்மை; தனக்குப்பாழ்
கற்றறி வில்லா உடம்பு. (நான்மணி 20)

கல்வி யறிவில்லாதவன் உருவம் பாழ் என இஃது உணர்த்தியுளது. அரும் பெறலான மனிதப் பிறப்பும் கல்லாமையால் கடையாய் இழிந்து ஒழிகின்றது.

கல்லாதான் நல்ல கவினுடையன் ஆயினும்
நல்லார் அவனை நயவார்காண்—ஒல்லும்
ஒளியில் விழிதான் உருவுடைய தேனும்
வெளியில் இழிவாய் விடும்.

ஒளி இல்லாத கண் உருவமா யிருந்தாலும் விழி குருடான அது இழிவேயுறும்; அதுபோல் கல்லாதவன் எழிலுடையன் ஆயினும் தெளிவிலன் ஆதலால் இழிவே யடைவான். கலை யுறாதவன் எங்கும் புலை யுறுகின்றான்.

நல்ல அழகனா யிருந்தாலும் கல்லாதவனை நல்லார் மதியார். எள்ளி இகழ்ந்து அயலே தள்ளியே விடுவர்.

இவ்வுண்மையைச் சண்பகம் உணர்த்தி நின்றாள்.

### சரிதம்

சண்பகம் என்பவள் சோழ நாட்டிலே உறையூரில் இருந்தவள், சிறந்த கல்வியறிவுடையவள். அரிய கலைகள் பலவும் பயின்று பெரிய மதிமாண்பு மருவி யிருந்தமையால் பருவம் அடைந்தும் எவரையும் மணந்து கொள்ளாமல் அறிவு வீறுகொண்டு ஆணை செலுத்தி வந்தாள். கலைநலங் கனிந்து சிறந்த அழகியாய் உயர்ந்திருந்த இவளை மணந்து மகிழ விழைந்து அரசிளங் குமரரும் ஆவலித்து வந்தனர். அழகிலும் திருவிலும்

எவ்வளவு உயர் நிலையி லிருந்தாலும் அவரை ஒரு சிறி தும் மதியாமல் கலைஞானம் கனிந்தவனையே தலைமை யாக இவள் கருதியிருந்தாள். தன் கருத்துக்கு இசைந்த வரைக் காணுமையால் இவளைக் காதலித்து வந்தவர் அனைவரும் வீணே விலகிப் போயினர். மதிமான்கள் போல் சிறந்த ஆடம்பரங்களுடன் செருக்கி அடைந்த வரும் அதிமதி யூகமாய் இவள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் பரிசு குலைந்து நாணி மறைந் தனர். தத்துவ நோக்குடன் உய்த்துணரும்படி இவள் வினவிய நிலைகளைக் கண்டு உலக விவேகிகளும், கலை வாணர்களும் இவளை மிகவும் வியந்து கொண்டாடினர்.

காணுகின்ற கண்ணுக்குக் காட்டும் கதிஎது ?
பேணும் அறிவுக்குப் பேறென்ன?—ஆணுகி
வந்த பிறவி வராமல் ஒருவுதல்
எந்த வழியால்? இயம்பு.

இந்தவாறு மூன்று கேள்விகள் கேட்பள். நுண்புலம், மாண்புலம், நுழைபுலம், ஆகிய மூன்றுக்கும் முறையே இவை மறையாம், தத்துவத் துறைகளில் வல்லவர் எனத் தருக்கி வருபவரிடம் அயலே வருகிற வித்தகநிலை களை உய்த்துணர்ந்து கூறுமாறு விநயமா வினவுவாள்:

“அண்டநிரை பலகோடி பலவாயும்
ஒன்றும் எவ் அணுவின் உள்ளே?
விண்டகடற் குமிழிகள்போல் விரிந்தொடுங்கும்
விண் ஆயும் விண் அன்று ஏது ?
தண்டறவுண் டாயிருந்தும் இலாதது எது ?
சரித்தேயும் சரியாது ஏது ?
கண்டிடநில் லாதாயும் நிற்பது எது?
சித்தாயும் கல்லாம் ஏது? (1)

வானிடை ஓவியம் எழுதுகின்றது எது?
வித்திடையின் மரங்கள் போல
ஊனமிலா எவ் அணுவில் உலகம் எலாம்
இருக்கின்றது? யாதின் நின்றும்

ஆனகடல் திரை நுரைபோல் ஒருபொருளும்
பிரிவாகாது அமைந்த நீரும்
ஈனமறு நெகிழ்ச்சியும்போ லேதோன்றி
இருமையும் எங்கு ஒருமை ஆகும்?” (2)

என முன்னம் ஒரு மன்னனிடம் கற்கடி வினவியது போல் காதலித்துவந்த காளையரிடம் கலை ஞானங்களை இவ்வாறு வினவி இவள் கடிந்து வந்தாள். போதனை நிறைந்த இவளது சோதனையில் தேருமையால் காதலர் எல்லாரும் ஏதிலராய் நீங்கினர். முடிவில் நுண் மாண் நுழை புலம் உடைய அண்ணல் ஒருவனைக் கண்டாள். அவனையே துணைவனு உவந்து கொண்டாள். மிகுந்த எழில் நலம் உடையராயினும் கல்லாதாரை நல்லார் மதியார் என்னும் உண்மை நிலையை உலகம் காண இவள் உணர்த்திக் கலையின் தலைமையை விளக்கி நின்றாள்.

**கல்லாதான் கண்ணமைந்த காமருரு காணுமொளி
இல்லாத கண்ணும் இழிந்து.**

கல்லாமை கழி இழிவு.

---

408. கற்றகணி கண்ணன்முன் காவலன் இன்னலுடன்
குற்றமுற்றான் என்னே குமரேசா—உற்றறிந்த
நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திரு. (அ)

இ-ள்.

குமரேசா! வறுமையுற்றும் கணிகண்ணன் பெருமை பெற்றான்; செல்வமுற்றும் அரசன் ஏன் அல்லலுற்றான்? எனின், கல்லார்கண் பட்ட திரு நல்லார் கண் பட்ட வறுமையின் இன்னாதே என்க.

கல்லாதவனது செல்வம் அல்லலாம் என்கிறது.

கல்லாதவரிடம் சேர்ந்துள்ள செல்வம் கற்றவரிடம் நேர்ந்துள்ள வறுமையினும் கொடிய துயரமாம்.

நல்லார் என்றது கற்றுரை. எல்லா நலங்களையும் கல்வி நல்க வல்லது ஆதலின் அந்த நல்லதை யுடையவர் நல்லார் என எல்லாரும் புகழ நின்றுர்.

கற்றவர் நல்லவர் என்றதனுல் கல்லாதவர் பொல்லாதவர் என்பது தெரிய வந்தது. எல்லா அல்லல்களுக்கும் எல்லா இழிவுகளுக்கும் கல்லாமை காரணம் ஆதலால் அந்தப் பொல்லாத புலைநிலையைச் சேராமல் நல்ல தலைமையை நாடி உயர்ந்து கொள்ள வேண்டும் என்பது ஈண்டு உரிமையாய் உணர்ந்து கொள்ள வந்தது.

கண் = இடம். ஈரிடத்தும் அது ஏழனுருபாய் நின்றது. இன் உருபு எல்லைப்பொருளது. உம்மை ஒருவி யுறைந்தது. வறுமை = பொருள் வறந்திருப்பது.

பட்ட = பொருந்திய; உண்டான.

படு படுதல் பட்டு பட்ட பட்டது பட்டன பட்டனர் பட்டாள் பட்டான் என இன்னவாறு உருவாகி வருகிற சொல்லின் கருமூலங்களைக் கருதி யுணரின் மொழி யறிவு ஓரளவு தெளிவாய்த் தெரிய வரும்.

சேர்ந்த என்னுது பட்ட என்றது அந்த வறுமையும் திருவும் படுகிற பழியிழிவுகளையும் அழிதுயர்களையும் கருதியுணர. நிலை மாறி நின்றது நெடிய இடராயது.

வறுமை கொடியது; செல்வம் இனியது என எங்கும் எண்ணப்பட்டுள்ளன. அவை இங்கே மாறுபாடாய் மருவி நிற்கின்றன. சார்ந்த இனங்களின் சார்புகளால் தலை தடுமாறல்கள் நேர்ந்திருக்கின்றன.

இன்னுமைக்கு ஏதுவாய வறுமை இனிது ஆகவும், இனிமைக்கு நிலையமான திரு இன்னுது ஆகவும் மன்னி யுள்ளமை உன்னியுணர வந்தது. விழைந்து கொள்ளும்

திரு வெறுத்துச் சொல்ல நேர்ந்தது; இகழ்ந்து தள்ளும் வறுமை புகழ்ந்து போற்ற நின்றது.

கல்லாமையின் பழிநிலைகளைப் பல வழிகளிலும் கிளர்ந்து காட்டி மொழிந்து வருகிற அடிகள் அருமைச் செல்வமும் அதனைச் சாரின் சிறுமை யடைந்து சீரழிந்து போம் என இங்கே தெளித்திருக்கிறார்.

இன்மையே இன்னாதது. (குறள் 1041)

வறுமையின் கொடிய துயர நிலையை இன்னவாறு யாண்டும் பரிதாபமாய்க் கூறிவருபவர் ஈண்டு அதனினும் கொடிய துன்பமுடையது செல்வமே என்று குறித்துக் கல்லாமையின் பொல்லாத புலையை எல்லாரும் ஓர்ந்து கூர்ந்து சிந்திக்கச் செய்துள்ளார்.

**இன்னாதே!** என்றதில் ஏகாரம் பரிதாபமாய் ஒலித்திருத்தலை நுனித்துணர்க. இனிய திருவையும் இன்னாத தாக்கி யிழிவுறுத்துவது கல்லாத மூடம்; அந்தப் பொல்லாத பீடை யாதும் இல்லாத வாறு ஓதி யுயர்ந்து கொள்க. மக்கள் உயர்வு நக்க கல்வியால் உளது.

கல்வி கற்றவர் நல்ல அறிவுடையவர் ஆதலால் வறுமையுற்றாலும் நெறிமுறையே வாழ்ந்து புகழ் புண்ணியங்களைச் செய்து இருமையும் பெருமை மிகப் பெறுகின்றார். நூல்களைக் கல்லாதவர் சால்பான அறிவு இல்லாமையால் எல்லாச் செல்வங்களையும் எய்தியிருந்தாலும் பொல்லாத புலைவழிகளிலே பழகித் தீமைகள் புரிந்து பழிபாவங்களை அடைந்து இழிவுறுகின்றனர். கல்வியின் இனிமையும் கல்லாமையின் கொடுமையும் இவ்வாறு யாண்டும் செவ்வையாக் காண வந்துள்ளன.

"அறிவு இல்லாதவர்க்குச் செல்வம்
அல்லது பகைவேறு உண்டோ?" (திருவிளையாடல்)

அறியாமையோடு திருவும் சேர்ந்தால் அதனால் விளையும் பழி கேடுகளை இது தெளிவா விளக்கியுள்ளது.

கல்லாதவன் கையில் செல்வம் வந்தால் பொல்லாத குரங்கு கையில் தீக்கொள்ளி தந்தது போல் எங்கும் அல்லல்களே யாம்.

அறியாமை யோடுஇளமை கூடுவதாம் ஆங்கே
செறியப் படுவதாம் செல்வம்—சிறிய
பிறைபெற்ற வாணுதலாய்! தானே ஆடும்பேய்
பறைபெற்ருல் ஆடாதோ பாய்ந்து. (பழமொழி)

கல்லாதவன் கண் செல்வம் உண்டானல் வெறி கொண்ட பேயனுய் வெய்ய கேடுகளை யாண்டு அவன் விரைந்து செய்வன் என இது வரைந்து குறித்துளது.

அண்ணலந் திருவிடை அழுந்தி யாரையும்
எண்ணலன் செந்நெறி இயற்ற ஓர்கிலன்
கண்ணிலன் மதியிலன் களிப்பின் ஓர்மகன்
மண்ணிடை விரைவொடு வழிக்கொண் டாலென.
(கந்தபுராணம்)

வாலிபம் பெருநிலக் கிழமை மாண்பொருள்
மேலறி விலாமையில் ஒன்று மேவினும்
சீலமும் குடிமையும் சிதையுமால் இவை
நாலும்உள் ளவர்செயல் நவில வேண்டுமோ ?
(செவ்வந்திப் புராணம்)

சிறியரே மதிக்கும் இந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுள்ளார் மூகர் ஆவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிடர் ஆவர்
குறிபெறு கண்ணுள் ளாரும் குருடராய் முடிவ ரன்றே.
(குசேலம்)

கல்லாது நின்ற கடையன் திருவடைந்தால்
நல்லாரை எள்ளி நகைபுரிவன்—பொல்லாத
அல்லல் பலசெய் தகம்செருக்கித் தீமையே
புல்லி இழிவன் புறம்.

கல்வி யறிவு இல்லாதவனிடம் செல்வம் சேர்ந்தால் அதனல் விளையும் துயரங்களையும் பழிகேடுகளையும்

இவை துலக்கி யுள்ளன. கவிகளில் மருவியுள்ளபொருள் களையும் குறிப்புகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். கல்லாத வழி எல்லா இழிவுகளும் எய்து கின்றன. கற்று எல்லா உயர்வுகளையும் எய்துக.

கொடிய வறுமையும் கற்றவனிடம் இனியதாய் இன்பம் தருகிறது. நல்ல செல்வமும் கல்லாதவனிடம் பொல்லாத தாய்த் துன்பம் புரிகிறது. கல்வி கல்லாமை செல்வம் வறுமை என்னும் இவை இங்கே விசித்திர நிலை களில் விநோதமாய் அறிய வந்துள்ளன.

கற்றவனது வறுமை மதியுறு மறுவாய் மகிமை யுற்று எவ்வழியும் துதி மிகப் பெறுகின்றது.

கல்லாதவனது திரு இருள் படு பொருளாய் இழி வடைந்து யாண்டும் பழிபடிந்து படுதுயருறுகின்றது.

ஒரு பொருளும் இலன் ஆயினும் கற்றவன் எல்லாம் உடையனாய் எங்கும் உயர்ந்து திகழ்கிறான். பல செல் வங்களையுடையனாயினும் கல்லாதவன் யாதும் இல்லாத வனாய் இழிந்து எங்கும் மதிப்பிழந்து படுகிறான்.

கல்வி உள்ளத் திருவாய் உணர்வை ஒளி செய்து வருகிறது: வரவே அவன் அரிய பெரிய பாக்கியவானாய் அதிசய மகிமைகளை யாண்டும் அடைந்து கொள்கிறான்.

கற்றவன் திருவுடையனாய்ச் சிறந்து வாழ்த்தக்கவன்.

கல்லாதவன் திருவிலியாய் இழிந்து தாழ வுரியவன்.

இந்த நியதி மாறுபடின் உலக மக்கள் பார்வைக்குக் கவலையாகிறது; ஆகவே பழவினைகளை எண்ணி நிலைமை களைக் கருதி நெஞ்சம் தேறி ஆறுதலடைய நேர் கின்றனர். கல்லார் திரு அவலமாய்க் கவலை யுறுகிறது.

நல்லார் நயவர் இருப்ப நயமிலாக்
கல்லார்க்கு ஒன்று ஆகிய காரணம்—தொல்லை
வினைப்பயன் அல்லது வேல்நெடுங் கண்ணாய்!
நினைப்ப வருவதொன் றில். (நாலடி 265)

நல்லார் வறுமை யுற்றிருக்கக் கல்லார் செல்வம் பெற்றுக் களிக்கின்ற அவல நிலைக்கு உரிய காரணத்தை ஒரு புலவர் இவ்வாறு கவலையோடு காட்டியிருக்கிறார். பழவினைகளின் பலன்களை நினைந்து ஆறுதலுறும்படி தேறுதல் கூறி யிருப்பது யாரும் சிந்திக்க வுரியது.

கல்வி யறிவுடையவரை **நல்லார்** என்று இதன் கண்ணும் குறித்திருக்கிறார். நன்மையும் நயமும் எவ் வழியும் செவ்விய கல்வி யாளரின் தன்மைகளே யாம்.

உலக வாழ்வில் நல்ல சுக போகங்களை அனுபவித் தற்கு உதவியாயிருப்பது செல்வம்; அது நல்லவர்களி டம் சேர்ந்திருந்தால் எல்லார்க்கும் நலமாம்; அல்லாத வர்களிடம் கூடியிருப்பின் அவர்க்கும் அதற்கும் யாவர்க் கும் இன்னலும் இழிவும் இடர்களுமே விளையும்.

கண்கெட்ட குருடன் கையில் கதிர்மணி மேவியது போல் கலைப்பண்பு அற்ற முருடன் பால் திரு மருவி யிருப்பது பெரிதும் பரிதாபமேயாம். ஆகவே **இன்னுதே!** என்று எண்ணி வருந்தி இரங்கி இயம்ப நேர்ந்தது.

நிலை மாறி வரவே புலை மீறி வந்தது.

செல்வம் எய்தி யிருந்தாலும் கல்லாதவன் இழிந்து படுகிறான்; யாதும் இல்லாதவன் ஆயினும் கற்றவன் கொற்றவனிலும் சிறந்து யாண்டும் உயர்ந்து விளங்குகி றான். உயிரின் ஒளி எவ்வழியும் உயர்வை அருளுகிறது.

கல்வியை இழந்து இழிந்து போகாதே; கற்று உயர்ந்து கொள்க என்று இங்ஙனம் உணர்த்தியுள்ளார்.

வறுமை யுறினும் கல்விமான் எவ்வழியும் இனிய னாய்ப் பெருமை பெறுவன்; திரு எய்தினும் தெளிவில் லாதவன் செருக்கிச் சிறுமை யடைந்து இளிவுறுவன்.

கணிகண்ணனிடமும் காவலன் பாலும் இவை காணவந்தன. இவர் சரிதம் சுவைமிக வுடையது.

## சரிதம்

கணிகண்ணன் என்பவன் காஞ்சிபுரத்தில் இருந்தவன். இலக்கணம் தருக்கம் கணிதம் முதலிய கலைகளை நன்கு கற்றவன். எளிய குடும்பத்தில் பிறந்தவன். பிரமச்சாரி, நெறி நியமங்களோடு எவ்வழியும் புனித நிலைகளில் பழகி வந்தான். திருமாலையே கருதி யோகம் புரிந்து வந்த திருமழிசை ஆழ்வாரை அணுகி நுணுகிய ஞான நெறிகளை வினவி யறிந்து விநயமுடன் ஒழுகினன். இவனுடைய குணநீர்மைகளையும் ஆசார சீலங்களையும் உணர்ந்து அப்பெரியவரும் இவன் பால் பேரன்பு பூண்டுவந்தார். அவரது அன்புரிமையை வியந்தான்.

என்பால் அவர்கொண் டிருக்கின்ற அன்புக்கு
முன்பால் மொழிய மொழியில்லை—அன்பால்
திருமழிசைத் தேவன் திருவடியைப் போற்றும்
பெருமகிமை யேஎனக்குப் பேறு.

என்று ஆர்வம் மீதூர்ந்து இவ்வாறு அந்த யோகியை வணங்கி வாழ்த்தி வந்தான். கவிபாடும் திறமும் வாக்குப் பலிதமும் இவனிடம் வாய்ந்திருந்தன. அந்த ஊரிலிருந்து அரசு புரிந்து வந்த பல்லவன் என்னும் மன்னன் இவனை ஒரு நாள் அழைத்துத் தன் மீது பாடும்படி வேண்டினன். இவன் மறுகி மறுத்தான். தேச அதிபதியான அவன் இவனை எளிதா எண்ணிச் சினந்து சீறித் தெளிந்து தேறுமாறு கூறினன்: கூறவே தனது நிலைமையைத் தெளிவாக இவன் விளக்கினன்.

"எம்பெருமான் தன்னையே ஏத்திவரும் என்னுடைநா
உம்பெருமை ஓதென்றால் ஓதுமோ—தம்பெருமை
பேசிக் களிக்கின்ற பேரரசே! என்னைஅன்பா
நேசித் தருள்க நெடிது."

இங்ஙனம் இவன் வாசித்து நிற்கவே அவ்வேந்தன் வெகுண்டு "என் நாட்டின் எல்லையில் கூட நீ இருக்கக் கூடாது; வெளியே போய்விடு" என்றான். "அரசே! இப்பொழுதே போய் விடுகிறேன்" என்று இவன்

விரைந்து வெளியேறிப் போனான். நிகழ்ந்ததைத் திரு மழிசை ஆழ்வார் அறிந்து வருந்தினார். அவரும் இவனைத் தொடர்ந்து போகத் துணிந்து கோவிலுக்கு வந்து பெருமாள் சந்நிதியில் நின்று ஒரு பாடல் பாடினார்.

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா! நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவன்யான் செல்கின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்!" (திருமழிசை)

இவ்வாறு ஆழ்வார் பாடிப் போகவே திருமாலும் மலர் மகளோடு அவர் பின்னே சென்றார். தெய்வம் குடி போகவே உயிர்போன உடல்போல் அந்நகரம் எங்கும் துயரம் ஆயது. அனைவரும் அல்லலடைந்தனர், இவ்வளவும் அரசனால் நேர்ந்தது என்று தெரிந்து எல்லாரும் அவனை இகழ்ந்தனர். நிகழ்ந்துள்ள நிலைமைகளை எண்ணி அவன் நெஞ்சம் அஞ்சினான். விரைந்து போய்க் கணிகண்ணனைத் தொழுது செய்த பிழையைப் பொறுத்து ஊருக்கு வந்தருளும்படி வணங்கி வேண்டினான். இவன் இணங்கி மீண்டான்: ஆழ்வாரும் வந்தார்; ஆண்டவனும் தேவியுடன் மீண்டு வந்து ஆலயத்துள் அமர்ந்தருளினார். ஊரும் நாடும் உவகை பூத்தன. செல்வச் செருக்கால் தான் செய்ததை நினைந்து வருந்தி அன்று முதல் கற்றவர் எவரையும் அரசன் கண்கண்ட தெய்வமாக் கருதிப் போற்றி வந்தான். வறுமையுறினும் கல்வியால் இவன் இருமையும் பெருமை மிகப் பெற்றான். செல்வம் நிறைந்திருந்தும் அவன் சிறுமை அடைந்தான். நல்லார் கொண்ட வறுமையினும் கல்லார் கண்ட திரு பொல்லாத துன்பம் உடையது என்பதை எல்லாரும் இவர் பால் நேரே உணர்ந்து தெளிந்தார்.

கணிகொண்ட தண்துழாய்க் காடலைத் தோடுதேங்
கலுழிபாய்ந்து அளறு செய்யக்
கழனிபடு நடவையிற் கமலத் தணங்கரசொர்
கையணை முகந்து செல்லப்

பணிகொண்ட முடவுப் படப்பாய்ச் சுருட்டுப்
பணைத்தோள் எருத்து அலைப்பப்
பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங் கொண்டலே.
(மீனாட்சியம்மைபிள்ளைத் தமிழ் 1)

ஆடரவத் தாழ்பாய லாளரை நீ தானே தொடர்ந்தாயோ
சூழ்பாயோடு உன்னைத் தொடர்ந்தாரோ? (தமிழ்விடு தூது)

பின்போர் தமைக்கண்டு பாவித்த
தோஅன்றிப் பின்புவந்தோர்
தன்போல் நடக்கப் பணிப்பித்த
தோதமிழ்க் கேஇரங்கி
முன்போம் புலவர்க்குப் பின்போயி
றனும் முகுந்தனிது
வன்போ மனத்தினில் அன்போ
சொல்வீர் தொண்டமண்டலமே.
(தொண்ட மண்டல சதகம் 20)

முன்போம் புலவற்கு மூதறிவால் பாய்சுருட்டிப்
பின்போம் சவரிப் பெருமாளே — அன்பாகப்
பேய்முலைப்பால் உண்டவனே! பேதையேன் இன்னும்ஒரு
தாய்முலைப்பால் உண்ணாமல் தா.

தமிழ்ப் புலமை வாய்ந்த **கணிகண்ணன்** பின்னே மணிவண்ணன் சென்றுள்ளதை இன்னவாறு நூல்கள் வியந்து குறித்துள்ளன. ஆழ்வார் சொன்னபடி செய்தமையால் சொன்னவண்ணம் செய்த பெருமாள் எனப் பின்பு அவர் பேர் பெற்றுள்ளார். நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளைக் கூர்ந்து உணர்பவர் கல்வியின் அதிசய மகிமையையும் கற்றவன் எதிரே கொற்ற முடி மன்னனும் அடி பணிந்து நிற்பன் என்பதையும் ஓர்ந்து தெளிந்து உவந்து கொள்வர். கல்வியால் மனிதன் தெய்வமாகிறான்.

**தெளிவமைந்த கல்வியிலான் செல்வமெலாம் பெற்றாலும்**
**ஒளியிழந்த கண்ணா யுறும்.**

கல்லாமை எவ்வழியும் பொல்லாமையே.

---

409. ஏத்துபுகழ் மன்னரினும் ஏற்றமுற்ருர் கற்றஒட்டக்
கூத்தனுர் என்னே குமரேசா—ஏத்துகின்ற
மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்ருர் அனைத்திலர் பாடு. (சு)

இ-ள்

குமரேசா ! உயர்ந்த அரசரினும் ஒட்டக்கூத்தர் ஏன் சிறந்து விளங்கினுர் ? எனின், மேல் பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும் கற்ருர் அனைத்து பாடு இலர் என்க. உம்மைகள் உயர்வும் இழிவும் உணர வந்தன.

மேலான பிறப்பும் கல்லாமையால் கீழாம் என்கிறது.

உயர்ந்த குலத்தில் பிறந்தவர் ஆயினும் கல்லாதவர் தாழ்ந்த மரபில் பிறந்தும் கற்றவர் போல் மேன்மை பெற்றிலர். மேலான தலைமையைக் கல்வியே அருளுகிறது.

மதிப்பும் அவமதிப்பும் மதி நலத்தின் உயர்வு தாழ்வுகளால் முறையே உதித்து வருகின்றன. கல்வியால் மதியூகமும் அதனுல் அதிசய மகிமைகளும் உளவாகின்றன.

பாடு=பெருமை; மேன்மை.

இயல் செயல்களால் இசைபடிந்து உயர்ந்து ஒளிசிறந்து வருகிற மேலான மேன்மை பாடு என வந்தது. மேம்பாடு, மேதகவு என இது விளங்கிவரும். பாடு பெறவே மேலோர் பாடு படுகின்றனர்.

பாடு பெறுதியோ நெஞ்சே! (குறள் 1237)

இதில் பாடு குறித்திருக்கும் பொருளைக் கூர்ந்து அறிக.

கல்லாதான் பாடு இலன். (நான்மணி 96)
பாடு சிறந்து. (ஐங்குறுநூறு 484)
பாடு புலர்ந்த நறுஞ்சாந்து. (மதுரைக் காஞ்சி 226)
பாடு ஓர்ந்து நிற்ப. (பெருங்கதை 1-37)
பாடு அறியாதார் கண். (கலி 141)
பாடுறு பெரும்புகழ்ப் பரதன். (இராமா, மீட்சி 332)
பாடு இடம் பெருமை ஓசை. (நிகண்டு)

இவற்றுள் பாடு உணர்த்தி நிற்பதை ஓர்ந்து கொள்க. உண்மையான பெருமை உணரவுற்றது.

கல்வி எவரையும் வியத்தகு நிலையில் உயர்த்தியருளும். அதனை இழந்தவன் எவ்வளவு உயர்ந்த குடியில் பிறந்திருந்தாலும் இழிந்தே படுவான். உணர்வின் ஒளியை உற்றவரே உரிய உயர்வு பெற்றவராகின்றார்.

மிக்க செல்வமும் மேலான குலமும் தம்மையுடையாரை மேன்மையா உயர்த்த வல்லன எனினும் கல்வி இல்லையேல் அவை புல்லியன வாய்ப் புலர்ந்து படுகின்றன. உள் ஒளி ஒருவிய அளவு வெளி வளங்கள் வீணாய் விளிகின்றன. ஒளியுடையன தாமாகவே விழுமிய மேன்மைகளை வியனா அடைந்து கொள்ளுகின்றன.

மேல், கீழ் என்பன மேலான சாதி கீழான சாதி என உலக வழக்கில் உலாவி வரும் வளமைகளை நோக்கி வந்தன. உடல் வழி வந்த உயர்வு, உயிர் நிலையில் தோய்ந்து வந்த உயர்வின் எதிரே அயர்வுறுகின்றது.

தோன்றிய குடிநிலைகள் ஊன்றிய படிகளாய் உருவாகி யுள்ளன. இனிய நீர்மைகளால் பெரிய சீர்மைகள் வழிமுறையே பிறந்து வந்துள்ளன; அந்த உண்மைகளை ஓர்ந்துணர்பவர் வகுப்பு வகைமைகளைத் தகைமைகளாத் தெரிந்து நேரே தெளிந்து கொள்ளுகின்றனர்.

பெருமையும் சிறுமையும் கரும நிலைகளில் மருமமாய் மருவி யுள்ளன. அறிவு செல்வம் அதிகாரம் ஈகை இரக்கம் நீதி முதலிய நெறிகளில் நேர்ந்து வந்துள்ளது உயர்ந்த குலம் என ஓங்கி வந்தது. அவற்றில் தாழ்ந்தது இழிந்த குலம் என நேர்ந்தது. ஆதியில் தகுதிகளைக் கொண்டு பகுதிகள் அமைந்தன; பின்பு பரம்பரை வழக்கமாய்ப் படிந்து பழமையூர்ந்து வரலாயின.

மேன்மையுடையது மேல்; கீழ்மையுடையது கீழ். பண்புரிமைகளால் அவற்றின் பான்மைகளை உணர்ந்து கொள்ளலாம். உரிய தகுதி குன்றிய பொழுது உற்ற

மதிப்பு ஒழிந்து போகிறது. இனிய நீர்மை யில்லாமல் வெறும் சார்பினுல் மாத்திரம் எவனும் மேன்மை அடைய முடியாது. உள்ளம் ஒளியால் உயர உலகில் உயர்கிருன்.

கல்வி உயிரை ஒளி செய்து உயர்த்துகின்றமை யால் உடல் அளவில் உள்ள பிறப்பின் உயர்வினும் அது மிக்க சிறப்பினை வியனு அருளுகிறது.

ஒளியுடைய விழிபோல் எழிலும் இன்பமும் கல்வி தருதலால் கற்றவன் எங்கும் மேலானவனுய் மேவி மிளிர்கின்ருன். கண் அனைய கல்வியை இழந்தவன் பழிபடிந்த குருடனுய் இழிவடைந்து கழிகின்ருன்.

பிறப்பில் மனிதன் ஆயினும் கற்றவன் தெய்வ நிலைமையில் தலைமையாய்ச் சிறந்து எவ்வழியும் உயர்ந்து யாவரும் புகழ்ந்து வரத் திகழ்ந்து வருகின்ருன்.

தேவரே கற்றவர்; கல்லாதார் தேருங்கால்
பூதரே; முன்பொருள் செய்யாதார்—ஆதரே;
துன்பமி லேம்பண்டு யாமே வனப்புடையேம்
என்பார் இருகால் எருது. (சிறுபஞ்சமூலம் 20)

கற்றவர் தேவர்களே; கல்லாதவர் பிசாசுகளே எனக் காரியாசான் இவ்வாறு கூறி யிருக்கிருர். கல்வி யைப் பேணினவன் பெருமகிமை பெறுகின்ருன்; பேணு மல் இழந்தவன் பேரிழவுடையனுய் இழிந்து யாண்டும் எள்ளி இகழப் படுகின்ருன்.

கல்வி மனிதனைத் தெய்வமாக்குகிறது; கல்லாமை அவனைப் பேயாக்கி விடுகிறது. தன்னையுடையவனைத் தேவன் ஆக்கியருளுகிற கல்வியை ஆவலோடு ஒருவன் கல்லாமல் இருப்பது எவ்வளவு கேடு! எத்துணை மூடம்!

கல்வியாகிய கண்ணையுடையவன் கடவுளை நேரே கண்டு உள்ளம் உருகி உறவாடி உரிமையுடன் உயர்ந்து பேரின்ப வெள்ளம் பெருகிவர உய்தி பெறுகிருன்.

கல்வியெலாம் கற்பித்தாய்! நின்பால் நேயம்
காணவைத்தாய்! இவ்வுலகம் கானல் என்றே
ஒல்லும்வகை அறிவித்தாய்! உள்ளே நின்றென்
உடையானே நின்அருளும் உதவு கின்றாய்!
இல்லையெனப் பிறர்பால் சென்று இரவா வண்ணம்
ஏற்றம்அளித் தாய்இரக்கம் என்னே! என்னே!
செல்வஅருட் குருவாகி நாயி னேனைச்
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே! (அருட்பா)

கல்வியால் இராமலிங்க அடிகள் கண்டுள்ள காட்சிகளையும் மாட்சிகளையும் இதில் கண்டு கொள்ளுகிறோம். மெய்யறிவை எய்தி உயிர் உய்தி பெறக் கல்வி ஒளி புரிந்து வருதலால் அது சீவ சஞ்சீவியாய் மேவி யுளது.

ஆன்ம ஒளியாய் அமைந்துள்ள கல்வியை உரிமையாப் பெற்றவர் அதிசய மேன்மைகளை யெல்லாம் எளிதே எய்தி எவ்வழியும் மகிழ்ந்து திகழ்கின்றார்.

கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே.
(நெடுஞ்செழியன்)

மேல் குலத்தில் பிறந்தும் கல்லாத ஒருவன் கீழ்க் குலத்தில் பிறந்து கற்றவனிடம் தாழ்ந்து நிற்பன் என்னும் இது இங்கே கூர்ந்து ஓர்ந்து உணரவுரியது.

நாற்பால் குலத்தில் மேற்பால் ஒருவன்
கற்றிலன் ஆயின் கீழிருப் பவனே. (1)

எக்குடி பிறப்பினும் யாவரே ஆயினும்
அக்குடியில் கற்றோரை மேல்வரு கென்பர். (2)

அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும். (3)
(நறுந்தொகை)

அதிவீர ராமபாண்டியன் என்னும் மன்னன் இன்னவாறு குறித்திருக்கிறார். **மேல் பிறந்தும் கல்லாதவர் கீழ்ப் பிறந்தும கற்றவர் போல்** பெருமையுறார் என்னும் இந்த அருமைக் குறளைக் கருதியே இவை உருவாகி வந்துள்ளன. உண்மையை ஊன்றி உணர்ந்து கொள்க.

சிறப்பின் பாலார் மக்கள்; அல்லார்
மறப்பின் பாலார் மன்னர்க்கு. (மணிமேகலை 23)

ஆக்கும் அறிவான் அலது பிறப்பினல்
நீக்கொள் உயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவர்ஆர் அரவின் பருமணிகண்டு என்றும்
கவரார் கடலின் கடு. (நன்னெறி 22)

கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினும்நூல்
வல்லான் ஒருவனையே மானுவரோ?—அல்லாரும்
எண்ணிலா வான்மீன் இலகிடினும் வானகத்துஓர்
வெண்ணிலா ஆமோ? விளம்பு. (நீதிசாரம் 97)

ஆற்றும் இளமைக்கண் கல்லாதான் மூப்பின்கண்
போற்றும் எனவும் புணருமோ?—ஆற்றச்
சுரம்போக்கி உல்குகொண்டார் இல்லையே; இல்லை
மரம்போக்கிக் கூலிகொண் டார். (பழமொழி 60)

பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவும்
கல்லாதார் வாழ்வது அறிதிரேல்—கல்லாதார்
சேதனம் என்னும்அச் சேறகத் தின்மையால்
கோதென்று கொள்ளாதாம் கூற்று. (நாலடி 106)

கற்றி லாய்கலை கற்றுணர் ரார்முகம்
உற்று நோக்கின் மயானத்தை ஒக்குமால்;
பெற்று ளார்பெறும் பேறுதம் காதலர்
சொற்ற கல்வியில் தூயர்என்று ஓதலே.
(உபதேசகாண்டம்)

பொருளால் இரண்டும் பெறலாகும்
என்ற பொருள்பொருளோ?
மருளாத செஞ்சொற் கலைமான்
பொருள்பொருள்; வந்துவத்தித்து
அருளே விளங்கும் அவர்க்கொளி
யாய்அறி யாதவருக்கு
இருளாய் விளங்கும் நலங்கிளர்
மேனி இலங்கிழையே.
(சரசுவதியந்தாதி 27)

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென்று அகமகிழ்க—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே இவர்க்குநாம் என்று. (நீதிநெறி 15)

வாலிழையார் முன்னர் வனப்பிலான் பாடுஇலன்;
சாலும் அவைப்படின், கல்லாதான் பாடுஇலன்;
கற்றான் ஒருவனும் பாடுஇலனே கல்லாத
பேதையார் முன்னர்ப் படின். (நான்மணி 99)

பொன்பெறும் கற்றான்; பொருள்பெறும் நற்கவி;
என்பெறும் வாதி இசைபெறும்;—முன்பெறக்
கல்லார், கற்றா இனத்தர் அல்லார், பெறுபவே
நல்லார் இனத்து நகை. (சிறுபஞ்சமூலம் 54)

கற்றாரைக் கைவிட்டு வாழ்தலும், காமுற்ற
பெட்டாங்கு செய்துஒழுகும் பேதையும், —முட்டின்றி
அல்லவை செய்யும் அலவலையும் இம்மூவர்
நல்லுலகம் சேரா தவர். (திரிகடுகம் 99)

சின்னாட் பழகினும் தேர்ச்சி இளமைக்கண்
பன்னாட் பழகினும் மூப்பில் பயன்இன்றால்
இன்னாவாத் தோன்றினும்பின் இன்பம் மிகவுறூஉம்
முன்னாடிக் கற்க முயன்று. (இன்னிசை)

கற்றவரது உயர்வையும் கல்லாதவரது இழிவையும் இவை தெளிவா விளக்கி யுள்ளன. பொருள் நிலைகளை யும் குறிப்புகளையும் கூர்ந்து கவனித்து ஓர்ந்து உணர்ந்து கொள்ளுக. கல்வி ஆன்ம ஒளியாய் அமைந் திருத்தலால் அதனைப் பெற்றவர் யாண்டும் சிறந்து எவ்வழியும் மேன்மை அடைந்து மிளிர்கின்றார்.

எக்குடியில் பிறந்தாலும் சிறந்த கல்விமானை உயர்ந்த அரசரும் உவந்து புகழ்ந்து போற்றுவார்.

இவ்வுண்மை ஒட்டக்கூத்தர் பால் உணர வந்தது.

சரிதம்.

இவர் பெரிய புலவர். சோழ நாட்டினர். செங்குந்த மரபினர்: சிறந்த கவிஞர். உயர்ந்த புலமையோடு அரசியல் முறைகளையும் பல தேச சரிதங்களையும் நன்கு தெரிந்தவர். உள்ளத் துணிவும் உறுதியும் உடையவர். அரிய கவிகள் பாடும் பெரிய புலவராகிய இவரைச் சோழ மன்னன் உவந்து அழைத்துத் தன்பால் பிரியமாக வைத்துக்கொண்டான். அந்த அரசனுடைய அவையில் தலைமைப் புலவராய் இவர் நிலவியிருந்தார். தமிழ்ப் புலமையைப் புனிதமாகப் போற்றி வந்தார். புல்லிய கவிகளைப் பாடி வருகின்ற போலிப் புலவர்களை வெறுத்து இகழ்ந்து கடுமையாக இவர் ஒறுத்து அடக்கினார். அதிவீர ராம பாண்டியன், வில்லியம்பொர், என்னும் இருவரினும் இவருடைய சோதனை மிகவும் கொடுமையாய் இருந்தது. புலவர்களிடம் பிழைகள் கண்டால் அவருடைய தலைகளை ஒட்டக் கட்டி வெட்டி விடுவார்.

"குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டியன் இங்கு இல்லை;
குறும்பிஅள வாக்காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட் டறுப்பதற்கோ வில்லி இல்லை;
இரண்டுஒன்று முடிந்துதலை இறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவி ஒட்டக் கூத்தன் இல்லை;
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைகள் உண்டு
தேசம்எங்கும் புலவர்எனத் திரிய லாமே"

(படிக்காசர்)

தற்காலத்தில் போலிகளாய்க் கவிகள் பாடிப் புல்லிய செல்வரை நாடித் திரியும் பொல்லா நிலைமையை நினைந்து பிற்காலத்துப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது. இதனல் அக்காலத்தில் இவர் கல்வி மதங் கொண்டு கதித்து நின்ற நிலை தெரியலாகும். தகாத பட்டங்களைத் தமக்குத் தாமே சூட்டிக்கொண்டு களித்துத் திரிந்தவர் எல்லாரும் இவர் தலை எடுத்தவுடனே ஒளித்து ஒடுங்கினர். வெட்டிய தலைகள் மீண்டும் ஒட்டி

உயிர் எழும்படி பாட வல்லவர் ஆதலால் இவரது கோலைத்தண்டம் தமிழ்மொழியைப் புனிதமாகப் பேணும் இனிய பணியாய் இசைந்து நின்றது. தன்னை ஆதரித்து வந்த மன்னன் இறந்துபோன பின் அவனுடைய மகனும் இவரை மரியாதையுடன் பேணி வந்தான். குலோத்துங்கன் என்னும் அவ் அரசனது அரியாசனத்தின் அருகே சரியாசனமாய் இவர் வீற்றிருந்தார். மங்கல நீர் ஆடி மணிமுடி சூடி முதலில் அவன் அரியணை ஏறும்போது இவர் ஒரு துதி கவி பாடினர். அந்தப் பாட்டின் பாதியை ஒட்டி அரசன் இவரைத் துதித்து உரைத்தான். கவி அரசும் புவி அரசும் கலந்து பாடிய அக்கவி சுவை மிக வுடையது. இருவருடைய கல்வியறிவும் பீடும் பெருமையும் என்றும் நாடு அறிய நின்றுள்ளது.

ஆடும் கடைமணி நாவசை யாமல் அகிலம் எங்கும்
நீடும் குடையைத் தரித்தபிரான்; இந்த நீணிலத்தில்
பாடும் புலவர் புகழ்ஒட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடும் குலோத்துங்க சோழன்என் றேஎன்னைச் சொல்லுவரே

இந்தப் பாடலின் அமைதியைக் கருதிக் காணுக.

தரித்தபிரான் என்று கூத்தர் சொல்லிய வுடனே அரசன் இவரைப் புகழ்ந்து சொல்லியிருக்கும் அழகை வியந்து நோக்கி நாம் உவந்து நிற்கின்றோம். இவரது அடியை முடியில் சூடி யுள்ளதாகப் படி ஆளும் அரசன் பணிவோடு சொல்லவேண்டுமாயின் இவரது கல்விப் பெருமையும் தெய்வத் திருவருளும் எவ்வளவு நிலையில் இசைந்திருக்கும் என்பதை எளிதில் தெளிந்து கொள்ளலாம். சிறந்த புவி வேந்தரும் போற்றி மகிழ இக் கவி வேந்தர் ஏற்றம் அடைந்துள்ளமையை அக்காலத்தில் இருந்த பலரும் வியந்து நின்றனர். கற்றவருக்குள்ளே இவர் பெரிய பாக்கியசாலி என்று முருக தாசர் மிகவும் வியந்து உரிமையுடன் இவரை உவந்து பாடியிருக்கிறார்.

எத்தனை புலவ ரோமுன் இறைவரை வசம்செய் துற்றூர்
அத்தனை பேருள் ஆரும் அருந்தமிழ் ஒட்டக் கூத்தன்
ஒத்தவர் முடிமேல் தம்தாள் உறவைத்தது இல்லை; இல்லை;
இத்தனை அதிட்டம் அன்றோற்கு இசைந்தமை ஏற்றம்
தானே.

வன்னியை நம்பும் தெய்வ மறையவர் மறைநீர் ஆட்டும்
பொன்னியல் மகுட மீது புலவர்பூங் கழல்கள் சூடும்
சென்னியே சென்னி என்னத் திகழ்தரு நிமித்தம் சோணுட்டு
இன்னிசை வேந்தர்க்கு அப்பேர் யாவரும் பகர்வ தாமே.
(புலவர் புராணம்)

மன்னரும் வணங்க இங்ஙனம் இவர் வாழ்ந்திருந்தனர். தக்கயாகப் பரணி, விக்கிரம சோழன் உலா, குலோத்துங்க சோழன் கோவை, ஈட்டி எழுபது முதலிய பிரபந்தங்களை இவர் பாடியிருக்கிறூர். உலகம் ஆளும் அதிபதிகளினும் புலமையாளர் தலைமையாளர் என்னும் உண்மையை இக் கலைஞர் வாழ்வு காட்டி நின்றது.

கற்ற கலைஞர் கனக முடிவேந்தர்
பெற்ற பெருமையினும் பீடுடையர்—உற்ற
உறுப்பில் தலைசிறந்த தேனும் ஒளிர்கண்
சிறப்புடைய தன்றோ சிறந்து.

என்றபடி கல்வியால் இவர் அரசரினும் தலைசிறந்து நின்றூர். எக்குலத்தவர் ஆயினும் கற்றவர் யாண்டும் எவரினும் உயர்ந்து விளங்குவர் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றூர். உள்ளத்தில் ஒளியை உதவி வருதலால் கல்வி மனிதரை உலகத்தில் உயர்த்துகிறது.

கல்லாதார் கல்லாய்க் கழிந்திழிவர்; கற்றவர்
எல்லார் மணியாய் எழில்மிகுவர்—அல்லார்
மதிபோல் மருள்இருள்வாழ் மானிடர்க்குக் கல்வி
கதியருளி நிற்கும் கனிந்து.

**கல்லா திருத்தல் கடையாம்; கலைநலம்**
**எல்லாம் அருளும் இனிது.**

படியாமல் இருப்பது பழியாம்.

---

410. நூல்கற்ற ஐவர்போல் நூற்றுவர்சீர் கொண்டிலரேன்
கோல்பெற் றிருந்தும் குமரேசா—சால்பில்
விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர். (ய)

இ—ள்,

குமரேசா! நூல்களை நன்கு கற்ற பஞ்சவர் போல் நூற்றுவரும் ஏன் மேன்மை பெற்றிலர்? எனின், இலங்கு நூல் கற்றாரோடு ஏனையவர் விலங்கொடு மக்கள் அனையர் என்க.

கல்லாதார் காட்டு மிருகங்கள் என்கிறது.

தெளிந்த நூல்களைக் கற்றவரோடு கல்லாதவர் எத்தகைய நிலையினர்? எனின், சிறந்த மனிதர்களோடு இழிந்த மிருகங்கள் போல் அத்தகைய இழிவினர் என்பதாம். மனிதன் யார்? விலங்கு எது?

கல்வியின் விழுமிய மேன்மையையும் கல்லாமையின் பொல்லாத கீழ்மையையும் பலவகை நிலைகளிலும் வகுத்துக் காட்டித் தனித்தனியே விளக்கி வந்தவர் முடிவில் இவ்வாறு இணைத்து உணர்த்தியுள்ளார். மனித உருவில் மருவியுள்ள மிருகங்களை இங்கே நேரே விநோதமாய்க் காண நேர்ந்துள்ளோம்.

கல்லாமல் நின்றவன் செல்வம் அழகு பிறப்பு சிறப்பு முதலிய எல்லா நலன்களையும் ஒருங்கே இழந்து பேதை பேடி மூடன் மடையன் என இழிந்து கழிந்து ஒழிந்து போகின்றான். அரிய கலையை இழந்தபோதே பெரிய புலை அவனிடம் புகுந்து கொள்கிறது.

கற்றவனுக்கும் கல்லாதவனுக்கும் என்ன வேற்றுமை? என்று ஒருவன் நாயனாரிடம் வந்து ஒரு நாள் கேட்டான்: "மனிதனுக்கும் மாட்டுக்கும் என்ன வேற்றுமை? அந்த வேறுபாட்டைத் தெரிந்து கொண்டால் இந்த மாறுபாட்டைத் தெளிவாய்த் தெளிந்து கொள்ளலாம்" என அவனை நோக்கி விடை கூறியது போல்

இக்குறள் உருவாகி வந்துள்ளது. உண்மை நிலைகள் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வுரியன.

விலங்கு என்றது ஆடு மாடு முதலிய மிருகங்களை.

குறுக்கு நெடுக்கா வடிவம் வாய்ந்துள்ளமையால் விலங்கு என நேர்ந்தது. மனித இனத்தினும் மாறுபட்டு விலகியிருப்பதால் விலங்கு என வந்தது எனினும் அமையும். மன உணர்வு குன்றியன மாக்கள் என நின்றன.

மேலான குலத்தில் பிறந்திருந்தாலும் கல்வி இல்லாதவர் மிகவும் கீழானவரே என்று முன்னம் குறித்தார்; இதில், அவர் சிறந்த மனிதப் பிறவியை அடைந்திருந்தாலும் இழிந்த மிருகங்களே என இகழ்ந்துள்ளார்.

ஆருயிர்க்குப் பேரமிர்தமான அரிய கல்வியை உரிமையோடு பேணிக் கொள்ளாமல் மனிதன் வறிதே இழிந்து கழிந்து போவதை நினைந்து பரிந்து வருந்தியுள்ளமையால் வார்த்தைகள் சூடேறி வந்துள்ளன.

ஏனையவர் என்றது கல்லாதவரை.

மானுடராய்ப் பிறந்தும் மதிநலம் இழந்து ஈனம் அடைந்துள்ளமையால் இவ்வாறு இகழ்வாச்சுட்டி விட்டார். கல்வியறிவுடையதே நல்ல பிறப்பாகின்றது.

விலங்கு மக்கள் என உவமானத்தில் நிறுத்திய நிலைக்கு ஏற்பக் கல்லார் கற்றார் என்று நிரலே சொல்ல வேண்டும்; அவ்வாறு கூறாமல் மாறி வந்துள்ளமையால் இது, எதிர் நிரல் நிறை என்னும் இயல்விதியைத் தழுவி நின்றது. பொருள் தெளிவுற வழி வருகிறது.

பெயரும் வினையுமாம் சொல்லையும் பொருளையும்
வேறு நிரல்நிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருள்கோள் நிரல்நிறை நெறியே.

(நன்னூல் 414)

இந்த இலக்கண விதி இங்கே எண்ணியுணர வுரியது. விலங்கு என்றது நேரே கல்லாமை துலங்க.

கற்றோர்க்கும் கல்லார்க்கும் உள்ள வேற்றுமையை விளக்குதற்கு மக்களையும் விலங்கையும் ஒப்புக்காட்டியது. ஏற்றத் தாழ்வுகளை எளிது தெளிய. கல்வியின் உயர்வையும் கல்லாமையின் இழிவையும் வல்லார் அல்லார் மேல் ஏற்றி வகையாச் சொல்லி யருளினார்.

மிருகங்களை விட மனிதன் உயர்ந்தவன் என நேர்ந்தது எதனால்? அறிவினாலேயாம்; அந்த அறிவு கல்வியினால் ஒளி பெற்று உயர்கிறது: கல்லாமையால் இழிவுற்று அயர்கிறது. ஆகவே கற்றவர் மேதைகளாய் உயர்ந்து விளங்குகின்றார்; கல்லாதவர் பேதைகளாய் இழிந்து எவ்வழியும் பிழையுற்று ஒழிகின்றார்.

மன உணர்வும் மதிநலனும் மகிமையான எண்ணங்களும் வளர்ந்து வரும் அளவே மக்கள் என்று தக்க மதிப்புடன் கிளர்ந்து தெளிந்து உயர்ந்து வருகின்றனர். உரிய மாண்புகள் ஒருவிய ஆகவே பெரிய தாழ்வுகள் மருவி நிற்கின்றன, பிழைகள் தொடர்ந்து வரவே பீழைகள் அடர்ந்து படர்ந்து கொள்கின்றன.

விலங்குகள் உண்ணுகின்றன; உறங்குகின்றன; பெட்டைகளோடு கூடுகின்றன; குட்டிகளைப் பெறுகின்றன. உண்ணல் உறங்கல் பெறுதல் ஆகிய இந்த அளவிலேயே நின்று ஒழிபவர் மக்கள் உருவில் மருவியிருப்பினும் அவர் மாக்களாகவே இழிந்து கழிந்து போகின்றார். இளிவு நேராமல் தெளிவு ஏற வேண்டும்.

கல்லாமையால் நல்ல அறிவு இல்லாமல் போகிறது; போகவே அறிவு கெட்ட மிருகங்கள் என அந்த மனிதர் நிந்தை படிந்து எங்கும் நிலை குலையலாயினார்.

கல்லாத மக்கள் பொல்லாத மாக்களே.

உருவத்தால் மனிதன் ஆயினும் கல்லாதவனை மிருகம் என்றே கருத வேண்டும் என்றதனால் அவனது பரிதாப நிலை அறியலாகும். அரிய அறிவு இழந்து படுதலால் கொடிய இழிவு புகுந்து கொண்டது,

நாட்டுள் மனிதனாய் நண்ணினும் கல்லாதான்
காட்டு விலங்கிற் கடைஎன்று—கேட்டும்
படியா திருக்கின்ற பாழ்மகன் ஏனோ
மடியா திருக்கின்றான் மண்.

படியாதவன் படியில் இருப்பது பழியாம். அவன் கடிது மடிந்து போனால் கொடிய பழி அவனைக் கூடாமல் ஒழிந்துபோம். பின்பாவது அவன் தெளிந்து கொள்வான்.

உற்ற பிறவிக்கு உரிய பெருமையை ஒழித்துச் சிறுமையை விளைத்து நிற்றலால் அவன் நிலை குற்றம் என வந்தது. கல்லாமல் வாழ்தலினும் இல்லாமல் ஒழிதல் இனிது. கற்று வாழ்; இல்லையேல் இற்று ஒழி.

மனிதப் பிறவி பெறுதற்கு அரியது; பெருமகிமை உடையது; சிறப்பு மிகுந்த இப்பிறப்பினைப் பெற்றும் கற்று உயர்ந்து உய்தி பெறாமல் கல்லாமல் கழிந்து இழிந்து ஒழிவது பொல்லாத புலைப்பழியாய் நின்றது.

செல்வ வளங்கள் எவ்வளவு செழித்திருந்தாலும் கல்வி ஒன்று இல்லையானால் அந்த மனிதன் எல்லா நலன்களும் இழந்து அல்லலுழந்து அழிகின்றான்.

உரிய கல்வியை இழந்தவன் உயர்குல மகனாய்ப்
பெரிய செல்வத்தை அடையினும் பெருமைஒன் றிலையே!
அரிய கண்ஒளி இழந்தபின் அதுமுகத் துறினும்
பிரியம் எய்துமோ? பிழையுறும்; பீழையே பெருகும்.

கண்ணுக்கு ஒளிபோல் மனிதனுக்குக் கல்வி; அஃது இல்லையாயின் இருளடைந்த குருடனாய் அவன் மருளடைந்து மாள்கிறான். மருள் நீங்கி அருள் ஓங்கி வாழ்வதே தெருளான சிறந்த வாழ்வாம்.

கல்லாமை ஒன்றால் எல்லா நலன்களும் இழிந்து தொலைகின்றன. அந்தப் பொல்லாத புலைநிலை தன்பால் இல்லாதபடி செய்து கொள்ளுபவனே நல்ல குலமகனாய் உயர்ந்து எங்கும் நன்கு இசைபெற்று நிற்கின்றான்.

இலங்கு நூல் என்றது அறிவு நலம் சுரந்த உயர்ந்த நூல்களை. இலங்குதல்=விளங்குதல்; பிரகாசித்தல். தன்னைக் கற்றவர்களுக்கு உணர்வு நலன்களை உளவாக்கி ஒளிமிகச் செய்து விழுமிய நிலையில் விளங்க வைத்தலால் இலங்கு நூல் என அது விளம்ப வந்தது.

விலங்குகளின் நின்று விலக்கி உன்னை உயர்ந்தவன் ஆக்க வல்ல மேலான நூல்களையே விழைந்து கல்; கீழான புன்மைகளைப் பாராதே எனப் படித்து வரும் பார்வைக்கு நயமாத் தீர்வை கூறி யருளினர்.

அறிவை வளர்த்துத் தெளிவு மிகச் செய்து ஆன்ம நலனை அருளும் பான்மை யுடையதே மேன்மையான நூல்; அத்தகைய விழுமிய கலைகளைக் கற்பதே தலைமையான கல்வியாம். தக்க நூலே மிக்க சால்பருளுகிறது.

ஏதம் அகற்றி இதம்அருளி எஞ்ஞான்றும்
போதம் புரியும் புனிதநூல்—வேதமெனச்
சொல்ல உரியது; சோரம் புரியுமேல்
இல்லை அது நூல்; இருள்.

இன்னது தான் நூல் என உணர்த்தியுள்ள இது ஈண்டு நுனித்து நோக்கத் தக்கது. வித்தக விவேகங்களை விளைத்து தத்துவ ஒளியுடன் மேலான கதியில் உய்த்தருளுவதே உண்மையான உத்தம நூல்.

சத்துடைய உணவு உடலுக்கு உறுதி தருகிறது. உய்த்துணர்வுடைய நூல் உயிர்க்கு இனிதாய் ஒளி அருள்கின்றது. நல்ல பசுவின் பாலை நாடிப் பருகுதல் போல் தெள்ளிய இனிய நூலைத் தேடிப் பருகுக.

பொல்லாத கள்ளைப்போல் புலைவெறிகளை விளைத்து இழி நிலைகளில் வீழ்த்தும் ஈனங்களைப் படியாதே; படித்

நால் ஞானங்கள் படியப் படி! ஊனங்கள் படிய யாதும் படியாதே. உயிர் துயர் தீர்வதே உயர் படிப்பாம்.

உலகியல் அறிவும் உள்ளப் பண்பும் உணர்வின் தெளிவும் ஆன்ம ஞானமும் இனமா அருளுகின்ற மேன்மையான நூல்களையே எவ்வழியும் செவ்வையாகக் கற்க வேண்டும். கற்பவை கற்க என்ற அற்புத வாக்கை எப்பொழுதும் சிந்தித்துக் கலையின் புனிதமான தலைமையைக் கருதி உறுதிநலனைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க.

மொழிகளைப் பேசி வருவதினுலேயே மக்கள் தக்கவராய் உயர்ந்து விலங்குகளினும் மேல் என விளங்கி நிற்கின்றூர். இலங்கிய நூல்களைக் கல்லாமல் அந்தப் பேச்சு வழக்கோடுமட்டும் நின்றூல், வாய் பேசுகின்ற ஒருவகை மிருகங்களாகவே அவர் கருத நேருவர். கலைகளை ஓதி உணர்ந்தால் தலைமையான மேதைகளாய் மேவி விளங்குவர். பேதைமை ஒழிவதே பெரிய கல்வி.

பேச்சளவில் நின்றூர் பிழையாய் இருநிலத்தே
மூச்சளவில் வந்து முடிந்திழிந்தார்—பேச்சொடுநூல்
கற்றூர் உயர்ந்து கருதிய சீரெல்லாம்
பெற்றூர் பெருமை பெரிது.

கல்வியாலேயே மனித இனம் மாட்சி யடைந்து வருவதை இதனுல் அறிந்து கொள்கிறோம். கற்பது கற்பக தருவாய் அற்புத நிலைகளை அருளுகிறது. சால்புடைய நூல்களைக் கற்பதில் மேலோர்களுடைய அறிவு நலங்களும் நெறி நியமங்களும் நேரே மருவி வருகின்றன. அவ் வரவால் பெருமகிமைகள் உளவாகின்றன.

நல்ல முறைகளைக் கல்லாது விடின் எல்லா மேன்மைகளும் இழிந்து போகின்றன; போகவே பொல்லாத புன்மைகள் வளர்ந்து கிளர்ந்து புலைகள் விளைகின்றன.

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றூன் குறிப்பறிய
மாட்டா தவன்நன் மரம். (மூதுரை 13)

கல்லாதவன் காட்டு மரம் என்று ஔவையார் இவ்வாறு காட்டி யிருக்கிறார். கல்வியை இழந்த போது மனிதன் எவ்வளவு தாழ்வாய் இழிந்து படுகிறான் என்பதை இங்கே உணர்ந்து வருந்துகிறோம்.

இலங்கு நூல் கல்லான் விலங்கு என்றார் தேவர்.

நீட்டோலை வாசியான் நெட்டை மரம் என்றார் பாட்டியார். இந்த இரண்டு மேதைகளும் கல்வியைப் போதித்திருக்கும் போதனைகள் கருதி யுணர வுரியன.

மனிதன் மேலான பிறப்பில் பிறந்துள்ளான்; ஆறறிவுடையனாய்ச் சீரடைந்திருக்கிறான்; இருந்தாலும் கல்வி யறிவை இழந்துவிடின் எல்லா மேன்மைகளையும் இழந்தவனாய் இழிந்து தாழ்ந்து கழிந்து வீழ்ந்து ஒழிந்து போகிறான். கல்லாமை புல்லாமல் வாழ்வதே வாழ்வாம்.

கல்லாத புல்லறிவில் கடைப்பட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து வனப்பெய்தி யிருக்கும் வண்ணம்
பல்லோரும் காண என்றன் பசுபாசம் அறுத்தானை
எல்லோரும் இறைஞ்சு தில்லை அம்பலத்தே கண்டேனே. (1)

கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்து
உற்றிறுமாந்து இருந்தேன்எம் பெருமானே! அடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்அருளே? (2)
(திருவாசகம்)

கல்லா நாயேன் எனினும்எனைக்
காக்கும் தாய்நீ என்றுலகம்
எல்லாம் அறியும் ஆதலினால்
எந்தாய்! அருளா திருத்திஎனின்
பொல்லாப் பழிவந்து அடையுமுனக்கு
அரசே இனியான் புகல்வதென்னே
செல்லார் பொழில்சூழ் திருத்தணிகைத்
தேவே! ஞானச் செழுஞ் சுடரே! (அருட்பா)

**கல்லாத நாயேன்** என்று மாணிக்கவாசகரும், இராமலிங்கரும் இவ்வாறு தம்மை இகழ்ந்து மொழிந்துள்ளனர். தெளிந்த கல்வியறிவுடைய இவர் இப்படித் தாழ்த்திக் கூறியது, மெய்யான கல்விப் பயனை அடைய வேண்டியே. **கல்லாதார் விலங்கு** என்று தேவர் குறித்த குறிப்பை நோக்கியே கல்லாத நாயேன் என இவர் தம்மைக் குறித்துத் தாழ்வாச் சொல்ல நேர்ந்தனர்.

அரிய பிறப்பும் பெரிய சிறப்பும் கல்வி இல்லாமையால் சிறுமையடைந்து சீரழிந்து போகின்றன. அவ்வாறு இழிந்து அழிந்து போகாமல் இளமையிலேயே கற்று வளமையுடன் உயர்ந்து கொள்ளுக.

ஒத்த பிறப்பினராயினும் கல்லாதார், கற்றாரைப் போல் உண்மையான மதிப்பையும் உயர்ந்த மாண்பையும் உரிமையுடன் ஒருமையா அடையார்.

இவ்வுண்மை கவுரவர் கண்ணும் பாண்டவர் பாலும் நீண்ட ஆராய்ச்சியோடு நேரே நன்கு அறிய வந்தது.

## சரிதம்

கவுரவர் என்பவர் குருகுல மரபினர். துரியோதனன் முதலிய நூறு பேர்களும் சீரோடு சிறப்பாய் வளர்ந்து வந்தனர். பாண்டு மன்னன் புதல்வராகிய பாண்டவர்கள் ஐவரும் சிறந்த குணசீலர்கள். அரசகுலக் குமரர்களான இந்த இருவகையாருக்கும் கிருபாசாரியார் குருவா யிருந்தார். கல்வி கற்பித்து நல்ல முறையில் போதித்து வந்தார். தருமன் முதலிய இந்த ஐவரும் ஆர்வத்துடன் கற்றார். அந்த நூற்றுவரும் செல்வக் களிப்பால் திமிர்ந்து திரிந்தார். கருத்தூன்றிக் கல்லாமல் உல்லாசமாய்ப் பொழுது போக்கி நின்றார். பருவம் வந்ததும் இந்த இருதிறத்தாருடைய கல்வியறிவைத் தெரிய விரும்பி நேரே அழைத்து **வீடுமர்** ஒரு விவேக சோதனை செய்தார். முதலில் நூலறிவை உசாவி நோக்கினார். பின்பு ஒரு சிறு தொகைப் பொரு

ளைக் கொடுத்து "இதற்கு வீடு நிறைந்த பண்டம் வாங்கி வைமின்" என்று குறித்துப் பிரித்து விடுத்தார். கவுரவர் சென்ருர்; வைக்கோல் பொதியை வாங்கி ஒரு மாளிகையில் செறித்து வைத்தார். ஐவர் சென்ருர். குறித்த வீட்டைத் தூசி துடைத்துத் தூய்மைப்படுத்தி வாச நீர் தெளித்து நறுவிய தூபம் கொளுத்தி அழகிய தீபங்கள் ஏற்றிப் பசிய இலைகள் இனிய காய்கனிகள் நயமாக அமையவைத்து முதியோர் வரவை அன்போடு எதிர் பார்த்து நின்றனர். முன்பு அனுப்பிய பெரியவர் வந்து நூற்றுவர் இல்லை நோக்கிஞர்; உள்ளே நுழையாமல் வெளியே மீண்டார். அதன்பின் ஐவர் மனையை அடைந்தார்; அது தெய்வீகமாய் விளங்குவதைக் கண்டார்; அகம் மிக மகிழ்ந்து அங்கே அமர்ந்திருந்து உரையாடி உவந்தார். இந்தப் பிள்ளைக ளுடைய அறிவை வியந்து உள்ளம் களித்த அவர் துரியோதனன் முதலிய அந்த இளைஞர் நிலைமையை எள்ளி அகன்ருர். பல கலைகளிலும் தலைமையான புலமை யுடையராய்ப் பாண்டவர்கள் நீண்ட புகழுடன் நிலவி விளங்கிஞர். மடமையுடன் கொடுமையும் மண்டி வந்தமையால் கவுரவர் எங்கும் மதிப்பிழந்து நின்ருர். எவ்வளவு செல்வ நலன்களை எய்தியிருந்தாலும் கல்வியறிவு இல்லையாஞல் அவர் பொல்லாதவராய் இழிவர் என்பதை எல்லாரும் அவர் பால் அறிந்து வருந்திஞர். உயர்ந்த நூல்களைக் கல்லாதவர் இழிந்த விலங்குகளாய்க் கழிந்து கெடுவர் என்பதை உலகம் காண அவர் உணர்த்தி நின்ருர்.

துங்க யானைமுன் படுத்திஞம் படுத்துக
சுடர்மணிப் பகுவாய் வெம்
சிங்கம் வாயிடைச் செலுத்திஞம் செலுத்துக
தென்புலத் தவர்கோமான்
வெங்கண் மாநர கத்திடை வீழ்த்திஞம்
வீழ்த்துக விடைஏறும்
எங்கள் நாயக! தமிழ்அறி யாருடன்
இயம்புதல் தவிர்ப்பாயே!

கல்லாதவருடன் கலந்திருப்பதும் சொல்லாடுவதும் மிகவும் துயரமாம். அந்தப் புல்லரோடு சேராமலும் பேசாமலும் இருக்கும்படி ஆண்டவா! அருள் புரிக என ஈசனை நோக்கி ஒரு கவிஞர் இவ்வாறு வேண்டியிருக்கின்றார். கல்லாமல் கழிவது எவ்வளவு பொல்லாத இழிவு என்பதை இது இங்கு நன்கு தெளிவுறுத்தியுளது.

கல்லாதார் கல்லாய்க் கழிகின்றார்; கற்றாரோ
நல்லாராய்த் தேவராய் நானிலத்தில் உயர்கின்றார்;
எல்லாரும் இதைஅறிந்தும் இனிதுவந்து கல்லாரேல்
பொல்லாத அவர்நிலைமை புலையான கொலையாமே.

மான மனிதனே ஆனாலும் கல்லாதான்
கான விலங்கிற் கடையாகி—ஈனம்
படிந்தழி கின்றான் படியாமல் நின்று
மடிந்து கழிதல் மருள்.

**கற்றான் உயர்தெய்வம்; கல்லான் கடுவிலங்காய்**
**இற்றான் பழியுள் இழிந்து.**

கல்லாமல் நில்லாதே.

---

### இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

1. கல்லாதவர் பேச எழுவது பொல்லாத புலை.
2. அவர் எள்ளி இகழ்ப் படுவார்.
3. சொல்லாமல் அடங்கி யிருப்பதே நல்லது.
4. கல்லார் அறிவை நல்லார் மதியார்.
5. அவருடைய பெருமை சிறுமையாம்.
6. குலம் இழிவாம்.
7. அழகு பாழாம்.
8. செல்வம் புல்லிதாம்.
9. பிறப்பு பிழையாம்.
10. அவர் மக்களா யிருப்பினும் மாக்களே.

**சஉ-வது கல்லாமை முற்றிற்று.**

# நாற்பத்திரண்டாவது அதிகாரம்

## கேள்வி.

அஃதாவது அறிவுடையார் கூறும் உறுதிப்பொருள்களைக் கருதிக் கேட்டல். கண்ணால் நேரே பார்த்துப் படிப்பது கல்வி; காதால் வேறே கேட்டுக் கொள்வது கேள்வி. இளமையில் முயன்று கற்றவர்க்கும் அவ்வாறு கல்லாதவர்க்கும் ஒருங்கே நல்ல அறிவு நலன்களை நல்கி வருதலால் கல்வி கல்லாமைகளின் பின் இது வைக்கப்பட்டது. நூலறிவும் கேள்வி ஞானமும் மேலான மேன்மைகளை மாந்தருக்கு விளைத்து அருளுதலால் அவை இனமாய் இணைந்து ஈண்டு ஓர்ந்து உணர வந்தன.

411. கொண்டசெல்வம் எல்லாம் கொடுத்துச் செவிச்செல்வம்
கொண்டானேன் போசன் குமரேசா—கண்டபெருஞ்
செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை. (க)

இ-ள்

குமரேசா! சிறந்த செல்வங்களை எல்லாம் கொடுத்து ஏன் போசன் செவிச் செல்வத்தை உவந்து கொண்டான்? எனின், செவிச் செல்வம் செல்வத்துள் செல்வம்; அச் செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை என்க.

இது, கேள்வியின் பெருமையை உணர்த்துகிறது.

செவியால் எய்தும் திரு செல்வத்துள் சிறந்த செல்வம்; அது செல்வங்கள் எல்லாவற்றுள்ளும் மேலான விழுமிய மெய்ச் செல்வமே.

ஏழு சீர்களுள் ஐந்து சீர்களில் செல்வம் சேர்ந்துளது.

செல்வம் செழித்து வந்துள்ளதை உள்ளம் களித்து நோக்கி உறுதி யுண்மைகளை ஓர்ந்து கேள்வியின் உயர் நிலையை உய்த்துணர்ந்து தேர்ந்து கொள்கிறோம்.

செவிச் செல்வம் என்றது கேள்வியை. செவி=காது.

ஒலிகளைச் செவ்வையாய்க் கேட்பது **செவி** என வந்தது. நாதத்தைக் கதுவி அறிவது காது.

கண்ணால் நேரே நோக்கித் தானாகவே மனிதன் கற்றுக்கொள்ளும் கல்வி நலனை முன்னர்க் கூறினார்: அந்தக் கல்வியறிவை விருத்தியாக்கி மேலும் வளம் செய்து வரவும் ஒரு வேளை இளமையில் வளமையாய்க் கல்லாது கழிந்து நின்றால் அவர் கல்வியின் பயனை அடைந்துகொள்ளவும் கேள்வி நல்ல துணையாய் அமைந்துள்ளமையால் ஈண்டு உறவுரிமையுடன் அதனை உரைத்தருளினார். செவியறிவு விழுமிய திருவாய் வந்தது.

கல்வியும் கேள்வியும் மாந்தர்க்குக் கண்ணும் காதுமாய் வாய்ந்துள்ள உண்மையையும் உறுதிநிலையையும் நுண்மையாக ஈண்டு ஓர்ந்து உணர்ந்துகொள்கிறோம்.

கல்வியை முன்னம் **கண்** என்று காட்டினார்; கேள்வியை இங்கே **செவி** என்று சுட்டினார். பொறிகளின் வழியே அறிவுகள் விளைந்து வருவதைத் தெளிந்து கொள்ள இவ்வாறு மொழிந்தருளினார். மனித தேகம் விவேக ஒளிக்கு வழிகோலி வந்துளது. அவ்வழியை விலகாத அளவு தெளிவுகள் உளவாகின்றன. கற்றல் கேட்டல்களால் காட்சியும் மாட்சியும் காண வருகின்றன.

> கல்லாதவன் கண் இழந்த கபோதி ஆகிறான்.
> கேளாதவன் செவிஇழந்த மூளியாய்ச் சீரழிகிறான்.
> கண் பெற்றது கல்வி கற்கவே.
> செவி பெற்றது கேள்வி கேட்கவே.

கல்வி கேள்விகள் இல்லையானால் குருடும் செவிடுமாய்ப் பாவியாய் அவலம் அடைகிறான். ஊனம் உறாமல் ஞானம் பெற்று உயர வேண்டும் என்னும் குறிப்பால் உறுப்புக்களோடு உறழ்ந்து சிறப்பாக வுரைத்தார். கண்ணும் காதும் கலைகளா எண்ண வந்தன; எண்ணி அறிபவன் நுண்ணிய அறிவாளனாய்க் கண்ணியம் காண்கிறான். எண்ணாதவன் இழிந்து போகிறான்.

**கற்க கசடற** என்று கல்வி அதிகாரத்தில் முதலில் தொடங்கியதுபோல் **கேட்க தெளிவுற** என்று இங்கே தொடங்கியிருக்க வேண்டும். அவ்வாறு கூறவில்லை.

அதிகாரத்துக்கு ஏற்பக் கேள்வி என்று தெளிவாகச் சொல்லாமல் செவிச் செல்வம் என வியந்து விழைந்து காணும்படி புனைந்து புகழ்ந்து மொழிந்துள்ளார்.

கேள்வி நல்லது; சிறந்தது; உயர்ந்தது; அதனை உரிமையுடன் உவந்து கேளுங்கள்! என்று வரைந்திருந்தால் உலக மக்கள் உணர்ந்து நயந்து கேளார்.

கேள்வி பெரிய செல்வம்; செல்வத்துள் செல்வம்; செல்வத்துள் எல்லாம் மேலான சிறந்த செல்வம் என இன்னவாறு பணம் மணம் கமழப் புகழ்ந்து சொன்னால் எல்லோரும் விழைந்து விரைந்து கேட்பர் என விளம்பியுள்ளார். இந்த மானச மருமங்கள் இங்கே ஓர்ந்து நன்கு சிந்திக்க வந்துள்ளன.

பொன், மணி, நிலம், புலம், மாடு, மனை எனப் பொருள்கள் பலவகையாயுள்ளன. இவை யாவும் செல்வம் என்று சொல்லப்படும். உலக வாழ்க்கைக்கு உயிராதாரமாயுள்ளமையால் செல்வம் என்னும் சொல்லைக் கேட்டவுடனே எல்லாருக்கும் பெருவிருப்பம் உண்டாகின்றது. உரிய அனுபவத்தில் பிரியம் விளைகின்றது.

பிரியமான அந்த இனிய சொல்லால் கேள்வியை அடிகள் இங்கே நளினமாக் குறித்திருக்கிறார். யாரும் உள்ளம் உவந்து வியந்து விழைந்து கொள்ளும்படி கேள்விக்கு ஒரு பெயரைச் சூட்டிக் காட்டியிருக்கும் காட்சி கருதி யுணரவுரியது. கேள்வியைச் சொல்லும் போதே செல்வம் எனச் செவி குளிரச் சொல்லியருளினார். செல்ல வாயிலிருந்து நல்ல மொழிகள் உலக உள்ளங்களை உள்ளி ஓர்ந்து துள்ளி வந்துள்ளன.

ஒன்றை உரிமையோடு உவந்து பாராட்டிச் சொல்லுங்கால் செல்வம் என்று செல்லமாகச் சொல்வது வழக்கம். எல்லாரும் விழைவது விளங்கி நின்றது.

அருட் செல்வம், கல்விச் செல்வம், கவிதைச்செல்வம், குழந்தைச் செல்வம், மேழிச் செல்வம், வேள்விச் செல்வம் என இன்னவாறு அருமை கருதி வந்துள்ளன.

திருவே! என் செல்வமே! (தேவாரம்)

செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழல்ஏத்தும் செல்வம் செல்வமே. (தேவாரம்)

சிவபெருமானை நோக்கி அப்பரும் சம்பந்தரும் இப்படிப் பாடியிருக்கின்றனர். செல்வத்துள் செல்வம் எது? என்பதை இவர் இவ்வாறு விளக்கி யுள்ளனர்.

கேள்வி அரிய பெரிய செல்வம் என அறிய வந்தது.

கல்வியறிவை இழந்து நின்றவர் கேள்வியையாவது விழைந்து பேணி உயர்ந்து கொள்ள வேண்டும் என்னும் கருணையினால் கனிந்து வந்த மொழி ஆதலால் இங்ஙனம் இனிமை சுரந்து மிளிர்கிறது. இதயம் கனிந்து வர இனிய உரைகள் நன்கு உதயமாகி வருகின்றன.

கேள்வி என்றது இங்கே உயிர்க்கு உறுதியான உணர்வுரைகளைச் செவியால் பருகிச் சிந்தை தெளிந்து கொள்வதை. உள்ளம் தெளிய வருவதே நல்ல கேள்வி.

காதால் கேட்கப் படுவன எல்லாம் கேள்விகள் ஆகா. அறிவொளி பெருகி ஆன்ம நலன் மருவிய மேன்மை யுடையதே மேலான கேள்வியாம்.

பண்ணமை யாழ்குழல் கீதம்என்று இன்னவை
நண்ணி நயப்ப செவிஅல்ல—திண்ணிதின்
வெட்டெனச் சொல்நீக்கி விண்ணொடு வீட்டின்பம்
கட்டுரை கேட்ப செவி. (அறநெறி: 195)

இன்னதுதான் செவி, இதுதான் கேள்வி எனச் சுட்டி யுரைத்திருக்கும் இதனை உய்த்துணர்க. யாழ் இசை, குழல் ஓசை, சங்கீதம் என்னும் இவை கேட்பதற்கு இனிமையுடையன எனினும் கேள்வி ஆகா. நாடகம் முதலிய விநோதக் காட்சிகளைக் காணும் கண்போல் இசைப் பாடல்களைச் செவி கேட்கின்றது. கேட்ட அளவில் சிறிது சுகமாய் வறிதே ஒழிந்து போதலால் உறுதி நலம் கனிந்த உண்மையான நல்ல கேள்வி போல் உயர்ந்தோரால் அவை உவந்து மதிக்கப்படுவதில்லை.

காமக் களிப்பும் காதல் மயக்கமும் கான மோகமும் காட்சி கேள்விகளில் ஏமமாய்த் தோன்றினும் ஊனங்

கள் புரிவன ஆதலால் அவை ஈனமாய் இழிந்து படுகின்றன. ஞானம் உடையன நன்மைகளாய் வருகின்றன.

அறிவை மயக்கி அவலப் படுத்துவன யாவும் சிறுமைகளாய்ச் சீரழிந்து போகின்றன. இனிய இயல்புகளை நோக்கியே அரிய உயர்வுகள் அமைகின்றன. சீவ இதம் தேவஅமுதமாய்த்தெளிந்து எங்கும்சிறந்து திகழ்கிறது.

அன்னவள் ஆடல் கண்டார், அவலமே காண நேர்ந்தார்;
பின்னவள் பாடல் கேட்டார், பிழைபல பெருக நின்ருர்.

இசை கேட்கும் நசையால் விளைந்துள்ள வசைகளை இது வரைந்து காட்டியுள்ளது. பீடைகள் பெருகி வருகிற ஓசைகளுக்கு ஆசையாய்ச் செவி சாய்க்க லாகாது. **கேள்வி** என்னும் சொல் உயர்ந்த குறிக்கோள்களையுடையது. சிறந்த ஞான சீலங்கள் தோய்ந்தது.

உள்ளத்தை உயர்த்தி, உணர்வை ஒளிசெய்து, உயிர்க்கு உறுதியாய் உய்தி தருவது எதுவோ, அதுவே கேள்வி ஆகிறது. கல்வியின் இனம் ஆயினும் அதனினும் இஃது எளிமையும் தெளிவும் இனிமையும் மருவி எவர்க்கும் நயமாய் இதம் புரிகிறது. இளையர் முதியர் முதலிய எவரும் இதனல் உயர் பயன் பெறுகின்றனர்.

செல்வத்தை ஆவலோடு யாவரும் தேடுகின்றனர்; அதைக் காட்டிலும் கேள்வி சிறந்தது ஆதலால் இதனை ஒல்லும்வாயெல்லாம் ஊக்கி ஈட்டிக் கொள்ளவேண்டும்.

**தலை** என்றது மேலானது என்னும் பொருளில் வந்தது. செவிச் செல்வம் **தலை** என்றதனல் பிறச் செல்வங்கள் கடை என்று கழிக்கப்பட்டன. செல்வங்கள் எவற்றினும் கேள்வி சிறந்தது என இவ்வாறு வியந்து புகழ்ந்தது இதன் மகிமையை உணர்ந்து தெளிந்தே.

செல்வம் என்ன செய்யும்? உலக நிலையில் பலவகை மினுக்குகளை உளவாக்கும்; உயர்ந்த உடை, சிறந்த அணி, பெரிய மாளிகை, அரிய வாகனங்கள், இனிய போகங்கள் முதலிய தேக சுகங்களை நல்கி வரும். இவை யாவும் பொறி வெறிகளை விளைத்து ஊன உடலை

வளர்த்து ஈனமாய் ஒழிந்தே போம். அவ்வாறு அழிந்து ஒழிதலை எவ்வழியும் செவ்வையாய் நேரே கண்டு வருகிறோம். அல்லல் புரிந்து கழிவது நல்லது ஆகுமா?

கேள்வி என்ன செய்யும்? செவி வழியே புகுந்து உள்ளத்தைத் தெளிவித்து உணர்ச்சியை ஊட்டி உண்மையை விளக்கி உயிர்க்கு உய்தி நலங்களை உரிமையாய் உதவி எவ்வழியும் கேள்வி இதமே செய்தருளும்.

இறைவன் ஒருவன் உளன்; அவன் எங்கும் நிறைந்து எல்லாம் அறிந்து என்றும் நிலையாய் நிற்கின்றான். அந்தப் பரம்பொருளிடமிருந்தே நீ பிரிந்து வந்திருக்கிறாய்; சத்தியம் கருணை தருமம் என்பன அவனுடைய அருமை உருவங்களாய் மருவியுள்ளன. இந்தப் புனித நீர்மைகளை இனிது பேணிவரின் மனிதன் தெய்வமாய் அத் தனிமுதலை அடைகிறான். இன்னவாறு உண்மைகளை உணர்த்திச் சீவர்களுக்கு உய்தி தருதலால் கேள்வி யாவருக்கும் ஆன்ம அமுதமாய் அமைந்திருக்கிறது. அதன் அதிசய மேன்மை இங்கு அறிய வந்தது.

உடல்அளவில் சிறிது இதம்போல் நின்று விளைந்து ஒழிந்து போகின்ற ஊனச் செல்வங்கள் உயர்ந்தனவா? உயிர்க்கு உறுதியாய் நின்று எவ்வழியும் அழியாமல் என்றும் ஒளிபுரிந்து அருளுகிற ஞானச்செல்வம் உயர்ந்ததா? ஓர்ந்து உணர்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும்.

புவிச் செல்வங்கள் யாவும் செய்ய முடியாத ஆன்ம உய்தியைக் கேள்வி செய்து வருதலால் செவிச் செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை என நின்றது. வியனுண விளைவுகளால் விழுமிய தலைமை விளைந்து வந்துள்ளது.

செவியுறு கேள்விச் செல்வன். (இராமா, வாலி: 118)

செவிமதக் கடலங் கேள்விச் சீவகன்.

(சிந்தாமணி 2292)

**செவிச் செல்வம்** என்று இங்கே வந்துள்ளதை அடியொற்றிக் காவியக் கவிகள் இவ்வாறு பாடியுள்ளனர்.

வானோர் கேள்விச் செல்வம் துய்க்க
வயிற்று ஓர் கிளை தந்தாள். (இராமா:2: 5: 69)

கோசலையை இது இவ்வாறு குறித்துள்ளது. கிளை என்றது இராமனை. இராமபிரானுடைய குண நலங்களையும் வீர சரிதங்களையும் செவி அமுதாக நுகர்ந்து தேவர்கள் பெரு மகிழ்வடைந்துள்ளனர். அவ் வுண்மையை இவ் வண்ணம் கவி உணர்த்தி யுள்ளார். உள்ளம் உவந்து தெளிந்து கொள்ளக் கேட்பதே நல்ல கேள்வி.

அவித்தஜம் புலத்தவர் ஆதி யாயுள
புவித்தலை உயிர்எலாம் இராமன் பொன்முடி
கவிக்கும்என்று உரைக்கவே களித்ததால் அது
செவிப்புலம் நுகர்வதுஓர் தெய்வத் தேன்கொலாம்?
(இராமா: 2-10-23)

இதில் செவிச் சுவையை உணர்ந்து உவந்து கொள்கிறோம். பொருள் நயங்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க.

அரிய பெரிய புதிய இனிய உணர்வு நலன்களைக் கேட்ட போது உள்ளமும் உணர்வும் உவகை மீதூர்ந்து பரவசம் அடையும் ஆதலால் செவிச் செல்வம் உயிர் அமிர்தமாய்ச் சுவை விருந்து உய்தி புரிகிறது.

பொழியும் கருணைப் பெருவெள்ளப்
புணரி பெருகி அலைஎறியப்
பொங்கி எழுந்த பெருங்காதற்
புளகம் போர்ப்பப் போதுசெயும்
விழியும் மனமும் குளிர் தூங்க
விரிநீர்ச் சடிலத்து ஒருவன்இரு
வீணைக்கு உதவும் திருச்செவிகள்
விருந்தாட்டயர விரைகொழித்து
வழியும் கொழுந்தேன் பிழிந்திட்டு
மதுர அமுது குழைத்தூற்றும்
மழலை ததும்பப் பழமறையை
வடித்துத் தெளித்த வார்த்தைஒன்று
மொழியும் பவளச் செங்கனிவாய்
முத்தம் தருக முத்தமே

மும்மைத் தமிழ்தேர் கந்தபுரி
முருகா! முத்தம் தருகவே!
(முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்)

தனது அருமைத் திருமகன் முருகனிடமிருந்து ஒரு மறையின் உபதேசமொழியைக் கேட்டுச் சிவபெருமான் உளம் மிக மகிழ்ந்துள்ள நிலையை இது உணர்த்தியுளது. **செவிகள் விருந்து** அயர **வார்த்தை ஒன்று மொழியும்** என்றது சொன்னவாயும் கேட்ட செவியும் என்ன நிலையின! என்பதை இனிது காண வந்தது.

கலை நலம் கனிந்த இனிய உணர்வுரையே கேள்வி. அதுவே உயிர் அமுதமாய்த் திருமலிந்துள்ளது; ஆகவே **செவிச் செல்வம்** என அது வியந்து கூற நேர்ந்தது.

அறிவு நலம் இல்லாத வெறுமொழிகளைக் கேட்பது கேள்வி ஆகாது. உயிர்க்கு உறுதியான உயர்நலங்களை ஓர்ந்து கொள்வதே ஆர்ந்த கேள்வியாம். கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என வளர்ந்து கிளர்ந்து வந்துள்ள அதன் நாட்டமும் நலனும் நன்கு அறிந்து கொள்ளலாம். உயிர் துயர் நீங்கி உய்ய உரிய செய்ய கேள்வியே மெய்யான திரு; மேலான தெய்வ அமுதம்.

மறையுரையும் காமத்து உரையும் மயங்கிப்
பிறவுரையும் மல்கிய ஞாலத்து—அறவுரை
கேட்கும் திருவுடை யாரே பிறவியை
நீக்கும் திருவுடை யார். (அறநெறிச்சாரம் 1)

பழி பாவங்கள் படிந்த இழிமொழிகளே எங்கணும் நிறைந்துள்ளன. அத்தகைய இவ்வுலகில் வித்தகமான புகழ் புண்ணியங்கள் பொருந்திய விழுமிய உரைகளைக் கேட்பதே நலமாம்; அதுவே பிறவித் துயரை நீக்கிப் பேரின்பம் தரும்; அந்தச் செவிச் செல்வம் உடையவரே சிறந்த தெய்வத் திருவாளராய் உயர்ந்து விளங்குவார் என **முனைப்பாடியார்** இப்படிப் பாடியிருக்கிறார்.

மேலோர் கூறுகிற உறுதி நலங்களை ஓர்ந்து கொள்வதே செவி பெற்ற பயனும். இருமையும் பெருமையாக

இன்பம் தருகிற அருமைச் செல்வம் கேள்வியே. அந்த ஞானத் திருவை நலமுடன் பேணிக் கொள்க.

கேட்டல்முதல் நான்காலே கேடிலா நாற்பதமும்
வாட்டமற எமக்கு வாய்க்கும்நாள் எந்நாளோ?

ஞான உபதேசமான கேள்வியை நாடித் தாயுமானவர் வாடியுள்ள வாட்டத்தை இதில் உணர்ந்து கொள்கிறோம். ஆன்ம இன்பம் அருளுவது அறிய வந்தது.

அனுபூதிமான்களான பெரியோர்கள் கூறுகிற அருளுபதேசம் மருளை எல்லாம் நீக்கி மாசறு காட்சியை அருளும் ஆதலால் அந்த அதிசய பாக்கியத்தைத் தத்துவ வித்துக்கள் எங்கும் துதிசெய்து போற்றுகின்றனர்.

சுருதிகள் ஒரு கோடி சொல்லினும் தோன்றாது;
சொரூபானந்தர் ஓர் சொல்லில் ஆனந்தம் தோன்றும்.

தமது ஞான குருவினிடம் கேட்ட உபதேச மொழியை வியந்து தத்துவராய சுவாமிகள் இவ்வாறு புகழ்ந்து போற்றி உவந்து வாழ்த்தியுள்ளார்.

நல்ல அறிவுரைகளைச் சிறந்த செல்வமாக் கருதி உயர்ந்தோர் யாண்டும்உரிமையுடன் விழைந்து கேட்பர்.

இவ் வுண்மை போசராசன்பால் உணர வந்தது.

சரிதம்.

இந்த அரசன் சிறந்த நீதிமான். உயர்ந்த கலைஞன். உலகம் ஆளும் தலைவனுயிருந்தும் பல மொழிகளையும் பயின்று தெளிந்து கலையுலகில் இவன் ஒரு திலகமாய் நிலவினன். **காளிதாசன், தண்டி, பாணன், பவபூதி, மாகன்** முதலிய கவிஞர்களை அருகே வைத்துக் கலையின் சுவைகளையே உரையாடி நுகர்ந்து உவகை மீதூர்ந்து வந்தான். பலவகையான அரிய நூல்கள் இவனது அவையில் அரங்கேறி வந்தன. புலவர்களின் தகுதியை அறிந்து பொருள்களை மிகுதியும் வழங்கி யருளினன்; கலை வள்ளல் என யாண்டும் இவன் விளங்கி நின்றான். இவனுடைய மதியூகமும் வண்மையும் அதிசய நிலையின. நெய் பெய்த தங்கக் கிண்ணத்தைக் கையில்

ஏந்திக் கொண்டு ஓர் அழகிய மங்கை அரண்மனையின் மாளிகையுள் ஒரு நாள் சோபான வழியே மேல் ஏறிச் சென்ருள். கிண்ணம் கைதவறிக் கீழே விழுந்து படிக் கட்டுகள் தோறும் உருண்டு சென்றது. அந்த நிகழ்ச்சி யை நேரே பார்த்திருந்த இம் மன்னன் அவ் ஒலிக் குறிப் புகளை ஒரு தொடரில் அமைத்தான். டடடம் ட டம் டம் டட டம்ட டம்டம் என அக் கிண்ணம் விழுந்த ஓசையை இவ்வண்ணம் ஓர் அடியில் குறித்து மற்ற மூன்று அடி களையும் ஏற்றபடி பாடி முடித்தருள்க என்று புலவர்க ளிடம் உரைத்தான். கொடுத்த குறிப்பைக் கூர்ந்து நோக்கி நேர்ந்துள்ள நிகழ்ச்சியை ஓர்ந்து வரைந்து **காளிதாசன்** பாடி முடித்தான். அந்தப்புரத்தில் அந்தரங் கமாய் நிகழ்ந்ததை அதி மதியூகமாய் உணர்ந்து பாடிய அந்தப் பாட்டைக் கேட்டு மன்னன் பெரு மகிழ்ச்சி அடைந்தான். கவியில் உள்ள எழுத்துக்களை எண்ணி நூருயிரம் பொன் வீதம் தொகுத்துக் கொடுத்தான். அக் கொடை **அட்சரலட்சம்** என வடமொழியில் இன்றும் வழங்கப்படுகிறது. **அக்கரத்திற்கு ஓர் இலக்கம் அள்ளி அருள் வள்ளல்** என்று மறுபுலங்களிலும் இவன் புகழ் பரவி நின்றது. ஒரு தினம் காளிதாசனது கவியின் சுவையையும் மதிமாண்பையும் வியந்து மகிழ்ந்து தான் வீற்றிருந்த சிம்மாசனத்தை விட்டுக் கீழ் இரங்கி "நீரே இந்த அரியணையில் அமர்ந்திருக்க வுரியவர்" என்று பரிவுடன் உரைத்தான். இப் புவியரசன் இவ்வாறு கூற வே அக் கவியரசன் கண்ணீர் ததும்பக் கனிந்து நோக்கி "அரசர் பெரும! நீங்களே அங்கு எழுந்தருளி யிருக்க வேண்டும்: உங்கள் அன்பு ஆகிய அரியணையே எனக் குப் பேரின்ப நிலையம்" என்று ஆர்வம் மீதூர்ந்து மொழிந்தார். இருவருடைய நீர்மை சீர்மைகளையும் ஈண்டு ஓர்ந்து உணர்ந்து உவந்து கொள்கிருேம். கலை நிலைகளில் தலைசிறந்துள்ள மேதைகளின் குணநலன்கள் யாண்டும் சுவை சுரந்து திகழ்கின்றன. கல்வியாளர் களுக்குத் தன் செல்வங்களை வாரி வழங்கினன் ஆத லால் **பொன்மாரி பொழிகின்ற புனித மேகம்** என மாந்தர் யாவரும் இவ்வேந்தனை வியந்து புகழ்ந்து வந்தனர்.

"போசமக ராசன் புயலாகிப் பொன்மாரி
நேசமுடன் பெய்கின்ருன் நீணிலத்தில்—நீச
வறுமைக் குடைமூட வாடி அயர்ந்து
சிறுமைக் குடைகின்றேன் சேர்ந்து."

வறுமையால் மறுகி வந்த ஒரு புலவர் இவ்வாறு இவன் எதிரே பரிவுடன் பாடினர். பாடவே பொருளை வாரிக் கொடுத்து, "என் கொடையால் நும் குடை உடைந்து போயது; நீர் இனி உவந்து போய் வாழலாம்" என்று வாழ்த்தி விடுத்தான். இன் சொல்லும் ஈகையும் இயல்பாய் அமைந்திருந்தமையால் உலகம் இவன் வசமாய் ஒழுகி வந்தது. நுணங்கிய கேள்வியும், இணங்கிய கேண்மையும், பிணங்காத வண்மையும், வணங்காத திண்மையும், உணங்காத உண்மையும் இவனுடைய குணங்களாய்க் குலாவி வந்தன. அரச போகங்களை மறந்து புலமை இன்பங்களையே இவன் நுகர்ந்து மகிழ்ந்தான். நல்லோர்களுடைய கேள்விகளை நயந்து கேட்டுத் தன் நாட்டில் கல்லாதவர்களே இல்லாதபடி நாட்டினன். புவிச் செல்வங்களை மதியாமல் செவிச் செல்வம் ஆகிய கேள்விச் சுவைகளையே எவ்வழியும் செவ்வையாக மதித்துப் போற்றினன். **செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம்; அச்செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை** என்பதை இக் குலமகன் உலகம் அறிய உணர்த்தியருளினன். விழுமிய செல்வம் இவனல் விளங்கி நின்றது.

**உய்வைத் தரலால் உயர்கேள்வி மானிடர்க்குத்
தெய்வத் திருவே தெளி.**

நல்லதை நாளும் கேள்.

---

412. பண்டு செவிக்குணவே பார்த்தனரேன் நைமிசத்தார்
கொண்டபசி நீத்தும் குமரேசா—கண்ட
செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும். (உ)

இ-ள்

குமரேசா! நைமிசவாசிகள் உணவு உறக்கங்களை

விடுத்தும் கேள்விகளை ஏன் செவி மடுத்தார்? எனின், செவிக்கு உணவு இல்லாத போழ்து வயிற்றுக்கும் சிறிது ஈயப்படும் என்க.

செவி உணவு சிறந்தது என இது கூறுகிறது.

செவிக்கு இனிய உணவு ஆகிய நல்ல கேள்வி கிடையாத பொழுது வயிற்றுக்கும் சிறிது உணவு கொடுக்கலாம்.

உம்மை அதன் புன்மை தெரிய நின்றது.

மேல், செல்வத்தினும் கேள்வி சிறந்தது என்றார்; இதில், உணவினும் அது நனி உயர்ந்தது என்கின்றார்.

பெருமையும் உறுதியும் தருதலால் திருவும் உணவும் என உரிமையுடன் அது கருத வந்தது.

மக்கள் விழைந்து கொள்ளும் நுகர்வுகளினும் கேள்வி உயர் நலம் உடையது என்றது ஏன்? எனின், அதன் நீர்மை சீர்மைகளை உணர்ந்து தெளிய.

உணவு = சோறு முதலிய சுவைப் பண்டங்கள்.

உண்ணப் படுவது உணவு என வந்தது.

கேட்கப் படுவது கேள்வி என அமைந்தது.

முன்னது உடல் உணவு:

பின்னது உயிர் உணவு.

இருவகை ஊட்டங்களும் ஈண்டு நாட்டமா யறிய வந்தன. உண், கேள் என்னும் வினைமுத லடியாய் இவை விளைந்து வந்துள்ளன.

**செவிச் செல்வம், செவிக்கு உணவு** எனக் கேள்வியை உவந்து பாராட்டி இவ்வாறு உணர்த்தி வருவது, அதன் நிலைமை தலைமைகளை நினைந்து நெஞ்சம் தெளிந்து அதனை விழைந்து பேணி உயர்ந்து கொள்ளவே.

செவியால் கேட்கப் படும் பொருள் உரைகளை உணவு என்று குறித்தது, பயனும் நயனும் சுவையும் வியனைத் தெரிய. செல்வமும் உணவும் மனித வாழ்வின்

பெரிய தேவைகளாய்ப் பெருகி வந்துள்ளன. அவற்றி னும் கேள்வி அதிகமான தனியுரிமை யுடையது. உடலை வளர்த்து வருகிற உணவினும் உயிரை வளர்த்து வருகிற கேள்வி எத்துணை மகிமை வாய்ந்தது! எத் தகைய நலம் உடையது! உய்த்து உணர வேண்டும்.

உணர்வுரை உணவினும் உயிர்க்கு உயர்கதி யுறு வது. உணவு வாய் வழியே புகுந்து வயிற்றில் அமர்ந்து உடலுக்குச்சிறிது வலிமையைத்தந்து உடனே ஒழியும். உணர்வுரை செவி வாயிலாகச் சென்று உள்ளத்தில் நின்று ஒளி மிகுந்து உயிர்க்கு இனிய உறுதிநலனை என்றும் நிலையாய் நன்கு புரிந்தருளும்.

உணர்வு நலனும் உணவு நிலையும் உணர வந்தன.

சிறிது வயிற்றுக்கும் என்றதனல் செவிக்கு உணவு பெரிதும் இடவேண்டும் என்பது தெரிய வந்தது. கேள்வி பெருகப் பெருக உள்ளம் நலமாய் உணர்வு தெளிவாய் உயிர் ஒளி மிகப் பெறுகின்றது.

உடலுக்கே உணவை யூட்டி உணர்வு கெட்டு வரு கின்ற உலகினுக்கு, உயிருக்கு உரிய இனிய உணவை எடுத்துக் காட்டி அதனை உண்டு உவந்து வியனுயர் உயரும்படி அடிகள் இவ்வாறு உணர்த்தி யுள்ளார்.

வயிற்றுணவைச் சுருக்கிச் செவி உணவைப் பெருக்கி வருபவர் தேகசுகமும் சீவஒளியும் மேவி மகிழ் கின்றனர். ஞான போனகம் நன்கு தெரிய வந்தது.

உயிருக்காகவே உடல் அமைந்திருக்கிறது. செவி உணவு துய்க்கவே வயிறுணவு வாய்ந்துள்ளது. கேள் வியை நன்கு கேட்டு நலமாய் வாழவே உடலுக்குக் கொஞ்சம் ஊட்டம் போட வேண்டும் என்பார் வயிற் றை இங்ஙனம் இனமாக் காட்ட நேர்ந்தார்.

ஈய என்றது வயிற்றின் இழிவு தோன்ற வந்தது.

ஈ என் கிளவி இழிந்தோன் கூற்றே. (தொல் காப்பியம்)

உயர்ந்தவன் எதிரே இழிந்தவன் ஒடுங்கி நின்று பல்லைக் காட்டி யாசிக்கும் சொல்லைக் காட்டியது, வயிற்

றின் புன்மையைக் கூர்ந்து கண்டு செவி உணவின் நன்மையை ஓர்ந்து தேர்ந்து தெளிந்து கொள்ள.

வாய் என்னுது வயிறு என்றது, நோய் செய்து வருகிற அதன் நிலையை நோக்கி. உயர்ந்தோர் வாயிலிருந்து வருகின்ற சிறந்த உறுதி நலங்களை உவந்து கேட்டுக் கொண்டு இருக்கும் போதே பசியை உண்டாக்கி அந்த அரிய கேள்வியை முழுதும் இனிது கேளாதபடி கொடிய கேடு புரியும் பெரிய பீடை யுடையது ஆதலால் வயிற்றின் கொடுமை இங்கே கடுமையா அறிய வந்தது. வயிறோடு வாழ்வது துயரமுடையது.

ஒருநாள் உணவைஒழி என்ருல் ஒழியாய்
இருநாளுக்கு ஏல் என்ருல் ஏலாய் — ஒருநாளும்
என்நோ அறியாய் இடும்பைகூர் என்வயிறே!
உன்ேறு வாழ்தல் அரிது. (நல்வழி 11)

வயிற்ருேடு மக்கள் போராடி வருகிற புலை நிலையை ஔவையார் இவ்வாறு குறித்துக் காட்டி யிருக்கிருர். பாட்டில் பொதிந்துள்ள குறிப்புகளையும் இயற்கை நிலைகளையும் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். பசித் துயரால் பலமுறையும் அவர் வாடி வருந்தியுள்ள அனுபவங்கள் இதில் நாடியறிய வந்துள்ளன. என் வயிறே! என்று எதிரே அழைத்து அதன் அல்லலைத் துலக்கியுள்ளார்.

செவிக்கு இனிய உணவாகிய கேள்வியை நுகர்ந்து உணர்வொளி மிகுந்து உய்தி பெறவே இந்த மனித உடல் மருவியுளது. அரிய அந்த உணவைப் பருகி வருங்கால் இடையே வயிறும் பங்காளியாய் வந்து சேர்கிறது. பாக முறையில் அதற்கு உரியதைச் சிறிது கொடுத்து விட்டு வேறு எதற்கும் இடம் கொடாமல் செவிச் செல்வத்தைப் பெற்றுச் சிறந்து வருக.

உண்வை நாளும் விழைந்து நுகர்ந்து மாந்தர் யாண்டும் வயிற்றை வளர்த்து ஆழ்ந்த சிந்தனை யாதுமின்றி வாழ்ந்து வருகின்றனர். செவியுணவாகிய அரிய கேள்வியை இழந்து வாயுணவையே நச்சி வருபவர் எவ்வழியும் மிருக இனங்களாய்ப் பெருகி வருகின்றனர்.

கேள்வி வழியே அறிவு வளர்ந்து வருகிறது; அத ஞல் ஆன்மா உயர்ந்து திகழ்கிறது. கேளாமையால் மடமையிருள் மண்டி வருகிறது; வரவே அந்த வாழ்வு பீடை படிந்து மூடமாய்த் தாழ்ந்து கழிகின்றது.

உடலுக்கு உணவு எவ்வளவு அவசியமோ அவ்வ ளவு அவசியம் உயிர்க்குக் கேள்வி என்னுமல் அதனி னும் பெரிதும் தேவையாம் எனக் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்க வுரியது. பயன் உணர்ந்து பலன் பெற உயர் மொழிகள் உறுதியாய் உதவி புரிகின்றன.

ஊனப் பசிக்கு உணவு: ஞானப் பசிக்குக் கேள்வி.

கேள்வி உயிர் அமிர்தம் ஆதலால் உடலுணவினும் அதனை உவந்து பேணிக் கொள்ள வேண்டும். உணர் வின் சுவை உயர்ந்து இனிமை சுரந்து வருதலால் செவி உணவு அதிசய இன்பமாய்த் துதி செய்ய வந்தது.

> செவிக்குத் தேன்என இராகவன் புகழினைத் திருத்தும்
> கவிக்கு நாயகன். (இராமா: 5-2-132)

இராமபிரானுடைய கீர்த்திகள் செவிக்குத் தேனாய் இனித்து வரும் என்பதை இதனல் அறிந்து கொள்கி ரேம். அருள் பொறை அடக்கம் அமைதி வாய்மை தூய்மை வண்மை திண்மை ஆண்மை ஆற்றல் வீரம் மானம் முதலிய மேன்மையான குணநலன்கள் அக் கோமகனிடம் குடிகொண்டிருந்தன ஆதலால் அந் நீர்மை களைக் கேட்கும் தோறும் மக்கள் தக்கவராய் உயர்ந்து மிக்க மேன்மைகளை என்றும் பெற்று வருகின்றனர்.

செவிக்கு உணவு எது? அது உயிர்களுக்கு என்ன செய்து வரும்? என்பதை இன்னவாருன காட்சிகளால் ஓரளவு அதனை நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

கல்வியாளரினும் கேள்வியாளர் மேன்மையாள ராய் விளங்கி வருகின்றனர். பல மேதைகளுடைய உணர்வுரைகளைச் செவியுணவாகப் பருகி வருபவர் அதிசய மேதைகளாய்ப் பெருகி மிளிர்கின்றனர்.

சிதைபொருள் இன்றிச் செந்நெறி தழீஇ
உதையத்து இவரும் ஒண்சுடர் போல
எல்லா மாந்தர்க்கும் இருள்அற விளங்கும்
செல்லாறு இதுஎனச் சொல்லுதல் வேண்டிச்
சாலவை நாப்பண் சலத்தில் தீர்ந்த
கேள்வி யாளரை வேறுதெரிந்து அமைத்து
வாதம் வேண்டிய சாலங்காயன். (பெருங்கதை 5 : 7)

**யூகி, சாலங்காயன்** என்னும் இரண்டு மதிமந்திரிகள் தலைமையான புலமைத் துறைகளைக் குறித்துத் தருக்க வாதம் செய்ய நேர்ந்தனர். அந்த அவையில் அப்பொழுது நீதிபதிகளாய் அமர்ந்து தீர்ப்புக் கூற நேர்ந்தவர்களை இதில் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். **கேள்வியாளரைத் தெரிந்து வேறு அமைத்து** என்றதனால் கேள்வித் திறத்தின் மதி நலத்தையும் அதனை யுடையாரது அதிசய மாட்சிகளையும் அறிந்து கொள்ளலாம்.

இத்தகைய வித்தக விவேகங்களை அருளி வருதலால் எத்தகையோரும் கேள்வியைச் செவிச் செல்வமாக நுகர்ந்து சிறந்த மேதைகளாய் உயர்ந்து விளங்குகின்றனர். கல்வியினும் கேள்வி எளிதே ஒளி தருகிறது.

கற்றலின் கேட்டல் சிறப்புடைத்தால்; கற்பானுக்கு
உற்ற இளமைபொருள் ஊக்கம்நோய் இன்மைகுலம்
மற்றின்ன வேண்டுமால், வேண்டாநூல் வல்லார்வாய்
முற்றுறக்கேட் பார்க்கு முயன்று. (இன்னிசை)

கேள்விநலனை இது கிழமையாய் விளக்கியுளது.

பசியையும் மறந்து மேலோர் கேள்விகளை விழைந்து கேட்பர். அவற்றால் அவர் உயர்ந்து திகழ்வர்.

இவ்வுண்மை நைமிசவாசிகள்பால் அறிய வந்தது.

## சரிதம்.

நைமிசவாசிகள் என்பவர் **நைமிசம்** என்னும் இனிய வனத்தில் இருந்தவர். சிறந்த கல்வியறிவும் உயர்ந்த விரத ஒழுக்கங்களும் உடையவர். புனிதமான இனிய இடத்தில் தனியே இருந்து தவம் புரிய விரும்பிய முனி

வர் சிலர் ஒருமுறை பிரமனை அணுகினர்; ஞான யோகங்கள் பயில நல்ல தலம் ஒன்றைச் சொல்லியருளும்படி எல்லாரும் அயனைத் தொழுது வேண்டினர். அவர் விருப்புடன் ஒரு தருப்பையை எடுத்து வட்டமாகச் சக்கரம் போல் வளைத்து உருட்டி "இது போய் நிற்கும் இடமே நிவிர் இருந்து வாழ இனிய தலமாம்" என்று இயம்பி விடுத்தார். அது உருண்டு போய் மேருவின் தென்பால் விழுந்தது. நேமி நின்ற இடம் ஆதலால் அதற்கு **நைமிசம்** என்று பேர் வந்தது. நீர்வளமும் நில நலனும் குளிர் மரங்களும் நிறைந்த அந்த வனத்தில் ஞான சீலர் பலர் குடி எறினர். **சவுனகர், கண்ணுவர், சுமந்து, கவுதமர், கற்கர், முற்கலர், போதாயனர், உரோமசர்** முதலிய மாதவர்கள் யாவரும் அங்கே ஆதரவுடன் அமர்ந்து கலைஞானங்கள் பயின்று, தவயோகங்கள் புரிந்து வந்தனர். எங்கணும் குளிர்பொழில்கள் சூழ்ந்திருந்தமையால் அந்த வனம் பலவகை நலங்கள் மலிந்து விழுமிய நிலையில் எழில் மிகுந்திருந்தது.

கலைபயின் றிடலால்,வெண்மைகாட்டிய மெய்யால்,அன்னம்
குலவிய நடையால்,பூமேல்கொள்ளலால்,குழைகள் தம்மால்,
நிலவுநான் மறையோர் தம்மை நீங்கிடாது இருத்தலால்சீர்
நலமிகு நைமிசம் தான் நாமகட் பொருவு மாதோ. (1)

விண்டுரத் திருத்த லானும் விரிந்தபூ வாசத் தானும்
மண்டலத் துதித்த லானும் மதியொடு தோன்ற லானும்
அண்டர்வை யகத்து ளோருக்கு ஆக்கம் உண்டாக்கலானும்
தண்டலை நெருங்கு நைமி சாரணியம் பொன் ஆமால். (2)

உலகெலாம் பெற்றே பச்சை உடம்பொடு விளங்க லானும்
நிலைபெறு முதலி னேரே நின்று வாதாட லானும்
மலைமக வாகை யானும் வண்டிரி மலர்க்கண் ணானும்
தலைமைசேர் உமையை நேராம் நைமிசாரணியம் தானே.
(மச்சபுராணம்)

சரசுவதி, இலட்சுமி, உமாதேவியாரைப் போல் அந்த வனம் அழகிலும் வளத்திலும் ஞானத்திலும் தலை சிறந்திருந்தது என இங்ஙனம் சிலேடை அணியால் வருணித்துள்ளார். இத்தகைய உத்தம தலத்தில் வாழ்ந்

திருந்த இவர் பல கலைகளையும் தெளிவாக ஆய்ந்து வந்தார். தேர்ந்த கல்வியாளரா யிருந்தும் சூதமுனிவர் முதலிய மாதவர்களிடம் நாளும் அரியபல உறுதிநலங்களை விழைந்து கேட்டார். கேள்வியை அரிய பெரிய ஒரு ஞானவேள்வியாப்பேணி எவ்வழியும் உரிமையுடன் கருதித் தரும நீர்மைகளில் தழைத்து விளங்கினர்.

முப்புரி நூலர்; குண்டிகைக் கரத்தர்;
மோனமுத் திரையர்; அஞ்செழுத்தே
வைப்பெனு மனத்தர்; பூதி கண்டிகையும்
வயங்கிய நயங்கொளும் வடிவர்;
இப்புவ னத்தில் உயிரனைத்தும் தம்
இன்னுயிர் என்னவே பேணும்
தப்பிலா நெறியன் புடைய அந்தணர்;ஆ
சாரசீலத்தர்; மெய்த்தவத்ததர். (1)

குடைகொளும் கரத்தர்; செந்துவின் குலங்கள்
குவலயத் திறுமெனக் குந்தும்
நடைகொளும் பதத்தர்; ஐவகை யிடத்து
நான்றிடும் உரோமத்தர்; நார்ப்பட்டு
உடைகொளும் மருங்குல் உடையர்; பொற் புரிபோல்
ஒளிர்தர நீண்டசெங் குஞ்சிச்
சடைகொளும் முடியர்; தத்துவ ஞானத்
தன்மையர்; நன்மை ஆதரிப்பார். (சிவரகசியம்)

இவ்வாறு நீர்மை சீர்மைகளில் நிலவி நின்றவர் கல்வி கேள்விகளையே உறுதிநலங்களாகக் கருதி ஒழுகினர். ஒருமுறை சூதமுனிவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தவர் உணவையும் மறந்து விட்டார். கேள்வியையே விழைந்து கேட்டார். செவிக்கு உணவு இல்லாத போது தான் வயிற்றுக்கும் சிறிது ஈயப்படும் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

வாயுணவே நாடி வயிறு வளர்த்துவரின்
பேயுணர்வே நீடிப் பெருகுமால்—நாயுணவா
நீண்டு கழியாமல் நித்தலும் கேள்விநலம்
பூண்டு தெளிக புலன்.

**உணர்வின் ஒளிகாண் உயர்கேள்வி; ஆன்ம**
**உணவா நுகர்க உவந்து.**

செவி உணவு சீவ அமுதம்.

---

413. திண்டோட் சனமேயன் தேர்ந்துயர்ந்தான் கேள்விஒன்று
கொண்டதனல் என்னே குமரேசா—கொண்ட
செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து. (ங)

இ-ள்.

**குமரேசா!** கேள்வியால் சனமேசயன் ஏன் சிறந்த மேன்மை எய்தி உயர்ந்தான்? எனின், செவி உணவின் கேள்வி உடையார் அவி உணவின் ஆன்றார் ஒடு நிலத்து ஒப்பர் என்க.

கேள்வியாளர் தேவர் ஆவர் என்கிறது.

செவிஉணவு ஆகிய கேள்வியை உடையவர், அவி உணவினை யுடைய அமரரோடு இணையாய் இந் நிலவுலகத்தில் தலைமையா நேர்ந்துள்ளனர்.

**கேள்வி செல்வத்துள் செல்வம்;** உணவினுள் அரிய உயிர் உணவு என முன்பு அறிந்தோம்; இதில் அதை உவந்து உண்பவர் உம்பராய் உயர்ந்து ஒளி மிகுந்து சிறந்து விளங்குவர் என்பதை உணர்கின்றோம்.

கல்வியறிவிற்சிறந்த பெரியோர்கள் கூறுகிற நல்ல உறுதி மொழிகளை நயந்து கேட்பதே கேள்வி ஆதலால் அந்த இயல்பும் செயலும் இனமும் சுவையும் தெரியச் **செவி உணவு** எனக் கேள்வியை விளக்கி அருளினர். வாய்க்கு உணவு போன்று செவிக்குக் கேள்வி.

வாய், உணவைக் கொள்ளாது ஒழியின் உடல் மெலிந்து தளர்ந்துபடும்: செவி, கேள்வியை இழந்து விடின், உணர்வு வலியிழந்து போம்; உள்ளம் தெளிவு ஒழிந்து உழலும்; உயிர் நலிவுழந்து நைந்து நிற்கும்.

உயிர் வாழ்வு உயர்வாய் ஒளி பெற வேண்டுமாயின் கேள்வியை எவ்வழியும் வளமா நுகர்ந்து வர வேண்டும். செவிநுகர்வு சீவ அமுதம் ஆகிறது.

கேளார் என்பது பகைவர்க்கு ஒரு பெயர்.

கேளிர் என்பது உறவினரைக் குறித்து வரும்.

நல்ல அறிவு நலங்களைக் கேளாதவர் உணர்வு குன்றி உயிர்க்குத் துயராய் வருதலால் அவர் ஆன்ம விரோதிகள் ஆகின்றனர். கேள்வியாளர் அறிவாளிகளாய்உயர்ந்து நெறி நியமங்களோடு நடந்து எவ்வுயிர்க்கும் இதம் புரிந்து வருதலின் தம் உயிர்க்கு அவர் உய்தி நலனைச் செய்து கொள்ளுகின்றனர். சீவரைத் தேவராக்கி வருதலால் கேள்வி எவ்வளவு மகிமை யுடையது! என்பதை இவ்வழி எளிதே தெரிந்து கொள்ளலாம்.

கேள்வி கேட்பது வேள்வி வேட்பதினும் மேல்.

அறம்கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும்
மறம்கேட்டும் வானவர் மந்திரம் கேட்டும்
புறம்கேட்டும் பொன்னுரை மேனிஎம் ஈசன்
திறம்கேட்டும் பெற்ற சிவகதி தானே. (1)

உறுதுணை ஆவது உயிரும் உடம்பும்
உறுதுணை ஆவது உலகுறு கேள்வி
செறிதுணை ஆவது சிவனடிச் சிந்தை
பெறுதுணை கேட்கின் பிறப்பில்லை தானே. (திருமந்திரம்)

[illegible] நின்ற உயிர்களுக்குக் கேள்வி உய்தி தரும் வகைத் திருமூலர் இவ்வாறு கூறியிருக்கிறார். குறிப்பு மொழிகள் கூர்ந்து ஓர்ந்து சிந்திக்கத் தக்கன.

செவியுணவும் அவியுணவும் மனிதர் தேவர்களோடு முறையே இங்கு உரிய வந்துள்ளன. வேள்வித் தீயில் மந்திர முறையோடு பெய்கின்ற நெய்க்கு அவி என்று பெயர்; அது வானவரை மகிழ்விக்கும் ஆதலால் அவர்க்கு உரிய இனிய உணவு என நேர்ந்தது.

அவி சொரிந்து ஆயிரம் வேட்டல். (குறள் 259)

அவியின் நிலைமையை இதனால் அறியலாகும்.

அவி உணவு= தேவர் உவந்து உண்ணும் உணவு.

அவி யுணவினோர் புறம் காப்ப. (புறம் 377)

அவி யுடன் பெய் தோர். (பரி பாடல் 5)

அவியை நாய் வேட்டது என்ன. (இராமா. 3-8-69)

இவற்றுள் அவி குறித்து வந்துள்ளமை காண்க.

சருவும் பலியும் நிவேத்தியமும் அமுதும்
அவியும் தெய்வ உணவு ஆகும்மே. (பிங்கலந்தை)

கேள்வி மறையோர் கிளைமகிழ்தல் என் வியப்பாம்
வேள்வி விறல்வேந்தன் தான்வேட்ப— நீள்விசும்பின்
ஈர்ந்தார் இமையோரும் எய்தி அழல் வாயால்
ஆர்ந்தார் முறையால் அவி. (புறப்பொருள்)

செவிவயின் அமிர்த கேள்வி தெவிட்டினர் தேவர் நாவின்
அவிகையின் அளிக்கும் நீரார் ஐயிரு கோடி சூழக்
கவிகையின் நிழற் கற்பின் அருந்ததி கணவன் வெள்ளைச்
சிவிகையின் அன்னம் ஊரும் திசைமுகன் என்னச் சென்றான்.
(இராமா: பால, எழுச்சி 71)

செவியுணவினையுடைய சான்றோரையும், அவி யுண விளையுடைய ஆன்றோரையும் ஈண்டு ஒருங்கே கண்டு உள்ளம் உவந்து கொள்கிறோம். கவிகளில் கனிந்துள்ள சுவைகளைக் கருதி யுணர்பவர் கேள்வியாளரின் அதிசய மகிமைகளைத் தெளிவா அறிந்து வியந்து கொள்வர்.

ஆன்றோர் என்றது இங்கே தேவர்களைக் குறித்து நின்றது. அறிவால் நிறைந்த மேலோர்கள் ஆதலால் ஆன்றோர் என வான்தோய் புகழுடன் தெரிய நேர்ந்தனர்.

ஆன்றல் = நிறைதல். அறிவு ஒழுக்கம் அருள் அமைதிகளால் நிரம்பியுள்ள பெருந்தகையாளர் இவ் வாறு பேர் பெற்றுள்ளனர். அரிய சீரும் பெரிய சிறப்பும் இப்பேரால் தெரிய வந்துள்ளன.

அருமுனி மரபின் ஆன்றவர். (பரி பாடல் 10)

ஆன்றவர் உணர்த்திய. (இராமா: 2-11-5)

ஆன்றமை கேள்வியர். (இராமா: 6-2-9)

ஆன்ரேன் அவ்வழித் தோன்றினன். (பிம்ப சாரம்)

இவை ஈண்டு எண்ணவுரியன. ஆன்ரேன் என்று புத்தரை இவ்வாறு குறித்திருத்தலால் இந்தச் சொல் லின் சிறப்பை ஓர்ந்து கொள்ளலாம். பூரணமான ஞான சீலங்களால் பொலிந்து உயர்ந்துள்ளமையால் அந்தக் காரண நிலை இந்தப் பேரால் காண வந்தது.

கலை ஞானங்கள் நிறைந்த பெரியோர்களுடைய வாய்க்கேள்வியால் அறிவு நலன்கள் பெருகி வருகின் றன. வரவே உறுதியுண்மைகளை உணர்ந்து தரும சீலங் கள் மருவி மனிதன் புனிதனாய் உயர்ந்து உய்தி பெறு கிருன். செவிநுகர்வால் உயிர் உயர்வாய் வருகிறது.

தெளிந்த மேலோர்களின் மொழிகள் உணர்வின் ஒளிகளை அருளி வருதலால் உயர்ந்த இன்பங்கள் சுரந்து திகழ்கின்றன. திகழவே எங்கும் அதிசய இன் பங்களை நுகர்ந்து அறிஞர் மகிழ்ந்து வருகின்றனர்.

தவலரும் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயின் காண்பாம் அகல்வானத்து
உம்பர் உறைவார் பதி. (நாலடியார் 137)

கேள்வியால் விளைந்து வரும் இன்ப நிலையை இது இனிது விளக்கியுளது. சிறந்த குண நலன்கள் நிறைந்த அறிஞர்கள் கூடி உரையாடி மகிழ்வதில் உளவாகும் இன்பங்களைப் போல் தேவருலகிலும் கிடையாது என்ற தனல் கேள்விச் சுவையின் ஞான நீர்மையையும் அதிசய மேன்மையையும் அறிந்து கொள்கின்ரும்.

தேக போகங்களே அங்கு நிறைந்துள்ளமையால் ஆன்ம போகமான கேள்வியின் இனிமையை இங்ஙனம் பாராட்டிக் கூறினர். அரிய நுகர்வு அறிய வந்தது.

உணர்வின் சுவையாய்ப் பெருகி உயிர்க்கு உறுதி நலனை அருளி உய்தி புரிந்து வருதலால் கேள்வி அதிசய நிலையில் வியந்து துதி செய்ய வந்தது.

உற்ற உணர்வை உயர்த்தி ஒளிசெய்து
பெற்ற பிறவிப் பெரும்பயனை—முற்றவே
எய்தி மகிழ இனிதுறலால் கேள்வியே
தெய்வ அமுதம் தெளி.

செவியுணவாகிய கேள்வி இவ்வாறு திவ்விய மகிமையைச் செய்தருளுகிறது: ஆகவே உயிர்க்கு அது உய்தி நிலையமாய்த் தெய்வ அமுதமா நின்றது.

மானவரையும் கேள்வி வானவர் ஆக்கும்; இந்த ஞான போனகத்தை நயந்து பேணி எவ்வழியும் விழைந்து நுகர்ந்து யாவரும் தேவராய் உயர வேண்டும்.

சிறந்த கேள்வியாளர் நிறைந்த மேதைகளாய்த் தெளிந்து உயர்ந்த அமரர் போல் ஒளி மிகுந்து விளங்குவர். அவரது உணர்வு ஆன்ம உய்தியை அருளும்.

இவ் வுண்மை சனமேசயன்பால் தெரிய வந்தது.

## சரிதம்

சனமேசயன் என்பவன் பரிட்சித்து மன்னனுடைய அருமைப் புதல்வன். பலகலைகளிலும் வல்லவன். சிறந்த போர் வீரன். பெருங் கொடையாளன். அரசு முறைகளை நன்கு தெரிந்தவன். தன் நாட்டைப் பலவகைகளிலும் வளம் பெறச் செய்து குடிகளை இனிது பேணி இவன் கோமுறை புரிந்து வந்தான். தன்னுடைய தந்தையைக் கார்க்கோடகன் என்னும் நாகம் தீண்டிக் கொன்று விட்டமையால் அந்த இனத்தை மிகவும் இவன் வெறுத்திருந்தான். மனத்தில் மண்டியிருந்த சினத்தினால் உதங்க முனிவரைக் கொண்டு சர்ப்பங்கள் எல்லாம் சாகும்படி ஒரு யாகம் செய்தான். அந்த வேள்வித் தீயில் பல்லாயிரக் கணக்கான பாம்புகள் வந்து பாய்ந்து மாய்ந்தன. நல்ல நீதிமானாயிருந்தும் பகைமை யுணர்ச்சியால் அவ்வாறு தீதுபுரிந்து வருவதைக் கண்டு தேவரும் இரங்கினார். தேவ குருவாகிய வியாழனை இந்திரன் இவன்பால் அனுப்பி இதம் புரிய வேண்டினான். அந்த மதிமான் வந்து அரவின் பிழைகளை மன்னித்தருளும்படி இம் மன்னனிடம் கூறினான். அப் பெரியவருடைய அறிவுரை

களைக் கேட்டதும் இவன் உள்ளம் இரங்கி உடனே வேள்வியை நிறுத்தினான். அன்று முதல் சீவகாருணிய சீலனாய் இவன் சிறந்து விளங்கினான். அவருடைய உரைகள் இவனுக்கு உணர்வொளிகளாய் உறுதி நலங்களை உதவின. உதவவே உயர்வா யுய்தி யுற்றான்.

அவரவர் வினைகளே மற்று அவரவர்க்கு அழிவு செய்யும்;
கவர்படு நாவின் நாகக் கணங்களைக் கனலில் மாய்த்தல்
உவர்படு வேலை ஞாலத்து உற்றதோர் அறன்கொல் அம்ம!
எவரிவை துணிந்து செய்வார் இறைவ! என்றுஇயம்பினனே.

ஆன தன் வேள்வி நீக்கி அடையலர் பரவும் வைவேல்
பூநறுந் தெரியல் மன்னன் பூசனை புரிந்து போற்ற
வானவர் மகுட கோடி மணித்தழும் பிருந்த பொற்றாள்
ஞானநன் மறைவ லாளன் நன்றுவந்து ஏகி னானால். (2)
(பாகவதம், 12-5)

வானவர் குரவரது ஞான மொழிகளைக் கேட்டு இம் மன்னவன் பணிந்து இன்னருள் புரிந்துள்ள நிலைமையை இக் கவிகள் இனிது விளக்கியுள்ளன. இன்னவாறு பின்னரும் மேலோருடைய உறுதி மொழிகளை உவந்து பேணித் தரும நலங்கள் தழுவி வந்தான். தனது மூதாதையருடைய சரிதமாகிய பாரதக்கதையைச் சூத முனிவரிடம் கேட்டு ஆதரம் மீதூர்ந்தான். நுணங்கிய நூல்கள் பல வணங்கிக் கேட்டமையால் குணங்கள் பெருகி வந்தன. இம்மை மறுமைகளின் இயல்புகளைச் செம்மையாகத் தெளிந்தான். உயிரினங்கள் இஞ்ஞாலத்தில் தோன்றிக் காலத்திற்குத் தக்கவாறு கன்மங்கள் புரிந்து களித்துத் திரிகின்றன; இன்பங்களைக் கொள்ளவும் துன்பங்களைத் தள்ளவுமே சீவர்கள் யாவரும் அலைந்து திரிகின்றனர். இன்பம் நல்வினையில் விளைதலால் புண்ணியம் உடையவரே அதனை எண்ணியபடி பெறுகின்றனர் என்னும் உண்மையைக் கேள்விகளால் இவன் நன்கு தெளிந்து கொண்டான். அரச செல்வங்களால் அடைய முடியாத அரிய பெரிய மகிமைகளைக் கல்வி கேள்விகளால் இவன் கண்டு மகிழ்ந்தான். மெய்யுணர்வுடைய மாதவர்களும் இவனை ஒரு தெய்வீக நிலையி

னன் என்று வியந்து புகழ்ந்தனர். செவியுணவின் கேள்வி யுடையார் அவியுணவின் அமரர் போல்வர் என் பதை உலகம் காண இவன் நேரே உணர்த்தி நின்றான்.

**யாவரே யானாலும் ஆன்றமைந்த கேள்வியார்**
**தேவரே யாவர் சிறந்து.**

கேள்வி மனிதனைத் தேவன் ஆக்கும்.

---

414. தேர்ந்தாள்முன் கோதமியும் சித்திரகே தும்கேட்டுக்
கூர்ந்ததுன்பேன் தீர்ந்தான் குமரேசா—சார்ந்துநின்று
**கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்**
**கொற்கத்தின் ஊற்றாம் துணை.** (சு)

இ-ள்

குமரேசா! கல்லாத கோதமியும் கேள்வியால் தேர்ந் தாள்; சித்திரகேதுவும் ஏன் துன்பம் தீர்ந்தான்? எனின், கற்றிலன் ஆயினும் கேட்க; அ∴து ஒருவற்கு ஒற்கத்தின் ஊற்றாம் துணை என்க.

கேள்வி அல்லல்களை நீக்கியருளும் என்கிறது.

கல்லாதவன் எனினும் நல்லோர் கூறுவதை நயந்து கேட்க வேண்டும்; அக் கேள்வி ஒருவனுக்கு மெலிவின் கண் வலிய உதவியாம்.

ஆயினும் என்றதில் உள்ள உம்மை கல்லாமல் கழிந்து நின்ற அந்த இழிவை நினைந்து பரிந்து வந்துள் ளது. உள்ளப் பரிவு வேறு ஒரு உறுதி நிலையை அவனுக்குத் தெளிவாக உணர்த்தியருளியது.

எல்லாரும் இளமையிலேயே வளமையாய்க் கற்றுக் கொள்ள வேண்டும்; கல்லாமல் யாரும் அயர்ந்து நிற்க லாகாது; அவ்வாறு மூடமாய் நின்றால் அது கொடிய பீடையாம்; மனிதப் பிறப்பும் மாட்டுப் பிறப்பாயிழிந்து படும் என்று கல்லாமையால் நேரும் பொல்லாங்குகளை முன்னம் நன்கு போதித்துள்ளார். அந்தப் போதனைகளை உணர்ந்து சாதனை செய்து கொள்ளாமல் பேதைகளாய்

விலகி நின்றவர்க்கு இங்கே இலகுவான ஓர் வழியை நலமாக் காட்டி உறுதியை ஊட்டியிருக்கிறார்.

**கற்றிலன்** என்று ஒருமையால் கூறியது சிறுமை கருதி. கல்லார் பலர் இருக்கலாகாது என்று கருதியுள்ளமையால் பன்மையில் கூசக் கூறினர். கல்லாமல் இழிந்ததோடு கேளாமலும் இழிந்து ஒழிந்து போகலாகாதே! என்று உள்ளம் இரங்கி ஈண்டு இங்ஙனம் உணர்த்தியுள்ளார். அந்த உண்மையை நுண்மையா ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம். ஒன்றை வறிதே இழந்தவன் மற்று ஒன்றையாவது பெற்று உயர வேண்டும் என உரிமையுடன் உறுதிநிலையை அருளியிருக்கிறார்.

அஃது = கேட்ட அந்தக் கேள்வி.

ஆய்தம் இதில் உயிர்போல் ஒலித்து நின்றது.

ஒற்கம் = தளர்வு; தாழ்வு; வறுமை.

ஒல்கி ஒடுங்கி நிற்கும் நிலை ஒற்கம் என வந்தது.

ஒற்கம் வறுமை. (தொல்காப்பியம்: உரி: 64)

ஒற்கம் என்பது உரிச்சொல். அது வறுமையைக் குறித்து வரும் எனத் **தொல்காப்பியனார்** இங்ஙனம் ஒற்கத்தின் நிலையைக் குறித்திருக்கிறார்.

ஒற்கத்துள் உதவியார்க்கு. (கலி, 149)

ஒற்கம் படாமை உணர்ந்தனர். (பெருங்கதை, 4-5)

ஒற்கம் சொலிய. (புறம், 327)

✓ ஒற்கமாம் விழுமம் துன்ற. (இராமா: மிதிலை, 122)

ஒற்கா உள்ளத்து ஒழியான். (மணிமேகலை 16)

ஒற்கம்தாம் உற்ற. (பழமொழி 119)

ஒற்கப்பட்டு ஆற்றார். (பழமொழி 283)

ஒற்கம் இன்று. (நீதிநெறி, 23)

இவற்றுள் **ஒற்கம்** உணர்த்தி நிற்றலை உணர்க.

ஊற்று = ஊன்றுகோல் போல் நின்று உதவிபுரிவது.

ஊன்றுதல் என்னும் தொழிற் பெயர் தல் விகுதி குன்றி ஊற்று என வலிந்து ஊன்றப்படும் கோலை ஈண்டு உணர்த்தி நின்றது. ஆன்ற உறுதி தரும் அமைதியும் ஆதரவும் இனிது தோன்ற அமைந்தது.

தளர்ச்சி யுற்றவர்க்கு ஊற்று நீர் போலவும், ஊன்று கோல் போலவும் தெளிச்சலையும் கிளர்ச்சியை யும் நல்கி அருளும் நல்ல மெய்த்துணை நன்கு தெரிய வந்தது. உற்ற இடரை நீக்கி உதவுவது ஊற்றும் நின்றது. கைகொடுத்துக் காப்பது கருத வுரியது.

"**உறுமகவல் ஒன்று உற்றுழியும் கைகொடுக்கும் கல்வி**" என்றபடி கேள்வியும் உயிர்க்கு உற்ற துணை யாய் உறுதி பயந்து உதவி புரிந்து வரும். அல்லல் நேர்ந்தபோது ஆறுதல் கூறி ஆற்றித் தேற்றியருள்ப வரே உண்மையான இனிய உயிர்த் துணைவர்.

ஒற்கத்தின் ஊற்றும் துணை.
இழுக்கலுடையுழி ஊற்றுக்கோல் அற்றே. (குறள் 415)

இந்த இரண்டையும் இணைத்து எண்ணி நேர்ந் துள்ள நிலைகளின் கூறுபாடுகளைக் கூர்ந்து ஓர்ந்து குறிப்புகளைத் தேர்ந்து தெளிந்து கொள்ள வேண்டும்.

அவலக் கவலைகள் மனித வாழ்வில் மருவி வருகின் றன. அவ்வாறு வருங்கால் எவரும் தளர்ந்து வருந்துவர்; அந்த வருத்தத்தை அறிஞர் அறவுரைகள் அறவே நீக்கி உள்ளம் தெளியச் செய்யும்; ஆகவே கேள்வி சஞ்சலத் தைத் தீர்க்கும் சமைய சஞ்சீவியாய் நின்றது.

கல்லாதவர்க்கும் கேள்வி நல்ல துணையாய் உறுதி யும் ஊக்கமும் அருளி வருதலால் **கற்றிலன் ஆயினும் கேட்க** என்றார். வியங்கோள் விதி முறையில் விளைந்து உயர்ந்த உறுதியை ஊக்கியுளது.

உணற்கு இனிய இந்நீர் பிறிதுழிஇல் என்னும்
கிணற்றகத்துத் தேரைபோல் ஆகார்—கணக்கினை
முற்றப் பகலும் முனியாது இனிதுஓதிக்
கற்றலின் கேட்டலே நன்று. (பழமொழி, 61)

கல்வியினும் கேள்வி நல்லது என இது குறித்துள்ளது.

**நூல்களை ஒருவன் தனியே கற்று வருவது ஓரளவு கல்வியே ஆயினும் யாவும் கற்று வல்ல மேலோர்களிட மிருந்து கேட்கும் கேள்வியே அவனுக்குப் பேரறிவையும் பெருந்தகவையும் தரும். அவ்வாறு செவ்வையாய்க் கேளான் ஆயின் தான் கற்றதையே பெரிதாக எண்ணித் தருக்கி இறுமாப்புறுவான்; அதனால் சிறுமையும் சீரழி வும் நேரும். செருக்கு நேராமல் சீர்மை யுறுவது தேர்க.**

கிணற்றுக்குள் இருக்கும் தவளை தான் கண்ட தண்ணீரையே மேலாக எண்ணிக்கொள்ளும்; வெளியே போய்க் குளம் நதி கடல்களைக் காண நேரின் அது நாணி அடங்கும். காணுதவரையும் வீணே களித்து விரு தாவாய் இழிந்து நிற்கும்.

தான் கற்ற அளவில் நின்று மற்றவர்வாய்க் கேள் வியை முற்றவும் இழந்து உற்றதே உயர்வெனக் களித் துத்திரிபவன் கிணற்றுத் தவளை என நேர்ந்தான்.

**கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பம் தெரியாது.**

**கேள்வியறிவில்லாதவனுக்கு உள்ளத் தெளிவுஉருது.**

இவை முதுமொழிகளாய் மதி தெளிய வந்துள்ளன.

[illegible]ணற்றுநீர்க் கூவலுள் உறையும் மீன்அனார்
[illegible]ற்றநாட் டதன்சுவை விடுத்தல் மேயினர்;
பெற்றநற் பொருளையான் என்று கூறினற்கு
[illegible] அறியக் கூறினேன்.

(சீவகசிந்தாமணி 1176)

கூவலி[illegible] பிறந்த [illegible]லேயே இருந்து [illegible] பார்த்து வர வேண்டும்; [illegible] அறிவுநலம் பெருகி [illegible] உண்மைகள் தெளிய வரும் எனச் **சீவக மன்னன்** இவ்வாறு கூறியிருக்கிறன்.

வெளியேறிப் போய்ப் பலவகை நிலையாரையும் பார்த்து அறிவுரைகளைக் கேட்டு வரவே உணர்வு தெளி வாய் ஒளி ஏறி வருகிறது. அவியுறு வேள்வியால் அமரர் மகிழ்வர்; செவியுறு கேள்வியால் மனிதர் திகழ்வர்.

கேள்வி முயல். (ஆத்திசூடி)

ஔவையார் இவ்வாறு கேள்வியை அறிவுறுத்தி யுள்ளார், முயன்று கொள்ள வுரியது தெரிய வந்தது.

நூல்களை ஒருவன் எவ்வளவு கற்றாலும் கேள்வி அளவே கல்வி ஒளிபெற்று வருகிறது. பயிலும் முறை கள் உள இயல்புகளை நயமாத் தழுவி வந்துள்ளன.

நூல்பயில் இயல்பே நுவலின் வழக்கு அறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்துஅவை அமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்தல் என்றிவை
கடனாக் கொளினே மடம்நனி இகக்கும். (1)

(இளம்பூரணம்)

ஒருகுறி கேட்போன் இருகால் கேட்பின்
பெருக நூலில் பிழைபாடு இலனே. (1)

முக்கால் கேட்பின் முறையறிந் துரைக்கும். (2)

ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்
காற்கூறு அல்லது பற்றலன் ஆகும். (3)

அவ்வினை யாளரொடு பயில்வகை ஒருகால்;
செவ்விதின் உரைப்ப அவ்இரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும். (4)

பிறர்க்குரை இடத்தே நூற்கலப் பாகும்
திறப்பட உணரும் தெளிவி னோர்க்கே. (5)

(நச்சினார்க்கினியம்)

கல்விக்கும் கேள்விக்கும் உள்ள உறவுரிமைகளை இவை காட்டியுள்ளன. நல்ல கேள்விகள் தோய்ந்து வரும் அளவே எல்லாம் வளமாய் வாய்ந்து வருகின்றன.

கல்லார் எனினுமென் கற்றவரைச் சார்ந்தொழுக
வல்லார்க்கு நல்லறிவு வந்துறூஉம்; கற்பனவூழ்
இல்லென்று வாளா இராஅது உறுதியுரை
நல்லார்பால் கேட்க நயந்து. (இன்னிசை)

கற்றிலன் ஆயினும் கேள்வியால் எவனும் உயர்ந்து அறிவாளியாய்ச்சிறந்து விளங்கலாம்; அதனை விழைந்து கேட்டு விழுமியன் ஆகுக என இது விளக்கி யுளது.

உள்ளக் கவலைகளை நீக்கி உறுதிநலன்களை ஆக்கி உயர்நிலைகளை இதமா அருளி வருதலால் கேள்வியை எவ்வழியும் செவ்வையாப் பேணி வருக.

நல்ல கேள்வியால் உள்ளத் தளர்ச்சிகள் நீங்கும்; உணர்ச்சிகள் ஓங்கும்; உயர் நிலைகள் இயல்பாஉளவாம்.

இவ் வுண்மை கோதமிகண்ணும், சித்திரகேதுவின்பாலும் விசித்திர நிலைகளில் அறிய வந்துளது.

சரிதம்.

கோதமி என்பவள் மகத நாட்டிலே உதகம் என்னும் ஊரிலே இருந்த ஓர் உத்தமி. சிறந்த குணநலங்கள் அமைந்தவள். பரிணிதன் என்னும் அறிஞனை மணந்து இவள் மனை வாழ்க்கை புரிந்து வந்தாள். ஒரு புதல்வன் பிறந்தான். அப்பாலன் ஆண்டு ஒன்று நிறையுமுன் கணவன் மாண்டு போனான். இவள் மறுகி வருந்தினாள். பிள்ளையின் நிலைமையை எண்ணி உள்ளம் தேறி உயிர் ஓம்பி நின்றாள். கண்ணும் உயிருமாய் அம்மகனைக் கருதிப் பேணி வந்தாள். ஐந்து வயது நிறைந்த போது அம் மைந்தனும் இறந்தான். இவள் பெருந்துயரடைந்து அழுதலமந்து இறந்த குழந்தையை எடுத்து மார்பில் அணைத்துக் கொண்டு விழிநீர் சொரிந்து அரிய தவசிகளிடம் சென்று தன் பிள்ளையைப் பிழைப்பித்தருளும்படி உள்ளம் உருகித் தொழுது வேண்டினாள். எல்லாரும் புத்தரிடம் செல்லுமாறு சொல்லி விடுத்தார். அந்த அருள் வள்ளலைக் கண்டு அழுது வணங்கி மொழிந்தாள். பிள்ளைப் பாசத்தால் நெஞ்சம் நிலை குலைந்து நிற்கின்ற இவளது பரிதாப நிலைமையை நோக்கி அவர் பெரிதும் இரங்கினர். உண்மையைச் சொன்னால் இவள் உயிர் உடைந்து போவாள் என்று பரிந்து "அம்மா! வருந்தாதே; இறைவன் அருள் புரிந்தால் பிள்ளை பிழைத்துக் கொள்ளும்; கைப்பிடி அளவு கொஞ்சம் கடுகு கொண்டு வா" என்றார். இவள் பெரு மகிழ்ச்சியடைந்து அருகே உள்ள ஊரில்போய் அதனை வாங்கி வருவதாக விரைந்து நடந்தாள். அங்ஙனம் செல்லுங்கால் இவளை அவர்

அழைத்து "இதுவரை சாவு நேராத வீட்டில் அந்தப் பண்டத்தை வாங்கி வர வேண்டும்" என்றார். இவள் கடுகிச் சென்றாள். ஒரு மனையில் போய்க் கடுகு கேட்டாள். அவ் வீட்டார் கொண்டு வந்து கொடுத்தார்; இவள் அதனைக் கையில் வாங்காமல் இந்த இல்லில் யாரேனும் இறந்தவர் உண்டா? என்றாள். பலர் இறந்து பட்டுள்ளமையை அவர் சொன்னார். அக் கடுகைப் பெறுமல் அயல் மனைபோய் வினவினாள். அங்கும் இறந்த நிலையை அறிந்தாள். எங்கே போய்க் கேட்டாலும் அண்ணன் இறந்தான்; தம்பி செத்தான்; தாய் மடிந்தாள்; தந்தை மாண்டான்; பெண்டாட்டி மாய்ந்தாள்; பிள்ளை போயது என இன்னவாறான இழவுகளையே கேட்டாள். இறந்தவரை இல்லாத இல்லமே இல்லை என்பதை ஊர்கள் தோறும் சென்று உணர்ந்து உள்ளம் சலித்து மீண்டாள். புத்தர் முன் வந்து உற்றதை உரைத்தாள். அம் மாதவர் ஆதரவோடு இவள் உள்ளம் தேறி ஆறச் சில உறுதி மொழிகள் புகன்றார். "இவ் வுலகில் யாதும் நிலையாது; எல்லாம் அழியும் இயல்பின; நிலையாமையே எங்கும் நிலையாக வுள்ளது; நாள் கழியுந்தோறும் நாமும் இறந்து கொண்டே யிருக்கிறோம்; இறந்து படுமுன் பிறந்த பயனை அடைந்து கொள்ள வேண்டும்" என இங்ஙனம் உறுதி நலங்களை உரைத்தார். இவள் உள்ளக் கவலை ஒழிந்தாள்; உணர்வு தெளிந்தாள்; பந்த பாசங்கள் நீங்கிப் பரமான்மாவைச் சிந்தித்து வரமான நிலையில் மருவி யிருந்தாள், நூல்களைக் கல்லாதிருந்தும் புத்தர் சொல்லிய போதனையைக் கேட்டு வேதனைகள் நீங்கி இவள் சித்தசாந்தம் அடைந்து சிறந்து விளங்கினாள்.

## சித்திரகேது.

இவன் ஓர் உத்தம அரசன். பல கலைகளையும் நன்கு பயின்றவன். சிறந்த குண நலங்கள் வாய்ந்தவன். நல்ல அழகன். **கிருததுதி** என்னும் அழகிய மங்கையை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து அரசு புரிந்து வந்தான். ஒரு புதல்வன் பிறந்தான். இவன் பெரு மகிழ்

வடைந்து பொருள்களை வழங்கித் தானங்கள் பல செய்தான். எழில்மிகுந்த அம்மகவின்பால் உழுவலன்புடையனாய் உவந்து பேணி வந்தான். வருங்கால் விதிசெய்த சதியால் அந்தப் பிள்ளை இறந்து போயது. இவன் உள்ளம் பதைத்து உணர்வு கலங்கி உயிர் மறுகினான். பிள்ளைப் பாசத்தால் பெருந்துயர் அடைந்து வருந்தி அயருங்கால் அங்கிரா என்னும் அருந்தவர் ஒரு நாள் இவனிடம் வந்தார். உள்ளக் கவலையால் மறுகி வருந்தும் இவனது பரிதாப நிலையை உணர்ந்து உறுதியான சில உண்மைகளை இவன் சிந்தை தெளியப் போதித்தார்.

“தந்தை என்றும் தநயர்கள் என்றும்நற்
சிந்தை அன்பொடு சேர்தலும் தீர்தலும்
நந்து றுந்திரு நன்னதி மேலுற
வந்த நீரும் மணலும் நிகர்க்குமால். (1)

கனவைப் போலவும் கானலின் நீருடன்
தனிசெய் இந்திர சாலத்தைப் போலவும்
மனனின் கற்பனையால் வரும் யாக்கையை
வினையின் கட்டற மெய்எனற் பாலதோ? (2)

சேயரும் பொருள் செல்வம் இவைஎன
நேயம் வைக்கின் நிகரில் வெருத்தரும்;
ஆயுங்கால் இவ்அருப்பு அறுத்து ஆழிசேர்
மாயன் தாளில் மனம்வைத்தி மன்னனே! (3)

முனைவர் முதல் தோன்றல் [illegible]க்கிலாக்
காலம் மாயை க[illegible]க்க வல்லார்? எனச்
சில நன்மொழி பன்பல செப்பினர்
மாலை வென்றுமை மன்னன் மயங்கினன்”

(பாகவதம், 6, 7)

உலக வாழ்வின் நிலைகளைக் குறித்து அப் பெரியவர் இவ்வாறு கூறவே இவன் உள்ளம் தேறினான். உண்மை தெளிந்து உறுதிநலம் நாடி உயர் கதியில் ஏறினான். நல்ல கேள்வி உள்ளத் தளர்ச்சியை நீக்கி உணர்ச்சியை உதவி உயிர்க்கு உய்தி நிலையை அருளும் என்பதை உலகம் காண இவன் இனமாய் உணர்த்தி நின்றான்.

கல்லா திருந்தாலும் கற்ருர்வாய்ச் சொற்கேட்பின்
எல்லா நலமும் எளிதமையும்—பொல்லா
இரவும் மதிவாய் எழில்நில வெய்தின்
உரவொளி செய்யும் உலகு.

**அல்லல் இருளுக்கு அருள்ஒளியாம் நல்லோர்வாய்ச்**
**செல்ல மொழிகேள் தினம்.**

கேள்வி நெஞ்சக் கவலை நீக்கும் சஞ்சீவி.

---

415. உள்ளம் தளரைவர் உற்றவியா தன்வாய்ச்சொல்
கொள்ளவுயர்ந் தாரேன் குமரேசா—மெள்ள
இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். (ரு)

இ-ள்

குமரேசா! மனம் தளர்ந்து மறுகி நின்ற பாண்டவர் வியாசர் சொல்லைக் கேட்டு ஏன் உள்ளம் தெளிந்து உறுதி மீதூர்ந்து பொறுதியுடன் சென்ருர்? எனின், ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல் இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே என்க.

கேள்வி இடர் நீக்கி இனிது காக்கும் என்கிறது.

சீலமுள்ள மேலோர் வாய்மொழி இழுக்கிஇடையூறு உற்ற இடத்து மனிதர்க்கு ஊன்றுகோல் போல் நின்று உறுதியாய் இனிது உதவும்.

இழுக்கல் என்றது வழுக்கல் நிலத்தை.
உழி = இடம்; பக்கம்.

நீர் பாய்ந்து சேறுபட்டுப் பாசி படர்ந்துள்ள இடத்தில் யாரேனும் நடந்து சென்ருல் கால் சறுக்கி விழ நேர்வர்; அவ்வாருன வழுக்கல் நிலம் இழுக்கல் என நேர்ந்தது. இழுக்கு நேராமல் இயன்றது தெளிக.

இழுக்கலில் சிக்கி ஒருவன் வழுக்கி விழ நேர்ந்த போது இடையே ஆதரவாய்த் தாங்கி நிற்கும் கைத்தடி ஊன்றுகோல் என உற்றது. தரையில் உரமா ஊன்றி நிலையாய் நின்று கொள்ள நேர்ந்த ஒரு கருவி ஆர்ந்த காரணப் பெயரோடு ஈங்கு ஓர்ந்து உணர வந்தது.

ஊன்று கோல் ஆதரவாய் நின்று ஆறுதல் ஆற்றி நிற்பது **ஊற்றுக்கோல்** என்று ஏற்றம் மிகப் பெற்றது. வல் ஒற்று ஆயது அதன் வன்மை தெரிய. இடறிய காலும் இடரடைந்த நெஞ்சும் உடனறிய வந்தன. ஊன்றுகோல் ஆன்றோர் சொல்லுக்கு ஒப்பாம். அற்றே என்றதில் ஏகாரம் தேற்றமாய்த் தெளிவுறுத்தி நின்றது.

சொல்லை ஊன்று கோல் என்றது உற்றுழி உதவி யாய் ஊற்றமுடன் நின்று ஆற்றி யருளும் அதன் ஆதரவு கருதி. அல்லல் நீக்குவது அறிய வந்தது.

கால் வழுக்கிய பொழுது மனிதன் கீழே விழுந்து விடாதபடி கைக்கோல் தாங்கி நிற்கின்றது. ஒருவன் உள்ளம் கலங்கி உணர்வு தடுமாறுங்கால் நல்லோர் வாய்ச்சொல் அத் தடுமாற்றத்தை உடனே நீக்கி அவ னுக்கு உறுதியையும் ஊக்கத்தையும் உதவி யருள் கின்றது. கேட்ட அளவே வாட்டம் ஒழிகிறது.

இளைப்புறு நேர்ந்த பொழுது உடலுக்கு உறுதிபுரி கின்ற அறுபயக் காட்சியை எதிரே எடுத்துக்காட்டி உயிர்க்கு உதவியருளுகின்ற ஊற்றத்தை ஈண்டு நயமா உணர்த்தியருளினர். கைக்கோல், வாய்ச்சொல், செவித்திறம், சிந்தைத் தெளிவு, சீவர்கள் உயர்வு இங்கே நன்கு தெரிய வந்துள்ளன.

கற்றிலன் ஆயினும் கேட்க என்றார் முன்பு; யாரிடம் அது கேட்கத் தக்கது? எவர் சொல் உயர்வாயுறுதி யருளும்? என்பதை இங்கே தெளிவுற உணர்த்தினர்.

அரசர் அமைச்சர் அறிஞர் புலவர் வீரர் செல்வர் என இன்னவாறு உலக நிலையில் உயர்ந்துள்ள எவ ரையும் குறியாமல் **ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல்** என்று ஈண்டு மிகவும் சிறப்பாகத் தெளிந்து எடுத்து விதந்து குறித்திருப்பது வியந்து நோக்கத்தக்கது.

பேச உரியவர் யார்? கேள்வி என்பது என்ன? யாருடைய சொல் நீருடைய உலகிற்கு நிலையான பலனை நல்க வல்லது? என்னும் உறுதியுண்மைகள் ஈண்டு

நுண்மையா ஓர்ந்து உணர்ந்து தேர்ந்து தெளிந்து சீவ இதத்தை நேர்ந்து கொள்ள வந்துள்ளன.

எவர் வாய்ச் சொல்லுக்குச் செவிசாய்க்க வேண்டு மோ அவருடைய பெயரை விவரமா விளக்கி யருளினர்.

சொல் என்றாலே போதும்! வாய் என்று மேலும் வரைந்து காட்டியது ஏன்? எனின், அதன் தூய்மை வாய்மைகளை நேரே உணர்ந்து தெளிய.

ஒழுக்கம் உடையவர் எப்பொழுதும் விழுப்பம் உடைய வார்த்தைகளையே பேசுவார்; வீணுரைகள் பகரார்; உண்மையே கூறுவார்; பயனுடைய மொழி களே அவரிடமிருந்து நயமா வெளிவரும் ஆதலால் அந்த உத்தமர் உரைகளே எத்தகையோரும் சித்தமாக் கேட்கவுரியன. வாய்மை தோய்ந்து வளமையாய் வருகிற சொல் வாய்ச் சொல் என வந்தது.

செவியுணவை நுகர நேர்ந்தவர் விழுமியோர் பால் இருந்தே அதனை விழைந்து கொள்ள வேண்டும்; அவ் வாறு கொண்ட போது தான் கேள்வியின் மெய்யான பலனை நேரே சீரோடு அவர் நன்கு கண்டவராவார்.

கண், வாய், செவி என்னும் அறிபொறிகளுள் காது மாத்திரம் யாதொரு காப்பும் இன்றி என்றும் திறந்த படியாய் அமைந்துள்ளது. விருப்பம் இல்லாத காட்சி களைக் காண வேண்டாம் என்று கருதினல் இமைகளால் கண்களை நன்கு மூடிக்கொள்ளலாம்; பேச விரும்ப வில்லையானல் வாயை மூடி மவுனமாயிருந்து விடலாம்; காதுக்கு அவ்வாறு யாதும் இல்லை; என்றும் எங்கும் திறந்தவாறே வெளியே விரிந்து நிற்கிறது. எவ்வகை யான மூடியும் இல்லாமல் எவ்வழியும் நீடிநிற்கும் செவி களை யாண்டும் கவனமா நாடிப் பேணிவர வேண்டும். சிறந்த சீலமுள்ள செவ்விய மேலோர் வாய்ச் சொல் லையே உவந்து உட்கொண்டு மற்றைப் பாலோர் மொழி களை வெளியே விரைந்து தள்ளிவிட வேண்டும். நவை யாதும் நுழையாமல் சுவையே நுழையும்படி செவியைச்

பண்படுத்தி வருகின்றவர் எவரோ அவரே உயர்ந்த இன்ப நலன்களை உறவா அடைந்து கொள்ளுகின்றனர்.

பொல்லாதவர் வாய்ச்சொல் புலையாய் அல்லலே புரியும்: அந்த நிலையைத் தெளிந்து அவரை அணுகாமல் விலகுக. நஞ்சுத்துளி என அதனை அஞ்சி அகலுக.

சீலம் படிந்த அளவு மனிதன் மேலோனாய்த் திகழ்கின்றான். உத்தமன் என அவன் ஒளி பெற்று மிளிர்கின்றான். கற்றவர் எவரினும் உயர்ந்து கலைமதியாய்த் திகழ்கிறான். அவனது காட்சி இனிய மாட்சியாகிறது.

கல்வி, அறிவு, ஒழுக்கம் என்னும் இவை ஒன்றினும் ஒன்று முறையே உயர்ந்துள்ளது. ஒழுக்கம் இல்லாத கல்வி உயிர் இல்லாத உடல்போல் செயிர் அடர்ந்திருக்கும் ஆதலால் வெறும் கல்வியாளர் விரிவாகச் சொல்ல வல்லவராயினும் அச்சொல் நல்லதாயிராது. நலமும் பயவாது. உள்ளத்தில் உள்ளது தான் உரை வழியாய் வெளிவருகின்றது. விழுமிய சீலம் இல்லை போல் அது வெற்றுரையாய் விளிகிறது.

ஒழுக்கம் உடையவர் வாய்ச்சொல் நெறி நியமங்கள் நிறைந்து, ஆன்ம மணம் தோய்ந்து எவ்வழியும் மேன்மையாய்ப் பான்மை சுரந்திருக்கும்; மேலான அந்த மொழி எங்கும் சாலவும் நன்மை பயந்தருளும்.

உள்ளம் திருந்தி யுள்ளவன் எவனோ அவனே உலகத்தைத் திருத்த முடியும்: கள்ளம் படிந்துள்ளவன் வெள்ளமாப் பேசினாலும் அச்சொல் அங்கண நீர்போல் எள்ளலடைந்து இழிந்து கழிந்து ஒழிந்தே போம்.

இனிய ஊற்றில் இருந்து ஊறி வருகிற நீர் புனிதமாய் எவருடைய தாகத்தையும் தீர்த்தருளுகிறது; சீலமுடையவரது வாய்ச்சொல் மேலான நீர்மையுடையது ஆதலால் மெலிந்துதளர்ந்த மக்களுக்கு உயர்ந்த உறுதி நலன்களை உரிமையுடன் அது நயமாஊட்டியருள்கிறது.

நேர்ந்த இடர்களை நீக்கி மாந்தர்க்கு ஆன்றோர் வாய்ச் சொல் ஆர்ந்த நன்மையை யாண்டும் உறுதியா அருளி வருகிறது. பிறருடைய உள்ளங்கள் தெளிய உரையாட வுரியவர் நல்ல தரும நீர்மையாளரே.

அறம்கேட்டு அருள்புரிந்து ஐம்புலன்கள் மாட்டும்
இறங்காது இருசார் பொருளும்—துறந்தடங்கி
மன்னுயிர்க்கு உய்ந்துபோம் வாயில் உரைப்பானேல்
பன்னுதற்குப் பாற்பட் டவன். (அறநெறி 3)

உயிர்களுக்கு உறுதி யுண்மைகளை உரைக்க வுரியவர் யார்? அவரை இஃது உணர்த்தியுள்ளது. குறித்திருக்கும் நீர்மை சீர்மைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். இத்தகையார் வாய்ச் சொல்லே எத்தகையார்க்கும் எவ்வழியும் இதம் புரிந்தருளுகிறது.

பிறர் கேட்டு மகிழும்படி பேசுதற்குக் கல்வியறிவு மிகவும் தேவை ஆயினும் நல்ல ஒழுக்கம் இல்லையானல் அவர் வாய்ச் சொல் பிறர் உள்ளத்தில் புகுந்து உணர்ச்சியை விளைக்காது. நெறி நில்லாதவன் சொல் வெறியன் பிதற்றலைப்போல் வீணே விளிந்துபடும். கல்வி இல்லையானலும் நல்லவர் சொல் நலம்பலதரும். கற்றிருப்பினும் ஒழுக்கம் அற்றவர் உரை இழுக்கமேயாம். எவ்வழியும் இழிவாய் அது வழுக்கி ஒழியும்.

மறைகள் ஆகம முதற்கலை
முழுதையும் மயலற மிகஓதிக்
குறைவி லாவகை பொருள்தனை
மதுரமாக் கூறவல் லவர்ஏனும்
நிறைவ தாகிய பொருளினுக்
குத்தகு நிலையவர் அலராகில்
அறைவ தாகிய அவர்மொழி
ஆத்தவாக் கியமென அறையேமே. (1)

இறைகண் அன்பினை உரைசெய்து
தாம்இறைக்கு அன்பகத் திலரேனும்
துறவு நன்றென உரைசெய்து
துறவினின் நிலைமையது இலரேனும்
கறைகள் ஒன்றுள செயல்களின்
மூளுறும் கருத்தறி கிலரேனும்
அறையின் நன்குறும் அவர்மொழி
ஆத்தவாக் கியம்என அறையாதே. (2)

தெய்வ வாணிநற் செந்தமிழ் இயல்இசை
　　தெரிந்து பாடைக ளும்போய்
மெய்ய தாகவே பொருள்களும் விளங்கிட
　　விளம்ப வல்லவர் ஏனும்
மையி லாவகை மொழிவதுஒன்று அவர்செயல்
　　மருவல் ஒன்றெனில் அத்தை
ஐய மூவரில் முதல்வரே மொழியினும்
　　ஆத்த வாக்கியம் என்னார். (3)
(அனுபவசித்தி)

விரிந்தநல் வேத புராணங்கள்
　　ஆகமம் மிக்ககலை
தெரிந்து படித்துப் பொருள்செப்பித்
　　தாம்நிலை சேர்ந்துநில்லாது
இருந்தசண் டாளரின் ஏற்றம்
　　கழுதை எழில்குங்குமம்
பரிந்து சுமந்தும்பின் வஞ்சம்
　　பண்ணாத பயன்எறிலே. (அறிவானந்தசித்தி)

எவ்வளவு நூல்களை எவ்வாறு முழுதும் படித்துத் தேறினாலும் ஒழுக்கம் இல்லையானால் இழுதைகளாய் அவர் இழுக்கமே அடைவர்; அவருடைய வாய்ச் சொற்கள் கேட்கத்தக்கன அல்ல என்னும் இவை ஈண்டு உள்ளம் கூர்ந்து உணர வுரியன. பாடல்களில் படிந்துள்ள குறிப்புகளையும் பொருளின் சிறப்புகளையும் ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

சிறந்த கல்வியறிவும் சீலம் தோயாத போது ஞாலம் மதியாதபடி இழிந்து போதலால் ஒழுக்கத்தின் உயர் நிலையை உணர்ந்து வியந்து உவந்து கொள்கிறோம்.

மனித வாழ்க்கை பலவகை இடையூறுகளையுடையது. தேகயாத்திரையில் நேருகின்ற நெஞ்சக் கவலைகளை நல்லோர் வாய்ச் சொல் ஒல்லையில் நீக்கியருளும். மருந்தனைய அம்மொழிகளைச் செவி விருந்தாக உவந்து கேட்டு உணர்ந்து தெளிந்து உயர்ந்து கொள்ளுக.

ஆன்றோர் வாய்மொழி நல்ல ஊன்று கோல் போல் உயிர்க்கு உறுதியாய் உதவி புரிந்து எவ்வகை இடர்களையும் இயல்பா நீக்கி உயர்நலன்களை நயமா அருளும்.

இவ்வுண்மை வியாச முனிவர் பால் தெரிய வந்தது.

## சரிதம்

தருமர் அரசிழந்து வனம் புகுந்து மனம் தளர்ந்து தம்பியரோடு ஒரு சோலையில் தங்கி யிருந்தார். நிலைமையை நினைந்து நெஞ்சம் கவன்ருர். அரசகுமாரராய்ப் பிறந்தும் காட்டு வேடர் போல் அடவியில் அலைந்து திரியும்படி நேர்ந்ததே! என்று துணைவர்களை நினைந்து இரங்கினர். பதின்மூன்று வருடம் கானகத்தில் வாழ வேண்டிய கால நிலைகளை எண்ணிச் சாலவும் மறுகினர். இவ்வாறு உள்ளக் கவலையோடு உளைந்திருக்கும் பொழுது அங்கே வேதவியாசர் வந்தார். அம்மாதவரைக் கண்டதும் இவர் அன்பு மீதூர்ந்து வணங்கினர். அல்லல் உழந்திருக்கின்ற இவரது உள்ளத்தின் இயல்பை ஓர்ந்து அவர் உரிமையுடன் உசாவினர்.

"மெய்த்திருவந் துற்ருலும் வெந்துயர்வந் துற்ருலும்
ஒத்திருக்கும் உள்ளத் துரவோனே!—சித்தம்
வருந்தியவா என்னென்ருன் மாமறையால் உள்ளம்
திருந்தியவா மெய்த்தவத்தோன் தேர்ந்து."

சத்தியசீலரான தருமர் சித்தம் கலங்கி யிருப்பதை உய்த்துணர்ந்து முனிவர் இவ்வாறு வினவவே துரியோதனன் செய்த கொடுமைகளை எல்லாம் இவர் குறித்து உரைத்தார். அவர் ஆறுதல் கூறித் தேற்றினர். "உயிர் வாழ்வு துயரங்களால் நிறைந்தது. உடம்புகள் மருவிய பொழுதே இடும்பைகள் பெருகி யுள்ளன. தம் அரசை இழந்து அடவியில் புகுந்து அருந்துயர் உழந்து திரிந்த அரசர்கள் பலர் உளர். விதி யாரையும் விடாது; தன் பயனை எவர்க்கும் எவ்வகையிலும் உறுதியா அது ஊட்டியே தீரும்" என உணர்வுரை கூறினர்.

செறிந்தவர்க்கு ஊற்றம் கோலாம் செய்வத முனியும் முன்னே
குறிந்தன நிகழ்ந்தது எல்லாம் கூறுதல் கொடிது பாவம்
பிறிந்தன தாயம் தன்னில் பெரும்பகை இனிது என்று அன்ருே
அறிந்தவர் உரைத்தார் ஐய! அவாவினுக்கு அவதி யுண்டோ? (1)

துன்றினர் இன்னல் எய்தத் துன்னலர் ஆகித் தம்மில்
ஒன்றினர் செறினும் உள்ளது உண்டென உணரத் தேற்றிக்
கன்றினர் கவலை தீர்த்தான் கண்ணுடைக் கருணை மூர்த்தி
குன்றினது உயர்ச்சி அந்தக் குன்றினுக்கு அறிய உண்டோ? (2)

நீவிரே அல்லிர் முன்னாள் நிலமுழுது ஆண்ட நேமி
நாவிரி கீர்த்தி யாளன் நளனெனும் நாம வேந்தன்
காவிரி என்னத் தப்பாக் கருணையான் சூதில் தோற்றுத்
தீவிரி கானம் சென்ற காதைநும் செவிப்ப டாதோ? (3)

வெஞ்சல மனத்த ராளோர் விரகினால் கூட்டம் கூட்டி
நஞ்சலது உவமை இல்லா நவைபுரிந் தனர்கள் ஏனும்
சஞ்சலம் உம்மைப் போலும் தரணிபர் உறுதல் செய்யார்;
அஞ்சலிர்! என்று மீள ஆரண முனியும் போனான். (4)

(பாரதம், ஆரணிய பருவம்)

வியாசர் கூறியுள்ள உணர்வு நலங்களை இப் பாசுரங்களில் காண்கின்றோம். ஆறுதலும் தேறுதலும் ஆதரம் கனிந்து அறிவு நலம் சுரந்து உறுதிகள் நிறைந்திருக்கின்றன. உற்ற அல்லல்களை நினைந்து உள்ளம் மறுகியிருந்த தருமர் இவ்வுரைகளைக் கேட்டதும் வருவன வருக என்று ஊக்கி நின்றார். ஒழுக்கமுடையவர் வாய்ச்சொல் இழுக்கல் உற்றுழி ஊன்றுகோல் போல் நின்று நன்கு உதவும் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். உற்றவர்க்கு **ஊற்றம் கோலாம்** என முனிவரை இங்கே குறித்துள்ளது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. இந்த அருமைத் திருக்குறளை நினைவில் வைத்துக் கொண்டு பாரத நூலாசிரியர் இதனைப் பாடியிருக்கிறார் என்று தெரிகின்றது. அந்த உண்மையை நுண்மையா ஓர்ந்து இதில் உணர்ந்து கொள்க.

இரவி காண இருளறும்; வெண்மதி
வரவு காண மலரும் குமுதமே;
பரவு மேலவர் பண்புரை துன்பெலாம்
விரைவில் நீக்கி வியன்பயன் நல்குமே.

**ஆபத்தில் சம்பத்தாய் ஆன்றோர் அருள்மொழி**
**தாபத்தை நீக்கும் தகைந்து.**

நல்லோர் சொல் நலம் பல தரும்.

---

416. பூத்த புகழேந்தி போதங்கேட் டேன்ஒட்டக்
கூத்தரையும் வென்ருர் குமரேசா—காத்தே
எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். (சா)

இ-ள்

குமரேசா! புகழேந்தியின் போதனைகளைக் கேட்டவர் ஒட்டக்கூத்தரையும் ஏன் வென்று விளங்கினர்? எனின், எனைத்து ஆனும் நல்லவை கேட்க; அனைத்து ஆனும் ஆன்ற பெருமை தரும் என்க.

கேள்வியால் அதிசய மகிமைகள் வரும் என்கிறது.

எவ்வளவு சிறிது ஆயினும் நல்ல அறவுரைகளைக் கேட்டுக் கொள்க; அவ்வளவானே அக்கேள்வி நிறைந்த மேன்மைகளை விரைந்து அருளும்,

எனைத்து என்றது சிறிய அளவைக் குறித்தது. கேள்வி அமுதத்துளி என ஈண்டுஅறிய வந்துளது.

ஒரு சொல்லே எனினும், அரை நிமிடமே ஆனாலும் நல்லோரிடமிருந்து நல்லதைக் கேள்! அது நலம் பல தரும் என்று நயமா ஊக்கியிருக்கிருர்.

கேட்கும் காலமும், கேட்கப்படும் பொருளும் எவ்வளவு குறுகியனவா யிருந்தாலும் அவற்ருல் அரிய பெரிய பயன்கள் உளவாம்; ஆகவே ஆனவரையும் சமையம் வாய்த்தபோதெல்லாம் கேள்வியை விழைந்து போற்றிவரின் உயர்ந்த ஏற்றம் விளைந்து வரும்.

கேள்வி உள்ளக் கவலைகளை நீக்கும்; அல்லல் நேராமல் ஊன்றுகோல் போல் உதவும் என முன்பு அறிந்தோம்; இதில் அதனுல் உளவாகும் மகிமை மாண்புகளை உணர்ந்து வியந்து உவந்து கொள்கின்ரேம்.

காலம் உருவம் அற்றது; விரைவில் கழிவது ஆதலால் அது வாய்ந்துள்ள பொழுதே நல்லதை ஏதேனும் கொஞ்சம் கேட்டு நெஞ்சம் தெளிந்து கொள்க என்பார் **எனைத்து ஆனும் நல்லவை கேட்க** என்ருர்.

எங்களுக்கு எப்பொழுதும் வேலைகள் உள்ளன; படிக்கவோ, கேட்கவோ, பழகி அறியவோ யாதொரு நேரமும் இல்லை என்று நேரே மாறு கூறுவாரை நோக்கிப் பதில் கூறிய படியாய் இது மதிபடிந்து வந்துளது.

நல்லவை என்றது உயிர்க்கு நன்மையான தரும சீலங்களை. கேட்டற்கு உரியவை எவை? அவை இவையே என்று சுவையாகச் சுட்டியருளினர்.

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். (குறள் 96)

சொல்ல உரியவை **நல்லவையே** என முன்பு இங்ஙனம் உரைத்தார்; கேட்க வுரியனவும் அவையே என்று இங்கே கேள்வி நிலையைக் குறித்துள்ளார்.

நல்லவை கேட்டால் அல்லவை தேயும்; அறம் பெருகும்; பெருகவே அக் கேள்வியாளன் தருமவானாய் இருமையும் பெருமையுற இன்பம் மிகப் பெறுவன். நாளும் சிறிது கேட்டாலும் அது பல துளிகள் பெரு வெள்ளமாய்ப் பெருகி வருதல் போல் உணர்வு நலன்கள் ஓங்கி உயிர்க்கு உய்தி புரிந்தருளும். ஆதலால் **அனைத்து ஆனும் ஆன்ற பெருமை தரும்** என்றார்.

அவியுணவினும் செவியுணவு மனிதனைப் புனிதனாக்கி அறிவொளிகளை நெறியே அருளி இருமையும் பெருமகிமைகள் புரிகிறது.

**கேட்க** என்னும் வியங்கோள் கேள்வியை விழைந்து கொள்ளும் வியன் தெரிய வந்தது. நல்லதை நல்லவர் வாயால் ஒல்லும் வாய் எல்லாம் ஓர்ந்து உவந்து கேட்டுவரின் ஆர்ந்த மேன்மைகள் அடையவரும்.

உரைப்பவன் கேட்பான் உரைக்கப் படுவது
உரைத்தனால் ஆய பயனும்—புரைப்பின்றி
நான்மையும் போலியை நீக்கி அவைநாட்டல்
வாய்மையின் மிக்கார் வழக்கு. (அறநெறி 2)

சொல்பவன், சொல், சொல்லின் பயன், கேட்பவன் கேள்வி அதன் விளைவுகளைக் குறித்து இது நயமா

விளக்கியுளது. செவிவழியான கேள்வி எவ்வழியும் நன்மை தருவதாக நாடிக் கொள்ள வேண்டும்.

உடலின் பசிக்கு உணவுபோல் உயிரின் பசிக்குக் கேள்வி அமைந்துள்ளமையால் சுவை தெரிந்து அதனை நுகர்ந்து வருபவர் உணர்வொளியும் உறுதிநலனும் பெற்று உயர் நிலையை அடைகின்றனர்.

சிறிது கேட்டாலும் அதனால் பெருமை உண்டாம் என்றது கேள்வியின் இயல்பும் உயர்வும் உணர வந்தது. தினை அளவு கேள்வியும் சீவ ஒளியாம்.

காட்சியால் கண்ணும், பேச்சால் வாயும், மாட்சி யுறுதல் போல் கேள்வியால் காது மகிமை யுறுகின்றது.

மனிதனுக்கு வாய்ந்துள்ள அவயவங்கள் ஆன்ம ஊதியங்கள் தோய்ந்து பான்மை வாய்ந்து வரும் போது தான் மேன்மை பெற்று வருகின்றன. தோயாவழி யாதும் பயனிலவா யிழிவுறுகின்றன.

உண்ண வயிறும் உரையாட நாவும்போல்
எண்ண மனமும் இனிதுறினும்—வண்ணமிகு
காது வழியாக் கலையுணர்வு கேளாதார்
ஏதும் அறியார் இதம்.

செவி வாயிலாக நல்லவை கேட்டவரே அறிவு நலம் உடையராய் உயர்நிலைகளை அடைகின்றனர். அல்லா தார் அவமே இழிகின்றார். காது கேள்வியில் கனிந்து வர மேதை மிகவும் விளைந்து வருகிறது.

கல்வியால் வருகிற அறிவினும் கேள்வியால் பெறு கிற அறிவு தெளிவாம். வருந்திக் கற்க வுரியது கல்வி; அந்த வருத்தம் கேள்வியில் இல்லை. எதையும் எளிதே கேட்டு இனிது தெளிந்து உயர்ந்து கொள்ளலாம்.

பல காலமும் பயின்று பெறவுரிய அறிவைச் சிறிது பொழுது கேட்பதால் அடையலாம் ஆதலால் அதனைக் கூர்ந்து கேட்டு ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். எல்லார்க்கும் கேள்வி நல்ல பயனை அருளி வருதலால் கல்லாதவரும் இதனால் பயனடைந்து வியனாய் உயர்ந்து கொள்ளுகின்றனர்.

கல்லார்க்கு நிறைகல்வி கற்றூர்க்கு மேல்ஒழுக்கம்
பொல்லார்க்குக் குணமாட்சி புத்தியில்லார்க்கு உயர்போதம்
வல்லார்க்கும் செயல்புரிய மாட்டார்க்கும் பொருளாக்கம்
எல்லாச்செல் வமும்நல்கும் எந்தைபுடார்ச் சுனபுரிநூல். (1)

வேறு நினையார்; பிறிது மொழிகேளார்;
விளையாடார்; விழிகள் தூங்கார்;
மாறுபடு திசைநோக்கார்; மற்றொருசொல்
உரையாடார்; வள்ளலார் நூல்
கூறுமவர் முகம்நோக்கிக் கோடாமல்
இருந்துசெவி கொடுத்துக் கேட்பார்;
ஆறுசுவை தெரிந்தமுதம் உண்பவர்போல்
சொற்சுவைகள் அருந்தி மாதோ! (2)

(திருக்குற்றுலத் தலபுராணம்

கேள்வியால் விளைகிற நன்மைகளையும், அதனைக் கேட்க வுரிய அரிய தன்மைகளையும் இவை சுவையாய் விளக்கி யுள்ளன. நயங்களை நாடி உணர்ந்து கொள்க.

எனைந்நாளும் நல்லவை கேட்டு நலமாய் வாழுக.

பொதுமொழி பிறர்க்கின்றி முழுதாளும் செல்வர்க்கு
மதிமொழி இடல்மாலை வினைவர்போல் வல்லவர்
செதுமொழி சீத்த செவிசெறு வாக
முதுமொழி நீராப் புலன்நா உழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர! (கலி, 68)

உலகம் முழுதும் தனி உரிமையுடன் ஆளும் பெரிய சக்கரவர்த்திகளுக்கும் அறிவுரை கூறவல்ல புலவர்களுடைய முது மொழிகளைப் பசித்தவர் உணவு உண்பது போல் செவி வாயிலாகப் பருகி மகிழுபவர் வாழும் ஊரனே! என்று ஒரு தலைவனை இதில் குறித்திருப்பது கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணர வுரியது,

நல்லவை கூற வுரிய நல்லவர்கள் எத்தகைய வித்தக விவேகிகள்! எத்துணை உத்தம நிலையினர்! என்பதை இதில் உய்த்துணர்ந்து கொள்ளுகிறோம்.

மேலோரிடமிருந்து கேட்கின்ற நல்ல கேள்வி நூலறிவோடு சீலமும் சிறப்பும் நல்கி எல்லா வல்லமைகளையும் ஒல்லையில் அருளும்.

இவ்வுண்மை புகழேந்திப் புலவருடைய மாணவர் பால் இனமா அறிய வந்தது. இவரது கேள்வி யறிவு அரிய கீர்த்தி மிகப் பெற்றது.

**சரிதம்**

புகழேந்திப்புலவரைச் சிறையில் இட்டு ஒட்டக் கூத்தர் இடர் பல செய்தார். அரசனது உதவியைக் கொண்டு பொருமை மிகுந்த அவர் அல்லல் இயற்றி வந்தாலும் இவர் உள்ளம் தளராமல் சிறைவாசம் செய்து வந்தார். வருங்கால் அங்கே உடனிருந்த சிலருக்கு இவர் கல்வி போதித்து அருளினர். இவரு டைய போதனைகளை நாளும் தொடர்ந்து அவர் நயந்து கேட்டார். அக்கேள்வியால் கல்வியறிவில் சிறந்து நல்ல கவிகள் பாடவும் அவருள் சிலர் வல்லவராயினர். தமது ஆசிரியரை அவமதித்து அகங்கரித்திருக்கிற ஒட்டக் கூத்தரை அடக்க எண்ணினர். ஆறுபேர் வீறுடன் துணிந்தனர். குயவன், வேளாளன், கொல்லன், அம்பட் டன், தச்சன், தட்டான் என ஆறு வகை மரபினர் ஒருங்கு திரண்டனர். சேடன், வாணன், திருவேங்கடவன், சீதரன், முத்தன், ஏகன் என்னும் பேரினை முறையே யுடைய இந்த அறுவரும் ஒருவர் பின் ஒருவராய் எதிர் வர முடிவு செய்தனர். அரச அதிகாரத்தோடு நவராத் திரி விழாவில் கலைவாணரின் புலமை நிலைகளைக் கூத்தர் சோதனை செய்து வருங்கால் முதலில் குயவன் நேரே வந்தான். இவனை நோக்கி அவர் வழக்கமான இறுமாப் போடு பாட்டிலேயே கேள்வியைக் கேட்டார்:

மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந்து எதிர்த்தவன் ஆரடா? (கூத்தர்)

என்று ஒட்டக்கூத்தர் இவ்வாறு ஆரவாரமாய் அதட்டி அச்சுறுத்தி வினவினர். அதற்கு உடனே அவன் கவியிலேயே சுவையாகப் பதில் உரைத்தான்.

கூனையும் குடமும் குண்டு சட்டியும்
பானை யும்வனை அங்குசப் பையல் யான். (சேடன்)

தன்னை மதயானை என்று அவர் சொன்னமையால் இவன் இன்னவாறு பதில் மொழிந்தான். அங்குசப்

பையல் என்றது யானையை அடக்கும் கருவியாகிய அங்குசத்தையுடையவன், அழகிய குசப்பையன் என இரு பொருள்பட விடை வீறுடன் விரைந்து வந்தது.

அதன் பின் வேளாளன் வந்தான்; விநயமொழி தந்தான். அவனது கவி அமைதி தோய்ந்து வந்தது.

கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர்; கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவாது ஒழிந்தில; பூதலம்எழ்
காக்கின்ற மன்னன் கவி ஒட்டக் கூத்தநின் கட்டுரையாம்
பாக்கண்டு ஒளிப்பர்க ளோதமிழ் பாடிய பாவலரே?
(வாணன்)

மூன்ருவது கருமான் புகுந்தான்; கவி ஒன்று சொன்ஞன். அவன் பாட்டு படுவேகமா மூண்டது.

செல்வன் புதல்வன் திருவேங்கடவன் செகத்குருவாம்
கொல்லன் கவியைக் குறைசொல்லுவோரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்டம் ஆடிப் பகைவர் முன்னே
அல்லும்பகலும் அடிப்பேன் கவிஇருப்பு ஆணி கொண்டே.
(திருவேங்கடவன்)

நான்காவது அம்பட்டன் எதிர்ந்தான். அவனுக்கு ஒரு கண் குருடு. ஆதலால் அதனைச் சுட்டிக் காட்டி ஒட்டக்கூத்தர் வெருட்டி மருட்டி விறுடன் கூறிஞர்:

விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டு என்ன விலவிலத்து
புண்பட்ட நெஞ்சொடும் இங்கு நின்ருய் பொட்டையாய்! புகலாய்!

இப்படி அவர் அதட்டித் திட்டிக் கேட்கவே இவன் அந்தப் பாதிப் பாட்டைப் பதமாக ஒட்டி மோதி உரைத்தான். அவன் கவி அக்கவிஞனைக் கடிந்து வந்தது.

கண்பொட்டை ஆயினும் அம்பட்டன் நான்கவி வாணர்முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயும் திடுக்கிடப் பாடுவனே. [சீதரன்]

ஐந்தாவது தச்சன் உற்சாகமாய் அடைந்தான். நீ என்னபாடுவாய்? என்று அவர் ஏளனமாய்க் கேட்டார். உடனே அவன் உன்னதமாய்க் கவி ஒன்று பாடிஞன்.

சொன்ன சந்தக்கவி யாவரும் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்ன சந்தக்கவி ஏது? என்ற போதில் எதிர்த்தவரை
வன்ன சந்தம் கெட வாயைக் கிழித்து இந்த வாய்ச்சியினல்
கன்ன சந்தங்களி னில்கவி ஆப்பைக் கடாவுவனே. (முத்தன்)

ஆருவது தட்டான் நேர்ந்தான். தன் பாட்டை அவரது அகங்காரம் அற்று ஒழியும்படி விட்டான்.

திகிரி வட்டக்குடைச் செங்கோல் அபயன் செழுஞ் சிலம்பில்
பகுதி ஒட்டக்கூத்த பட்டனை நான் அப் பனைக்கவியில்
மிகுத ஒட்டத் தட்டி விட்டகை ஓட்டில் உருக்கிக் குத்திப்
புகுத ஒட்டத்தட்டி மேலணுகா வண்ணம் போர்செய்வனே.

(ஏகன்)

பாடல்களின் குறிப்புகள் யாவும் ஒட்டக்கூத்தருடைய உள்ளச் செருக்கைக் கிள்ளி எறியும் நோக்கிலேயே கிளர்ந்து வந்துள்ளன. மாறுபாடு மண்டி இந்த ஆறுபேரும் இவ்வாறு வீறு கொண்டு பாடவே கூத்தர் செருக்கு அடங்கினர். சிறந்த மதிமானை புகழேந்திப் புலவரிடம் சிறையிலிருந்தபோது நாளும் கொஞ்சம் கொஞ்சமாகப் பல நூல்களின் சாரங்களையும் கேட்டு வந்ததனல் அறிவுநலங்கள் பெருகி அரசசபையில் அஞ்சாது நின்று புதிய கவிகளை விரைந்து பாடும்படி இவர் இங்ஙனம் உயர்ந்து விளங்கினர். சிறந்த பெருமைகளை அடைந்து மகிழ்ந்தார். **எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும் ஆன்ற பெருமை தரும்** என்பதை உலகம் காண இவர் சான்றாய் உணர்த்தி நின்ருர்.

**பயிர்க்குணவு நீரே; பசிக்குணவு சோறே;**
**உயிர்க்குணவு கேள்வி யுணர்.**

இனிய கேள்வியால் அரிய மகிமைகள் உளவாம்.

---

**417.** வென்றிக் களம்வீழ்ந்தும் வீடுமரேன் சொல்லவில்லை
குன்றுமொழி ஒன்றும் குமரேசா—என்றும்
பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்து
தீண்டிய கேள்வி யவர். (எ) [ணர்ந்

இ-ள்

**குமரேசா!** போர்க்களத்தில் மயங்கி வீழ்ந்தும் வீடுமர் ஏன் மாறுபடாமல் நீதி கூறினர்? எனின், இழைத்து உணர்ந்து ஈண்டிய கேள்வியவர் பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார் என்க.

அரிய மேதைகள் நிலை தெரிய வந்தது.

கூர்ந்து ஆய்ந்து அறிந்து நிறைந்த கேள்வியை யுடையவர் மாறுபட உணர்ந்தாலும் மடமையுறக் கூறார்.

இழைத்தல்=அழுத்தமாய் நுணுகி ஆராய்தல்.

இழை என்று நூலுக்கு ஒரு பெயர். நுணுகிய நிலையது என்பது அதன் பொருள். பஞ்சிலிருந்து பதமான நுண்ணிய இழைபோல் நெஞ்சிலிருந்து இதமான கூரிய நுண்ணுணர்வு எங்கும் எளிதே நுழைந்து செல்லும். எதனையும் ஊடுருவிக் கூர்மையாய் உணர வல்ல உணர்வு இங்கே சீர்மையாய்த் தெரிய வந்தது.

இழைத்தலை இன்னவாறு ஈண்டு இழைத்தருளியது ஏன்? எனின், கேள்வியால் கிளர்ந்து வருகிற மதி நுட்பத்தை அதிநுட்பமா அறிந்து தெளிந்து கொள்ளவே.

✓நுதி இழை மதி. (இராமா: 3-7; 227)

மகா மேதையான இராமபிரானுடைய அறிவின் திறத்தை இவ்வாறு கவி குறித்திருக்கிறார். நுண்மையாய் எவ்வழியும் நுழைந்து உண்மையை உணர வல்லது என அந்த மதியை அதிசயமா இங்கு உணர்ந்து தெளிந்து உவந்து கொள்கிறோம்.

ஈண்டிய=நிறைந்த; நிரம்பிய.

பிழைத்து=பிழையாய்த் தவறி.

நிறைந்த கேள்வியாளர்கள் எவ்வழியும் செவ்வையாய் அறிவு நலன்கள் நிறைந்திருப்பர்; யாண்டும் தெளிவாகவே பேசுவர்; மறந்தும் பிழைபாடான மொழிகளை அவர் உரையார். அவரிடமிருந்து உதயமாகி வருகிற வார்த்தைகள் மாமருந்தும் உணர்வொளிகளைப் பரப்பி உறுதி நலன்களை விளைத்தருளும் என்பதை ஈண்டு ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம். கேள்விச் செல்வத்தைப் பெற்றுரிய இடத்தின் பெருமை தெரிய இவ்வாறு விளக்கி உரிமையுடன் உரைத்தருளினர்.

கவலை துயரம் வெகுளி முதலியவற்றால் மனம் கலங்கி யிருந்த போதும் உண்மையான உயர்ந்த

கேள்வியாளர் இழிந்த மடமைகளை எவ்வகையிலும் யாண்டும் யாதும் கூறுர் என்பார் **பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார்** என்று ஓதியருளினர்.

பிழையாய் யாதும் அவர் உணர மாட்டார் என் பதை உம்மை உறுதியாக ஈண்டு உணர்த்தி நின்றது.

அரிய பல கேள்விகள் தெளிவான பெரிய அறிவு களை அருளிவரும். மெய்யுணர்வு நிறைந்த அந்த மேதை களிடம் பேதைமைகள் புகா ஆதலால் அவருடைய வாய் மொழிகள் யாதும் பிழையாமல் யாண்டும் வழுவாமல் தரும நீதிகளையே தழுவி விழுமிதா விளங்கிவரும்.

இம்மூ வுலகின் இருள்கடியும் ஆய்கதிர்போல்
அம்மூன்றும் முற்ற அறிதலால்—தம்மின்
உறழா மயங்கி உறழினும் என்றும்
பிறழா பெரியார்வாய்ச் சொல். (புறப்பொருள்)

மூவுலகும் ஒளி செய்து உலாவும் சூரியன் போல் மூன்று காலங்களையும் தெளிவாக அறிகிற பெரியோர் வாய்ச் சொல் யாதும் பிறழ்ந்து பிழைபடாது; என்றும் உயர்ந்து ஒளிமிகுந்து வரும் என இஃது உரைத்துளது.

மயங்கி உறழினும் பிறழா என்றது பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார் என்பதை அடி யொற்றி வந்துள்ளது. ஞான ஒளியுடையார் வான ஒளி என வயங்கியுள்ளார்; அவ்வுண்மையை ஈண்டு நுண்மையா ஓர்ந்து உணர்ந்து கொள்கின்றோம்.

கல்வியறிவும் கேள்வி யுணர்வும் நிறைந்துள்ள பெருந்தகை யாளரிடம் கேள்விச் சுவையை விருந்து என நுகர்ந்து கொள்க. அதனால் திருந்திய பண்பும் தெளிந்த மதியும் விளைந்து வரும். கேள்வியை மாந்தி வருகிற மாந்தர் யாண்டும் மேலான அறிவுடையவர் களாய் மேன்மையோடு விளங்கி வருகின்றனர்.

வண்மை இல்லைஓர் வறுமை இன்மையால்;
திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்;
உண்மை இல்லைபொய் உரைஇ லாமையால்;
வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால்.

(இராமா, நாட்டு 53)

கோசலா தேசத்தில் மக்கள் வாழ்ந்து வந்துள்ள மாட்சியை இது வரைந்து காட்டியுள்ளது. செல்வமும் வீரமும் சத்தியமும் வித்தக விவேகமும் எல்லாரிடமும் யாண்டும் நிறைந்திருந்தன என்பதை இந்த வாறு விந்தையாய்க் கவி விளக்கியிருக்கிறார். பாட்டை ஊன்றி நோக்கி உணர்வின் சுவைகளையும், உறுதி நலன்களையும் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ளுங்கள்.

பல் கேள்வி மேவலால் பேதைமை என்பது அங்கே யாதும் இல்லை என்று குறித்திருக்கிறார். சிறப்பான இந்தக் குறிப்பினால் கேள்விக்கும் அறிவுக்கும் உள்ள உறவுரிமை தெளிவா வெளியாகி நின்றுளது.

வெண்மை=வெளிற்றுத் தன்மை; அறியாமை.

மனிதரை மகிமைப் படுத்தி வருகிற அறிவு கல்வியாலும் கேள்வியாலும் ஒளிபெற்று உயர்ந்து வருகிறது. அவற்றைப் போற்றி வருபவர் யாண்டும் ஏற்ற மிகப் பெறுகின்றார்; போற்றாதவர் பிறப்பின் சிறப்பை இழந்து பேதைகளாயிழிந்து உழல்கின்றார்.

உண்டு உடுத்தி உல்லாசமாப் பொழுது போக்கி வரும் அளவே வாழ்பவர் இழுதைகளாய்த் தாழ்கின்றார். கற்று கேட்டு நெறி முறையோடு ஒழுகி வருபவர் விழுமிய மேலோராய் எங்கும் விளங்கி உயர்கின்றார்.

கற்பவை கற்றும் கேட்டும் கேட்டவை கருத்துள் ஊறச்
சொற்பொருள் நினைந்தும் கேட்போர்க்கு உணர்த்திஉள் துளக்கம்
எற்பகல் இரவு நீங்கும் இடத்தும் மெய் யறிவானந்த [தீர்த்தும்
அற்புத வெள்ளத்து ஆழாது ஆழ்ந்தும் நாள்கழிப்பார் சில்லோர்.

சந்தித்து மீன நோக்கி தலைவனை மூன்று போதும்
வந்தித்தும் ஈசன் பூசை மரபுளி முடித்தும் வேதம்
அந்தித்தும் அறியான் செய்த திருவிளை யாடல் கேட்டும்
சிந்தித்தும் அன்பர் பூசை செய்துநாள் கழிப்பார் பல்லோர்.

(திருவிளையாடல், திருநகர, 107)

பாண்டிய மன்னர் செங்கோல் செலுத்தி வந்த போது மதுரை மாநகரில் மக்கள் வாழ்ந்து வந்துள்ள

மாட்சிகளை இவை காட்சியாக் காட்டியுள்ளன. கருத்துக் களைக் கருத்தூன்றி நோக்கி நெறி நியமங்களை ஈண்டு ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

ஆன்ற கேள்வி யுடையவர் யாண்டும் உண்மை யான உணர்வு நலன்களையே கூறுவர்; அந்தக் கேள்வி சிந்தைக்குத் தெளிவூட்டும்; செவ்விய நெறியைக் காட் டும்: ஆதலால் அவரிடம் கேட்டு உயர் நலம் பெறுக.

இரவிதான் ஒருவ னேயாய் நின்றுஇந்த உலகத்து எங்கும்
விரவிய இருளை நீக்கி விளக்குறு மாறு போலத்
தரவியா வெருமுன் இல்லாச் சராசர உடம்பு தோறும்
பரவியான் உரைத்த மாயோன் ஒருவனே பரந்து நிற்பான்.

ஓரின்மேல் ஆகி நின்ற உயிரினேடு உடம்புக் குள்ள
பேரினேடு இறப்பு மூப்பு பிறப்பெனும் இவற்றை வேருய்ப்
பாரின்மேல் அறிவார் வீடு பற்றினர் என்ருன் பார்த்தன்
தேரின்மேல் நின்றே வேத சிரத்தின்மேல் இருக்கும் சீரோன்.
[பரமார்த்ததரிசனம்]

சூரியன் ஒருவனே இருளை நீக்கி உலகம் முழுவதை யும் ஒளி செய்து வருகிருன்; அதுபோல் பரமன் ஒரு வனே எல்லா உயிர்களுள்ளும் மருவி நின்று விளங்கி யருள்கிருன். மேலே மூடிகளாயுள்ள உடம்புகளி லிருந்து உயிரை வேறு பிரித்து அறிபவன் பரமனையும் உணர்கிருன்; உணரவே பரமானந்தனுய்ப் பேரின்ப வீடு பெறுகிருன் எனக் கண்ணன் இன்னவாறு அருச் சுனனுக்குப் போதித்திருக்கிருன். இந்தக் கேள்வியால் அந்த வீரன் மேலான பதவியை நேரே மேவியுள்ளான்.

சிறந்த கேள்வியாளர் மறந்தும் மாறு கூருர்.

இவ்வுண்மை வீடுமர் பால் தெரிய வந்தது.

சரிதம்

பரத குலதிலகரான இவர் அரிய விரத சீலமுடைய வர். உத்தம நிலையினர்; சத்திய வீரர். பல கலைகளி லும் தலைசிறந்த புலமையாளர். உயர்ந்த மாதவர்களும்

வியந்து புகழும் அதிசய மேதை. இவரது அறிவும் ஆற்றலும் அடக்கமும் வீரமும் பெரு மகிமையுடன் பெருகி நின்றன. பேரறிவாளராயினும் நாளும் மேலோர்களிடம் அரிய பல நூலறிவுகளைக் கேட்டுவந்தார். எவ்வழியும் செவ்வியராய் நீதி நெறியோடு வாழ்ந்து வந்த இவர் பாரதப் போரில் பத்தாம் நாள் எதிரிகளுடைய பாணங்களால் அடிபட்டு இரணகளத்தில் வீழ்ந்தார். இருதிறத்தாரும் மறுகி அழுதார். இவருடைய கல்வி கேள்விகளையும் குணநலங்களையும் வீரப் பிரதாபங்களையும் எல்லோரும் சொல்லி அலறினர்.

மறமும் வாகு வலியும் வல்வில் முதல்எப் படையின்
திறமும் தேசும் வாழ்வும் சீரும் கேள்விச் செலவும்
நிறமும் உண்மை அறிவும் நெறியும் புகழும் திகழ்பேர்
அறமும் பொன்றும் நின்னோடு ஐயா! அந்தோ! அந்தோ!

தந்தை இன்பம் எய்தத் தவமே இன்பம் ஆகச்
சிந்தை தெளியு ஞானச் செல்வா! செஞ்சேவகனே!
முந்தை மரபுக் கெல்லாம் முதல்வா! ஞால முழுதும்
எந்தை ஆள வைப்பார் இனியார்? கோவே! என்றார்.

அழுத மைந்தர் தம்மை அஞ்சல் என்றென்று ஆற்றி
எழுந்து தொல்லை வினையை யாரே விலக்கு கிற்பார்?
உழுந்து பொளி உருள உங்கள் முன்னர் வீழ்ந்தேன்
பழுது ஒன்றில்லை இதுவே பயனென் பலத்தால் என்றான்.

சரத்தின் சயனம் பஞ்ச சயனங் களினும் இனிது என்
சிரத்தின் தாழ்வு தீர்ப்பாய் சிலைவேள் விசயா! என்ன
வரத்தின் பயனால் உயிரை நிறுத்து மன்னன் மகிழ
உரத்தின அம்பால் முடியை உயரும் வண்ணம் உயர்த்தான்.

கோயில் தருமன் செய்யக் கூர்வெஞ் சரமே அணையா
நோயில் அயர்வு மெய்யின் நுழையக் காலம் நோக்கி
வீயின் முத்தி இல்லை என்ன இருந்தான் விருந்தாச்
சேயின் முனிவர் கேள்வித் தெள்ளார் அமுதம் நுகர்வான்.

(பாரதம், பத்தாம் போர்ச்சருக்கம்)

போர்முகத்தில் வீடுமர் பொருது விழுந்ததும், இவரது நிலைமையைக் கண்டு இருவகைச் சேனைகளும் உருகி நின்றதும், அருச்சுனன் அம்புகளால் அமைத்த வீரப் படுக்கையில் இத்தீரன் கிடந்ததும், தமது தவயோக சித்தியால் பருவ காலத்தை எதிர்நோக்கி உயிரை விடாது வைத்திருந்ததும், அரிய பரிவுக் காட்சிகளாய் இங்கே பெருகி யிருக்கின்றன. கல்வி, கேள்வி, அறிவு, ஆற்றல், அடக்கம், பொறுமை, அமைதி, தருமம், கருணை, சத்தியம், வீரம் முதலிய குணகணங்கள் யாவும் அந்தோ! போயினவே! என்று இவருடைய மரண நிலையைக் குறித்து எல்லோரும் அலறி அழுதிருத்தலால் இந்த உத்தமரின் தகவுகளையும் மகிமைகளையும் நாம் உய்த்துணர்ந்து கொள்கிறோம். நல்ல கல்வியாளராயிருந்தும் சுகமுனிவர் முதலிய மகான்களிடம் பலவகையான உணர்வு நலங்களை இவர் கேட்டு உவந்துள்ளார். கேள்வித் தெள்ளார் அமுதம் விருந்தா நுகர்வான் என்றதனால் இவர் விழைந்து கேட்டிருக்கும் விதங்கள் புலனும். மரணப்படுக்கையில் இருந்தும் அயலே மறுகி நின்ற தருமன் முதலானவர்களைக் கருணையுடன் கனிந்து நோக்கி உலகவாழ்வின் நிலைமைகளையும் உயிர் பரங்களின் இயல்புகளையும் தெளிவாக உணர்த்தியருளினர். அமர்க்களத்தில் அன்று இவர் போதித்த தரும நீதிகள் உலகம் எங்கும் பரவி இன்றும் ஒளி புரிந்து நிற்கின்றன. மனம் கலங்கி மதி தடுமாறி யிருந்தும் இவர் கூறிய தெளிவுரைகளைக் கேட்டு எல்லாரும் வியந்து கொண்டாடிப் புகழ்ந்து போற்றினர். இழைத்துணர்ந்து ஈண்டிய கேள்வியவர் பிழைத்துணரினும் பேதைமை சொல்லார் என்பதை உலகம் காண இந்த அதிசய மேதை அன்று அங்கு உணர்த்தி நின்றார்.

**கேள்வி நலமுடையார் கேளாக எவ்வுயிர்க்கும்**
**வேள்வி புரிவர் விழைந்து.**

நிறைந்த கேள்வி சிறந்த மேதையாம்.

---

418. உள்ள செவியிருந்தும் ஓட்டைஎன ஏனன்ஏன்
கொள்ள இழிந்தான் குமரேசா—உள்ளவெலாம்
கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி. (அ)

இ—ள்.

**குமரேசா!** நல்ல செவிகள் இருந்தும் ஏனன் ஏன் ஓட்டைச் செவியன் என்று இழிக்கப்பட்டான்? எனின், கேள்வியால் தோட்கப் படாத செவி கேட்பினும் கேளாத் தகையவே என்க.

இது, கேளாமையின் கேடு கூறுகின்றது.

நல்ல கேள்விகளால் துளைக்கப்படாத செவிகள் ஓசைகளைக் கேட்கும் ஆயினும் யாதும் கேளாத செவிடுகளே யாம்.

செவி என்பது பால்பகா அஃறிணைப் பெயராய் உருவில் இரண்டா யுள்ளமையால் தகையவே எனப் பன்மை முடிபு கொண்டது. குறித்த குறிப்பை ஏகாரம் தேற்றமா வலியுறுத்தி நின்றது.

உண்மையான செவிகள் எவை? நன்மையான அறிவுரைகளை நயமாக் கேட்டு வியனு விளங்கி வருவனவே.

செவிடு குருடு ஊமை என்பன காது கண் வாய்களின் ஊனங்களை முறையே துலக்கி நிற்கின்றன. வெறும் ஒலிகளை இயல்பாக் கேட்டுவரினும் அவை உயர்வான செவிகள் ஆகா. சுவையான உணர்வு நலன்களை உட்கொண்டு நுகர்ந்து வருவனவே மெய்யான காதுகளாய் யாண்டும் மேன்மை யுற்றுள்ளன.

தோட்டல்= துளைத்தல்; ஊடுருவல்.

அரிய அறவுரைகள் உள்ளே புக வழிகோலி வருவது துளை செய்யும் கருவியாய் வெளி அறிய வந்தது. தோட்டலும் கேட்டலும் நாட்டமாயறிய வந்தன.

கேட்டனன் என்ப மன்னே கேள்வியால் செவிகள் முற்றும்
தோட்டவர் உணர்வின் உண்ணும் அமுதத்தின் சுவையாய் நின்ருன்.
(இராமா: சவரி: 7)

**சவரி** என்னும் தவமுதுமகள் கூறிய நெறிமுறைகளைப் பரிவோடு கேட்ட இராமபிரானைக் கவி இவ்வாறு செவ்வையாக் காட்டியிருக்கிருர். இந்தக் காட்சியில் கலந்துள்ள மாட்சிகள் கருத்தூன்றிக் கருதி யுணரவுரியன.

**கேள்வியால் செவிகள் முற்றும் தோட்டவர் உணர்வின் உண்ணும் அமுதத்தின் சுவையாய் நின்ருன்** என்ற இதில் எவ்வளவு சுவைகள் சுரந்துள்ளன! எத்துணைப் பொருள் நுட்பங்கள் நிறைந்திருக்கின்றன! உய்த்துணர்ந்து கொள்ள வேண்டும். இந்த அருமைத் திருக்குறள் அந்தக் கவிச் சக்கரவர்த்தியின் உள்ளத்தில் புகுந்து இவ்வாறு அமுத வெள்ளமாய்ப் பொங்கி வந்துள்ளது. காவியச் சுவைகளைச் சீவிய அமுதங்களா வார்த்து வருபவர் இடையிடையே தேவர் வாய்மொழிகளைச் சேர்த்து யாவரும் வியப்ப உணர்த்தி வருகிருர்.

வேள்வி அமுதால் விண்ணவர் விளங்கி எண்ணரிய மேன்மைகளை எய்தி இனிது திகழ்கின்றனர்.

கேள்வி அமுதால் மண்ணவர் மகிழ்ந்து புண்ணிய சீலர்களாய்ப் பொலிந்து புனிதமுடன் வருகின்றனர்.

“கேட்டோர் மனம் உணக் கிளந்தவன் கடாவ
மெய்த்தகு நுண்பொருள் மெத்தப் பன்னி
உத்தர வாக்கியம் யூகியும் நிறீஇ.” (பெருங்கதை 5: 7)

உண்மையான நுண்பொருள்களே உரைக்கத் தக்கன; அவற்றைக் கேட்போர் உள்ளம் உவந்து நுகர்ந்து கொள்ள வேண்டும் என இது உணர்த்தியுளது. கேள்வி செவி வழியே புகுந்து உள்ளத்தில் உணர்ச்சியை விளைத்தருளுகிறது. மேதைகளின் வாய் மொழிகள் மெய்யான போதனை ஒளிகளாய்ப் பொலிந்து வருதலால் அவை புனித நிலைமைகளைத் தருகின்றன.

கண்ணும் செவியும் மனிதனுக்கு இனிய உயிர்த் துணைகள். கண்ணால் கண்டும் செவியால் கேட்டும் அறிவு நலன்களை அடைந்து வருதலால் அவை ஞான இந்திரியங்கள் என மேன்மை எய்தியுள்ளன.

கண் உடையராயினும் கல்வி இல்லாதவர் குருடரே.

காது உடையராயினும் கேள்வி இல்லாதவர் செவிடரே. ஊனச் செவி ஈனத் துளையே.

கண்ணுக்கு அழகு கல்வி; செவிக்கு அழகு கேள்வி. இந்த அழகுகளால் ஒளி பெறுவன உயர்வாய் எழிலுறுகின்றன; பெறாதன இழிவாய்க் கழிவுறுகின்றன.

புண்ணகப் போழ்ந்து புலால்குளிப்பத் தாம்வளர்த்து
வண்ணப்பூண் பெய்வ செவிஅல்ல—நுண்ணூல்
அறவுரை கேட்டுணர்ந்து அஞ்ஞானம் நீக்கி
மறவுரை விட்ட செவி. (அறநெறி 194)

கண்டவர் காமுறூஉம் காமரு சீர்காதில்
குண்டலம் பெய்வ செவிஅல்ல—கொண்டுலகில்
மூன்றும் உணர்ந்தவற்றின் முன்னது முட்டின்றிச்
ஆன்று சுவைப்ப செவி. (அறநெறி 196)

கனக குண்டலங்களும் அரிய வயிர அணிகளும் அணிவன செவிகளல்ல; நல்ல போதனைகளைக் கேட்டு மகிழ்வனவே மெய்யான செவிகளாம் என இவை உணர்த்தியுள்ளன. உயர்ந்த உணர்வு நலன்களைக் கேட்டுக்கொண்டுவரும் உள்ளம் தெளிந்து உயிர் துயர்நீங்கி உய்தி பெறுகின்றது; ஆகவே கேள்வி செவி அமுதாய்ச் சிறந்து அரிய முத்தி நிலைகளை விரைந்து அருளுகிறது.

செவிகாள் கேண்மின்களோ
சிவன் எம்இறை செம்பவள
எரிபோல் மேனிப் பிரான்திறம்
எப்போதும் செவிகாள் கேண்மின்களோ! (தேவாரம்)

ஈசன் புகழைக் கேட்டு இன்பம் எய்துங்கள் என்று தம் செவிகளை நோக்கி அப்பர் இப்படி வேண்டியிருக்

கிறார். நாதங்களை நயமாய் அறிய வுரிய காதுகள் வேத நாதனுடைய கீதங்களையே வியனுக விழைந்து கேட்க வுரியன என்பதை ஈண்டு உணர்ந்து கொள்கிறோம்.

செவிகள் ஆர்விப்பன சிந்தையுட் சேர்வன
கவிகள் பாடுவ்வன கண்குளிர் விப்பன
புவிகள் பொங்கப் புனல்பாயும் தேவன்குடி
அவிகள் உய்க்கப்படும் அடிகள் வேடங்களே. (தேவாரம்)

திருஞானசம்பந்தருடைய செவிகள் இறைவன் இசைகளை நுகர்ந்து உவந்துள்ளன; அவ்வுண்மைகளை இவ்வுரைகளால் இங்கு நன்கு உணர்ந்து கொள்கிறோம்.

செவிகளால்ஆர நின்கீர்த்திக் கனிஎன்னும்
கவிகளே காலப்பண்தேன் உறைப்பத் துற்று
புவியின்மேல் பொன்னெடுஞ் சக்கரத்து உன்னையே
அவிவின்றி ஆதரிக்கும் எனது ஆவியே. (திருவாய்மொழி)

நம்மாழ்வாருடைய செவிகள் திருமாலின் சீர்களையே எவ்வழியும் மாந்தி மகிழ்ந்துள்ள உண்மையை இதில் ஓர்ந்து உவந்து கொள்கிறோம்.

மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்இலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவிஎன்ன செவியே?
திருமால்சீர் கேளாத செவிஎன்ன செவியே?
(சிலப்பதிகாரம் 2-17)

மூவுலகையும் ஈரடியால் அளந்தருளிய திருமாலே இராமனாய் அவதரித்து வானும் வையமும் உய்யத் தம்பியுடன் கானகம் போய்த் தரும நீதிகளை எவ்வழியும் செவ்வையாகப் பாதுகாத்து அருளினன். அத்தகைய உத்தமமான வீரமூர்த்தியினுடைய கீர்த்திகளைக் கேளாத செவிகள் செவிகளா? மண்செவி, மரச்செவி, புண்செவி, புலைச்செவி, மாட்டுச் செவி, ஆட்டுச் செவி, ஓட்டைச் செவி என அவை இழிந்தன என்று இளங்கோவடிகள் இங்ஙனம் உளங்கனன்று மொழிந்துள்ளார்.

மனிதன் செவிபடைத்த பயன் துயர் தீர்ந்து உயிர் உயர்நிலை யடையும்படி உறுதி நலங்களைக் கேட்டுக் கொள்வதேயாம், அவ்வாறு கேளாது ஒழியின் அவை பாழான பழிக் காதுகளாய் இழிவே அடையும் என்பார் **கேட்பினும் கேளாத் தகையவே** என்றார்.

மாடு ஆடுகளைப் போல வெறும் சத்தங்களை மாத்திரம் கேட்டு வருகிற செவியால் உயிர்க்கு யாதொரு பயனும் இல்லை. பாழான அது பழி படிந்து இழிவடைந்து கீழாய்க் கழிந்து அழிந்து ஒழிந்தே போகிறது.

இழுதன்ன வெண்ணிணத்த செந்தடிக்கே
ஏட்டைப்பட்டு இரும்பில் போர்த்த
பழுதெண்ணும் வன்மனத்தார் ஓட்டைமரச்
செவியர் கேளார்; பால்போன்று
ஒழுகி அமுதூறும் நல்அறத்தை
ஓர்கிலர் ஊன்செய் கோட்டக்குக்
கழுகுண்ண வள்ளூர மேசுமந்து
புள்ளிற்கே புறம்செய் கின்றார்.
(சீவகசிந்தாமணி 1552)

நல்ல தருமசீலங்களைக் கேளாதவரைச் சீவக மன்னன் இன்னவாறு எள்ளி இகழ்ந்துள்ளான். கேள்வி நலம் இழந்த மனிதரை ஓட்டை மரச்செவியர்; வன்மனத்தார் என்றது. அவரது மடமை கொடுமைகளைக் கருதி.

"கேட்டது மொழிவேன் கேள்வி யாளரின்
தோட்ட செவியை நீ ஆகுவை யாமெனின்"
(மணிமேகலை 18)

உதயகுமரனை நோக்கி மணிமேகலை இவ்வாறு கூறியிருக்கிறாள். கேள்வியால் நன்கு துளைக்கப்பட்ட செவிகளையுடையவரே அரிய அறிவு நலங்களை எளிதே தெளிய வுரியவர் என்பதை இங்கே தெரிந்து கொள்கிறோம். கேள்வியாளரின் தோட்ட செவியை நீ ஆகுவை என்னும் இது இக்குறளை எண்ணி வந்துள்ளது. உண்மையை நுண்மையா ஓர்ந்து தேர்ந்து கொள்ளுக.

கேள்வி நலம் இல்லாதவர் நல்ல அறிவு நலங்களை இழந்து விடுகின்றார். விடவே உள்ளம் மழுங்கிப் புல்லராயிழிந்து நிற்கின்றார். நல்லோர் உரைகள் அவர் செவிகளில் செல்லாது போகின்றன. போகவே ஒன்றும் தெரியாமல் என்றும் ஈனராய் நின்று கழிகின்றனர்.

பன்றிக்கூழ்ப் பத்தரில் தேமா வடித்தற்றால்
நன்றறியா மாந்தர்க்கு அறத்தாறு உரைக்குங்கால்
குன்றின்மேல் கொட்டும் தறிபோல் தலைதகர்ந்து
சென்றிசையா வாகும் செவிக்கு. (நாலடியார் 257)

அவ்வியம் இல்லார் அறத்தா றுரைக்குங்கால்
செவ்வியர் அல்லார் செவிகொடுத்தும் கேட்கலார்;
கவ்வித்தோல் தின்னும் குணுங்கர்நாய் பால்சோற்றின்
செவ்வி கொளல்தேற்று தாங்கு. (நாலடியார் 322)

கன்மமே பூரித்த காயத்தோர் தம்செவியில்
தன்மநூல் புக்காலும் தங்காதே—சன்மமெலும்பு
உண்டு சமிக்குநாய் ஊணுவின் நெய்யதனை
உண்டு சமிக்குமோ ஓது. (நீதிசாரம் 80)

புண்ணிய போதனைகளைக் கேளாதவருடைய புலை நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. கவிகளைக் கூர்ந்து நோக்கிக் கருத்துக்களை ஓர்ந்து கொள்ள வேண்டும். பன்றி, நாய் என்று குறித்தது, கேளாச் செவியரின் ஈன நிலைகளை எண்ணி வருந்தி. பெரியோர்கள் கருணையோடு நல்லதை நயந்து சொன்னாலும் **செவி கொடுத்தும் கேட்கலார்** என்றதனால் அவரது கொடிய தீமையும் நெடிய மூடமும் நேரே தெரியவந்தன. குணுங்கர் = புலையர். தலைமையான மனிதப் பிறப்பைப் பெற்றும் அழகான செவிகள் உற்றும் அவற்றின் பயனை இழந்து போவது பரிதாபமான பழி துயரங்களாய் நின்றது.

கல்லாமையால் நேர்ந்த மூடத்தைக் கேள்வியறிவால் நீக்கிக் கொள்ள வேண்டும். அந்த நல்ல மெய்த் துணையையும் இழந்துவிடின் அவர் பொல்லாத மூடு

மூடர்களாய் எல்லாவழிகளிலும் இழிந்து தாழ்ந்து புல்லராய்க் கழிந்து புலையா ஒழிந்து போகின்றார்.

சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
அல் ஒக்கும் நிறத்தி னுள்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்ஒக்கும் நெஞ்சில் தங்காது அப்புறம் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள்எனப் போயிற்றன்றே.
(இராமாயணம்)

இராமபிரான் எய்த பாணம் தாடகையின் மார்பை ஊடுருவி ஓடியிருப்பதைக் கவி இவ்வாறு பாடியிருக்கிறார். கல்லாமையோடு பொல்லாத புன்மையும் உடைய புல்லர்க்கு நல்லோர் சொல்லும் பொருள் யாதும் தங்காது போம் என்பது இங்கே தெரிய வந்தது. புல்லர் செவியின் புலை நிலை புலனாய் நின்றது.

பொள்ளல் குடத்து நீர் போல் நல்லது யாதும் நில்லாத தொள்ளைக் காதர் யாண்டும் தீதராய் நீண்டு திரிவர். அறிவொளிபுக யாதொரு வழியும் இல்லாமையால் அவர் வாழ்வு கொடிய இருளே குடிகொண்டு நெடிய மருளே மண்டி எவ்வழியும் இழிந்தே யிருக்கும்.

காதகத்தே நல்ல கலைஞானம் கேளாதார்
தீதகத்தே நின்று செருக்குவார்—பாதகத்தே
நீண்டு நிமிர்ந்து நிலைதெரியாது ஐயகோ!
மாண்டு மடிவர் மருண்டு.

காதின் பயனை இழந்தவர் காதகராயிழிந்து கழிகின்றனர். செவ்விய கேள்வி இல்லாமல் அவ்வாழ்வு புலையே.

கேள்வி யறிவு மனிதனை மேம்படுத்தி உயர்த்தி யருளுதலால் அதனை யாண்டும் நன்கு கேட்டு வருபவன் பணிவும் இன்சொல்லும் தோய்ந்து பயனும் பண்பும் வாய்ந்து எங்கும் நல்லவனாய்த் திகழ்கிறான்.

இயல்பாக ஒலிகளைக் கேட்டு வருகிற பழைய துளைகளுடையன, உயர்வான செவிகள் ஆகா; உறுதிப் பொருள்களைக் கருதிக் கேட்டு ஒளி புரிந்து தெளிவருளி வருவனவே உண்மையான நல்ல செவிகள்.

உடல் வாழ்வுக்கு உரிய செல்வத்தை ஆவலோடு ஈட்டுதல் போல் உயிர் வாழ்வுக்கு உரிய கேள்விச் செல்வத்தை யாவரும் ஆர்வத்துடன் ஈட்டிக்கொள்ள வேண்டும் என்பார் **கேள்வியால் தோட்க** என்று வியங்கோளால் விளக்கி யருளினர். காது படைத்தவர் செய்யவுரியதைக் காட்டியிருக்கும் காட்சி கருதியுணர வந்தது.

கல்வியைக் கல்லாது ஒழியினும் கேள்வியால் உய்யலாம். மனிதன் செவி பெற்ற பயன் இனிய உறுதியுணர்வுகளைக் கேட்டுப் புனிதனய் ஒழுகிப் போதமுடன் உயர்ந்து உய்தி பெறுவதேயாம்.

ஞானமான கேள்வியை இழந்தவர் ஈனமா யிழிந்து படுவர். அவரது மூடநிலை பீடையே யாம்

இவ்வுண்மை ஏனன்பால் தெரிய வந்தது.

### சரிதம்

ஏனன் என்பவன் ஒரு குறுநில மன்னன். மலைநாட்டின் மேற்கு எல்லையில் கடலருகேயிருந்த ஏழில் என்னும் ஊரில் வாழ்ந்து வந்தவன். மிகுந்த மலைவளங்களையுடையவன். செல்வங்கள் நிறைந்திருந்தும் யாதும் கல்லாமல் இவன் களித்து நின்றான். தேக போகங்களிலேயே மோகம் மீதூர்ந்து அல்லும் பகலும் மாதர்களோடு மருவி மகிழ்ந்தான். ஆசையும் செருக்கும் அமைந்த நெஞ்சினன்; பெரியாரை மதியாத சிறுமதியுடையவன். கொடிய உலோபி. பாடும் புலவரைக் கண்டால் ஓடி ஒதுங்குவான். இவனுடைய இயல்பினை அறியாமல் ஔவையார் ஒரு நாள் இவனிடம் வந்தார். பெரிய செல்வன் ஆதலால் கல்வி அருமை தெரிந்து நல்ல பரிசில் நல்குவான் என்று நம்பியடைந்த அக்கவியரசியை மதித்துப் பேணமல் மறைந்து நின்றான். மேல் மாடத்திலிருந்து கொண்டே ஊரில் இல்லை என்று சொல்லிவிடும்படி வேலையாளிடம் விளம்பி விடுத்தான். இவனது புல்லியமடமையையும் பொல்லா நிலைமையையும் அம் மூதாட்டி தெரிந்து உள்ளம் வருந்தினள்.

கல்லாமையோடு நல்ல கேள்வியும் இல்லாமையால் இங்ஙனம் ஞான சூனியமாய் ஈனம் அடைந்துள்ளான் என்று இரங்கி நொந்தாள். பின்பு எள்ளி இகழ்ந்து ஒரு கவி பாடிஞள். அது வசைபடிந்து வந்தது:

"இருடீர் மணிவிளக்கத்து ஏழிலார் கோவே!
குருடேயும் அன்றுநின் குற்றம்—மருடீர்ந்த
பாட்டும் உரையும் பயிலா தனஇரண்டு
ஓட்டைச் செவியும் உள." (ஒளவையார்)

என இங்ஙனம் அப்பாட்டி சினந்து பாடிப் போயிஞள். கல்லாமையால் முன்னம் குருடன் என நின்ருன். கேளாமையால் இன்று செவிடனும் ஆயிஞன் என்று சினந்து வைதாள். ஒளவை வாக்கு தெய்வ வாக்கு ஆதலால் அங்ஙனம் பழித்துப் போகவே ஓட்டைச்செவியன் என எல்லோரும் இவனை இழித்துப் பழித்துவந்தார். ஒளிமறைவின்றி நேரே தெளிவாகச் சொன்னமையால் இது பெரு வசையாய் எங்கும் பெருகி நின்றது.

"செம்பொருள் ஆயின் வசைஎனப் படுமே"
[தொல்காப்பியம்]

என்னும் இலக்கண விதிக்கு இந்தப்பாட்டை இலக்கியமாகப் பேராசிரியர் எடுத்துக் காட்டியிருக்கிருர். சிறந்த மனிதப்பிறப்பை அடைந்தும் இனிய இசை பெற்று உயராமல் இழிந்து போவது கொடிய வசையாய் முடிந்து படுகின்றது. கல்வி கேள்விகள் இல்லாமையினல் கண் இருந்தும் குருடனயும், காதிருந்தும் செவிடனயும் இவன் இழிக்கப்பட்டான். கேள்வியால் தோட்கப் படாத செவி கேட்பினும் கேளாத் தகையவே என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்ருன்.

திறந்த செவியில் சிறந்தன கேட்பார்
பிறந்த பயனைப் பெறுவார்—அறந்தரு
கேள்வி நுகராதார் கேளாச் செவியராய்
மாள்வில் விழுவர் மருண்டு.

**நாட்டமுடன் கேள்வி நயவாது நின்றதேல்**
**ஓட்டைச் செவியே உணர்.**

கேள்வி இல்லாத செவி பாழே.

---

419. கஞ்சன் சிசுபாலன் கண்ணில்லான் சேய்வணக்கம்
கொஞ்சமும்கொள் ளாரேன் குமரேசா—நெஞ்சில்
நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது. (கூ)

இ—ள்.

**குமரேசா!** கஞ்சன், சிசுபாலன், துரியோதனன் என்னும் இவர் ஏன் வணங்காத வாயினராய் யாண்டும் பிணங்கிச் செருக்கிப் பிழை நீண்டு நின்றார்? எனின், நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய வாயினர் ஆதல் அரிது என்க.

கண் இல்லான் சேய் என்றது துரியோதனனை. இவனுடைய தந்தை ஆகிய **திருதராட்டிரன்** இரண்டு கண்களும் தெரியாத அந்தகன் ஆதலால் அவனது மைந்தன் இங்ஙனம் கூற வந்தான். குருடன் மகன் செவியின் பயனையும் இழந்து இறுமாந்து இழிந்து நின்றான். ஓட்டைச் செவியனை அந்தக் கேட்டு நிலை இங்கே தேட்டமாய்த் தெரியவந்தது.

தக்க கேள்வி இல்லார் தருக்கி இழிவர் என்கிறது.

நுணுகிய நல்ல அறிவுரைகளைக் கேளாதவர் பணிவான மொழியுடையராய்ப் பண்பு படிந்து வாழ முடியாது.

பணிவும் இன் சொல்லும் மனிதனை மகிமைப் படுத்தி வருகின்றன. தெளிந்த அறிவும் சிறந்த நீர்மையும் உடையாரிடமே இவை உறவா அமைகின்றன.

உணர்வு தெளிவாய் வர உள்ளம் ஒளி பெற்று வருகிறது. வரவே அந்த மனிதன் அடக்கமும் அமைதி

யும் தோய்ந்து அறிவு நலம் பெருகி யாண்டும் சாந்த சீலனாய் நேர்ந்து நெறியே திகழ்கின்றான்.

மேலோர்கள் கூறுகிற அரிய பொருளுரைகளை ஆர்வத்தோடு கூர்ந்து கேட்டுவரின் அக்கேள்வி பெரிய பலன்களை இதமா ஊட்டியருளும். சார்ந்த சார்புகளின் படியே மாந்தர் யாண்டும் வாழ்ந்து வருகின்றனர்.

நுணங்கிய கேள்வியர் வணங்கிய வாயினராய் மாண்புடன் வாழ்வர்: அல்லாதார் பிணங்கிய பேச்சினராய்ப் பிழைபட்டு நிற்பர்; இவ்வாறு பொருள் காணவும் இஃது இணங்கியுளது.

நுணங்கிய கேள்வி = நுண்ணிய அறிவுரைகளைக் கேட்பது, கேட்க உரியது இங்கே தெரிய வந்தது.

நுணங்கல் = நுணுக்கம்; நுண்மை; நுட்பம்.

அறிவைக் கூர்மை ஆக்கி நீர்மை தரும் சீர்மையுடையது நுணங்கிய கேள்வி என வந்தது; கேட்கப்படுகின்ற பொருளின் நுட்பம் கேள்வி மேல் நின்றது. நுண்மையான கேள்வி வெண்மையை நீக்கி உண்மையை உணர்த்தி உயிர்க்கு நன்மைகளை யருளுகிறது.

நுண்ணிய கேள்வி இல்லாதவர் தமது நிலைமையையும், பிறரது நிலைமையையும், உலக நிலைமையையும், உயர்ந்தோர் அடைய வேண்டிய விழுமிய நிலைமையையும் தெளிவாக அறியார்; ஆகவே புன்மையே பெரிதாக எண்ணி வியந்து தருக்கி எவையும் எண்ணாது பேசுவர்.

நுண்மையான கேள்வியாளர் உண்மை நிலைகளை உணர்ந்து உள்ளம் தெளிந்து கொள்வர்; கொள்ளவே எவ்வழியும் எண்மையாய்த் தண்மை வாய்ந்து பணிவும் பண்பும் தோய்ந்து இதமொழி கூறி இனிது ஒழுகுவர். செவி நுணுக்கமும் வாய்வணக்கமும் ஒருங்கே ஈண்டு உணர வந்தன. கூரிய கேள்வியால் சீரிய தன்மை விளைகிறது. செவ்விய மேன்மை யுறுகிறது.

சத்தான இனிய சுவை உணவு உடலுக்கு உறுதி செய்தல் போல் நுட்பமான அரிய புதிய கேள்வி உயிர்க்கு ஒட்பமும் திட்பமும் புரிதலால் அதனையுடையவர் அதிமதி யூகிகளாய் உயர் மகிமை பெறுகின்றனர். செவி கனிந்து வரச் செவ்வி சுரந்து வருகிறது.

வணங்கிய வாயினர் = பணிவான இனிய மொழியினர். பணிவு பண்பாளரின் அணி.

வாய் என்பது ஆகு பெயராய் இங்கே சொல்லைச் சுட்டி நின்றது. அடக்கம் அமைதி வணக்கம் பணிவு என்னும் இந்த இனிய பண்பாடுகள் நுண்மையான நல்ல கேள்வியாளருக்கே அமையும் ஆதலால் அந்த உண்மை ஈண்டு உரிமையுடன் உணர வந்தது.

நுணங்கிய கேள்வியர் வணங்கிய வாயினராய் இருப்பர் என அடையாளம் குறித்துக் காட்டியது, உடையாரை நேரே உணர்ந்து கொள்ள. நுண்ணிய நூலறிவும் நுணங்கிய கேள்வியும் இணைந்து வருபவர் அதிசய மதிமான்களாய்ச் சிறந்து உலகம் துதி செய்துவர அமைதியுடன் உயர்ந்து திகழ்கின்றனர்.

"வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன்
நுணங்கிய கேள்வியான் நுவல்வ தாயினன்."
(இராமா: 6·4—87)

அனுமானை இவ்வாறு இது குறித்துளது. விபீடணனைக் குறித்துப் பேச நேர்ந்த போது இராமபிரான் எதிரே அந்த மதிமான் நின்ற நிலையைக் கவி இங்ஙனம் ஓவிய உருவமா வரைந்து காட்டியிருக்கிறார். தலை வணங்கி, உடல் குனிந்து, வாய்புதைத்துப் பணிவோடு இனிய மொழிகளை இதமா உரையாடி யுள்ள உண்மையை உவந்து கண்டு நாம் வியந்து நிற்கிறோம். **வணங்கிய வாயினன்;** நுணங்கிய கேள்வியான் என இணைந்து வந்திருப்பது ஈண்டு எண்ணி யுணரவுரியது. இந்த அருமைத் திருக்குறளை அந்தக் காவியக் கவி

கருதிச் சுவைத்துள்ளார். அவ்வுண்மையை உரைகள் இங்கே தெளிவாக உணர்த்தி யுள்ளன.

நுண்ணிய நூலும் நுணுகிய கேள்வியும் நுண்ணுணர்வை விளைத்து வருதலால் இவ்வாறு கூறிய வழிகளில் பழகி வருபவர் சீரிய பண்பாளராய்த் தெளிந்து வருகிருர். நுட்பமும் திட்பமும் ஒட்பமும் உணரவுற்றன.

நுண்மையும் சுருக்கமும் ஒளி யுடைமையும்
மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப.
(தொல்காப்பியம் செய்யுளியல் 178)

நுண்ணிதாய்ச் சுருங்கி ஒளியும் உயர்வும் தெளிவும் உடையதாய் வருவது விழுமிய முதுமொழியின் வியனை இயல்பாம் என இது நயமா விளக்கி யுளது.

நுட்பமான கேள்விகளை நுண்ணறிவாளரிடம் கேட்டுத் தெளிபவர் மதி நுட்பமுடையவராய் மாட்சிமையடைந்து வருதலால் அரசாட்சியாளரும் அவரை நன்கு மதித்து எங்கும் போற்றிக் கொள்கின்றனர்.

வணங்கார் வணங்கிய வத்தவர் பெருமகன்
நுணங்குபொருள் அமைச்சரோடு உணர்ந்தனன் ஆகிக்
கண்ணிய பொருட்குத் திண்ணியது தெரிய
உறுப்போர் அன்ன ஒள்பொருள் அமைச்சரும்
மறப்போர் மன்னனும் மனமே திருந்து.
(பெருங்கதை 3-19)

உதயணன் என்னும் மன்னனையும் அவனுடைய மந்திரிகளையும் இன்னவாறு குறித்துள்ளார். **நுணங்கு பொருள் அமைச்சர்** என்றது இங்கு உணர்ந்து கொள்ள வுரியது. அறிவின் நுட்பம் அதிசய மாட்சி யாகிறது.

நுணங்கிய கேள்வியால் உண்மையான உணர்வு நலன்கள் உளவாகின்றன. ஆகவே அவற்ருல் பெருந்தன்மைகள் பெருகி வருகின்றன. அகங்கார மமதைகள்

ஒழிகின்றன. மெய்யறிவு விரிந்து மேன்மை நிறைந்து மேலான கதியை மனிதர் அடைய நேர்கின்றனர்.

கற்றதும்கேட் டதும்தானே ஏதுக் காகக்
கடபடம்என்று உருட்டதற்கோ? கல்லால் எம்மான்
குற்றமறக் கைகாட்டும் கருத்தைக் கண்டு
குணம்குறியற்று இன்பநிட்டை கூட அன்றோ?
(தாயுமானவர்)

கல்வி கேள்விகளுக்கு உரிய உண்மையான உயர் பயனைத் தாயுமானவர் இவ்வாறு பரிவோடு உணர்த்தி யுள்ளார். குறித்துள்ள குறிப்பைக் கூர்ந்து உணர்க.

கற்றல் கேட்டல்களால் அறிவு தெளிந்து வருகிறது; அவற்றை இழந்தவர் அறிவிலிகளாய் இழிந்து ஒழி கின்றார். அறிவுக்கு உரிய மூலங்கள் அறிய வந்தன.

கற்றானும் கற்றார்வாய்க் கேட்டானும் அல்லாதார்
தெற்ற உணரார் பொருள்களை—எற்றே
அறிவில்லான் மெய்த்தலைப் பாடு பிறிதில்லை
நாவற்கீழ்ப் பெற்ற கனி. (பழமொழி 138)

கற்றறிந்தார் கண்ட அடக்கம் அறியாதார்
பொச்சாந்து தம்மைப் புகழ்ந்துரைப்பர்—தெற்ற
அறைகல் அருவி அணிமலை நாட!
நிறைகுடம் நீர்தளும்பல் இல். (பழமொழி 243)

நல்லார் வாய்க் கேள்வி யில்லாதார் நயமான அறி வில்லாதவராய்த் தம்மையே புகழ்ந்து தருக்கித்திரிவர்; நல்ல அறிவுடையவர் அமைதியாய் அடங்கி எவ்வழியும் செவ்வியரா யிருப்பர் என இவை உரைத்துள்ளன.

பித்தரா னவர்க்குமனப் பித்து ஒழியும்; பீடைகள் போம்;
சித்தரான வர்காய சித்திமுதல் எய்திடுவார்;
பத்தரா னவர்மேலும் பரமஞா னம்பெருகி
முத்தரா குவர்பனச மூர்த்திமான் மியம்கேட்பின்.
(திருக்குற்றாலபுராணம்)

உத்தமமான கேள்வியால் விளைந்து வருகிற சிறந்த பலன்களை இது தெளிவாக விளக்கியுளது.

நல்ல அறிவுரைகளைக் கேளாதவர் பொல்லாதவர்களாய் அல்லல் புரிந்து எங்கும் பொங்கித் திரிவர். இவ்வுண்மை கஞ்சன் முதலானோர் பால் காண வந்தது.

## சரிதம்

**கம்சன்** என்பது **கஞ்சன்** என வந்தது. இவன் மிகவும் கொடியவன். வட மதுரையில் இருந்தவன். தந்தையை நீக்கி விட்டு வலிந்து அரசைக் கவர்ந்து கொண்டு கொடுங்கோலனாய் இவன் கடுங்கேடுகள் செய்து வந்தான். பெரியவர் உரைகளைக் கேளாமல் சிறியவர்களோடு சேர்ந்து சிலுகுகளே புரிந்தான். இவனுடைய உள்ளத் தருக்கும் உரைத் துடுக்கும் எல்லாருக்கும் வெறுப்பை விளைத்து வந்தன. உலகமும் வருந்தியது. முடிவில் கண்ணனால் மாண்டு மடிந்தான். இனிய நல்ல கேள்வி யில்லாதவன் கொடியனாய் நீண்டு மாண்டு மடிவன் என்பதை இவன் வாழ்வு விளக்கிநின்றது.

### சிசுபாலன்.

சேதி நாட்டு அரசன் ஆன இவன் நீதி நெறியிலனாய் நெஞ்சம் செருக்கி யிருந்தான். தன் கடமையை மறந்து மடமை நிறைந்து யாண்டும் இவன் அடம் புரிந்து வந்தான். பெரியோரையும் மதியாமல் இகழ்ந்து பேசி வந்த இவன் கண்ணனை மிகவும் கடுத்து வைதான். நல்லோர் அடுத்து நலம் பல மொழிந்தும் உள்ளம் திருந்தாமல் உருத்துப் பழித்தான். தன் பழி மொழிகளால் இழி துயர் எய்தி முடிவில் இவன் அழிவினை அடைந்தான்.

### துரியோதனன்.

இவன் சிறந்த அரசன், அத்தினபுரியில் அமர்ந்து அரசு புரிந்து வந்தான். மன்னர் பலர் வணங்க மாண்புற்றிருந்தாலும் இன்னல் இழிவுகளில் பழகி என்ன வகையிலும் கொடியனாய் இவன் நெடிது ஓங்கி நின்றான்.

செருக்கும் துடுக்கும் சிறுமொழியாடலும் இவனுடைய செயல்களாய் நின்றன. கண்ணன் விதுரன் தருமன் முதலிய பெரியார் எவரையும் பேணுது பழித்தான். தன்னிலும் உயர்ந்தவர் தரணியில் இலர் என்று தருக்கித் திரிந்தான். வீடுமர் முதலிய மேலோர்கள் எவ்வளவோ நீதிகளை எடுத்துச் சொல்லியும் இவன் யாதும் கேளாமல் அகங்கரித்து வந்தான், வணங்கா முடியன், வணங்கா வாயன் என வையம் இவனை வைது வந்தது. நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய வாயினர் ஆதல் இல்லை என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்ருன். செருக்கால் சீரழிந்து ஒழிந்தான். பாகவதம், மாகம், பாரதம் ஆகிய மூன்று நூல்களிலும் இம் மூவர் நிலைகளை முறையே காணலாம்.

காதகம் கேள்வி கனியான் கொடியதோர்
காதகன் ஆவன் கடிது.

நல்ல நீதிகளைக் கேட்டு நாவடங்கி வாழுக.

---

420. ஒன்ருகக் காந்தாரர் உற்றவிந்தும் ஏனுலகோர்
குன்றவில்லை நெஞ்சம் குமரேசா—என்றும்
செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என். (ம)

இ—ள்.

**குமரேசா!** நூறு கோடி காந்தாரர் ஒருங்கே அழிந்து போதும் உலகம் ஏன் சிறிதும் இரங்கி வருந்தவில்லை? எனின், செவியின் சுவை உணரா வாய் உணர்வின் மாக்கள் அவியினும் வாழினும் என் என்க.

கேள்வி நுகரார் வாழ்வு பாழ் என்கிறது.

செவியால் நுகரும் அறிவின் சுவையை உணராமல் வாயுணர்வின் சுவை அளவே யுள்ளவர் செத்தாலும் வாழ்ந்தாலும் ஒத்த நிலையினரே.

கேள்வி இன்பத்தை இழந்தவர் மனித வுருவில் வாழ்ந்து வந்தாலும் தன் உயிர்க்கும் பிற உயிர்கட்கும் யாதொரு பயனும் இல்லாதவராய் இருகால் விலங்கு கள் போல் இழிந்து உழலுவதால் அவர் செத்து ஒழிந் தாலும் உயிரோடு திரிந்தாலும் ஒரு நிலையான புலையே.

என்? என்னும் வினு ஈனமான அவரது இழி நிலையை எள்ளி இகழ்ந்து வந்தது. யாருக்கும் பயன் படாத அந்தச் சுவை கேடர் விரைந்து அழிந்து மறைந்து போவதே இந்தப் பூமிக்குப் பாரம் குறைந்த படியாம்.

**அவியினும்** என்று சாவை முன்னதாக் குறித்தது அவர் உயிரோடு சவமாய்த் திரிவதினும் செத்து ஒழி வதே உத்தமம் என்பதை உய்த்து உணர.

அவிதல்=அழிதல்; சாதல்.

பிறப்பில் மக்களாய்ப் பிறந்திருந்தாலும் சிறப் பான உணர்வொளியை இழந்து போனமையால் இழிந்த மிருகங்களே என்பார் **மாக்கள்** என்ருர்.

கல்லாதவர் குருடர்; கேளாதவர் செவிடர் என்னும் இந்த அளவோடு நில்லாமல் அந்தப் பொல்லாத மூடங் கள் ஈண்டு இல்லாமல் ஒழிவதே நல்லதாம் என்று உள்ளம் கனன்று எள்ளி யிகழ்ந்திருக்கிருர்.

கல்வியும் கேள்வியும் உணர்வுக்கு நல்ல சுவை உணவுகளாய் உறுதி நலன்களை உதவி யருளுகின்றன. இளமையில் கல்லாமல் கழிந்து போனுலும் நல்லார் வாய்க் கேள்விகளைக் கேட்டுவரின் எல்லா மேன்மைகளை யும் எளிதே அவர் அடைந்து கொள்ளுகின்றனர். இறுதி யான அந்த ஆதரவையும் பேணுமல் வீணே இழந்து விடின் அறிவு பாழாய் அவலம் அடைய நேர்கின்றனர். சிறந்த மனிதப் பிறப்பை அடைந்தும் உயிர்க்கு உரிய ஒளிகளை அடையாமல் மடமையாய் இழிந்து கழிவதி னும் விரைந்து இறந்து படுவது இதம் என வந்தது.

உடலோடு கூடிய உயிர் வாழ்வு உயர்தரமாய் ஒளி புரிந்து வரின் அது எவ்வழியும் தெளிவாய் யாண்டும் இன்பம் சுரந்து வரும். உயிரின் உள்ளுணர்வான அறிவு கேள்வியால் ஒளி பெற்று வருதலால் அதனைப் பெற்ற வர் பெரிய மதிமான்களாய்ப் பெருமை மிகப் பெறு கின்றார். பெருதவர் பேதை மாக்களாய்ப் பிழைபடிந்து இழிகின்றார். கேள்வியை ஆர்வத்தோடு ஆர்ந்து கொள் ளாதவர் அவலக் கேடராய்த் தாழ்ந்து போகின்றார்.

தாளாண்மை இல்லாதார் வேளாண்மை
செலுத்துவதும், தரைமேல் என்றும்
வேளாண்மை இல்லாதார் மனைவாழ்க்கை
நடத்துவதும், விசையம் வேட்டு
வாளாண்மை இல்லாதார் மண்டுசமர்க்கு
ஏறுவதும், வளர்புராணம்
கேளாதார் கதிவிழைவும், விழியிலார்
வழிநடக்கும் கிரமம் ஆமால்.
(திருக்குற்றாலத் தலபுராணம்)

கேள்வி யுணர்வை இழந்தவர் நன்மை தீமைகளை நன்கு அறியார்; மூடஇருள் மூடி அவர் பீடையாயுழலு வர்; யாதொரு உயர்கதியும் அவர் காண முடியாது என இது காட்டியுளது. கண் இழந்த குருடன் வழி நடப் பது போல் செவி யுணர்விழந்த மடையன் புவியில் வாழ்வது. இதில் குறித்துள்ள உவமான நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

வறுமையால் மடமை தன்னால் வருந்திநெஞ் சழியும் காலை
உறுதிசெய் துணையாம்; கற்ற உணர்வினை வளர்க்கும்; என்றும்
இறுதியில் லாத இன்பம் ஈட்டும் ஆதலினால் கற்று
மறுவறும் ஒழுக்கம் உள்ளார்வாய்மொழி கேட்டல்வேண்டும்.
(விநாயகபுராணம்)

கேள்வி எத்தகைய வித்தகம் உடையது? அதனை யாரிடமிருந்து கேட்க வேண்டும்? அதனால் விளைந்து வரும் நலன்கள் எவை? என்பதை இது சுவையா உணர்த்தியுளது. உண்மையை உணர்வது நன்மையாம்.

உணர்வை ஒளி செய்து உயர்த்தி உயிர்க்கு இன்பம் புரிந்து வருதலால் செவிச்சுவை திவ்விய மகிமையுடையது. அதனை நுகர்ந்து வருபவர் உயர்ந்து திகழ்கின்றார். நுகராமல் இழந்து நின்றவர் பலவகை நிலைகளிலும் தாழ்ந்து புலையாய் இழிந்து கழிகின்றார்.

மாடு ஆடு முதலிய மிருகங்களுக்குச் செவிகள் இருந்தாலும் அறிவின் சுவைகளைக் கேட்டு உவகையுறும் திறம் அவற்றிற்கு இல்லை. மனிதனே செவி நுகர்ச்சியில் உயர்ந்து வந்துள்ளான். வந்தும் அந்த அரிய சுவையை இழந்து வெறியனாய்க் கழிந்து விடின் அவனுக்கு அது பெரிய பழியாம்; நெடிய இழிவாம்.

பாட்டுக்கு உருகிப் பயனுணர்ந்து பண்பமைந்து
வீட்டுக்கு உரியராய் மேவாமல்—மாட்டுப்
பிறப்பா யிழிந்து பிழைப்பதினும் முந்தி
இறப்பாய் ஒழிதல் இனிது.

பாட்டின் சுவைகளைக் கேட்டு மகிழ்ந்து வீட்டுக்கு உரிய நெறி நியமங்களை அறியாதவர் மாட்டுப் பிறவிகளே என இது மறுகி மொழிந்துளது. அறிவின் சுவை அதிசய இன்பம் உடையது; அது கேள்வியால் நுகர்வது ஆதலால் **செவியின் சுவை** எனத் தெரிய வந்தது.

கோதைகள் சொரிவன குளிரிள நறவம்;
பாதைகள் சொரிவன பருமணி கனகம்;
ஊதைகள் சொரிவன உறையுறும் அமுதம்;
காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்.

(இராமா: நாடு; 51)

கோசல நாட்டின் வளங்களை இது வரைந்து காட்டியுளது. **காதைகள் சொரிவன செவி நுகர் கனிகள்** என்பது இங்கே கருதியுணரவுரியது. அரியபல சரிதங்கள் இனிய கவிகளில் செவிக்குத் தேன் என விளைந்து வந்துள்ளன. அவற்றைக் கேட்டு மக்கள் மிக்க மகிழ்ச்சிகளில் திளைத்திருக்கின்றனர். செவியின் சுவையான அந்த உண்மையை இதில் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம்.

செவி யுணர்வு உயிர்க்கு இனிய ஞான ஒளியாய் நின்று நலம் பல புரிகிறது. வாயுணர்வு உடலளவில் ஒன்றி ஊனமாய் ஒழிகின்றது. வாய் உணவு என்றது **வாய் உணர்வு** என்றது இனிப்பு புளிப்பு உப்பு முதலிய சுவைகளை நச்சி யுண்ணும் நசை தெரிய. தீனி யளவில் நின்று தீர்பவன் மான மனிதன் ஆகான்.

> **சேவித்தும்** சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
> பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
> பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்
> நாழி அரிசிக்கே நாம். (நல்வழி 19)

அரிய மனிதப் பிறவியைப் பெற்றும் உயிர்க்கு உரிய உயர்கதியை யாதும் கருதாமல் வயிற்றை வளர்க்கவே யாண்டும் நாடி ஓடிப் பாழாய்க் கழிந்து ஒழிகின்றார்களே! என்று மனிதருடைய வாழ்வின் மடமை மருள்களைக் குறித்து ஔவையார் இவ்வாறு இரங்கி யிருக்கிறார். இரக்கம் பரிவு தோய்ந்து பரிந்து வந்துளது.

> அவிழ்ச்சுவையே அறிந்து அரன்அடி பரவும்
> தமிழ்ச்சுவை அறியாத் தம்பங்கள்.
> (ஆளுடை-மும்மணி 4)

தமிழின் சுவைகளை உணர்ந்து உய்யாமல் சோற்றின் சுவைகளையே உணர்ந்து இழிந்து நிற்கின்ற மரங்கள் என **நம்பியாண்டார்** இவ்வாறு வெம்பி வெதும்பி யிருக்கிறார். அறிவிழந்தவர் இழிசடங்க ளாயினர்.

செவியின் சுவை மனிதனைத் தேவன் ஆக்கும்; வாயின்சுவை அவனை மிருகமாத் தாழ்த்தி வீழ்த்தும்; நிலைமையை ஓர்ந்து தலைமையாய் உயர்ந்து கொள்க.

> ஆமின் சுவையவை ஆறோடு அடிசில் உண்டு ஆர்ந்தபின்
> தூமென் மொழிமடவார் இரக்கப் பின்னும் துற்றுவார்;
> ஈமின் எமக்குஒரு துற்றுஎன்று இடறுவர்; ஆதலின்
> கோமின் துழாய்முடி ஆதியஞ் சோதி குணங்களே.
> (திருவாய்மொழி)

அறுசுவை அடிசில்கள் உண்டு பெரிய வரிசையுடன் இருந்த செல்வரும் பரிசு குலைந்து போய்ப் பிச்சை எடுக்கவும் நேர்வர்; ஆதலால் அதனைச் சதம் என்று எண்ணிக் களியாமல் இறைவனைக் கருதி உய்தி பெறுங்கள் என நம்மாழ்வார் இம் மாநிலமாந்தர்க்கு இங்ஙனம் நல்லறிவை நயமாகப் போதித்திருக்கிறார்.

இவ்வண்ணம் மெய்யுணர்வு கனிந்து வந்துள்ள செவியின் சுவைகளை உணர்ந்தவர் சித்தம் தெளிந்து உத்தமராய் உயர்ந்து உயர்கதி பெறுகின்றார்.

வாயுணர்வின் சுவை ஆறு.

செவியுணர்வின் சுவை ஒன்பது.

இவை நவரசங்கள் என எவ்வழியும் நவமாய்ச் சுவை சுரந்து துய்க்குந்தோறும் இன்பம் பெருகி வருகின்றன. அறிவின் சுவை அதிசய சுகமாகிறது.

ஒன்பது சுவைகளும் இன்பது சுரக்க
மன்பதை மகிழ்ந்து மதிநலம் தெளிந்து
பொன்பதம் பொலிந்த புகழ்நிலை பொருந்தி
அன்பறம் அமைய அமைந்ததுஇந் நூலே.

அரிய பல சுவைகள் நிரம்பிய பெரிய ஒரு வீரகாவியத்தை இவ்வாறு இது வியந்து புகழ்ந்துள்ளது.

நல்ல அறிவால் மனிதன் மாண்புறுகிறான். கல்வி கேள்விகளால் அறிவு தெளிவாய் ஒளி பெறுகிறது. அந்த ஒளியை இழந்தவன் எவ்வழியும் தெளிவின்றி உழந்து இழிவே அடைகிறான்.

இமைக்கும் அளவில்தம் இன்னுயிர்போ மார்க்கம்
எனைத்தானும் தாம்கண் டிருந்தும்—நினைத்துணையும்
நன்றி புரிகல்லா நாணில் மடமாக்கள்
பொன்றில்என்? பொன்றாக்கால் என்? (நாலடி 323)

தன் உயிர் துயர் நீங்கி உய்யவுரிய நலனைச் செய்து கொள்ளாத மாக்கள் செத்தால் என்ன? இருந்தால் என்ன! என ஒரு முனிவர் உள்ளம் கொதித்து இங்ஙனம் உரைத்துள்ளார். கல்வி கற்றுக் கேள்வி பெற்று நல்ல சீலம் உள்ளவனாய் வாழ்பவனே உயர்ந்த மனிதன்;

அல்லாதவன் இழிந்த மிருகமே. அவன் உயிரோடு திரிந்துழல்வதை விட இறந்து ஒழிந்து போவதே நல்லது.

செவிச் சுவையை இழந்தவன் புவிச் சுமையே.

செவிவழி அறிவொளி சேரின் தேவனாய்ப்
புவிவழி உயர்ஒளி பொருந்தி வாழுவன்;
செவிவழி உணர்வினை ஒழியின் சீவனை
அவிவழி யாக்கியே அழிக்கின் றானவன்.

கேள்வி நலனை இழந்தவன் கெட்டழிவதை இது சுட்டியுளது; ஞான ஒளி ஒழியவே ஈன முறுகிறது.

அறிவு நலங்கனிந்த சிறந்த கேள்வி மனிதனை உயர்ந்தவனுக்கி யருளுறுகிறது. இத்தகைய கேள்வி நலனை அடையாதவன் மடையனாயிழிந்து கடையனாகி ருன். ஆகவே அவன் பிறப்பு பழிபடிந்து இழிவடைந்து பரிதாபமாய்ப் பாழ்படுகின்றது.

தவப்பொழி மாரி காப்பத் தடவரைக் கவிகை அன்று
கவித்தவன் கோயில் செல்லாக் கால்மரத் தியன்ற காலே;
உவப்பினின் அமுதம் ஊறி ஒழுகுமால் சரிதம் கேளாச்
செவித்தொளை நச்சுநாகம் செறிவது ஓர் தொளைமற்றுமால்.
(பாகவதம்; 2-6)

திருமால் சரிதம் கேளாத செவி பாம்பு நுழையும் தூம்புவளை என்று இது குறித்துளது. செவியின் சுவை உணர்வை இழந்த பொழுதே அந்த மனிதப் பிறவி இழிந்து படுவதை இதில் தெளிந்து கொள்கிறோம்.

அறிவின் சுவை அதிசய இன்பமாய்த் துதிகொண்டுளது. அது கேள்வியால் கிளர்ந்து தெளிந்து வருகிறது. அதனை நுகர்ந்து வருபவர் உயர்ந்தவராய்ச் சிறந்து திகழ்கின்றார். நுகராதவர் இழிந்தவராய்க் கழிந்து போகின்றார். சாரம் இழந்தவர் சக்கை யாகின்றார்.

ஈனமாய்த் தாழ்ந்து போகாமல் ஞானமாய் வாழ்ந்து கொள். கேள்வி யில்லாதவர் பொல்லாதவ ராய்ப் புலை யுறுவர். அவர் இருப்பதினும் இறப்பதே இதமாகிறது.

இவ்வுண்மை காந்தாரர்பால் காணவந்தது.

### சரிதம்

காந்தாரர் என்பவர் பரத கண்டத்தின் வடகீழ்த் திசையில் இருந்த **மருகாந்தாரம்** என்னும் தீவில்வாழ்ந் தவர். ஒரே இனத்தவர். நூறு கோடியர் என்னும் பெருந்தொகையினர். மாறுபாடுடையவர். அறிவு நலங் களை உவந்து பேணுமல் எவ்வழியும் பொறி புலன் களையே விழைந்து நுகர்ந்து யாண்டும் போகவெறி களில் பொங்கி யிருந்தார். கண்டதே காட்சி; கொண் டதே கோலம் என்று குலாவி வந்த அவர் பெண்டிர் மூயக்கமும் உண்டி இன்பமுமே உவந்து களித்தார். செல்வம் சேர்ந்திருந்தாலும் கல்வி நேர்ந்து நில்லாமை யால் கூர்ந்த அறிவின்றிக் கொழுத்துத் திரிந்தார். நல்ல வர் சொல்வதை யாதும் நயந்து கேளாமல் எல்லார்க்கும் அல்லல் இழைத்து வந்தமையால் உலகம் இவரை வெறுத்து வந்தது. இங்ஙனம் இருந்து வருங்கால் இராமர் இலங்கையை நோக்கி வந்தார்: இடையே கிடந்த கடலைக் கடக்க விரும்பி வருணனை நோக்கித் தவம் புரிந் தார்; அவன் குறித்த காலத்தில் வராமையால் இவர் கொதித்துக் கோதண்டத்தை எடுத்து அம்பு தொடுத் தார்; அலைகடல் நிலைகுலைந்து தவித்தது; கடலரசன் விரைந்து வந்து அபயம் புகுந்தான்; இராமர் சீற்றம் தணிந்தார்; வில்லில் தொடுத்த அம்புக்கு இலக்கை ஒல்லையில் சொல்லும்படி உரைத்தார்; காந்தார தீவின ரையே அவன் சுடுத்துக் குறித்தான். தீவினைகளையே செய்து பாவகாரிகளாய் மண்டியுள்ள அவர் மேல் பகழியை ஏவினர். இராம பாணம் விரைந்து பாய்ந்து அனைவரையும் ஒருங்கே அழித்து மருங்கே மீண்டது. அவ்வெய்யவர் மாண்டுபட்டதை அறிந்து வையம் வருந்தவில்லை; நல்ல கேள்வி யாதுமின்றிப் பொல்லாத வராய் வாழ்ந்து வந்த அவர் மாய்ந்து போனது எல் லார்க்கும் இதமாய் ஏய்ந்து நின்றது. செவியின் சுவை உணரா வாயுணர்வின் மாக்கள் அவியினும் வாழினும் யாரும் கவலையுருர்; அவர் ஒழிவையே உவந்து நிற்பர் என்பதை உலகம் இவர் பால் உணர்ந்து நின்றது.

மன்னவ! மருகாந்தாரம் என்பதோர் தீவின் வாழ்வார்
அன்னவர் சதகோடிக்கும் மேலுளார் அவுண ராயோர்
தின்னவே உலக மெல்லாம் தீந்தன எனக்கும் தீயார்
மின்னுமிழ் கணையை வெய்யோர் மேற்செல விடுதி என்றான்.

நேடிநூல் தெரிந்து ளோர்க்கும் உணர்விற்கும் நிமிர நின்றோன்
கோடிநா ருய தீய அவுணரைக் குலங்க ளோடும்
ஓடிநூறு என்று விட்டான் ஒரிமை ஒடுங்கா முன்னம்
பாடி நூருக நூறி மீண்டதப் பகழித் தெய்வம். (2)

ஆய்வினை யுடையர் ஆகி அறம்பிழை யாதார்க் கெல்லாம்
ஏய்வன நலனே அன்றி இறுதிவந் தடைவ துண்டோ?
மாய்வினை இயற்றி முற்றும் வருணன்மேல் வந்த சீற்றம்
தீய்வினை யுடையார் மாட்டே தீங்கினைச் செய்த தன்றே. (3)

பாபமே இயற்றி னோரைப் பன்னெடுங் காதம் ஓடித்
தூபமே பெருகும் வண்ணம் எரிஎழச் சுட்ட தன்றே
தீபமே அனைய ஞானத் திருமறை முனிவன் செப்பும்
சாபமே ஒத்தது அம்பு தருமமே வலியது அம்மா! (4)

(இராமாயணம் 6–6)

காந்தாரர் மாய்ந்துபோயுள்ள நிலைமையை இதனால் ஆய்ந்து அறிந்து கொள்ளுகிறோம். கேள்விப் பயனை இழந்தவர் உள்ளம் தடித்துப் பொல்லாதவராய் ஓங்கி எல்லாரும் இகழ்ந்து வர எள்ளலடைந்து அழிவர் என்பதை இவர் சரிதம் நன்கு தெளிவுறச் செய்தது.

**உற்ற செவியின் உணர்வு நலம்பெறார்**
**பெற்றவை எல்லாம் பிழை.**

செவி உணர்வு பேணிச் சிறந்து வாழுக.

இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

1. கேள்வி சிறந்த செல்வம்.
2. அதனை உவந்து பேண வேண்டும்.
3. செவி யுணவுடையவர் தேவர் எனத் திகழ்வர்.
4. உள்ளத்தை உயர்த்தி அது உறுதி புரியும்.
5. ஊன்றுகோல் போல் உதவி செய்யும்.
6. நல்லது கேட்பது நாளும் நலமாம்.
7. பேதைமை நீக்கி மேதைமை ஆக்கும்.
8. அறிவுநலம் கேளாத செவி அவலமாகும்.
9. நுணங்கிய கேள்வியால் வணங்கிய வாய்மையாம்.
10. செவிச் சுவை இழந்தவர் செத்தவர் ஆவர்.

சஉ-வது **கேள்வி முற்றிற்று.**

# நாற்பத்து மூன்றாவது அதிகாரம்

## அறிவுடைமை

அ∴தாவது அறிவின் உரிமையான உறுதிநிலை. மனிதனுடைய வாழ்வு எவ்வழியும் செவ்வையாய் இனிது நடந்து வருவது மதிநலத்தாலேயாம். பொருளுடைமை முதலிய எல்லா உடைமைகளும் பொலிவடைந்துவர ஒளிபுரிந்து வருதலால் அறிவுடைமை அதிசய உடைமையாய்த் துதி மிகுந்துள்ளது. கல்வி கேள்விகளால் அறிவு தெளிந்து சிறந்து வருதலின் அவற்றின் பின் இ∴து உரிமையாய் அமைந்து நின்றது.

421. உற்ற அறிவால் உயர்நம்பி அற்றமின்றிக்
கொற்றமுற்றேன் நின்றான் குமரேசா—பெற்ற
அறிவற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா வரண். (க)

இ—ள்.

**குமரேசா!** பாண்டியன் அறிவுடை நம்பி யாண்டும் அற்றம் இன்றி வெற்றியுடையனாய் ஏன் விளங்கி நின்றான்? எனின், அறிவு அற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும் உள் அழிக்க லாகா அரண் என்க.

அறிவின் அரிய உதவிகள் அறிய வந்தன.

அரசர்க்கு அறிவு அவலம் நேராமல் காக்கும் அரிய துணை; பகைவர்க்கும் கடக்க முடியாத வலிய அரணும்.

அற்றம் = அழிவு; குறை; கேடு.

குற்றமே அற்றம் தரூஉம் பகை. (குறள் 434)

அற்றம் மறைக்கும் பெருமை. (குறள் 980)

அற்றம் மறைத்தல். (குறள் 846)

விளக்கு அற்றம் பார்க்கும் இருள். (குறள் 1186)

இவற்றுள் அற்றம் குறித்திருத்தலைக் கூர்ந்து அறிக.

வெளியே காட்டினுல் ஒருவனுக்கு வெட்கமும் துக்கமும் நேருகிற மறைவுகளை மறைப்பது மதி நலமாம். அவமானம் நேராமல் எவ்வழியும் செவ்வையா மானத்தைக் காத்து வருபவர் மாட்சி யடைந்து வருகின்ருர்.

அறுவையால் மறைப்பதும், அறிவால் காப்பதும் **அற்றம்** என அமைந்தது. உயிர் துயருருமல் காப்பது உயர் அறிவாம். இன்பமே நாடுகின்ற மனிதர் துன்பம் நேராமல் எதையும் ஆழ்ந்து சூழ்ந்து காக்க வுரியர்.

இரந்தோர் அற்றம் தீர்க்க. (புறம் 158)
அற்றம் காவாச் சுற்றுடைப் பூந்துகில். (மணிமேகலை 3)
அற்றம் இன்மையின் அவலம் நீங்கினுர். (சிந்தாமணி 1764)
அற்றம் அறியாச் செற்றச் செய்கை. (பெருங்கதை 2, 19)
அற்றம் இதுவென ஒற்றர் காட்டிய. (பெருங்கதை 3, 24)
அற்றத் திட்டு ஆற்றறுத்தான். (கலி 144)
அற்றம் இன்றி. (நீலகேசி 892)
அற்றம் அற்ற முனிவர். (அருணுசலம் 9-1)
அற்றம் நோக்கியே. (இராமா, திருஅவ 41)
அற்றம் செய்து. (இராமா: அகலி 75)
அற்றம் சொல்லினுள். (இராமா, உண்டாட்டு 53)
அற்றம்தான் மறைக்குமே. (இராமா, உலா 29)
அற்றமில் புகழ். (சூளாமணி, மந்திர 6)
அற்றங்கள் பார்த்து. (பெருந்தேவனுர் பாரதம்)
அற்றமறு சத்தியம். (ஞானவாசிட்டம்)

**அற்றம்** உணர்த்தி நிற்கும் பொருள்களை இவற்றுள் ஓர்ந்து உணர்க. குற்றம் குறைகள் நேராமல் ஒருவனைப் பாதுகாக்க வல்லது அறிவே; அதனை யுடையவன் இடரின்றி எங்கும் வெற்றி யுடையனுய் விளங்கி நிற்கின்ருன். துயர் உருது வாழ்வதே உயர்வாழ்வாம்.

**கருவி** என்றது காரிய சாதனமா யுள்ளமை கருதி.

செறுவார்=பகைவர். செற்றம் கொண்டு செறுத்துள்ளவர் என்னும் குறிப்பினை யுடையது. உம்மை

அவரது நிலைமையை உணர்த்தி நின்றது. எதிரிக்கு இடங்கொடாமல் ஏற்றம் தரும் ஊற்றம் கருதி **அரண்** என்றார். வெற்றி நிலையை விவேகம் அருளுகிறது.

அல்லலுறாமல் காத்துப் பகைவரும் உள்புகுந்து வெல்ல முடியாமல் தடுத்து எல்லாவகையிலும் நல்ல ஆதரவாய் நின்று அறிவு அரசர்க்கு உறுதி புரிந்துவரும்.

அகம் புறம் என்னும் ஈரிடங்களிலும் நின்று உளவாகின்ற பேரிடர்களை யெல்லாம் நீக்கி அறிவு உரியவனை ஆதரித்தருளும் என்பதை ஈண்டு அறிந்து கொள்ளுகிறோம். அரிய மதி அதிசய வலி.

பிழை நுழையாமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும் பகை புகாமல் நீக்கித் தன் நாட்டைப் பேணவும் மன்னனுக்கு மன்னிய துணையாய் அறிவு மருவியுள்ளது. அவ் வுண்மை நுண்மையா யிங்கு உணர வந்தது. அறிவுடைமை எல்லா உடைமைகளையும் இனிது பாதுகாத்து யாண்டும் இன்பம் தருகிறது.

Prudence is the best safeguard. (Aristophans)

கூரிய அறிவு சீரிய பாதுகாவல் என **அரிஸ்டோ**பேன்ஸ் என்னும் மேல் நாட்டு அறிஞரும் இங்ஙனம் கூறியிருக்கிறார். புத்திமான் பலவான் ஆகிறான்.

அறிவு உள்ளத்தின் தெளிந்த ஒளி ஆதலால் அதனை யுடையவர் முன் இருளான மருள்கள் யாதும் அணுகாமல் அயலே ஒழிந்து போகின்றன. போகவே, எல்லா இன்ப நலன்களையும் அந்த அறிவாளர் எளிதே அடைந்து மகிழ்கின்றார். அவரைச் சார்ந்தவரும் ஆர்ந்த மேன்மைகளை நேர்ந்து திகழ்கின்றார்.

அறிவைக் கருவி என்றதனால் அந்தச் சாதனத்தால் சாதித்துக் கொள்ளும் காரிய வீரியங்களைக் கருதியுணர்ந்து கொள்கிறோம். **சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை** ஆதலால் அறிவாகிய **கருவி**

இல்லாதார் அவலரா யிழிந்து கவலைகள் உழந்து கடுந்துயர் உறுவர்என்பது தெளிந்து கொள்ள வந்தது.

தெளிவான அறிவே மனிதனை விழுமியோன் ஆக்கி எவ்வழியும் இசை புரிந்து வருகிறது. பேரறிவாளர், மூதறிவாளர் என மகான்களைக் குறித்து வருதலால் அறிவின் அதிசய மகிமைகள் அறியலாகும்.

தீதற எறியும் தெரிபொருட் கேள்வி
மூதறி முனிவன் பள்ளி முன்னர்
அரணம் வேண்டாது அச்சம் நீக்கி
வருணம் ஒன்ருய் மயங்கிய ஊழிச்
சிறுமையும் வறுமையும் தின்மையும் புன்மையும்
இறுபவும் புலம்பும் இன்மையும் இரக்கமும்
அறியு மாந்தரின் உறுவளங் கவினி
ஐந்திணை மரனும் பைந்தளிர்க் கொடியும்
தந்துணைச் செல்வம் தலைத்தலை பெருகி.
(பெருங்கதை 2-13)

உண்மை நிலைகளை ஓர்ந்து அறியும் அறிவாளிகள் போல ஒரு பொழில் தழைத்துச் செழித்து வண்மையும் திண்மையும் வாய்ந்து எவ்வகையிலும் செவ்வி சுரந்து எழில் மிகுந்திருந்தது எனக் கொங்குவேளிர் குறித்துள்ள இது இங்கே கூர்ந்து சிந்திக்க வுரியது.

தெளிந்த அறிவுடையவர் இழிந்த துயரங்கள் யாவும் நீங்கி உயர்ந்து ஒளி பெற்று மிளிர்கின்ருர்.

தன்னுயிர்க் கின்பம் கண்டு தரணியில் பரவி யுள்ள
மன்னுயிர்க் கிதமே செய்து மறுமையும் உரிமை யாகப்
பின்னுயிர் எய்தி வாழப் பெறுபவன் அறிவன் ஆவன்;
அன்னவன் வாழ்வே வாழ்வாம்; அல்லவர் வாழ்வு வீழ்வாம்.
(பாண்டியம்)

மனிதனுடைய வாழ்வு மாண்புறுவது மதி நலத்தாலேயாம். மதி கெட்டதாயின் அவ்வாழ்வு கதிகெட்டுக் கடையா யிழிந்துபடும். அறிவுடையதே செறிவுடையதாய்ச் சிறந்து சீர்மையுடன் விளங்கி வரும்.

அவிவேகிக்குப் பாரம் சாத்திரம்; மெய்
யறிவிலோர்க்கு அங்கம் பாரம்;
நவில்சாந்தி யில்லாதோர்க் குளம்பாரம்;
அவாவினர்க்கு ஞானம் பாரம்;
செவிதான உருவாஞள் மனம்புந்தி
அகங்காரம் செயல்கள் எல்லாம்
குவிபார மாம்சுமடர் சுமைபோலப்
புந்திநலம் கூடா தார்க்கே. (ஞானவாசிட்டம்)

அறிவு நலம் இல்லாதவருடைய அவல நிலைகளை **வசிட்டமுனிவர்** இவ்வாறு விளக்கி யிருக்கிருர். இக்கவியில் மருவியுள்ள பொருள் நயங்களையும் உணர்வு நிலைகளையும் மானச மருமங்களையும் ஆன்ம தத்துவங்களையும் உய்த்துணர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

அறிவுடையவன் ஆன்றமேன்மைகளை அடைகிருன்.

இவ்வுண்மை அறிவுடை நம்பிபால் அறிய வந்தது.

### சரிதம்

இவன் வழுதி வேந்தர் வழியினன். கலைகள் பல பயின்று தெளிந்தவன். விழுமிய நீர்மைகள் உடையவன். உருவ அழகும் உணர்வின் தெளிவும் இவனிடம் ஒளி மிகுந்திருந்தன. உலகம் உவந்து போற்றிவர இவன் உயர்ந்து வாழ்ந்து வந்தான்; செம்மனத்தான், தண்ணளியான், செங்கோலான் என யாண்டும் இவன் புகழ்கள் நீண்டு நின்றன. உலகியல் அறிவிலும் கலை பயில் தெளிவிலும் இவன் தலை சிறந்து விளங்கிஞன். **பிசிராந்தையார், பொத்தியார்** முதலிய புலவர் திலகர்களும் இவனது புலமையையும் நிலைமையும் தலைமையையும் வியந்து புகழ்ந்துள்ளனர். இவன் பாடிய பாடல்கள் சில சங்க நூல்களில் வந்துள்ளன. மக்கட் பேற்றின் மாட்சியை நயமா இவன் வரைந்து காட்டி யிருக்கிருன். அந்தக் காட்சியை அயலே காண வருகின்ருேம்.

படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெருஞ் செல்வர் ஆயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே. (புறம் 188)

பிள்ளைகளுடைய இயல்புகளையும் உயர்வுகளையும் இதில் ஊன்றி நோக்கி உணர்பவர் உள்ளம் உவந்து கொள்வர். மனித வாழ்வின் இனிய நீர்மைகளைக் கூர்ந்து ஓர்ந்து யாண்டும் யாதும் குறை நேராமல் முறையோடு இவன் அரசு புரிந்து வந்தான். பொருமை கொண்ட அரசர் சிலர் இவனைப் பொருது வெல்லக் கருதி முயன்றார்: முயன்றும் இவனுடைய அறிவு ஆண்மைகளை அஞ்சி விலகினர். கூரிய சீரிய இவனது மதி நலத்தை வியந்து யாவரும் புகழ்ந்து போற்றி வந்தார். அவ்வரவால் **பாண்டியன் அறிவுடை நம்பி** என்று யாண்டும் இவன் இசை பெற்று நின்றான். நேர்ந்த பகைவர் நிலைகுலைந்து தாழவும், யாதோர் கோதும் தன்பால் நேராமலும் யூக விவேகங்களால் இவன் உயர்ந்து விளங்கினன். இவனது அறிவு அதிசய வெற்றிகளை அருளியது. **அறிவு அற்றம் காக்கும் கருவி; செறுவார்க்கும் உள் அழிக்கலாகா** அரண் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

**அறிவின் ஒளியால் அவலவிருள் நீங்கும்**
**நெறியின்பம் ஓங்கும் நிறைந்து.**

அறிவை இனிது பேணுக.

---

422. உள்ளம் திரியா தொடுக்கிப் பதஞ்சலிநேர்
கொள்ளவுய்த்தார் என்னே குமரேசா—துள்ளியே
சென்ற விடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு. (உ)

இ—ள்.

**குமரேசா!** மனத்தை அடக்கி நடத்திப் பதஞ்சலி யார் ஏன் மாட்சி யுற்றார்? எனின். சென்ற இடத்தால்

செலவிடா தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு என்க. உய்த்தல்=உயர் நிலையில் செலுத்தல்.

அறிவின் ஆட்சி இதில் அறிய வந்துள்ளது.

போனபோக்கில் மனத்தைப் போக விடாமல் அடக்கித் தீது நீக்கி நல்ல நெறியில் செலுத்துவது அறிவாம்.

அற்றம் உறாமல் காக்கும்; பற்றலர் புகாமல் நீக்கும் என அறிவின் ஆதரவை முன்பு அறிந்தோம்; இதில் அதன் ஆட்சி முறைகளை நேரே அறிகின்றோம்.

**சென்ற இடம்** என்றது மனம் விரைந்து போதற்கு இனமாயுள்ள பொறி புலன்களை. சுவை ஒளி ஓசை வழிகளில் ஆசையாய் ஓடியுழல்வதே உள்ளத்தின் இயல்பாம். சென்றபின்புதான் அதன் செலவு நிலை தெரியும் ஆதலால் இறந்த காலத்தால் கூறினார். அது சென்ற படியே செல்ல விடின் அல்லல்கள் நேரும் ஆதலால் அதனை ஒல்லையில் அடக்கி நடத்துவதே நல்லதாம்.

விடாது தடுத்தல், தீது ஒருவுதல், நல்லதில் உய்த்தல் என்னும் இந்த முத்திற வினைகளை உய்த்துணர்ந்து, அறிவின் வித்தகச் செயல்களையும் அதன் விளைவுகளையும் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும்.

ஒருவி என்னும் வினை எச்சம் ஒரீஇ என அளபெடுத்து நின்றது. ஒருவுதல்=நீக்குதல்.

புலன்களில் விரைதலும், தீது படிதலும் அதன் இயல்பாம் என்பது குறிப்பால் அறிய வந்தது. மனம் இக்கவியில் வெளிப்படையாய் வரவில்லை. உய்ப்பது அறிவு என்றதனால் மனம் இனமாயுணர வந்தது. மனிதனை யாண்டும் ஆட்டி வருவதை அடக்கி ஆள்வது அதிசய ஆற்றலாம்.

மனத்தின் நிலைமையும், அறிவின் தலைமையும், இந்த இரண்டுக்கும் உள்ள உறவுரிமையும், மனித வாழ்வின் மருமமும் இங்கே நன்கு தெரிய நின்றன.

நன்மை தீமைகளை நாடி அறிந்து உயிர் துயர் உறு மல் பாதுகாப்பது அறிவே ஆதலால் அதன் நெறி நியமங்களின் படியே மனத்தை அது அடக்கி யருளுகிறது. அவ்வாறு அடக்காவிடின் எவ்வழியும் அவகேடேயாம்.

மனம் போன போக்கிலேயே போனல் அந்த மனித வாழ்வு மதிகேடாய் மாண்பிழந்து படும். மதியுள் அடங்கி மனம் நல்லவழியில் சென்றால் மனிதன் நல்லவனாய் ஒளி பெறுகிறான். அது தீய வழியில் பழகினல் அவன் தீயவனயிழிந்து யாண்டும் துயர் உறுகிறான்.

மகான்களாய் உயர்ந்து வருபவர் எவரும் மனத்தை வசப்படுத்தியே எங்கும் மாட்சி யடைந்துள்ளனர்.

பிறவித் துன்பங்கள் நீங்கிப் பேரின்பம் அடைய நேர்ந்துள்ள பெரியோர்கள் மனத்தை அடக்கவே முதலில் மூண்டு முயன்றுள்ளனர். அது வசமானல் அதிசய சித்தராய்த் துதி மிகப் பெறுகின்றார், இல்லையேல் அதன் போக்கை நோக்கி அல்லல் உறுகின்றனர்.

காடும் கரையும் மனக்குரங்கு கால்விட்டு ஓட அதன்பிறகே
ஓடும் தொழிலால் பயனுளதோ? ஒன்றாய்ப் பலவாய் உயிர்க்குயிராய்
ஆடும் கருணைப் பரஞ்சோதி அருளைப் பெறுதற்கு அன்புநிலை
தேடும் பருவம் இதுகண்டீர் சேர வாரும் செகத்தீரே!

அறிவுக்கும் அடங்காமல் மனம் ஓடுகின்ற ஓட்டத்தை உணர்ந்து **தாயுமானவர்** இவ்வாறு வருந்தியிருக்கிறார். மனத்தோடு போராடியுள்ளதை அறிகிறோம்.

மாறிநின்று என்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத்து அமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்!
தேறலின் தெளிவே! சிவபெரு மானே!
திருப்பெருந் துறையுறை சிவனே!
ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த
இன்பமே! என்னுடை அன்பே! (திருவாசகம்)

புலன்களின் வழியே மனம் செல்லாமல் நெறியே அடங்கி நின்ருல் அங்கே விளையும் பேரின்ப நிலையை **மாணிக்கவாசகர்** இங்ஙனம் நன்கு அருளியிருக்கிருர்.

நெஞ்சமே! நல்லை நல்லை உன்னைப் பெற்ருல்
என்செய்யோம்? இனி என்ன குறைவினம்?
மைந்தனை மலராள் மணவாளனை
துஞ்சும் போதும் விடாது தொடர்கண்டாய்!
(திருவாய்மொழி)

மனம் வசமாகப் பெற்ருல் எல்லா நன்மைகளையும் ஒருங்கே பெறலாம்; இறைவனையும் நேரே பெற்று இன்பமுறலாம் என **நம்மாழ்வார்** இவ்வாறு அருளியுள்ளார்.

மனத்தை அடக்க மனம்துணை ஆகும்;
பினைத்துணை யின்றது பெற்றனன் ஆயின்,
தனிச்சிவ மேயொரு தானென வாழ்வன்;
நினைத்து மறந்து நிலத்துழ லானே. (1)

வாரண மாகும் மனத்தை அடக்கின்
காரண மாயை களைந்தொழி யாத
பூரண மாகிய போதம் அடைந்திட்டு
ஆரணம் ஓதும் அரும்பொரு ளாவான். (2)
(பிரபுலிங்க லீலை)

பொறிவழியே புலையாய்ப் போகாமல் மனம் நெறியே அடங்கிவரின் நிலையான பேரின்ப நலன்கள் உளவாம் என **அல்லமதேவர்** இவ்வாறு உணர்த்தியுள்ளார். மனம் வசமாஞல் அவன் மகாதேவனே.

வீணே மனம் அலைய நேரின் அல்லல்களே நேரும் ஆதலால் அதனை மடக்கி நல்ல வழியில் நடத்துவது அறிவின் கடமை யாயது. **மனம்போன போக்கெல்லாம் போக வேண்டாம்** என உலக நீதியும் உரைத்துளது.

தன் உயிர்க்குத் துன்பம் நேராமல் ஒருவன் இன்பம் உற விரும்பின் அவனுடைய உள்ளம் உணர்வின் வசு

மாய் ஒழுகி வரவேண்டும். அறிவை மருவி வருகிற மனம் உடையார் அரிய மகிமைகளை அடைகின்றனர்.

அறிவுடையார் நெஞ்சு அகலிட மாவது
அறிவுடையார் நெஞ்சு அருந்தவ மாவது
அறிவுடையார் நெஞ்சொடு ஆதிப் பிரானும்
அறிவுடையார் நெஞ்சத்து அங்குநின் றானே. (1)

அறிவறி யாமையை நீவி அவனே
பொறிவாய் ஒழிந்தெங்கும் தானான போது
அறிவா யவற்றினுள் தானு யறிவின்
செறிவாகி நின்றவன் சீவனு மாமே. (2)

(திருமந்திரம்)

பொறிவாய் ஒருவி மனம் அறிவின் வழியாயின் அந்த ஆன்மா இறைவன் வழியாயின்புறும் என்பதைத் திருமூலர் இங்ஙனம் குறித்திருக்கிறார். குறிப்புரைகள் யாவும் கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணர வுரியன.

மனம் மிகவும் சலனமுடையது; எவ்வழியும் சுழல் வளிபோல் சுற்றி யுழல்வது; அதனைச் செவ்விய வழியில் இதமாய்ப் பழக்கிவரின் திவ்விய மகிமைகள் அதனால் விளைந்து அதிசய இன்பம் சுரந்து வரும்.

மிகமுயன்று வருந்தாமல் சமமா கின்ற
வேண்டுகோளால் தன்முயல்வால் விநோதம் தன்னால்
பகர்மனமாம் சிறுமகவை நிறுத்தல் வேண்டும்
பலபிறப்பில் பரிசயங்கள் அகலப் பண்ணி
அகல்சுபவா தனையுதித்தால் முயற்சி பேறும்
ஐயுறினும் சுபமடைவா யதுசீ தல்ல
திகழ்மனம்போய்த் தற்பதத்தைத் தெளியு மட்டும்
தேசிகனூல் சொல்வழியிற் செல்லு வாயே.

(ஞானவாசிட்டம்)

தீய வகையில் செல்ல ஒட்டாமல் மனத்தை நல்ல வழியில் நயமாய்ப் பழக்கி வர வேண்டும். அவ்வாறு பழகி வரின் பிறவித் துயரங்கள் நீங்கிப் பேரின்பம் உண்டாம் என வசிட்ட முனிவர் இங்ஙனம் உண்மையான உறுதிநிலையை இராமபிரானுக்கு உணர்த்தி யிருக்கிறார்.

உள்ளத்தை ஒடுக்கி நல்ல வழியில் நன்கு உய்ப்பவர் உயர்ந்த மேதையாய் ஒளி பெற்று நிற்கின்றார்.

இவ்வுண்மை பதஞ்சலிபால் அறிய நின்றது.

## சரிதம்

இவர் ஆதிசேடன் அமிசமாய் இவ்வுலகில் அவதரித்தவர். அரிய கலைஞானங்களை யெல்லாம் இயல்பாகவே தெளிந்தவர். பாணினி முனிவர் இயற்றியுள்ள இலக்கண நூலுக்கு இவர் தெளிவான விரிவுரை அருளியுள்ளார். ஆரிய மொழியில் சீரிய பேரொளியாய் அந்த வியாக்கியானம் விரிந்து சிறந்து திகழ்கின்றது.

உலக நிலைகளில் உள்ளத்தைச் செலுத்தாமல் ஏகாந்தமாய் ஒதுங்கி யிருந்தே அவ்வுரையை இவர் எழுதி யுள்ளார். புறத்தே புலையாய் அலையாமல் அகத்தே மனம் நலமாயடங்கின் மகிமைகள் பல விளையும் என இவர் விளக்கி யிருக்கிறார். யோகத்தைக் குறித்து இவர் செய்துள்ள நூல் மேலான விவேகத்தை விளைத்துள்ளது. அந்நூல் **பதஞ்சலி யோக சூத்திரம்** என விளங்கி வருகிறது. கலைஞானங்களில் சிறந்த இவர் நவஞான யோகியாய் இறைவன் திருவருளை எய்த விழைந்தார். பரமனுடைய அருளாடலை நேரே காண விரும்பினார். இவர் கண்டு களிக்குமாறு ஆண்டவனும் ஆனந்தத் தாண்டவம் ஆடி நன்கு காட்டி யருளினார்.

பதஞ்சலிக்கு அருளிய பரம நாடக! (திருவாசகம்)

பரமன் இந்தப் பதஞ்சலிக்கு அருள் புரிந்திருப்பதை மாணிக்கவாசகர் இவ்வாறு உவந்து புகழ்ந்துள்ளார்.

பூவாது பழுக்கும் கூலடிப் பனசம்
பார்கிழித் தோடிப் பணியுல களந்த
வேர்தொறும் வேர்தொறும் வெவ்வேறு பழுத்து
முட்புறக் கனிகள் தூக்குவது ஒட்பமொடு
பதஞ்சலி முனிவனைப் பார்கொளத் தந்த
பிலங்கொளக் கொடுக்கும் பலங்கள்பல நிகர்க்கும்.
(சிதம்பர மும்மணி 8)

பலா மரங்கள் வேரில் பழுத்திருப்பது பதஞ்சலி முனிவனைத் தந்த நாகலோகத்துக்கு உவந்து உதவ நேர்ந்திருப்பது போலாம் என இது குறித்துள்ளது.

சென்றவரைத் தாமாக்கும் தில்லைச்சிற் றம்பலத்து
மன்றவரைத் தாமாக்க வல்லவர்யார்—என்றுமிவர்
ஆடப் பதஞ்சலியார் ஆக்கினர் என்பிறவி
சாடப் பதஞ்சலியார் தாம். (சிதம்பர மும்மணி 21)

பதம் சலியாமல் என்றும் ஆடும்படி **பதஞ்சலியார்** பரமனை ஆக்கியுள்ளார் என்னும் இதன் அழகை நோக்கி யுணர்க. இவருடைய அறிவும் தவமும் அரிய பேரின்ப நிலைகளை அடைந்திருக்கின்றன. மனத்தைப் பொறிகளில் செல்ல விடாமல் அடக்கி நல்ல நெறியில் செலுத்துபவரே பேரறிவாளராய்ப் பெருமேன்மை பெறுவர் என்பதை உலகம் காண இவர் உணர்த்தியருளினர். விரிவைக் கோயில் புராணத்தில் காண்க.

**நெறியே ஒழுகிவர நெஞ்சை நடத்தும்**
**அறிவே அறிவாம் அறி.**

மனம் அடங்கி மதிநலம் பெறுக.

---

423. உற்றவர்வாய்ச் சொல்லெல்லாம் ஓர்ந்தேன் உருத்திரர்
குற்றமறக் கண்டார் குமரேசா—எற்றேனும் [மெய்
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. (௩)

இ—ள்.

**குமரேசா!** உருத்திரசன்மர் புலவர்கள் எதிரே மெய்ப் பொருளைத் தேர்ந்து ஏன் உரைத்தார்? எனின், எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப் பொருள் காண்பது அறிவு என்க.

உண்மையை உய்த்து உணர்க என்கிறது.

எந்த வகையான பொருளை எவர்வாய் மூலம் கேட்டாலும் அதன் உண்மைப் பொருளை ஓர்ந்து தெரிவதே அறிவாம். அறிவுக் காட்சி அதிசய மாட்சி புரிகிறது.

பொருள் என்றது அகத்தே கருதிக் காணும் கருத்துப் பொருள்களை. அவை வரம்பின்றிப் பெருகி யிருத்தலால் எப்பொருள் என ஏற்றமா யுரைத்தார். குறிப்பின்றிக் குறித்தது அதன் சிறப்பை விளக்கி நின்றது.

கேட்பினும் காண்பதே அறிவு என்றதனுல் அவ்வாறு காணுதது அறிவு அன்று என்பது தெரிய நின்றது. கண் எதிரே பொருளை நேரே காண்பது போல் கருத்தால் திருத்தமுறக் காணுவதே தெளிந்த அறிவுக் காட்சியாம். மெய்யை அறிவது மேதையாகிறது.

பொருள்கள் பல; பேசுவாரும் பலர்; அவ்வுரைகளுள் உண்மையை நுண்மையாய் ஓர்ந்து உணர்பவரே உயர்ந்த மேதைகளாய் ஒளி மிகுந்து திகழ்கின்ருர்.

பாலும் நீரும் ஒருங்கே கலந்திருந்தாலும் நீரை நீக்கிப் பாலை அன்னம் பருகிக் கொள்ளும்; அது போல் போலியான பொய்களோடு பொருந்தியிருந்தாலும் சாரமான மெய்ப்பொருளைக் கூர்மையாக ஓர்ந்து உணர்ந்து தெளிந்து கொள்ளுவர் தேர்ந்த அறிவுடையோர்.

பெரியவர் சிறியவர் உறவினர் நட்டார் பகைவர் முதலாக எவர் எதைச் சொல்லினும் என்பார் யார் யார் வாய்க் கேட்பினும் என்ருர். யார் என்னும் விஞப் பெயர் உயர் திணை முப்பாலுக்கும் பொதுவாகும் ஆதலால் இது பலரையும் ஒருங்கே தழுவி நின்றது.

மேல், தீது ஒரீஇ மனத்தை நன்றின் பால் உய்ப்பது அறிவு என்ருர்; இதில் தீதை நன்ருகவும், நன்றைத் தீதாகவும் பிறர் திரித்துச் சொல்லினும் சொல்லுவர் ஆதலால் சொல்வாரது நிலையை நோக்காமல் பொருளின் உண்மையை நோக்கி ஒண்மையாய் உணர்வதே உயர்ந்த உணர்வாம் என உணர்த்துகின்ருர்.

சுருதி யுத்தி அனுபவம் யூகம் விவேகம் என்பன அறிவின் கிளைகள்; இவை உண்மைப் பொருளை உரிமையாக உணர வுரியன. பிறர் கூறும் மொழிகளுள் மெய்ம்மையை ஓர்ந்து கொள்வது தேர்ந்த அறிவுடைமையாம்.

**வாய்** என்பதை ஏழனுருபாக் கொள்ளின் யாரிடம் கேட்பினும் என்று பொருள் கூறிக் கொள்ளலாம்.

ஊகமுள தேல்சிறுவர் உரையும் கொள்க
　　ஒழிந்ததுஅயன் உரைசெயினும் திரணம் ஒப்ப
ஏகவிடு வாய்ஞானம் எளிது தோன்ற
　　இயம்பும்உவ மானமெலாம் ஏக தேச
மாகநினை வாயுருவ மற்ற ஞானம்
　　ஆகார மாமுவமைக் கண்டா தென்னும்
மூகரனு பவமில்லா விகற்பத் தாலே
　　மொழிகுதர்க்கம் அறிவழிக்கும் முயல வேண்டா.
(வாசிட்டம்)

யுத்திக்குப் பொருந்தி உண்மையா யிருந்தால் சிறுவர் கூறினும் அவ்வுரையை உவந்துகொள்; பொருத்தம் இல்லாததைப் பிரமதேவன் சொன்னாலும் அதைத் துரும்பா இகழ்ந்து தள்ளி விடு என மெய்ப்பொருள் உணர்வை வசிட்டமுனிவர் இராமனிடம் இவ்வாறு கூறியிருக்கிறார்.

எவர் எவ்வாறு எதைச் சொல்லினும் அவ்வுரைகளுள் உண்மையை ஓர்ந்து கொள்ள வேண்டும். அதுவே உயர்ந்த அறிவாம்; தெளிந்த ஞானமாம்.

இவ்வுண்மை உருத்திரசன்மர்பால் உணர வந்தது.

## சரிதம்

இவர் மதுரையம் பதியினர். வணிகர் மரபினர். தந்தை பெயர் தனபதி. தாய் சாலினி. முருகப் பெருமான் திருவருளால் பிறந்த இவர் யாரோடும் யாதும் பேசாமல் மோனமாயிருந்தார். எல்லாக் கலைகளையும் ஓதாது உணர்ந்தமையால் உயர்ந்த மேதையாய் இவர் ஒளி மிகுந்து நின்றார். இவருடைய நிலைமை தலைமைகளைச் சங்கப் புலவர்கள் அறிய நேர்ந்தார். இறைவன்

அருளால் இவரது பெருமையை உணர்ந்த பெரிய புலவர்கள் இவரைத் தொழுது துதித்து உரிமையுடன் அழைத்துச் சென்று சங்க மண்டபத்தினிடையே தனி ஆசனத்தில் அமர்த்தித் தங்கள் சங்கையை உரைத்தார். அவருடைய உரைகளை யெல்லாம் ஓர்ந்து கேட்டார். உண்மைப் பொருளைத் தேர்ந்து குறிப்பால் உரைத்தார்.

பின்பாவலர் எல்லாம்பெரு வணிகக்குல மணியை
அன்பாலழைத் தேகித்தமது அவையத்திடை யிருத்தா
நன்பான்மலர் நறுஞ்சாந்துகொண் டருச்சித்தனர் நயந்தே
முன்பாலிருந் தருந்தீந்தமிழ் மொழிந்தார் அவைகேளா: (1)

நுழைந்தான்பொருள் தொறுஞ்சொற்றொறும் நுண்டீஞ்சுவை யுண்டே
தழைந்தானுடல் புலனைந்தினும் தனித்தான்சிரம்பனித்தான்
குழைந்தான்விழி வழிவேலையுட் குளித்தான்றனை யளித்தான்
விழைந்தான்புரி தவப்பேற்றினை விளைத்தான்களி திளைத்தான். (2)

பல்காசொடு கடவிற்படு பவளம்சுடர் தரளம்
எல்லாநிறுத் தளப்பானென இயல்வாணிகக் குமரன்
சொல்லாழமும் பொருளாழமும் துலைநாவெனத் தூக்க
நல்லாறறி புலவோர்களும் நட்டாரிகல் விட்டார். (3)
(திருவிளையாடல் 55)

சங்கப் புலவர்கள் கூறிய உரைகளைக் கேட்டு உண்மைப் பொருளை இவர் கூர்ந்து ஓர்ந்து குறித்துள்ளமையை இதில் அறிந்து கொள்ளுகிறோம். நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளைப் பாசுரங்களில் தேர்ந்து தெளிந்து கொள்ள வேண்டும். எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருளின் மெய்ப்பொருள் காண்பது அறிவு என்பதை உலகம் அறிய இவர் உணர்த்தியுள்ளார். இவரது மெய்யறிவு தெய்வீகம் உடையதாய்ச் சிறந்து விளங்கினமையால் வையம் வாழ்த்தி வந்தது.

**உள்ளதை உள்ளபடி ஓர்ந்துணரின் அன்னதே**
**தெள்ளிய ஞானம் தெளி.**

மெய்யை ஐயமின்றி அறிக.

———

424. கண்டார் படிக்காசர் காசருயர் நுண்பொருளும்
கொண்டெளிதேன் சொன்னர் குமரேசா--கண்டதனை
எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு. (சு)

இ—ள்.

குமரேசா! படிக்காசரும், சிவப்பிரகாசரும் எதையும் எளிதாகச் சொல்லி ஏன் தெளிவா யறிந்தார்? எனின், எண் பொருள வாகச் செலச் சொல்லித் தான் பிறர்வாய் நுண் பொருள் காண்பது அறிவு என்க.

அறிவுக் காட்சிகள் அறிய வந்தன.

எதையும் எளிதே தெளிய மொழிந்து, பிறர் கூறுகிற நுண்ணிய பொருள்களை விரைந்து உணர்ந்து கொள்வது சிறந்த அறிவுடைமையாம்.

தான் என்றது சொல்லுதற்கும் காணுதற்கும் உரிய ஒருவனைக் காட்டி நின்றது. அறிவுள்ள மனிதனுடைய பேச்சும் காட்சியும் மாட்சியாய்க் காண வந்தன. அறிவுடையான் தொழிலை அறிவின் மேல் ஏற்றிக் கூறியது மூலநிலையின் முதன்மை கருதி.

செலச் சொல்லி என்றது கேட்பவர் உள்ளம் விரைந்து உணர்ந்து தெளிந்து உவந்து கொள்ளும்படி உரைத்தலை. தெளிய மொழிபவன் ஒளி மிக வுறுகிருன்.

தான் சொல்லுகின்ற பொருள் அறிதற்கு அரியன வாயினும் கேட்கின்றவர்க்கு எளிதே விளங்குமாறு கூறுவதும், பிறர் கூறுவதிலுள்ள நுண்பொருள்களைக் கூர்ந்து ஓர்ந்து குறிப்போடு தேர்ந்து தெளிந்து கொள்ளுவதும் ஆர்ந்த அறிவுடையார் இயல்பாம்.

நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலும் நூற்கேலா
வெண்மொழி வேண்டினும் சொல்லாமை—நன்மொழியைச்
சிற்றினம் அல்லார்கட் சொல்லலும் இம்மூன்றும்
கற்றறிந்தார் பூண்ட கடன். (திரிகடுகம் 32)

அறிவுடையார் சொல்ல வல்ல நீர்மைகளை நல்லாதனார் இவ்வாறு கூறியுள்ளார். நுண்பொருள் காண்பது அறிவு என்றதை அடியொற்றி இது வந்துள்ளது. நுண்மையா நோக்கி உண்மையைக் காண்பவன் திண்மையான தெளிந்த காட்சியாளனாய்ச் சிறந்து திகழ்கிறான்.

பிறர் தெளிந்து மகிழச் சொல்லுக; அவர் வாய்மொழியின் பொருளைக் கூர்ந்து தேர்ந்து கொள்ளுக என்று இருவகை நிலைகளைத் தெளித்துள்ளார்.

> வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்
> மாட்சியின் மாசற்றார் கோள். (குறள் 646)

பின்னரும் இன்னவாறு கூறியுள்ளார். அறிவுடைமைக்கும், சொல்வன்மைக்கும் உள்ள உறவுரிமைகளை ஊன்றி நோக்கி ஈண்டு உணர்ந்து கொள்கிறோம்.

பிறர் தெளிவின்றிப் பேசினும் நீ தெளிவாய் உணர்; எதையும் தெளிவாக எவர்க்கும் நீ உணர்த்து என அறிவுறுத்தியுள்ளார். அறிவைச் சரியாக அளந்து அறிதற்கு உரை சிறந்த உரைகல்லாயுள்ளது.

> இழிந்தவன் உயர்ந்தது ஒன்றை இயம்பினும், உயர்ந்தோன் வாயில்
> இழிந்ததொன் றுறினும், உள்ள இயல்பறிந்து ஓம்பி நீக்கிப்
> பொழிந்தெனப் பிறர்தாம் கூறும் புலப்படாப் பொருளும் தெள்ளி
> வழிந்தெனத் தெளியக் கேட்போர் மனங்கொளப் புகறல் வேண்டும்.
> (விநாயகபுராணம்)

எப்பொருள் யார் வாய்க் கேட்பினும் அதன் மெய்ப்பொருள் காணுக; எண் பொருளவாகச் செலச் சொல்லிப் பிறர்வாய் நுண் பொருளை நுனித்து அறிந்து கொள்ளுக என்பதை இது கருதி வந்துள்ளது. அவ்வுண்மையை உரைகளில் உணர்ந்து கொள்ளலாம்.

ஒருவனுடைய கல்வியின் ஏற்றமும், அறிவின் ஆற்றலும் அவன் பேசுகின்ற சொல்லாற்றலால் வெளியே தெரிய வருகின்றன. வாய் மொழியில் தெளிவும் செறிவும் நயமும் இல்லையானால் அவனுடைய அறிவு இழிவாய்க் கழிந்து வழுவா எண்ணப் படுகிறது.

சொல்லுங்கால் சொல்லின் பயன்காணும் தான்பிறர்
சொல்லிய சொல்லை வெலச்சொல்லும்; பல்லார்
பழித்தசொல் தீண்டாமல் சொல்லும்; விழுத்தக்க
கேட்டார்க்கு இனியவைச் சொல்லானேல் பூக்குழலாய்!
நல்வயல் ஊரன் நறுஞ்சாந் தணியகலம்
புல்லலின் ஊடல் இனிது. (தகடூர்)

சொல்வலியின் மாட்சியும், பொருளறிவின் காட்சியும் இல்லாதவனை மணப்பதினும் தணப்பது நல்லது என ஒரு தலைவி தன் தோழியிடம் இவ்வாறு கூறியுள்ளாள். நுண்மையான பொருளுணர்வும், எண்மையான மொழியறிவும் எவ்வளவு மேன்மையுடையன! என்பதை இந்தப் பெண்மை மொழி திண்மையாய் வெளிப்படுத்தி உண்மையைத் துலக்கி யுளது.

நூல்பல கற்றேன் எனும் பொருள் நுனித் தறியான் என்னில்
மாலொடு வாளா கத்தும் மானிறக் காகம் போல்வன்;
ஏல்வுறக் கற்ற நூலின் பொருள்தெரிந் திருநூல் சொன்ன
சீலமே ஒழுகு கின்றேன் சிவனடி நீழல் சேர்வான்.
(கூர்மபுராணம் 2-14)

**நுண்பொருள் காணாதவன்** அறிவும் கல்வியும் வீணாம் என்னும் இதனை ஈண்டு எண்ணி யுணர வேண்டும். நூலறிவின் பயன் வாலறிவனை மருவலே.

எதையும் பிறர்க்கு எளிதாக விளக்கி எவ்வகைப் பொருளையும் தெளிவாக அறிவுடையார் உணர்ந்து கொள்வர். அவரது உணர்வொளி உயர்புகழுடையதாம்.

இவ்வுண்மைகள் படிக்காசர் பாலும், சிவப்பிரகாசரிடமும் தெளிவாய் நன்கு தெரிய நின்றன.

## சரிதம்

படிக்காசுப் புலவர் தொண்டை மண்டலத்திலே தென்களந்தை என்னும் ஊரிலே பிறந்தவர். சிறந்த புலமையும் நிறைந்த சீலமும் உடையவர். உலக நிலைகளைப் பலவகையிலும் தெரிந்து உளவுறுதி பூண்டு

யாண்டும் பரமன் அருளையே இவர் நாடியிருந்தார். அரிய கருத்துக்களை எவரும் எளிதே அறியும்படி தெளிவாக மொழிவதே இவரிடம் இயல்பாயமைந்திருந்தது. பேச்சு வழக்கோடு செய்யுள் வழக்கிலும் அந்த எளிமை இனிமைகளை எவ்வழியும் இவர் பழகி வந்துள்ளார்.

பிறக்கும்போது ஒருபொருளும் கொடுவந்த
தில்லையுயிர் பிரிந்து மண்மேல்
இறக்கும்போ திலும்கொண்டு போவதில்லை
என்றுசும்மா விருந்து வீணே
சிறக்கும்தா யினும்அருள்வார் தண்டலையில்
சேராமல் தேச மெல்லாம்
பறக்கும்கா கம்இருக்கும் கொம்பறியா
தெனத்திரிந்து பயன் பெறுரே. (1)

வைதிடினும் வாழ்த்திடினும் இன்பதுன்பம்
வந்திடினும் வம்பு கோடி
செய்திடினும் தண்டலைநீள் நெறியார்தம்
செயல்என்றே தெளிவ தல்லால்
மெய்தவிர அவர்செய்தார் இவர்செய்தார்
என நாடி வெறுக்க லாமோ?
எய்தவர்தாம் அருகிருக்க அம்பைநொந்த
கருமமென்ன இயம்பு வீரே! (2)

பொற்குடையும் பொற்றுகிலும் பொற்பணியும்
கொடுப்பதென்ன பொருளோ என்றும்
நற்கமல முகமலர்ந்தே உபசார
மிக்கவின்சொல் நடத்தல் நன்றே
கற்கரையும் மொழிபாகர் தண்டலையார்
வளநாட்டில் கரும்பின் வேய்ந்த
சர்க்கரையின் பந்தலிலே தேன்மாரி
பொழிந்துவிடும் தன்மை தானே. (3)

(தண்டலையார் சதகம்)

இவருடைய உண்மையுணர்வும் உறுதிமொழிகளும் எளிமை தோய்ந்து தெளிவாய் வந்துள்ளமையை இவற்

ருல் உணர்ந்து கொள்கிறேம். எங்கும் இன்சொல் இயம்பி யாண்டும் இதமே புரிய வேண்டும் என்று இவர் குறித்துள்ளமை கூர்ந்து சிந்திக்க வுரியது.

ஒரு முறை நதியில் இவர் நீராடிக்கொண்டிருந்தார். இவருடைய வேட்டியை மாணவன் துவைத்து நீரில் அலசும் போது நீரோட்டம் ஈர்த்துக் கொண்டு போயது. "ஐயோ வேட்டி போய்விட்டதே!" என்று அவன் பதறிக் கூறினன். இவர் அவனை நோக்கி அமைதியாய்ப் பதிலுரைத்தார். அவ்வுரை செவ்விய பாட்டாகவே வந்தது. நயமான அவ் வெண்பா அயலே வருவது காணுக.

அப்பிலே தோய்த்திட்டு அடுத்தடுத்து நாமதனைத்
தப்பினல் நம்மையது தப்பாதோ?—இப்புவியில்
இக்கலிங்கம் போனலென் ஏகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்கம் உண்டே துணை.

தண்ணீரில் தோய்த்து நாம் அதனைப் பலகாலமும் தப்பி வந்தோம்: இன்று அது நம்மைத் தப்பிப் போய் விட்டது; இந்தக் கலிங்கம் போனல் என்ன! மதுரைச் சொக்கலிங்கம் நமக்குத் துணையுண்டு என்று நயமாய்ச் சொல்லி நின்ருர். அப்பு = தண்ணீர். கலிங்கம் = ஆடை; தப்புதல் = வெளுத்தல்; தவறிப்போதல். இவருடைய மன அமைதியையும், அறிவின் நிலையையும், மொழியின் நயங்களையும் தெய்வ பத்தியையும் இது தெளிவாய்க் காட்டியுளது. தாம் கருதிய கருத்துக்களை யாரும் எளிதே அறியும்படி இவர் தெளிவாய் மொழிந்து வந்தார். எண் பொருளவாகச் செலச் சொல்லும் திறம் இனிது அமைந்திருந்தமையால் இவர் தெளிந்த மதியுடையார் என்று எங்கு சிறந்து விளங்கி நின்ருர்.

## சிவப்பிரகாசர்

இவர் காஞ்சிபுரத்தில் பிறந்தவர். தந்தை பெயர் குமாரசாமி தேசிகர். தென்மொழி வட மொழிகளிலுள்ள பலவகை இலக்கிய இலக்கணங்களையும் இளமையிலேயே இவர் வழுவறக் கற்றுத் தெளிவுற்றிருந்தார்.

இவருடைய சொல்லும் செயலும் எவ்வழியும் அறிவு மணம் கமழ்ந்து இனிமை சுரந்து வந்தன. தம் இல்லின் புறத்தேயிருந்த வாழைத் தோட்டத்துள் சில பசுவின் கன்றுகள் புகுந்து மேய்வதைக் கண்டார். விரைந்து வந்து தாயாரிடம் "அம்மா! அம்மா! நம் கொல்லையிலுள்ள வாழைக் கன்றுகளை ஆவின் கன்றுகள் மென்று தின்று விட்டன" என்றார். அப்பொழுது இவருக்கு வயது நான்கு. பாலப் பருவத்தே பழுதறப் பேசிய இவரது சீலத்தை வியந்து அனைவரும் மகிழ்ந்தார். பருவம் அடைந்த பின் இவரது புலமை யாண்டும் தலைமையாய் ஒளிவீசி நின்றது. எதையும் யாரும் தெளிவா யறிய எளிதே மொழிவதும், அரிய நுண் பொருள்களை எவர் எவ்வாறு கூறினும் உடனே உணர்ந்து கொள்வதும் இவரிடம் உயர்வா யமைந்திருந்தன. இலக்கண இலக்கியங்களில் மிகவும் வல்லவராய்ச் சிறந்திருந்த வெள்ளியம்பலத்தம்பிரான் என்னும் பெரியவரை ஒரு நாள் இவர் கண்டார். அவர் இவரது அறிவு நிலையை அறிய விரும்பினர்: கு என்னும் எழுத்து முதலிலும் முடிவிலும் மருவி நிற்க ஊருடையான் என்பது இடையே அமையச் சிவபெருமான் மீது நவமாக ஒரு வெண்பாப் பாடுக என்றார். உடனே இவர் பாடியருளினர். அந்தப் பாட்டு அயலே வருகிறது.

குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னமணி யாற்கு—வடக்கோடு
தேருடையான் தெவ்வுக்குத் தில்லைதோல் மேற்கொள்ளல்
ஊருடையான் என்றார் உலகு.

இந்த வெண்பாவைக் கேட்டதும் அந்தப் பெரியவர் பெரிதும் வியந்தார். பொருள் நயங்களை நுணுகி யுணர்ந்து பரம்பொருளருள் பெற்றவர் என்று புகழ்ந்து மகிழ்ந்தார்.

குடக்கு=மேற்கு. ஓடுவான் என்றது சூரியனை. கேழல் முடக்கோடு=பன்றியின் வளைந்து கொம்பு. இது திருமால் வராக அவதாரமாய் வந்ததைக் குறித்தது. வடக்கு ஓடு தேர்=தென்றல். அதனை இரதமாக வுடைய

வன் மன்மதன்; தெவ்=பகை. திருமாலை அடக்கி, சூரியனை மடக்கி, காமனை வென்றுள்ள கண்ணுதற் கடவுளுக்கு ஊர் தில்லை; உடை தோல்; வாகனம் ஆன் என இக்கவி சுவையாய் வரைந்து காட்டியுள்ளது. **பிறர்வாய் நுண் பொருளை** யூகித்து உணர்ந்து அதனை வெண்பாவில் விநயமாய் விளக்கியிருக்கும் வித்தகத்தை வியந்து புலமையுலகம் இவரைப் புகழ்ந்து போற்றி வருகிறது. பிரபுலிங்கலீலை, திருவெங்கைக் கோவை, திருக்கூவப் புராணம், நால்வர் நான்மணிமாலை முதலிய நூல்களை இவர் செய்திருக்கிறார். இவருடைய கவிகள் செறிவு தெளிவு இனிமை முதலிய அரிய பல சுவைகளை மருவியுள்ளன. கற்பனைக் களஞ்சியம், அற்புதக் கவிஞர் விற்பன விவேகி என இவர் வியன்பேர் பெற்றுள்ளார். பிறர்வாய் நுண் பொருள்களை நுனித்து உணர்ந்து எதையும் எண் பொருளவாகச் சொல்லுவோரே தெளிந்த அறிஞர்; தேர்ந்த மேதை என்பதை உலகம் ஓர்ந்து காண இவர் உணர்த்தி நின்றார்.

**அதிநுட்ப மாக அறிதல் மொழிதல்**
**மதிநுட்ப மாகும் மதி.**

எதையும் யூகித்து உணர்.

---

425. மண்டுபுகழ்ச் சீனக்கன் மாருதேன் ஓர்நிலையாய்க்
கொண்டிருந்தான் நட்பைக் குமரேசா—கண்ட
உலகம் தழீஇய தொட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்ல தறிவு. (ரு)

இ-ள்.

**குமரேசா!** தான் தழுவிக்கொண்ட நட்பில் சீனக்கன் ஏன் யாதும் மாருமல் நிலைத்திருந்தான்? எனின், **உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு** என்க.

ஒட்பமும் அறிவும் நுட்பமா உணர வந்தன.

உயர்ந்த மேலோரை உரிமையாய் மருவி ஒழுகுவது ஒண்மையாம்; அதில் மலர்தலும் கூம்பலும் இன்றி ஒரு நிலையாய் நிலைத்து நிற்பது அறிவாம்.

தழீஇயது=பொருந்தி நிற்பது. ஒட்பம்=ஒள்ளிய தன்மை. அறிவின் ஒளி இங்ஙனம் அறிய வந்தது.

மேலான நல்லோரைத் தழுவி ஒழுகுவது ஒருவனுக்கு உள்ளுணர்வான நல்ல அறிவுடைமையாம். அஃது ஈண்டு உணர வந்தது. ஒட்பமும் அறிவும் மனிதனை மாண்புறுத்தி வருகின்றன. அதனைப் போற்றி வருபவர் புகழ்பெற்று யாண்டும் ஏற்றம் பெறுகின்றனர். நிலைதிரியாத நிலைமை தலைமை யாயது.

ஒட்பம்=உள்ளே இயற்கையாய் அமைந்த உணர்வு. மாறாத மதிநலம் மதிப்பு மிக வுடையது.

அறிவு=கல்வி கேள்விகளால் வளர்ந்த தெளிவு.

உலகம் என்றது இங்கே மேன்மக்களை உணர்த்தி நின்றது. உயர்ந்தோர் வழியே உலகம் உளது.

உலகம் திரியா ஓங்குயர் விழுச்சீர். (மணிமேகலை 1)
உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு. (திருமுருகு 1)
பொய்தீர் உலகம் எடுத்த கொடி. (கலி 141)
பெயர்ச்சியில் உலகம் பெற்றான். (பெருங்கதை 1, 56)

இவற்றுள் உலகம் குறித்துள்ளமை அறிக.

மலர்தல்=பிரியமாய் மகிழ்தல். கூம்பல்=வெறுப்பாய்க் கவிழ்தல். தக்காரோடு நட்பாய்த் தழுவிக் கொண்டபின் மாறுபடலாகாது; நிலைதிரியாமல் என்றும் ஓரே படியாய் நின்று வர வேண்டும். அதுதான் அறிவாளிகளுக்கு உரிமையான பெரிய அழகு.

கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது
வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போல் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
நயப்பாரும் நட்பாரும் இல். (நாலடியார் 215)

**மலர்தலும் கூம்பலும்** இதில் வந்துள்ளன. மரங்களில் பூக்கின்ற பூ மலர்ந்தபடியே யிருக்கும்; நீர் நிலைகளில் பூக்கின்ற தாமரை குமுதம் முதலிய பூக்கள் மலர்தலும் குவிதலுமாய் மருவி நிற்கும். ஒருவரோடு செய்கின்ற நட்பு கோட்டுப் பூப் போல் இருக்க வேண்டும்; முன்பு மலர்ந்து பின்பு கூம்புகின்ற நீர்ப் பூவைப் போல இருக்கலாது என இது குறித்துள்ளது.

நலமிக வுயர்ந்தோர் தம்மை நண்புறத் தழுவிக் கொள்க;
நிலவிய கயத்துப் பூவை நிகர்தராது உயர்ந்த கோட்டின்
அலரென அவர்பால் நிற்க; ஆக்கமிக் கடுத்த காலை
மலர்வதும் வறங்கூர் காலைக் கூம்பலும் ஒழிக மைந்தா!
(விநாயகபுராணம்)

இந்தக் குறளின் பொருளைத் தெளிவாக விரித்து விளக்கி ஒளி செய்து இது நயமாய் வந்துள்ளது.

மலர்ந்து பின் கூம்பாத கோட்டுப் பூவைப் போல் நல்லோரைக் கலந்து நண்பராயிருப்பவரே நல்ல அறிஞர்; நீர்ப்பூவைப் போல் காலையில் மலர்ந்து மாலையில் மாறு யிருப்பது மதி நலமாகாது.

காலையில்ஒன் றுவர் கடும்பகலில் ஒன்றுவர்
மாலையில்ஒன் றுவர் மனிதரெலாம்—சாலவே
முல்லானைப் போல முகமுமக மும்மலர்ந்த
நல்லானைக் கண்டறியோம் நாம். (ஔவையார்)

அகமும் முகமும் மலர்ந்தபடியே என்றும் ஒரு நிலையாய் நின்ற **முல்லான்** என்னும் நல்லானை ஔவையார் இப்படிப் புகழ்ந்து பாடியிருக்கிறார். நிலை திரிந்து நிற்பவர் சிறந்த மனிதராய் உயர்ந்து திகழார். நீர்மையான நேர்மை யுடையவரே எவ்வழியும் சீர்மை யடைவர்.

நண்பராய்த் தழுவியபின் விழுமியோர் வேறுபடார்.
இவ்வுண்மை சீனக்கர்பால் தெரிய நின்றது.

## சரிதம்

இவர சோழ நாட்டிலே அரசை என்னும் ஊரில் இருந்தவர். வேளாளர் குலத்தினர். சிறந்த செல்வமும் நிறைந்த கல்வியும் உடையவர். சோழ மன்னனுக்கு மந்திரியாய் இவர் மருவி யிருந்தார். அரசுக்கும் நாட்டுக்கும் நலம் பல செய்து வந்தார். யாவர்க்கும் இனிய நீர்மையரான இவர் பால் எல்லாரும் பிரியம் மீதூர்ந்து நின்றார். நல்ல கல்வி யறிவுடைய இவர் **பொய்யா மொழிப் புலவர்** மீது பேரன்பு பூண்டிருந்தார். மதிநல முடைய அவரை அடிக்கடி அழைத்து உபசரித்து வைத்து அவரது அறிவுரைகளைக் கேட்டு மகிழ்ந்தார். ஒரு நாள் இரவு இருவரும் ஒரு மஞ்சத்தில் அமர்ந்து உல்லாசமாய் உரையாடிக் கொண்டிருந்தார். அவ்வமையம் அரச காரியமாய் முதலியார் வெளியே போனார். புலவர் அந்த அமளியில் அயர்ந்து உறங்கினர். சிறிது பொழுது கழிந்து இவருடைய மனைவி அங்கே வந்தாள். தனது நாயகன் என்றே கருதி அவர் அருகே சார்ந்து துயின்றாள். வேலை நிமித்தம் வெளியே போயிருந்த இவர் மீண்டு வந்தார். நிலைமையை நேரே கண்டார். இனந் தெரியாமல் இது நிகழ்ந்துள்ளதென்று உணர்ந்தார். பழி சிறிதும் இல்லாத அந்த இருவருக்கும் இடையே புகுந்து இவர் இனிது உறங்கினர். விடியுமுன் ஒருவர் பின் ஒருவர் எழுந்தார். மனைவியாரும் புலவரும் மனம் பதைத்து நொந்தார். அந்த இருவரையும் இனிது தேற்றி இந்தப் பெருந்தகை யாதும் மாறுபடாமல் பண்டு போலவே உரிமை பூண்டிருந்தார். இவரது அறிவுடைமையையும் அன்புடைமையையும் நினைந்து நினைந்து புலவர் உள்ளம் உருகினர். இந்த நிகழ்ச்சியை அரசனும் அறிந்தான்; புலவரை அழைத்தான்; உண்மையை உசாவினன். உற்றதை முற்றும் கொற்றவன் அறிந்து தெளிய இவர் குணமுடன் வரைந்து உரைத்தார்.

தேரையார் செவ்விளநீர் உண்ணுப் பழிசுமப்பர்;
நாரியார் தாமறிவர் நாமவரை நத்தாமை
கோரைவாய் பொன்சொரியும் கொல்லிமலை நன்னுட
ஊரைவாய் மூட உலைமூடி தானுண்டோ?

மன்னனும் மனந்தெளிந்தான். ஊரவரும் உண்மையை உணர்ந்தனர். யாவரும் முதலியாரை உவந்து புகழ்ந்து வந்தார். இறுதியில் இவர் காலமானுர். இவர் இறந்தபோது புலவரும் விரைந்து வந்தார். மயானத்தில் அடுக்கியிருந்த சந்தனக்கட்டை மேல் இவரைக் கிடத்தி யிருந்ததைக் கண்டார். கண்ணீர் சொரிந்து கதறி அழுதார். "அன்று நீர் என் இடையே படுத்துத் துயின்றீர்; இன்றும் எனக்கு இடம் கொடும்" என்று தழுவிக் கிடந்தார்; உயிர் பிரிந்து போயது. யாவரும் பரிந்து வியந்தார். இருவரும் ஒருங்கே மறைந்தார்.

யானேதும் பிழையறியேன்; இளையவளும்
பதிவிரதை; எனினும் என்பால்
ஊனேதும் உரையாமல் உள்ளன்பே
பூண்டிருந்த உரிமை யாளா!
தேனேறு மலர்மார்பா! சீனக்கா!
இன்றும்எனக் கிடம்நீ தந்து
வானேறு புகழோடு வாழ்ந்துள்ளாய்
வானவரும் மகிழ்ந்து வாழ்த்த.

புலவர் இவ்வாறு அவரைக் கருதி யுருகியுள்ளார். உலகம் தழீஇயது ஒட்பம்; மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு என்பதை இந்தப் பேரறிவாளர் இருவரும் பாரறிய உணர்த்தியுள்ளார். இவருடைய அறிவும் பண்பும் நண்பும் அதிசய நிலையில் துதிகொண்டு என்றும் எவரும் உவந்து வர உயர்ந்து நின்றுள்ளன.

நிலைதிரியார் என்றும் நெறியோடு நிற்பர்
தலையறி வாளர் தனி.

மாறுபடாமல் மதியுடன் வாழுக.

———

426. பண்டுலகுக் கொப்பவேன் பத்தினியைக் காகுத்தன்
கொண்டுவிட்டான் கானில் குமரேசா—மிண்டியே
எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
டவ்வ துறைவ தறிவு. (சுஎ)

இ—ள்.

குமரேசா! இராமன் ஏன் தனது மனைவியை உலக நிலைக்கு ஒப்ப வனத்தில் உறைய விடுத்தான்? எனின், உலகம் எவ்வது உறைவது உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு என்க.

இஃது உலகியலறிவை உணர்த்துகின்றது.

உலகம் எந்த வகையில் இயங்குகிறதோ அந்த வழியே அதனோடு அமைந்து ஒழுகுவதே அறிவாம்.

எவ்வது=எவ்வழியில். அவ்வது=அவ்வழியில். முன்னது வினைவடியாய்ப் பிறந்தது. பின்னது அதை ஒட்டிச் சுட்டடியாய்த் தோன்றியது.

உறைவது=உறுதியாய்ப் பொருந்தி யிருப்பது. உறைவது இரண்டனுள் முன்னது வினையாலணையும் பெயர்; பின்னது தொழிற்பெயர். தங்குதல், இருத்தல்களைக் குறித்து வருவது ஈண்டு நெறியே நியதியாய் ஒழுகுவதை உணர்த்தி நின்றது.

உலகப் போக்கை உணர்ந்து இணைந்து ஒழுகுவது உயர்ந்த விவேகமாய் விளங்கியுளது. கல்வி கேள்விகளால் உயர்ந்து ஞான சீலங்கள் நிறைந்திருந்தாலும் ஞாலம் அறிந்து ஒருவன் நடந்துகொள்ள வில்லையானல் அது சாலவும் பிழையாம்.

உலகம் என்னும் சொல் உயர்ந்த பெரியோரையும், உயிரினங்கள் வாழ்ந்து வருகிற நிலமண்டலத்தையும் ஒருங்கே உணர்த்தி வரும். மனிதத் திரள்கள் பரந்து விரிந்துள்ள கூட்டத்தின் இயக்கமே உலக ஒழுக்கமாயுள்ளது. அதனோடு இணைந்து இசைந்து அணைந்து செல்வதே அறிவுடைமைக்குச் சிறந்த அழகாம்.

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். (குறள் 140)

உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும். (குறள் 850)

உலகத்தோடு ஒத்து நடப்பதே அறிவாம்; அதனோடு மாறுபாடாய் வேறுபடுவது மடமையான பேய்த் தனமாம் என இவை உணர்த்தி யுள்ளன. **ஒழுக்கம் உடைமை, புல்லறிவாண்மை** என்னும் இரண்டு அதிகாரங்களின் முடிவில் இப்படி முடித்திருக்கின்றார்.

திரளான மனித இனத்தின் அதிசய ஆற்றலையும், உலக இயக்கத்தின் நிலைமைகளையும் தேவர் தலைமையாக எண்ணி யுள்ளார். அந்த உண்மைகளை நுண்மையாக ஈண்டு உணர்ந்து தெளிந்து கொள்ளுகிறோம்.

எல்லாம் வல்ல இறைவன் இயக்கத்தின்படியே யாவும் இயங்குகின்றன என்று தெளிந்து தன் கால நிலையை உணர்ந்து ஞாலத்தோடு ஒத்து வாழுபவனே உயர்ந்த மதிமானாய் ஒளி மிகுந்து திகழ்கின்றான்.

எவரெவர் எத்திறத்தர் அத்திறத்த ராய்நின்று
அவரவருக்கு ஆவன கூறி—எவரெவர்க்கும்
உப்பாலாய் நிற்பமற் றெம்முடையார் தம்முடையான்
எப்பாலும் நிற்ப தென. (நீதிநெறி 98)

தெளிந்த அறிவுடைய ஆசிரியன் நிலையை இது காட்டியுளது. பாடு அறிந்து ஒழுகுவதே பண்பாம்.

உலகம் முழுவதும் ஆளும் தலைமையுடையனாயினும் தன் காலத்தில் மாந்தர்கள் எப்படி வாழ்ந்து வருவார்களோ, அப்படி ஓர்ந்து நடந்து உரிமை கூர்ந்து வருவது இராச தந்திர முடைய வேந்தன் கடமையாம்.

அரிய கலைஞானியாய்த் தலை சிறந்திருந்தாலும் உலக நிலையை உணர்ந்தே உயர்ந்தோர் ஒழுகிவருவர்.
இவ் வுண்மை இராமரிடம் தெரிய நின்றது.

தீயவாள் அரக்கன் சிறையிடை யிருந்து
செந்நெறித் தீயிடை மூழ்கி
ஏயமா தவர்க்கும் இமையவ ராஞோர்
யாவர்க்கும் என்மனத் துக்கும்
தூயளா யிருந்தாள்; ஆயினும், உலகோர்
சொல்லுறு பெரும்பழி தனைக்கேட்டு
ஓயும்என் உள்ளம்; உண்மையால் பயன்என்?
உலகுளோர்க்கு ஒத்திடா தொழி ின்! (2)

ஓதநீர் வேலை யுலகுளோர் இல்லது
உளதெனின் உள்ளதாம்; உள்ளது
யாதொரு பொருளை யில்லையென் றுரைக்கின்
இல்லையாம்; இதுவுல கியற்கை;
ஆதலால் அவளை அருந்தவத் தோர்கள்
ஆச்சிர மத்தயல் விடுத்தும்
ஈதுநான் துணிந்த காரியம்; இதுவே
றெண்ணுவ தொருபொரு ளில்லை. (3)
(உத்தரகாண்டம் 12)

இராமன் எண்ணியுள்ள எண்ணங்களையும், இளையவர்களோடு உசாவி உளந்து துணிந்துள்ள துணிவுகளையும் இவற்றால் உணர்ந்து கொள்கிறோம். உலக நிலைகளைக் குறித்து இக்குலமகன் கருதி யிருப்பன கருத்தூன்றிச் சிந்திக்க வந்தன. **உலகுளோர்க்கு ஒத்திடாது ஒழியின், உண்மையால் பயன் என்?** உலக மக்கள் ஒப்ப ஒழுகுவதே ஒழுக்கம்; அவர் ஒவ்வாதது எவ்வகையிலும் செவ்வையாகாது என்று தெளித்திருக்கிறான். தனக்கு மேல் யாரும் இல்லாமல் யாண்டும் தனி ஆணை செலுத்த வல்ல சக்கரவர்த்தியா யிருந்தும் **உலகம் எவ்வது உறைவது, அதனோடு அவ்வது உறைவது அறிவு** என்று அறிஞர் பிரான் உறுதியாய்க் கருதி யிருக்கிறான். அவ்வுண்மையை உரைகள் உணர்த்தி யுள்ளன.

ஞாலத்தை ஒத்து நடப்பதே நல்லறிஞர்
காலத்தில் கண்ட கலை.

உலகம் உவப்ப ஒழுகு.

---

427. ஆவதனை முன்மால் அறிந்துசெய்தார் ஏனிலங்கைக்
கோவதனைத் தேரான் குமரேசா!—மேவும்
அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர். (எ)

இ—ள்.

**குமரேசா!** ஆவதை முன் அறிந்து திருமால் செய்தார்: இராவணன் ஏன் அதனை அறியாமல் போனான்? ஏனின், அறிவுடையார் ஆவது அறிவார்; அறிவிலார் அஃது அறிகல்லாதவர் என்க.

அறிவும் மூடமும் அறிய வந்தன.

பின் வருவதை முன்னுற எண்ணி அறிவார் அறிவுடையார்; அறிவில்லாதவர் அவ்வாறு அதனை அறிய மாட்டார். ஆவதை அறியார் அறிவற்ற அவகேடரே.

அறிவு ஒளியுடையது ஆதலால் அதனையுடையவர் எதையும் விரைந்து தெளிவாக உணர்ந்து கொள்ளுகின்றார். அந்த ஒளியில்லாதவர் உள்ளம் இருள் மண்டியுள்ளமையால் யாதும் கடிது தெரியாது மூடமாய் நிற்கின்றார். மூடநிலை பீடையான புலையாம்.

கண் உடையவன் தூரவருவதை நேரே கண்டு கொள்கிறான்; கண் இல்லாத குருடன் அவ்வாறு காண மாட்டான்; கிட்டவந்து தொட்டால் அறிந்து கொள்ளுவான். அதுபோல் அறிவுடையவன் வருவதை ஓர்ந்து அறிகிறான்; அறிவில்லாதவன் வந்தபின் அறிய நேர்கின்றான். அவ்வாறு அறியாதவனும் உளன்.

ஆவதை அறிவான் அறிஞன்; ஆனபின் தெரிவான் அறிவிலன். யாவும் அறியான் முழுமூடன்.

எட்ட வருவ தெதிரறிந்து காணும்கண்
எட்டி அறிவார் இயலறிவார்—முட்டவே
பட்டால் அறிவர் படுமூடர்; பட்டழுந்தித்
தொட்டால் அறியும் துவக்கு.

அறிவுடைய யூகிகளையும் அறிவில்லாத மூடர்களையும் இக்கவி சுவையாய் விளக்கியுளது. உவமானங்கள்

ஊன்றி உணர வுரியன. காட்சியுடைய கண் மாட்சி யுடைய அறிஞர்க்கும், காண முடியாத சடம் கருத்தில்லா அறிவிலிகட்கும் ஒப்பாம். துவக்கு=உடல்.

அறிகல்லாதவர்=அறிய மாட்டாதவர். கல் இதில் கில் போல் ஆற்றலை உணர்த்தி நின்றது. அறியாமை நிலையில் எல்லாரும் கல்லாய்க் கடைப் பட்டுள்ளனர்.

ஆவது=ஆகிவருவது; செய்யத்தகுவது; நன்மையானது. தனக்கு உயர்வு தருவது உறவா உணரவந்தது.

இன்னவாறு பல பொருள்களையும் நன்னயமாக் கருதிக்கொள்ள **ஆவது** ஈண்டு அமைந்துள்ளது.

ஆவது அறிந்திலேன். (பரிபாடல் 8)
ஆவது துணி துணை. (பெருங்கதை 1, 36)
ஆவது உரைத்தாய். (நளவெண்பா 78)
ஆவது ஒன்றன்று. (மணிமேகலை 6)
ஆவது போக. (இராமா, குக 17)
ஆவது கருதான். (பாரதம், கிருட்டிணன் 142)
ஆவது விதி யெனின். (கந்தபுராணம்)
ஆவது செய்தீர். (பெரியபுராணம் 35)

இவற்றுள் **ஆவது** குறித்துள்ள பொருள்களைக் கூர்ந்து காண்க. உறுவதை அறிவதே உயரறிவாகும்.

ஆவதை அறிபவன் அதிசய மதிமானாய்த் துதிமிகப் பெறுகிறான். அவ்வாறு அறியாதவன் மதிகேடனாயிழிவடைகின்றான். உறுவது உணர்வது உய்தி உறுவதாம்.

ஆவது அறியார் உயிர்பிறப் பாலுறும்;
ஆவது அறியும் உயிர்அருட் பாலுறும்;
ஆவது ஒன்றில்லை அகம்புறத் தென்றகன்று
ஓவு சிவனுடன் ஒன்றுதல் முத்தியே.
(திருமந்திரம் 2475)

**ஆவது அறிவாரது** உயர்வையும், அவ்வாறு அறியாதவரின் இழிவையும் **திருமூலர்** இவ்வாறு குறித்துள்

ளார். இங்கே **ஆவது அறியும் உயிர்** என்றது தனது உண்மையான ஆன்ம நிலையை. எதை அறிந்தால் எல்லாம் அறிந்ததாமோ அந்த மெய்யறிவு ஈண்டு அறிய வந்தது. பொய்யா மொழியோடு இது பொருந்தி வந்துள்ளது. அவ்வுண்மையை உய்த்து உணர்க.

வருவதை முன்னறிபவர் மாட்சிமிகப் பெறுவர்; அங்ஙனம் அறியாதார் தாழ்ச்சி யுறுவர். திருமால் இடமும், இராவணன் பாலும் இவை தெரிய நின்றன.

**சரிதம்**

இலங்கை வேந்தன் தள்ளருந்திறலுடன் தருக்கி வெள்ளியங்கிரியை அடைந்து வீரோடு போராட நேர்ந்தான். பின்பு எண்ணித் தெளிந்தான். கண்ணுதற் கடவுளைத் துதித்து வேத கீதம் பாடினன். அவனது சாமகானத்தைக் கேட்டு மகிழ்ந்த பரமன் உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்! என்று விளம்பினன். “மூவுலக ஆட்சியும் மூவாவலிமையும் மூன்றரைக் கோடி ஆயுளும் வேண்டும்” என்று வேண்டினன். அவ்வாறே ஆகுக என்று ஆண்டவன் அருளி விடுத்தான். அவன் பெற்று வருகிற வரங்களைத் திருமால் அறிந்தார். பின்பு இராமாவதாரத்தில் அவனை வெல்லவல்ல நிலையை முன்னுற ஓர்ந்து ஒரு முனிவன் போல் இடைவழியில் எதிரே தோன்றினர். இந்த மாதவனைக் கண்டதும் அவன் மதித்து நின்ருன். உற்றதை முற்றும் உசாவி அறிந்தார். வினயமாய் விரகோடு பேச நேர்ந்தார்; “அந்தோ! இலங்கேசா! ஈசனிடம் போய் நீ யோசனை யில்லாமல் வரம் பெற்றிருக்கிருய்; **மூன்றரைக்கோடி** என்பது முழுத்தொகையாயில்லை. பாதி எப்போதும் உபாதியே. அவை ஒழிய இன்னும் அரைக்கோடி தருக என்று இறைவனிடம் போய் வேண்டுக; அவர் தந்தருளுவார்” என்று விந்தையோடு கூறினர். இவருடைய உரைகளிலுள்ள தொனிக் குறிப்பை அவன் நுனித்துணராமல் மீண்டும் போய் அரனிடம் அரைக்கோடி அருளுக என்று வேண்டினன். முன்னவன் புன்னகை

புரிந்து இது மாயன் செய்த மாயவேலை என்று தெளிந்து அங்ஙனமே ஆகுக என அளித்து விடுத்தான். முன்னம் பெற்ற மூன்றரைக்கோடி ஒழிந்து போயது; பின்னே பெற்ற அளவே அவன் பிழைக்க நேர்ந்தான்.

மற்ற வாள்அரக் கன்றனை மாயவன் முன்னம்
பெற்ற மூன்றரைக் கோடியும் ஒழியநீ பேணி
உற்ற பேரரைக் கோடிநாள் கேள்என, உவந்து
பெற்ற வாகன னிடத்தவன் பின்னரும் சென்று. (1)

முன்னம் மூன்றரைக் கோடியும் ஒழியநீ முதல்வ!
இன்னம் ஓரரைக் கோடிநாள் ஈந்தருள் என்ன
மன்னு மாசுணப் பாயலான் மாயமீ தென்று
உன்னு மாமலை மகளுடன் உமாபதி நகைத்தே. (2)

அன்ன வாறரைக் கோடியே அளித்தனம் என்றும்
நின்னன் றுமமாம் இராவணன் எனநிய மித்தும்
மின்னும் வார்சடைக் கண்ணுதல் விண்ணவன் விடுப்பப்
பொன்னின் மாமுடிப் புட்பகம் பொருந்தினன் போனன். (3)
(உத்தரகாண்டம் 7)

நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளை இவை விளக்கியுள்ளன. ஆவதை முன்னறிந்து மால் மாண்புற்றார்; அவ்வாறு அறியாமல் இராவணன் மதிகெட்டான். அறிவுடையார் ஆவது அறிவார்; அறிவில்லார் அஃது அறி கல்லார் என்பது இந்த இருவர்பாலும் முறையே தெரிய நின்றது.

இலங்கை வேந்தன் எதிர்வதை எண்ணிலன்;
அலங்கல் மாயன் அதிமதி யூகமாய்
நலங்கள் ஆவதை நாடிமுன் கொண்டனன்;
பலன்கள் என் செயும் பண்பறி வில்லையேல்?

**நன்மையை நாடுவர் நல்லறிஞர்; புல்லறிஞர்**
**புன்மையே பூண்பர் புகுந்து.**

அறிய வுரியதை அறிந்து கொள்.

———

428. சூதாட அஞ்சாமல் சொன்ஞன் தருமரஞ்சிக்
கோதென்ருர் என்னே குமரேசா—யாதேனும்
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ
தஞ்சல் அறிவார் தொழில். (அ)

இ-ள்.

**குமரேசா!** சகுனி சூது ஆடுதற்கு அஞ்சாமல் சொன்ஞன்; தருமர் ஏன் அதனை அஞ்சினர்? எனின், அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில் என்க.

அறிவுடைமையுள் அச்சமுடைமை அறிய வந்தது.

அஞ்சவுரிய தீமையை அஞ்சாது புரிவது அறிவின்மையாம்; அஞ்சத்தகுவதை அஞ்சிவிலகுவது அறிவுடையார் செயலாம். பேதை ஆகாமல் மேதை ஆகுக.

ஆவதை அறிவதே அறிவுடைமையாம் என்று முன்னம் குறித்தார்; இதில், அஞ்சுவதை அஞ்சுவதே அறிவாம் என்கின்ருர். நல்ல அறிவு நலமே தெரிகிறது.

அஞ்சுவது என்றது பழி பாவங்களை. அஞ்சுவன என்று பன்மையால் கூருமல் ஒருமையில் உரைத்தது அதன் இனத்தை உய்த்து உணர. வரம்பின்றி உள்ளமையால் ஒருமை நிலையில் மருமமா யுரைத் தருளினர். சிறிய ஒரு தீமையும் நஞ்சாக அஞ்சுக என்பது நயமா யறிய வந்தது. அஞ்ச வில்லையேல் அல்லலே யாம்.

அச்சமும் நாணமும் உச்சமான அறிவின் உயர் நீர்மைகள். அறிவில்லாத மடையரிடம் இவை மருவி யிரா. பழி அஞ்சார் பாழா யழிவார்.

அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.

**அதிவீரராம பாண்டியன்** இவ்வாறு குறித்துள்ளார்.

தன் உயிர்க்குத் துயர் நேருமே என்பதை உணராமல் மடமை மீதூர்ந்து தீமையில் துணிதலால் **அஞ்சுவது**

**அஞ்சாமை பேதைமை** என்றார். தனக்கு ஏதத்தை விளைத்துக் கொள்பவன் பேதையா யிழிகின்றான்.

அறிவுடையார் அன்றி அதுபெறார் தம்பால்
செறிபழியை அஞ்சார் சிறிதும்—பிறைநுதால்
வண்ணம்செய் வாள்விழியே அன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோஇருளைக் கண்டு? (நன்னெறி 34)

கண் உடையவரே இருளைக் கண்டு அஞ்சுவர்; குருடர் அஞ்சார்; அதுபோல் அறிவுடையவரே பழிக்கு அஞ்சுவர்; மூடர் அஞ்சார் எனச் **சிவப்பிரகாசர்** இங்ஙனம் குறித்திருக்கிறார். இந்தக் குறளின் பொருளைத் தெளிவா விளக்குதற்கு ஒரு விரிவுரை போல் உவமையோடு இது விளங்கி யுளது. குறிப்பைக் கூர்ந்து காண்பவர் இதன் சிறப்பைத் தேர்ந்து தெளிந்து கொள்வர்.

இழி பழிக்கு அஞ்சுபவர் விழுமிய மேதைகளாகின்றார்; அவ்வாறு அஞ்சாதவர் பழிபடிந்த பேதைகளாய்ப் பாழ் பட்டு எவ்வழியும் அழிவடைகின்றனர்.

தீவினையார் அஞ்சார்; விழுமியார் அஞ்சுவர்;
தீவினை என்னும் செருக்கு. (குறள் 201)

இது ஈண்டு எண்ணி யுணர வுரியது. அஞ்சுபவர் நிலையையும் அஞ்சாதவர் புலையையும் இதில் கூர்ந்து ஓர்ந்து உறுதி நலனைத் தேர்ந்து கொள்கிறோம்.

அஞ்சாமை வேந்தற்கு இயல்பு. (குறள் 382)

இறைமாட்சியில் இங்ஙனம் குறித்துள்ளார். நல்ல வழியில் ஊக்கி நிற்கும் உள்ளத் திண்மையான அது அறிவு நலம் கனிந்தது. இது அதனோடு மிகவும் மாறு பட்டது. பழி வழியில் திமிர்ந்து செல்லும் மூர்க்கம் ஆதலால் இது முழுமூடம் என இழிவுற நேர்ந்தது.

நள்ளிருளில் தன் உயிர்க்கு நேரும் அழிவுகளையும் மறந்து கள்ளன் களவு செய்ய அஞ்சாமல் செல்கின்றான். அந்த **அஞ்சாமை** நீசமும் நாசமும் உடையது: மூடக்

களிப்பில் மூண்டது ஆதலால் பேதைமை என ஏதம் அடைந்து இழிந்தது. ஈனத் துணிவு இழி துயரமே.

அறிவுடையார் தீமையை எவ்வழியும் அஞ்சுவர்; அறிவிலிகள் அதனை எங்கும் அஞ்சாது செய்வர்.

இவை தருமரிடமும் சகுனி பாலும் தெரிய நின்றன.

## சரிதம்

துரியோதனன் தனது இராசதானியாகிய அத்தினா புரியில் புதுமையாய் ஒரு அதிசய மாளிகை அமைத்தான். அந்த மணிமண்டபத்தின் அணி விழாவுக்குத் தருமர் முதலியோரை அழைத்திருந்தான். யாவரும் வந்திருந்தனர். இந்திர பவனம் போல் சிறந்திருந்த அந்தச் சுந்தர மாளிகையில் எல்லாரும் உல்லாசமாயுரை யாடி யிருந்தனர். அது பொழுது சகுனி தருமரைச் சூது விளையாட அழைத்தான். அவர் மறுத்தார்: "சூதாடல் புரிவது தீயது: கள்ளும் களவும் காமமும் பொய்யும் போல் எள்ளி இகழத்தக்கது" என்று இகழ்ந்து மொழிந்தார். மொழியவே **கன்னன்** இழிவாய்க் கேலி செய்ய நேர்ந்தான். "விருந்து அருந்தச் செல்லும் வரையும் பொழுது போக்காகச் சிறிது விளையாட விரும்பினல் இப்படி வெருவுகின்றீர்களே! இவ்வாறு அஞ்சுவது கோழைத்தனமே யாம்" என்று விநோ பரிகசித்தான்.

போது போக வறிதிருந்து பொருதும் வருதி என்னவும்
சூது போரும் அஞ்சியோ தொலைந்துளாய் துளங்குவாய்!
மோது போரில் எங்ஙனுய்தி இளைஞரோடு ஏறுதேர்
மீது போயுன் நகரி தன்னில் விரைவின் எய்து கென்னவே.

கன்னன் இன்னவாறு கிண்டலோடு கிளர்ந்து பேசினன். விளையாட அஞ்சுகின்ற நீ வீரனு? பயப்படாமல் இளையவர்களோடு தேர் ஏறி உன் ஊர் போய்ச் சேர் என்று இவ்வாறு வீறுடு கூறவே விசயன் சீறி எழுந்தான். சினந்து வீரவாதம் கூறிப் போருக்கு மூண்டான். அன்று அவன் அங்கே சொல்லிய உரைகள், அவனுடைய உள்ளத் துணிவையும் உறுதி நிலையையும் உணர்ச்சித் திறனையும் உணர்த்தி நின்றன.

இல்எடுத்து விரகி னேடும் எமையழைத்து மாயைகூர்
வல்எடுத்து வருதலால் மறுத்தனன் மகீபனும்
சொல்எடுத்து வைதவாய் துணிப்பன்என்று கன்னன்மேல்
வில்எடுத்த னன்பொருமல் வீர வாளி விசயனே.

(பாரதம்)

நேரே இவ்வாறு கூறிப் போருக்கு மூண்ட தம்பி யைத் தருமர் அடக்கி நிறுத்தினர். கரவோடு அழைத் துச் சதிபுரிய நேர்ந்துள்ள இத்தீயர் குழுவில் சேர்ந்ததே தீமை என்று நோயுழந்து நொந்தான். பொல்லாத அவர்களுடைய சூழ்ச்சிகளில் அகப்பட்டு அல்ல லுழந்தான். சூது எல்லாத் துயர்களையும் விளைக்குமே என்று தருமர் அஞ்சினர். சகுனி யாதும் அஞ்சாமல் அதனை ஆவலோடு செய்து யாண்டும் களித்து நின்றான். அஞ்சுவது அஞ்சாமை பேதைமை; அஞ்சுவதை அஞ்சல் அறிவார் தொழில் என்பதை இந்த இருவரும் உலகம் காண உணர்த்தித் தம் நிலைமையைத் துலக்கி நின்றார்.

**நவையஞ்சி நாணுவர் நல்லறிஞர்; பொல்லார்**
**எவையும் புரிவர் இழிந்து.**

*தீமையை அஞ்சி விலகுக.*

---

429. எள்ளாமல் காந்தன் எதிரறிந்து காத்தான்பின்
கொள்ளவில்லை நோயேன் குமரேசா—உள்ளி
எதிரதாக் காக்கும் அறிவினர்க் கில்லை
அதிர வருவதோர் நோய். (கூ)

இ—ள்.

**குமரேசா!** தனக்கு நேர்வதனை முன்னதாகவே அறிந்து காத்த காந்தனை ஏன் நோய் அணுகவில்லை? எனின், எதிரதாக் காக்கும் அறிவினர்க்கு அதிர வருவது ஓர் நோய் இல்லை என்க.

நோயின்றி வாழ இது வழி காட்டியுளது.

வரவுரிய இடர்களை முன்னதாகவே கவனித்துக் காக்கும் அறிவுடையார்க்கு நடுங்க வருகிற துன்பம் நேராது. எச்சரிக்கையாளனை இளிவுகள் எய்தா.

மனிதன் எவ்வழியும் எச்சரிக்கையாய் எதையும் முன்னுற எண்ணிக் கவனமாய் வாழ வேண்டும். அவ்வாறு வாழ்வதே அறிவுடைய வாழ்வாம். முன்னும் பின்னும் எண்ணாமல் வாழ்வது மிருக வாழ்க்கையாயிழிவுறுகின்றது. எண்ணாதவன் மண்ணாய் மடிவன்.

எதிரது = எதிரே வருவது; எதிர்காலத்தில் நேர்வது. **காக்கும்** என்னும் குறிப்பால் இடையூறுகள் என்பது தெரிய வந்தது. பின்னே நேர்கின்ற இன்னல்களை முன்னுற ஓர்ந்து விலக்கித் தன்னைப் பாதுகாத்துக் கொள்வோரே மதி நலமுடையராய் உயர்வடைகின்றனர். அவ்வாறு காவாதார் அறிவிலிகளாய் நோதலடைந்து இழிவுறுகின்றனர். எதிரியின் இடையூறுகளுக்கு **எதிரதாக் காக்கும்** அறிவினர் எனவும் இது அறிய நின்றது. அற்றம் காப்பதே அறிவாகின்றது.

அதிர = நடுங்க. நோயின் கடுமையும் கொடுமையும் காண வந்தது. அதிர்தல் = நிலைகுலைந்து நடுங்குதல்.

அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும். (தொல்காப்பியம்)

நோய் வருமுன் எதிரறிந்து காவாதவர் அது வந்த போது நெஞ்சம் பதைத்து நெடுந் திகில் கொண்டு அஞ்சி அலமந்து நடுங்குவர். அந்த அச்சமும் திகிலும் அவலநிலைகளும் உச்சமாய் ஈண்டு உணர வந்தன.

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். (குறள் 435)

வருகின்ற துயரை எதிரறிந்து காவாதான் வாழ்க்கை நெருப்பின் எதிரே நேர்ந்த வைக்கோல் துரும்பு போல் எரிந்து விரைந்து அழியும் என்னும் இது இங்கே அறிய வுரியது. அதிர வருகிற நோயை எதிரே உவமையால் காட்டியுள்ளமை கருதி உணரத்தக்கது.

கவன மில்லாத வாழ்வு கடையாயிழிந்து படுவதை அனுபவ நிலைகள் யாண்டும் தெளிவா உணர்த்தி வருகின்றன. முன்னுற உணரான் இன்னலேயுறுவன்.

ஒருவன் களத்தில் நெல்லைக் குவித்து வைத்திருந்தான். அன்று இரவு மழை பெய்யும் என்று குறிப்பால் எதிரறிந்து அதற்கு வேண்டிய பாதுகாப்பை நன்கு செய்திருந்தான். மற்றொருவனும் மிகுதியான நெல்லைக் களத்தில் குவியல் செய்து வைத்திருந்தான்; இவன் எதிரறிந்து யாதும் செய்யாமல் கவனமின்றி யிருந்தான். இரவு பெய்த பெரு மழையில் எல்லாம் பாழாயது. எதிரதாக் காத்தவன் அறிவுடையனாய் நோயின்றி யிருந்தான். அவ்வாறு காவாதவன் அறிவிலியா யிழிந்து நோயுழந்து நொந்து பதைத்தான்.

அறிவு மங்கிய பொழுது அல்லல்கள் பொங்கி வருகின்றன. பொருள் அழிவு முதலாகப் பல அழிவுகளும் இழிவுகளும் அறியாமையால் உளவாகின்றன.

யூகமாய் எதிரறிந்து இனிது காப்பவன் அதிசய விவேகியாய் எவ்வழியும் துதி செய்யப் பெறுகிறான்.

இது காந்தன் பால் அறிய நின்றது.

### சரிதம்

இவன் சோழ மன்னன். காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அரசு புரிந்தவன். சிறந்த மதியூகி. கல்வி கேள்விகளில் வல்லுநன். உலகியலறிவோடு உயர் குணங்கள் பலவும் உடையவன். அகத்திய முனிவர் பால் பேரன்பு பூண்டவன். அந்த மாதவர் அருளால் மருவி வந்த காவிரி நதியைத் தனது நாடு முழுவதும் பரப்பி யாண்டும் வளமுறச் செய்தவன். பீடும் பெருமையும் பெருகிவர இவன் அரசு புரிந்து வருங்கால் **பரசுராமர்** இவன் மேல் போருக்கு வந்தார்: அரச குலத்தை வேரறுத்து வருகிற அந்த மழுவாள் வீரனை எந்த வகையிலும் எதிர்த்து வெல்ல முடியாது என்று தெளிந்து கொண்ட இவன் ஒல்லையில் ஒரு சூழ்ச்சி செய்

தான். தனது காமக்கிழத்தியின் மகன் ஆன **ககந்தன்** என்பவனை அரசனாக்கி வைத்து விட்டு இவன் அயல் ஒதுங்கி நின்றான். அரசர் மரபினரை யன்றி வேறு எவரையும் பரசுராமர் துயர் செய்யார் என்று துணிந்து இவன் யூக விவேகமாய் விலகி யிருந்தான். அப்போர் வீரர் மூண்டு வந்தார். உரிய வேந்தன் இல்லை என்று மீண்டு போயினர். அதன் பின் இவன் வந்து அரசுபுரிய நேர்ந்தான். இவனுடைய புத்தியுத்திகளையும் சாதுரிய சாகசங்களையும் யாவரும் வியந்து புகழ்ந்தனர். விவேக வேந்தன் என உயர்ந்தோர் பலரும் உவந்து போற்ற வியன் புகழுடன் இவன் விளங்கி நின்றான்.

மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்
தன்முன் தோன்றல் தகாதொழி நீயெனக்
கன்னி ஏவலிற் காந்த மன்னவன்
இந்நகர் காப்போர் யார்? என நினைஇ
நாவலந் தண்பொழில் நண்ணார் நடுக்குறக்
காவற் கணிகை தனக்காம் காதலன்
இகழ்ந்தோர் காயினும் எஞ்சுதல் இல்லோன்
ககந்தன் ஆமெனக் காதலிற் கூஉய்
அரசா ளுரிமை நின்பால் இன்மையின்,
பரசு ராமனின் பால்வந்து அணுகான்;
அமர முனிவன் அகத்தியன் தனாஅது
துயர்நீங்கு கிளவியின் யான்தோன் றளவும்
ககந்தன் காத்தல் காகந்தி என்றே
இயைந்த நாமம் இப்பதிக்கு இட்டீங்கு
உள்வரிக் கொண்டவ் வுரவோன் பெயர்நாள்.
(மணிமேகலை 22)

எதிர்வதை எண்ணி அறிந்து இம் மன்னன் காத்துள்ள மாட்சிகளை இது காட்சியாய்க் காட்டியுளது. கவியில் மருவியுள்ள பொருள் நயங்களைக் கருதி யுணர வேண்டும். எதிரதாக் காக்கும் அறிவினர்க்கு அதிர வருவதோர் நோய் இல்லை; யாண்டும் இன்பமே எய்துவர் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

எண்ணி எதிரறிந்து வாழ்பவன் வாழ்வுதான்
கண்ணியமாய் என்றும் கனிந்துவரும்—எண்ணமிலான்
வாழ்வு வறிதே யிழிந்து மதிகேடாய்
வீழும் அழிவில் விரைந்து.

**முன்னறிந்து பேணுகின்ற மூதறிஞர் எவ்வழியும்**
**இன்னலின்றி வாழ்வர் இனிது.**

உறுவதை ஓர்ந்து உறுதியுடன் ஓம்புக.

---

430. சொல்லியசீர் எல்லாம் துருவனுற்றான் உத்தமனேன்
கொல்ல இழிந்தான் குமரேசா—நல்ல
அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். (ம)

இ–ள்.

**குமரேசா!** துருவன் அறிவால் உயர்ந்தான்; உத்தமன் செல்வம் உற்றிருந்தும் ஏன் இழிந்தான்? எனின், அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார் என்னுடையர் ஏனும் இலர் என்க.

அறிவுடைமை அதிசய மகிமை யாம் என்கிறது.

புறத்தே யாதும் இலராயினும் அறிவுடையவர் எல்லாம் உடையவரே; எவ்வளவு செல்வங்களை யுடையராயினும் அறிவில்லாதவர் யாதும் இல்லாதவரே.

மேல், அறிவுடையாரை அல்லல்கள் அடையா என்றார்; இதில், எல்லா நன்மைகளும் அவரிடம் உரிமையாய் வந்து பிரியமுடன் அடையும் என்கின்றார்.

அறிவுடையாரது பெருமையும், அஃது இல்லாதவரது சிறுமையும் ஒருங்கே உணர வந்தன. அறிவு அற்ற போதே அவன் யாவும் அற்றவனாய் அவலமுறுகின்றான். அஃது உற்ற அளவே உயர்கிறான்.

அறிவு உயிரின் ஒளிவிழி; அதனை யுடையவன் எல்லாம் உடையவனாய் எவ்வழியும் இன்ப மிகப் பெறுகிறான். அறிவு இல்லாதவன் கண்ணிழந்த குருடனாய்க் கழிந்து இழிகின்றான். புறத்தே எவ்வளவு பொருள்களை எய்தியிருந்தாலும் அகத்தே அறிவொளியில்லாதவன் யாதொன்றும் இல்லாதவனாய் அவமே தாழ்ந்து நிற்கின்றான். அறிவிழந்த போதே அந்த மனிதன் கண் இழந்த கபோதியாய்க் கழிந்து இழிந்து படுகிறான்.

அழகிருந் தாலும் அறிவிருந் தாலும்
    அரும்பெறற் செல்வங்கள் எல்லாம்
உழையிருந் தாலும் உறவிருந் தாலும்
    உலகெலாம் ஒருகுடை நிழலில்
பிழையறப் பெற்றுப் பெருமுடி கவித்துப்
    பேரர சாயிருந் தாலும்
விழியிலன் ஆகில் பரிதுயர் அன்றி
    வேறொரு சுகமெற் குண்டோ? (1)

வானகம் இந்த மண்ணகம் எங்கும்
    வரம்பறு நிலையாய் விரிந்து
பேணரு பொருள்கள் மேலொரு தலைவன்
    மேவியுள் ளானென விளங்கும்;
ஆனதோர் அரிய அற்புத நிலைகள்
    யாவையும் கண்டுள மகிழ
மானிடன் பெற்ற கண்களால் அன்றி
    மற்றொரு வகையினால் உண்டோ? (2)

(வீரபாண்டியம்)

கண் ஒளி இல்லை யானால் மனிதன் அடைகிற பழி துயரங்களை இவை தெளிவாய்க் காட்டியுள்ளன. மானச உண்மைகளையும் ஞான நீர்மைகளையும் நுண்மையாய் ஓர்ந்து உறுதிநிலைகளை உணர்ந்து கொள்ள வேண்டும்.

முகக் கண்ணினும் அகக் கண் ஆகிய அறிவொளி யில்லையேல் அது மிகவும் கொடிய பரிதாபமே. அறிவுக்குக் காட்சி என்று ஒரு பெயருளது. அதனை யுடையவரே யாண்டும் மாட்சி யடைந்து மகிமை யுறுகின்றார்.

அறிவினல் மாட்சியொன் றில்லா ஒருவன்
பிறிதினல் மாண்ட தெவனும்?—பொறியின்
மணிபொன்னும் சாந்தமும் மாலையுமற் றின்ன
அணியெல்லாம் ஆடையின் பின். (பழமொழி 271)

அறிவில்லாதவன் பொன் மணி முதலியன என்ன பெறினும் இழிவுடையனே; அவன் விழுமியன் ஆகான் என இப்பழமொழி தெளிவாக் குறித்துளது.

ஆடை யில்லாதவன் அழகிய மணியணிகள் அணிந்து வெளியே வரின் அவன் இளிவாய் எள்ளி யிகழப்படுவான்; அது போல் அறிவில்லாதவன் பெரிய பொருள்களுடையனுயினும் அவன் மருளனுய் இழிக்கப் படுவான். ஆடை யுடையவன் மானமுடையவனுய் எங்கும் மேன்மையுடன் செல்லலாம்; அது போல் அறி வுடையவன் யாண்டும் மகிமையுடையனுய் ஒளி மிகுந்து உயர்வடைந்து திகழுவான். அறிவுக்கு உவமையாய் வந்துள்ள ஆடையின் அரிய நயன்களையும் உரிய வியன் களையும் ஈண்டு நாடியறிந்து கொள்ள வேண்டும்.

| | |
|---|---|
| 1. அறிவு | 1. அறியாமை |
| 2. உணர்வு | 2. மடமை |
| 3. மதி | 3. மூடம் |
| 4. புத்தி | 4. மதிகேடு |
| 5. யூகம் | 5. பேதைமை |
| 6. விவேகம் | 6. அவிவேகம் |
| 7. ஞானம் | 7. அஞ்ஞானம் |

அறிவுடைமைக்கும் அறிவின்மைக்கும் இவ்வாறு பெயர்கள் அமைந்துள்ளன. இவற்ருல் அவற்றின் இயல்புகளை ஓர்ந்து நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

அறிவிலி, மடையன், மூடன், பேதை, மதிகேடன், அவிவேகி, அஞ்ஞானி என ஒருவனைக் குறித்துக் கூறின் அவன் செயிர்த்துச் சீறுவான். அறிவாளி என்று பெயர் பெறவே எவனும் எவ்வழியும் ஆவலாய் விரும்புகிருன்.

அறிவுக்கும் மனிதனுக்கும் உள்ள உறவுரிமையை இது நயமாயுணர்த்தியுளது. உரிய உடைமையை ஒருவி நிற்பவன் பெரிய மடையனுகிருன். பேற்றை யிழந்து நிற்கும் தனது பேதைமையை உணராமையால் சீற்றமும் சிறுமையும் உற்று எவ்வழியும் சீரழிகிருன்.

அறிவுடைமையை ஒருவன் உரிமையாய் அடையின் அவன் அதிசய நலன்களை யெல்லாம் ஒருங்கே அடைந்து கொள்கிருன். இன்ப நிலைகளை எய்தி மகிழ்கிருன்.

அறிவுடை யான்அரு மாமறை யுள்ளே
செறிவுடை யான்மிகு தேவர்க்கும் தேவன்;
பொறியுடை யான்புலன் ஐந்தும் கடந்த
குறியுடை யானெடும் கூடுவன் காணே. (திருமந்திரம்)

அறிவுடையான் அடைகின்ற பேரின்ப நிலையைத் திருமூலர் இவ்வாறு செவ்வையாய்க் குறித்துள்ளார்.

மடமையால் துன்பங்கள் விளைகின்றன. அறிவுடைமையால் இன்பங்கள் உளவாகின்றன. அல்லல்களை நீக்கி நன்னையுடையானுக்கு எல்லாச் செல்வங்களையும் அருள வல்லது ஆதலால் அறிவு அற்புதக் கற்பகமாய், அரிய தெய்வ நிதியாய், அதிசய சிந்தாமணியாய்த் துதிகொண்டு துலங்கி விளங்கி யுளது.

இலங்கியசிந் தாமணியாம் இதயமெனும்
    சரக்கறையில் இருக்கும் போதும்
கலங்கலிலா விவேகியர்க்குக் கருதுபொருள்
    கற்பகம்போல் கணத்தில் நல்கும்;
துலங்குவிசா ரம்மனைத்தும் பேதைமைபோய்
    நல்லறிவு தோன்றி நேரே
விலங்குகளை சத்தோரை அப்புகள்போல்
    காமாதி விகற்பம் தாக்கா. (ஞானவாசிட்டம்)

அறிவுடைமையின் மகிமையைச் சனக மன்னன் இன்னவாறு கருதி வியந்திருக்கிருன். கருது பொருள் கற்பகம் போல் கணத்தில் அறிவு நல்கும் என்றதனுல் அறிவுடையார் எல்லாம் உடையார் என்பது தெரிய வந்தது. ஞான ஒளி வான ஒளியாய் மிளிர்கின்றது.

எறிகடல் நெடும்புவியில் ஏதுமில ரேனும்
அறிவுடைய ரேயுடையர்; யாதும்அறி வில்லார்
செறிவுடைய செல்வமொடு சீருடைய ரேனும்
வறிதுடைய ரல்லதவர் மற்றுடையர் அன்றே!
(மெய்ஞ்ஞான விளக்கம்)

அறிவுடையாரது அதிசய மகிமைகளை இது துதி செய்துளது. அறிவு இல்லையேல் மடமையிருள் மருவுகிறது. அல்லல்கள் எல்லாம் பெருகி வருகின்றன.

அறிவில்லாதவ ரிடத்திலுள்ள செல்வம் தானாகவே அழிவுறுகின்றது. அவரும் செருக்கு முதலியன அடைந்து சிறுமையா யிழிந்து ஒழிகின்றனர்.

**எல்லாம்** என்றது இம்மை மறுமைகளின் நன்மைகள் யாவும் இங்கே தெளிவாய்த் தெரிய நின்றது.

அறிவுடையவர் எவ்வழியும் உயர்கின்றார்; அறிவில்லாதவர் பொருளிருந்தாலும் மருளராய் இழிவுறுகின்றார். அறிவை அடைவதே யாவும் அடைவதாம்.

இவ்வுண்மை மதிநலமுடைய துருவனிடமும், மத்துனை உத்தமன் பாலும் முறையே தெரிய நின்றன.

**சரிதம்**

உத்தானபாதன் என்னும் மன்னனுக்குச் **சுருதி, சுநீதி** என மனைவியர் இருவர். சுருதி வயிற்றில் உத்தமன் பிறந்தான். சுநீதியிடம் துருவன் தோன்றினான். இளமையிலேயே துருவனிடம் அறிவொழுக்கங்கள் வளமையாய் மருவி யிருந்தன. தன் தாயின் மீது கொண்ட பொறாமையால் மாற்றாந்தாய் ஒரு நாள் இவனை இகழ நேர்ந்தாள்: "என் மகனுக்கே அரச பதவி உரியது; உனக்கு யாதும் உரிமை யில்லை யென்று சிறுமையா யுரைத்தாள். அந்த உரைகளைக் கேட்டு இவன் உள்ளம் வருந்தினான். அன்னையும் அறிந்தாள்; இன்னலுழந்தாள். பெற்ற தாயை இக்குலமகன் தேற்றினான்: "அம்மா! சும்மா வருந்தாதீர்கள்; தவத்தால் எதையும் பெறலாம். உலகம் முழுவதையும் ஆளும் அரச பதவியி

னும் என்றும் அழியாத பரம பதத்தையே அடையலாம்; அத்தகைய தவத்தை நான் செய்யப் போகின்றேன்; விடை யருளுங்கள்" என்று தாயின் அடியில் விழுந்து பரிவு கூர்ந்து தொழுதான்.

அருந்தவத்தால் பெறலரிய அரசுரிமை
யாங்கவள்செய் தடைந்தாள் என்னின்,
வருந்தியருந் தவமாற்றி வானவர்க்கும்
பெறற்கரிதாய் வயங்கு சோதி
திருந்துமுயர் உலகடைவன்; விடைதருதி
என இருதாட் சென்னி சேர்த்தான்
பொருந்துதிரைக் கடற்பிறந்த அமுதனைய
மழலைமொழிப் புதல்வன் தானே.
(காசிகாண்டம் 19)

இவ்வாறு தொழுது சென்ற இத்திருமகன் உரிமையோடு மாதவனை நினைந்து மாதவம் புரிந்தான். திருமால் எதிரே தோன்றித் திருவருள் புரிந்தார்.

"அரசகுலத் தோன்றலான நீ உலகைச் சில காலம் ஆண்டு விட்டுப் பரமபதத்தை அடையலாம்" என்று பணித்தருளினர். மீண்டு இவன் நகரை அடைந்தான். அரச திருவை அடைந்திருந்த உத்தமன் அவல நிலையில் இழிந்து அழிந்தான். தன் பேருக்கு மாறான பிழை வழிகளில் புகுந்து கள்ளும் காமமும் நுகர்ந்து செல்வங்களை இழந்து முடிவில் நோயை யுண்டு இறந்தான். நேர்ந்துள்ள நிலைமையை அறிந்து துருவன் நெஞ்சம் பரிந்து நொந்து வருந்தினான். சிதைந்து அழிந்து போன செல்வங்களை யெல்லாம் இவன் விரைந்து திரட்டினான். உலகம் உவந்து போற்ற உயர்ந்து அரசு புரிந்தான். தன் துணைவனைக் கொன்றவரை வென்றடக்கினான். அரசர்கள் திறை தந்து பணிய உயிரினங்கள் உவந்து வாழ நெடுங் காலம் ஆட்சி புரிந்தான். இறுதியில் அதிசய மகிமைகளுடன் பரமபதத்தை அடைந்தான். இவன் பெயரால் **துருவ மண்டலம்** என வானத்தில் ஒரு தானம் உளது. யாதொரு பொருளும் இல்லா திருந்தும் தன் அறிவினால்

அரிய பெரிய செல்வங்களை அடைந்து இருமையும் பெருமை மிகப் பெற்ருன். அரச செல்வங்களை எய்தி யிருந்தும் **உத்தமன்** மடமையால் யாவும் இழந்து இழிந்து அழிந்தான். **அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார் என்னுடையர் ஏனும் இலர்** என்னும் உண்மையை இந்த இருவரும் முறையே உணர்த்தி நின்ருர். காசி காண்டம், பாகவதம், மச்சபுராணம், விண்டுபுராணம் முதலிய நூல்கள் இவருடைய சரிதங்களைத் தெளிவாக விரித்து விளக்கி யுள்ளன.

எல்லாம் உடையான் இறைவன்; அறிவுடையார்
எல்லாம் உடையார் எனநின்ருர்—நல்ல
அறிவொன் றுளதேல் அகிலமும் அன்ஞர்
நெறிநின் றிலகும் நெடிது.

**அறிவே உடைமை; அயலுடைமை எல்லாம்**
**வெறியே மடமைக்கு வித்து.**

உணர்வுடைமையே உயிர் உடைமை.

---

இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

1. அறிவு இறுதி நீக்கி உறுதி யருளும்.
2. உள்ளத்தை நெறியே நடத்தி உயர்வு தரும்.
3. மெய்ப்பொருளைக் கண்டு மேன்மை புரியும்.
4. நுண்பொருள் நோக்கி நோன்மை யாக்கும்.
5. உலகம் தழுவி ஒழுகச் செய்யும்.
6. யாவரோடும் இதமாய் இனிது நடத்தும்.
7. ஆவதை அறிந்து ஆதரவு காணும்.
8. அஞ்சுவதை அஞ்சித் தஞ்சம் விளைக்கும்.
9. எதிர்வதை எண்ணிக் காத்து ஏற்றம் காட்டும்.
10. அறிவே அரியதிரு; அறிவின்மை பெரிய வறுமை.

43-வது அறிவுடைமை முற்றிற்று.

# நாற்பத்து நான்காவது அதிகாரம்

## குற்றம் கடிதல்.

அஃதாவது குற்றங்களை நீக்கி அரசன் குணமுடன் வாழுதல். இழிவான பிழைகளைக் காணவும் கடியவும் வல்லது அறிவே ஆதலால் அறிவுடைமையின் பின் இஃது அமைந்து நின்றது. நல்ல அறிவு நன்றே புரிகிறது.

431. வென்றி நெடுஞ்செழியன் வெம்பிழைக ளின்றியேன்
குன்றமென நின்றான் குமரேசா—என்றும்
செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து. (க)

இ—ள்.

**குமரேசா!** நம்பி நெடுஞ்செழியன் பிழைகள் நீங்கி ஏன் விழுமிய திருவாளாய் விளங்கி யிருந்தான்? எனின், செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார் பெருக்கம் பெருமித நீர்த்து என்க.

குற்றங்கள் சில கூர்ந்து உணர வந்தன.

தருக்கும் கோபமும் கீழ்மையும் இல்லாதவரது செல்வம் வளமாய் மேலோங்கி விரிந்து வரும் நீர்மையது. நிறைந்த ஆக்கம் நீர்மையால் உறுகிறது.

செருக்கு = அகங்காரத்தால் வருகிற நிமிர்ச்சி.

சினம் = ஆணவத்தால் மூண்டெழுகின்ற சீற்றம்.

சிறுமை = இழிவான வழியில் பழகிவரும் புன்மை.

அடக்கம் அமைதி பெருமை என்னும் மூன்றுக்கும் இவை முறையே நேர் மாறானவை. அவை குணநலன்களாய் மணம் பெற்று உயர்ந்துள்ளன. இவை குற்றங்களாய் இழிந்து தாழ்ந்திருக்கின்றன. அவற்றையுடையார் மேலோராய் மேன்மையுற்று உயர்ந்திருக்கின்றனர். இவற்றையுடையார் கீழோராய் இழிந்து தாழ்ந்து

நிற்கின்றனர். நல்ல நீர்மைகளால் மனிதரடையும் மாட்சிகளையும், பொல்லாத புன்மைகளால் அவரடையும் தாழ்ச்சிகளையும் கருதியுணர்பவர் உறுதியுண்மைகளையுணர்ந்து நெறியே உயர்ந்து உய்தி பெறுவர்.

**குற்றம் கடிதலே அறிவுடைமைக்குப் பயன்** என்று அடிகள் குறித்துள்ளார்; அவ்வுண்மை அதிகாரத்தின் வைப்பு முறையால் தெரியவந்தது. தங்களை அறிவுடையவர்கள் என்று எண்ண நேர்பவர் மடமையான இந்தக் குற்றங்களை நீக்கி யிருக்கிறோமா? என்று தம் உள்ளத்தைத் தனியே சோதித்துக் கொள்ள வேண்டும்.

**செருக்கு** பெரும்பாலும் செல்வக் களிப்பிலேயே செழித்து வரும். உலகச் செல்வர்களுள் அரசனே பெரிய செல்வன் ஆதலால் செருக்கு அவனிடம் இயல்பாயிருக்க நேரும்; அதனை அவன் ஒழித்து ஒழுக வேண்டும் என்பது ஈண்டு முதன்மையா யுணர வந்தது.

நல்ல மதிநலமுடைய மன்னன் செல்வத்தின் நிலை முதலியவற்றைத் தெளிந்து கொள்வன் ஆதலால் அவன் செருக்கி நில்லான். நீர்மையாய் நிலவி நிற்பன்.

தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோம் என்று
தலையா யவர்செருக்குச் சார்தல்—இலையால்
இரைக்கும்வண் டூதுமலர் ஈர்ங்கோதாய்! மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு. (நன்னெறி 14)

நிறைந்த செல்வம் உடையேம் என்று தெளிந்த அறிவுடையவர் யாண்டும் செருக்கி நில்லார் என இது குறித்துள்ளது. குறிப்பைக் கூர்ந்து உணர்க.

செருக்கு முதலிய தீமைகள் இல்லையானல் அந்த மனிதன் சிறந்த பெருந்தகையாய் உயர்ந்து வருவான்; அவனுடைய செல்வ வளங்களும் எவ்வழியும் செழித்து வரும். எல்லாரும் அவனை ஏத்தி வருவர்.

**பெருக்கம்** என்றது பலவகையான பொருள்களின் நிறைவுகளை இங்கே குறித்து நின்றது. தன்னையுடை

யானுக்குப் பெருமையை விளைத்துத் தானும் பெருகி வருவது பெருக்கமாம். ஆக்கம் என்பது போல இதனை நோக்கிக் கொள்க. ஆக்கவான் ஆவதை நோக்குக.

அகந்தை முதலிய இழிபிழைகள் நீங்கிய அளவில் அவனிடம் தெய்வத் திருவருள் ஓங்கி வருகிறது; வரவே எல்லாச் செல்வங்களும் நிறைந்தவனாய் அவன் இன்பம் மிகப் பெறுகிறான். தரும நீர்மை இருமையும் இதமாம்.

எவ்வழியும் சிறந்து பெருக்கமாய் இருக்க விரும்புகின்றவன் செருக்கு முதலிய சிறுமைகளைச் சேரலாகாது. பண்பு படிந்து வர இன்பம் சுரந்து வரும்.

தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்,—முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும், இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை. (திரிகடுகம் 37)

தருக்கும் வெகுளியும் சிறுமையும் செல்வத்தை அழிக்கும் என்று **நல்லாதனார்** இங்ஙனம் கூறியுள்ளார். இந்தக் குறளின் பொருளை முழுவதும் தழுவி இது வந்துள்ளது. உண்மை நிலைமைகளை ஊன்றி நோக்கி உரிமையுறவுகளை ஓர்ந்து தேர்ந்து கொள்ள வேண்டும்.

பொல்லாத பிழைகளை நீக்க வில்லையானால் உன் செல்வம் அழிந்து போம்; நீயும் சிறுமையாய் அல்லலடைய நேர்வாய் என்று அச்சுறுத்தி அறிவைப் போதித்திருக்கிறார். நவை நீங்குக; நல்லவன் ஆகுக.

செருக்கு மனிதரை வெறிகொண்ட பேயராக்கி விடுகிறது. விடவே அவர் வெய்ய துயர்களுறுகின்றனர்.

இறுமாப்பு அகந்தை மமதை எனப் பேர் பெற்று வருதலால் அதனையுடைய வரது பேயாட்டங்கள் தெரிய நேர்கின்றன. வீண மருள்கள் விரி இருள்களே.

தேகாபி மானம் பற்றி யானெனும் செருக்குத் தானே
போகாத சொரூப மாகும் என்னலும் பொருளை யீட்டி
மாகாதல் அவைமேல் வைத்தி தெனதென்றல் வடிவா யார்க்கும்
ஏகாஎன் அகந்தை யாலும் எவர்கொல் ஏமாப் புறுரே?

பேரினும் பெரியன் மிக்க பிறப்பினும் பெரியன் செல்வச்
சீரினும் பெரியன் கல்வித் திறத்தினும் பெரியன் தெவ்வர்
போரினும் பெரியன் மற்றெப் பொருளினும் பெரியன் யானே
யாரினும் பெரியன் என்னும் என்னையார் அடர்க்கப் பாலார்.
(மெய்ஞ்ஞான விளக்கம்)

அகங்காரச் செருக்கு உள்ளே புகுந்த பொழுது அந்த மனிதன் வெளியே எப்படி யெல்லாம் நீண்டு திமிர்ந்து நிமிர்ந்து திரிவான் என்பதை இவை சுவையாய்க் காட்டியுள்ளன. கருத்தைக் கருதித் தெளிக.

செருக்கெனப்படும் இழிகுணம் சிறுமக னிடத்தே
பெருக்க முற்றிடும் அஃதுறப் பெற்றவை யெல்லாம்
சுருக்க முற்றிடும் உலகெலாம் வெறுத்திடும் துயர்கொண்
டிருக்க வோரிடம் இன்றியே இழிகுவன் இணைந்தே.
(வீரபாண்டியம்)

மனிதரை மதிகேட ராக்கிச் செருக்கு இவ்வாறு இழித்து விடும் ஆதலால் அது குற்றம் என நேர்ந்தது. பணிவு முதலிய இனிய பண்புகள் செருக்கு இருக்கும் இடத்தில் உளவாகா; ஆகவே ஆன்ற பெரியோர்களுடைய ஆதரவையும் நட்பையும் செருக்கன் இழந்து விடுகிருன். இழிபுலைகளை விழைந்து கொள்கிருன்.

அருந்தவர் குரவர் முன்னேர் அந்தணர் உயர்ந்தோர் தம்பால்
திருந்திய வணக்க மின்மை செருக்கு; வேண்டியபக்கத்தும்
பொருந்திய பொருள்கொ டாமை பொங்கிய வெகுளி காமம்
விருந்துசெய் கழிகண் ணேட்டம் இவையெலாம் விடுக மைந்தா!
(விநாயகபுராணம்)

தனது அருமை மகனுக்கு ஓர் அரசன் இவ்வாறு அறிவு போதித்திருக்கிருன். **செருக்கு, வெகுளி, காமம்** விடுக என்று குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்க வுரியது.

நாட்டை ஆள வருகிற இளவரசன் பிழைகள் இல்லாதவனு யிருந்தால் அவனது **பெருக்கம் பெருமிதமாய்** விருத்தியடைந்து வரும்; அவனும் சிறப்புடைய பெருந்-

தகையாய்ச் சிறந்து விளங்குவான். இந்த உண்மையை அந்த மைந்தனுக்குத் தந்தை சிந்தை பதியச் செய்துள்ளான். மனம் பண்புறின் வாழ்வு இன்புறுகிறது.

**Pride goeth before destruction.** (B. P. 16-18)

"அழிவுக்கு முன்னே அகந்தை தோன்றும்" என்று இது குறித்துளது. **செருக்கு** அழிவின் அறிகுறி என்றதனுல் அதனை யுடையவர் அடையும் துயர்களையும் இழி பழிகளையும் தெளிவா அறிந்து கொள்கின்றேம்.

**சினம்,** மன நிலையைக் குலைத்து மனிதனைத் தாழ்த்திவிடும். **சிறுமை,** மனிதனைச் சிறியன்; அற்பன்; புல்லன் என ஆக்கி வீழ்த்தும். பெருமையும் இன்பமும் குணங்களால் விளைகின்றன; சிறுமையும் துன்பமும் குற்றங்களால் தொடர்ந்து வருகின்றன.

தம்மை அடுத்தவரைக் கெடுத்து விடுகிற பொல்லாத குற்றங்கள் இல்லாதவரே செல்வத்தில் சிறந்து நல்லவராய் உயர்ந்து நலம் பல நிறைந்து எல்லாரும் புகழ்ந்து போற்ற எங்கும் இனிது விளங்கி நிற்கின்றூர்.

இந்த நிலை நம்பி நெடுஞ்செழியன்பால் தெரிய வந்தது. இவனுடைய குண நீர்மைகள் உயர்நிலையின.

### சரிதம்

இந்த மன்னன் மதிநலமுடன் நெறிமுறையே அரசு புரிந்த மதிகுல திலகன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னராம். இவன் சிறந்த போர்வீரன். உயர்ந்த கலைஞன். அரிய பல குணநலன்கள் அமைந்தவன். நிறையும் பொறையும் முறையும் துறை தோறும் இவனிடம் தோய்ந்திருந்தன. இவனுடைய ஆட்சி நெறிகள் அதிசய மாட்சிகள் உடையன. ஆருயிர்கட்கெல்லாம் ஆவன செய்தே அன்புடன் ஆண்டான். தன்னை ஒருபோதும் வியவான்; நன்மை பயவாத வினையைக் கனவிலும் நயவான். அருந்திறலும் பெருந்திருவும் திருந்திய வளமாய்ப் பொருந்தி

யிருந்தும் செருக்கு முதலிய சிறுமைகள் யாதும் இல்லாமல் சிறந்து விளங்கினமையால் இவனை யாவரும் புகழ்ந்து வியந்து போற்றி வந்தனர். பேரெயில் முறுவலார் என்னும் சங்கப் புலவர் இவனுடைய நிலைமை தலைமை நீர்மை சீர்மைகளை நினைந்து மகிழ்ந்து ஒரு பாடல் பாடியுள்ளார். அந்தப் பாட்டு அயலே வருகிறது.

தொடியுடைய தோள்மணந்தனன்;
கடிகாவிற் பூச்சூடினன்;
தண்கமழும் சாந்துநீவினன்;
செற்றோரை வழிதபுத்தனன்;
நட்டோரை உயர்பு கூறினன்;
வலியரென வழிமொழியலன்;
மெலியரென மீக்கூறலன்;
பிறரைத்தான் இரப்பறியலன்;
இரந்தோர்க்கு மறுப்பறியலன்;
வேந்துடை அவையத்து ஓங்குபுகழ் தோற்றினன்;
வருபடை எதிர் தாங்கினன்;
பெயர்படை புறங்கண்டனன்;
கடும்பரிய மாக்கடவினன்;
நெடுந்தெருவில் தேர்வழங்கினன்;
ஓங்கியல் களிறூர்ந்தனன்;
தீஞ்செறி தசும்பு தொலைச்சினன்;
பாண்உவப்பப் பசிதீர்த்தனன்;
மயக்குடைய மொழிவிடுத்தனன்; ஆங்குச்
செய்ப எல்லாம் செய்தனன் ஆகலின்,
இடுக ஒன்றோ, சுடுக ஒன்றோ,
படுவழிப் படுகஇப் புகழ்வெய்யோன் தலையே.

(புறம் 239)

இவனுடைய வாழ்வின் உயர் நிலைகளையும், செயல் முறைகளையும், சுகபோகங்களையும், குணநீர்மைகளையும் இதில் கூர்ந்து காண்பவர் பலவும் தேர்ந்து தெளிந்து உவந்து கொள்வர். யானை, தேர், குதிரை முதலிய அரிய பெரிய அரச செல்வங்கள் எவ்வழியும் இவன்

பால் பெருகி யிருந்துள்ளன. செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார் பெருக்கம் பெருமிதம் நீர்மையது என்பதை உலகம் இவனிடம் உணர்ந்து தெளிந்துள்ளது.

**உள்ளம் அகந்தை ஒழியின் உயரின்ப**
**வெள்ளம் பெருகி வரும்.**

குற்றம் கடிந்து குணம்படிந்து வாழுக.

---

432. ஏனோ இளவெளிமான் ஈதலின்றி ஏதமுற்றான்
கோனா யிருந்தும் குமரேசா—ஈன
இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு. (உ)

இ-ள்.

**குமரேசா!** இளவெளிமான் அரசனாயிருந்தும் ஈதல் இன்றி இழிந்திருந்தமையால் ஏன் ஏதம் உற்றான்? எனின், இவறலும் மாண்பு இறந்த மானமும் மாணா உவகையும் இறைக்கு ஏதம் என்க.

தீதான ஏதங்கள் தெரிய வந்தன.

செருக்கு, சினம், சிறுமைகள் தீயன என முன்பு குறித்தார்: இதில், இவறல் முதலியன இழிபிழைகள் என்கிறார். பிழை படியாமல் வாழ வழி கூறியுள்ளார்.

பொருளாசை மீதூர்ந்த உலோபமும், மருளான மமதையும், வீண்களிப்பும் அரசனுக்கு அவலமான குற்றங்களாம்.

இழிவும் துன்பமும் தருவது **ஏதம்** என வந்தது.

இவறல்=பொருள் மேல் இவர்ந்து எழுகின்ற பேராசை. ஈண்டு இது உலோபத்தைக் குறித்து நின்றது. ஈதலுக்கு இது மாறானது. ஈகை அரசனுக்கு இயல்பான உயர் குணம் ஆதலால் அதற்கு அயலான இது குற்றம் ஆயது. குற்றம் அற்றவனே கொற்றவன் ஆகிறான். இவறல்=இழிபழி; ஈதல்=உயர் புகழ்.

கொடை அருள் நீதி பணிவு பண்பு செங்கோல் முறைமை முதலிய விழுமிய தகைமைகள் வேந்தனுக்குச் சிறப்பான உயர்ந்த பிறப்புரிமைகளாம்.

இறை மாட்சிகள் இவ்வாறு காட்சிக்கு வந்துள்ளன. ஈகை அரசனை ஒளி செய்து உயர்த்தும்; உலோபம் அவனைப் பழியாளனாக்கித் தாழ்த்தும். தனக்கு ஏதமாய் இழிவு தருகிற இவறலை ஒழித்த அளவே அவன் சிறந்த கோமகனாய் உயர்ந்து ஒளி மிகுந்து திகழ்கிறான்.

இவறலை முதலில் வைத்தது, அதன் இழிவைத் தெளிவாக்க. ஈதல் எவ்வளவு மதிப்புடையதோ, அவ்வளவு அவமதிப்பை **இவறல்** அடைந்துள்ளது. ஈயாத உலோபி உயிரோடு வாழ்ந்தாலும் அவனைச் செத்த சவமாகவே யாரும் எண்ணுவர். யாதும் பயன் படாமையால் பழி படிந்தே அவன் இழிந்து கழிந்து அழிந்து ஒழிந்து போகிறான். அவன் நிலை நெடிய புலையே.

ஆட்டின் கழுத்தில் அலைமுலை போல்உலோபன்
நாட்டில் உருவாகி நண்ணினும்—நீட்டியவன்
ஓர்பயனும் இன்றி உறைதலால் பூமிக்கு
நேர்சுமையே யாவன் நெடிது.

இவறலுடையவன் இவ்வாறு இழிந்து படுதலால் அவன் ஒழிந்து போதலையே உலகம் உவந்து வருகிறது. இதில் குறித்துள்ள உவமானத்தைக் கூர்ந்து நோக்கிப் பொருள் நயங்களை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். பயன் இழந்த அளவு பழி படிந்து கொள்கிறது.

மாந்தரை ஆள நேர்ந்த அரசன் புலையான இழிவுகளை ஒழித்து நிலையான நன்மைகளைச் செய்துவரின் அவனை உலகம் எவ்வழியும் உவந்து போற்றி வரும்.

கொலைகடிந்து இவறல் இன்றிக்
கோத்தொழில் நடாத்து மன்றே.

(சீவகசிந்தாமணி 2583)

இவறல் இன்றி ஒரு மன்னன் முறை புரிந்துள்ளான். அவ்வுண்மையை இதில் ஊன்றி உணர்ந்து கொள்ளுகிறோம். உதவி புரியாதவன் ஊனமாய் ஒழிகிறான்.

உலோபம் என்னும் சொல் சங்க கால வழக்கில் இல்லை. பின்பு தான் வடமொழி வழியாய் இது வந்துள்ளது. பொருளில் மருளான நசை கொண்டு யாதும் உதவாமல் இருப்பவனை உலோபி என்று உலகம் இகழ்ந்து வருகிறது. அகத்தே நசை மண்டி நிற்பது புறத்தே வசை மண்டி வன் பழியாய் வந்தது.

பற்றுள்ளம் என்னும் இவறன்மை. (குறள் 438)

இவறலுக்குப் பொருளை இவ்வாறு விரித்து உரைத்துள்ளார். உலோபியின் உள்ளம் பொருளை மருளாய்ப் பற்றிக் கொண்டுள்ளமையால் எவர்க்கும் பயன் இன்றி இருள் மண்டி இழிந்து கிடக்கின்றான். இந்த இழிவை உலகாளும் வேந்தன் அடையாமல் உயர்ந்து கொள்ள வேண்டும். உயர் தலைவனிடம் இழிபுலை ஏறலாகாது.

தேச மக்கள் தேசு அடைந்து வரத் தெளிவு காட்ட நேர்ந்தவன் யாதும் இழிவு காணமல் யாண்டும் உயர்வு கண்டு ஒளி பெற்று வருவது மரபுரிமையாய் மருவியுளது. இனிய பான்மை அரிய மேன்மை யாகிறது.

மாண்பு இறந்த மானம்=இழிந்த அகங்காரம். பணிவு மரியாதைகளின்றி யாரிடமும் நிமிர்ந்து நிற்கும் ஆணவத்திமிர். மாண்புடைய மானம் உயர்ந்தது; தன்னை யுடையானுக்கு மகிமை மாண்புகளை அருளுவது. மாண்பு இறந்த இது எவ்வழியும் இழிவையே தருவது ஆதலால் இதனை யாதும் தழுவாது ஒழிவதே நல்லது.

மாண உவகை=தாழ்ந்த புலைகளை விழைந்து களிப்பது. மாண்புக்கு மாறுபட்டது **மாண** ஆயது.

சிறந்த நிலையில் மேன்மையாய் உயர்ந்துள்ள வேந்தன் இழிந்த வழிகளில் வீழ்ந்து உவந்துவரின் அது ஈனமாய் நேரும். இளிவுகள் யாதும் நேராமல் ஒளியோடு உயர்ந்து வருபவனே உயர் குல மன்னனாய் ஒளி மிகப் பெறுகிறான். குணநலமே மணம் அருளுகிறது.

இந்த இரண்டு குறள்களில் ஆறு குற்றங்கள் அறியவந்துள்ளன. ஆரிய மொழியில் இந்த ஆறும் உயிர்க்

குத் துயர் புரிகிற உட்பகை என்று உரைத்துள்ளனர். **காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்** என்னும் இவை இங்கே நன்கு அறிய வுரியன.

மதம்=செருக்கு; குரோதம்=சினம்; காமம்=சிறுமை; உலோபம்=இவறல்; மாற்சரியம்=மாண்பிறந்த மானம்; மோகம்=மாணு உவகை.

புறப் பகைகளை அடக்கி நாட்டை ஆளவுரிய அரசன் இந்த உட்பகைகளை ஒடுக்கிய அளவே ஒளிபெற்று நிற்கிறான். இளிவுகள் நீங்கவே ஒளிகள் ஓங்குகின்றன.

அல்லவைகளை நீக்கி நல்லவைகளை ஆக்கிக் கொள்ளுவது எல்லாருக்கும் உரிமையே யாயினும் தலைமை பற்றி வேந்தனுக்குக் கடமை என்று விளக்கியருளினார். மாந்தரும் நலம் மருவி வர வேண்டும்.

**இறைக்கு ஏதம்** என்றது அவனுடைய ஆட்சியும் மாட்சியும் ஏதம் இன்றி இசை பெற்று வரப் போதித்த படியாம். இவறல் முதலிய பிழைகள் நீங்கி ஈதல் முதலிய வழிகளில் பழகி ஒளிமிகுந்து ஓங்கி வருக.

உலோப முடையவன் இழிபழி அடைவான்.

இஃது இளவெளி மானிடம் தெரிய வந்தது.

சரிதம்

இவன் ஒரு குறுநில மன்னன். தன் முன்னவன் இறந்து போனமையால் இவன் மன்னவன் ஆயினன். அந்த அண்ணன் இனிய குணநீர்மையன்; பெருங் கொடையாளி. புலவர்கள் பால் பேரன் புடையவன். **பெருஞ்சித்திரனார்** என்னும் புலவர் பெருமானுக்குப் பெரும் பொருள் தர விரும்பி யிருந்தான்; அவன் இறந்து போக நேர்ந்த போது புலவரைப் போற்றியருளுக என்று புகன்று மாண்டான். அந்த வள்ளலோடு பிறந்திருந்தும் இவன் உள்ளம் புன்மையா யிழிந்திருந்தான். அவ்வுபகாரியின் பிரிவை அறிந்து புலவர் பெரிதும் வருந்தினர். சில காலம் கழித்து இவனிடம் வந்தார்.

முன்னோன் பிரிவுக்கு இரங்கி இப் பின்னோனிடம் அவர் பேரறிவு கூறினர். அவருக்குப் பொருள் தர வேண்டுமே என்று மறுகி இவன் மருளுடன் மாறினன். விரும்பி முகமலர்ந்து உபசரியாமல் சிறிது பொருளைப் பரிசில் என நல்கினன். இவனது புன்மையை நினைந்து புலவர் உள்ளம் கவன்றார்; யாதொன்றும் தீண்டாமல் அயலகன்று போனார். அவ்வாறு எழுந்து செல்லுங்கால் தம் நெஞ்சை நோக்கி அந்தப் புலவர் பெருமான் கூறிப் போனது சீரிய மேன்மையாய்ச் சிறந்து நின்றது.

எழுஇனி நெஞ்சம்! செல்கம்; யாரோ
பருகு வன்ன வேட்கை யில்வழி
அருகிற் கண்டும் அறியார் போல
அகனக வாரா முகனழி பரிசில்
தாளி லாளர் வேளார் அல்லர்;
வருகென வேண்டும் வரிசை யோர்க்கே;
பெரிதே உலகம்; பேணுநர் பலரே;
மீளி முன்பின் ஆளி போல
உள்ளம் உள்ளவிந் தடங்காது வெள்ளென
நோவா தோன்வயின் திரங்கி
வாயா வன்கனிக்கு உலமரு வோரே? (புறம் 207)

"மனமே! இனி நாம் செல்வோம்; நேரே கண்டும் காணாதவன் போல் முகம்மாறி நிற்கின்ற இந்த உலோபியிடம் யாதும் கொள்ளலாகாது; தரந்தெரிந்து உதவி புரியும் தக்கோர் பலருளர்; தகாதவன் பால் வந்தது பெரிய தவறு" என்று அரியேறுபோல் இராச கம்பீரமாய்ப் புலவர் வெளியேறி யுள்ளார். அந்த உண்மையை உரைகள் உணர்த்தி யுள்ளன. புலவர் இவ்வாறு புலந்து போனதை அறிந்து பலரும் இவனை இகழ்ந்து வைதனர். இவறலும், வீண் பெருமையும், வீண்களிப்பும் உடையான் ஏதம் மிக அடைந்து இழிந்து படுவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்தது. இவனது இழி பழி எவ்வழியும் வெளியாய் நின்றது.

**பணிவு மரியாதை பண்புடைமை வேந்துக்**
**கணியாகும்; இன்றேல் அவம்.**

இனிய நீர்மையனாய் இசை மிகப் பெறுக.

---

433. பண்டுசிறு குற்றமுறப் பார்த்தாள் மருதிதுயர்
கொண்டுநொந்தாள் என்னே குமரேசா—கண்ட
தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். (௩)

இ—ள்.

**குமரேசா!** சிறிய பிழையையும் பெரிதாக் கருதி ஏன் மருதி மறுகினாள்? எனின், பழிநாணுவார் தினைத் துணையாம் குற்றம் வரினும் பனைத் துணையாக் கொள்வர் என்க.

இது, விழுமியோர் நிலைமையை விளக்கி யுளது.

பழிக்கு நாணுபவர் தினை அளவு பிழை நேரினும் அதனைப் பனை அளவாக் கருதிப் பரிந்து பதைத்து வருந்துவர். நாணல்=மனம் குறுகி மறுகல்.

மனிதனைக் குறுகச் செய்வது எதுவோ அது குற்றம் என வந்தது. குற்றவாளியா யிழிய லாகாது. குணசாலியாய் உயர வேண்டும். புகழ் புண்ணியங்களை நண்ணியுள்ளவரே பழி பாவங்களை எண்ணி நாணுவர். **பழிநாணுவார்** என்ற குறிப்பால் அவரது இயல்பும் உயர்வும் மரபும் மாண்பும் தெரிய நின்றன.

மேலோர் பெரியோர் ஆன்றோர் எனப் பேர்பெற்று நிற்பவர் எவரும் பழிக்கு நாணியே உயர்ந் துள்ளனர்.

கண்ணில் ஒரு சிறு தூசி படிந்தாலும் அது கலங்கி வருந்தும்; கண்போன்ற காட்சி யுடைய மாட்சியாளர் அணு அளவு குற்றம் உற நேரினும் அதனை மலை அளவாக் கருதி மறுகுவர். புலையாய குற்றம் யாதும் புகாமல் இனிது வாழ்வதே தலையாய மக்கள் தகைமையாம்.

அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்—திங்கள்
மறுவாற்றும் சான்றோர்அஃ தாற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா சுறின். (நாலடி 151)

விண்ணில் ஒளி செய்து நிற்கின்ற சந்திரனும், மண்ணில் புகழ் பரப்பி நிற்கும் சான்றோரும் நிலைமை நீர்மை சீர்மைகளில் ஒப்பர்; ஆயினும் அது மறுவை மருவியுள்ளது. இவர் ஒரு மறு உற நேரினும் பொறுக்க மாட்டார்; உள்ளந் துடித்து அயர்வர்; ஆதலால் அந்த வான மதியினும் இந்த மான மதியாளர் சாலவும் மேலானவர் என இது குறித்துள்ளது. மறு=கறை; குற்றம். கறை படியாதவரே நிறை குண நீர்மையராய் நிலவி வருகின்றார்.

குற்றம் உற நேரின் குலைநடுங்கிக் கூசுகின்றவரே குலமக்களாய் உயர்ந்து திகழ்கின்றார். மாசு மருவாமல் வாழ்பவரே தேசு மிகப் பெறுகின்றார். பிழை படிய நேர்ந்த போதே மனிதன் இழிவடைய நேர்கின்றான்.

சிறிய குற்றம் ஆனாலும் அதனைப் பெரிதாகக் கருதிப் பெரியோர் வருந்தி வாடுகின்றார். பெரிய குற்றமானாலும் சிறியோர் அதனைச் சிறிதும் கவனியாமல் திமிர்ந்து திரிகின்றார். மனம் புனிதமானவர் நிலையும் அங்ஙனம் இல்லாதவர் புலையும் குற்றத்தை அருவருத்து வருந்தலாலும், அருவருப்பின்றிக் கொள்ளுதலாலும் தெள்ளி நேரே தெரிய வந்துள்ளன.

குற்றத்தின் சின்னமான பின்னமும், கொடிய நெடுமையும் தெரியத் தினை பனைகள் முறையே உவமையாய் வந்தன. கடுகு எள் அணு என வேறு யாதும் கூறாமல் தினையைக் கூறியது யாரும் எளிதே காண உரியது என்பது கருதி. உணவுப் பொருள் உணர வந்தது.

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார். (குறள் 104)

தினைத்துணையும் ஊடாமை வேண்டும பனைத்துணையும்
காமம் நிறைய வரின். (குறள் 1282)

முன்னும் பின்னும் திணைபணைகள் இன்னவாறு வந்துள்ளன. திணையின் விளைவும் உணவும் தேவர் காலத்தில் இந்நாட்டில் மிகுதியும் பரவியிருந்துள்ளமையை இவை காட்டியுள்ளன. அறப்பால் பொருட்பால் காமப் பால் மூன்றினும் முறையே தோன்றியுள்ளமை ஊன்றி யுணரவுரியது. அநுபவ நிலை அறிய வருகிறது.

பழிநாணும் பண்புடையார் இழிவு இம்மி வரினும் அழிதுயரமாய்ப் பதைத்து அலமந்து துடிப்பர்.

இது மருதிபால் தெரிய வந்தது.

சரிதம்

இவள் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்தவள். தருமசீலன் என்னும் வேதியன் மனைவி. இவளது காலம் அரச மரபினரை வேரறுத்து வந்த பரசுராமரது காலமாம். இவள் திருந்திய பண்பும் சீலமும் வாய்ந்தவள். பேரழகுடையவள். ஒரு நாள் காவிரி நதியில் நீராடி விட்டுத் தன் இல்லை நோக்கி வந்தாள். அவ்வாறு வருங்கால் அந்நகரை அது பொழுது ஆண்டுவந்த ககந்தன் என்னும் காவலன் மகன் இவளைக் கண்டான். அவன் பெயர் காமந்தன். காளைப் பருவத்தன், இவளது உருவ அழகில் உள்ளம் பறிபோய் மருவி மகிழ விரைந்தான்; கையை நீட்டிச் சைகை செய்து அழைத்தான். அவன் குறித்து அழைத்ததை நோக்கி இவள் குலை நடுங்கினாள். "அந்தோ! என் கணவனை யன்றி வேறு எவரையும் யான் கனவிலும் கருதிலேன்; இத்தீயவன் இன்று என்னைத் தீங்கு செய்ய விழைந்தான். பொல்லாத இந்தப் புலை நிலை நேர நான் என்ன பிழை செய்தேன்?" என்று ஏங்கித் தவித்தாள். பூத சதுக்கம் புகுந்து தன் உயிரைப் போக்க மூண்டாள். பூதசதுக்கம் என்பது அந்நகரின் நடுவீதியிலுள்ள ஒரு பலிபீடம். குற்றவாளிகளைப் பூதம் கொன்று தொலைக்கும் நிலையம். அத்தகைய தரும பூதம் ஒன்று சோழ அரசரது வர பலத்தால் அங்கு நிலை பெற்றிருந்தது. ஆண்டு வந்து மாண்டுபட நேர்ந்த இவளை யாதும் செய்யாமல் அத்தே

வதை அறிவு நலம் கூறி யருளியது. அதிசயம் நிறைந்த அந்த அறிவுரைகள் அயலே காண வருகின்றன.

தெள்ளுநீர்க் காவிரி ஆடினள் வரூஉம்
பார்ப்பனி மருதியைப் பாங்கோர் இன்மையின்
யாப்பறை என்றே எண்ணினன் ஆகிக்
காவிரி வாயிலிற் ககந்தன் சிறுவன்
நீவா! என்ன, நேரிழை கலங்கி,
மண்டிணி ஞாலத்து மழைவளம் தரூஉம்
பெண்டிர் ஆயின் பிறர்நெஞ்சு புகாஅர்;
புக்கேன் பிறனுளம் புரிநூல் மார்பன்
முத்தீப் பேணும் முறையெனக் கில்லென
மாதுயர் எவ்வமொடு மனையகம் புகாஅள்
பூத சதுக்கம் புக்கனள் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றம் தானிலேன்;
கண்டோன் நெஞ்சிற் கரப்பெளி தாயினேன்;
வான்தரு கற்பின் மனையறம் பட்டேன்;
யான்செய் குற்றம் யானறி கில்லேன்;
பொய்யினை கொல்லோ? பூத சதுக்கத்துத்
தெய்வம் நீயெனச் சேயிழை அரற்றலும்,
மாபெரும் பூதம் தோன்றி மடக்கொடி!
நீகேள்! என்றே நேரிழைக்கு உரைக்கும்:
தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றஅப்
பொய்யில் புலவன் பொருளுரை தேராய்,
பிசியும் நொடியும் பிறர்வாய்க் கேட்டு
விசுபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
கடவுட் பேணல் கடவியை ஆகலின்,
மடவரல் ஏவ மழையும் பெய்யாது;
நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்
பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியும் இல்லை;
ஆங்கவை ஒழிகுவை யாயின் ஆயிழை!
ஓங்கிரு வானத்து மழையுநின் மொழியது;
பெட்டாங்கு ஒழுகும் பெண்டிரைப் போலக்;
கட்டாது உன்னைஎன் கடுந்தொழிற் பாசம்.

(மணிமேகலை 22)

நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இதில் கூர்ந்து ஓர்ந்து கொள்ளுகிறோம். யாதொரு பிழையும் இல்லாமல் உள்ளம் தூயளாய் இவள் ஒழுகி வந்துள்ளமையை உரைகள் உணர்த்தி யுள்ளன. **யான் செய் குற்றம் யான் அறிகில்லேன்** என்று இவள் மறுகியுள்ளாள். தான் குற்றம் அற்றவளாயிருந்தும் தன்னை ஒருவன் குற்றமாக் கருதினனே! என்று நாணி உயிர்விட நேர்ந்தாள். பழிநாணுவார் தினைத்துணையாம் குற்றம் நேரினும் அதனைப் பனைத்துணையா எண்ணிப் பதைத்துத் துடிப்பர் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

**பிழைசிறிதும் நேராமல் பேணி வருவோர்**
**விழுமிய ராவர் விரைந்து.**

மாசு படியாமல் தேசுடன் உயர்க.

---

434. அன்றேன் வருணன் அயன்முன்செய் குற்றத்தால்
குன்றி யிழிந்தான் குமரேசா—என்றுமே
குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றம் தரூஉம் பகை. (சு)

இ—ள்.

**குமரேசா!** தான் செய்த சிறிய குற்றத்தால் அரிய பெரிய வருணனும் ஏன் பின்பு கொடிய துயரங்கள் உற்றான்? எனின், அற்றம் தரூஉம் பகை குற்றமே; பொருளாகக் குற்றமே காக்க என்க.

கருதிக் காக்க வுரியது காண வந்தது.

கேடு பயக்கும் கொடிய பகை குற்றமே; ஆதலால் அது அணுகா வண்ணம் தன்னை ஒருவன் எப்போதும் கவனமாய்ப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

அற்றம்=கேடு; இறுதி; அழிவு.

தினை அளவு குற்றத்தையும் பனையளவாக் கருதி முன் நீக்குக என்றார்; இதில், அங்ஙனம் நீக்காவழி நெடும் பழியாம்; கொடுந் துயரமாம் என்கின்றார்.

தரும் என்பது **தரூஉம்** என அளபெடுத்துத் தனை நிறைத்து நின்றது. ஏகாரங்கள் ஈரிடத்தும் பிரிநிலை களாய்த் துணிவுணர்த்தி நின்றன.

தன்பால் குற்றம் நேராதபடி மிக்க கவனமாகத் தன்னைப் பாதுகாத்துக் கொள்பவனே இன்னலுறாமல் இன்ப மிகப் பெறுகிறான். கள்ளர் புகுந்து கவர்ந்து கொள்ளாதபடி பொருளைப் போற்றுதல்போல் குற்றம் புகுந்து குலத்தைக் கெடாதபடி குணத்தைப் போற்றி வாழ். குற்றத்தின் நீக்கமே குறைவற்ற ஆக்கமாம்.

மனிதனுடைய வாழ்வு அல்லல் பல சூழ்ந்தது. அகத்தே மறதி மருள் மடமைகளால் பிழைகள் நேரும்; புறத்தே பகைமை பொறாமை கொடுமைகளால் இடர் கள் விளையும். இவ்வாறு எவ்வழியும் இடையூறுகளை யுடைய வாழ்வில் யாண்டும் கவனமாய் யாதும் பிழை நுழையாத வாறு விழிப்போடு வாழ்வது விதிநியமமாய் நின்றது. பிழை சிறிது புகினும் பீழை பெரிதாம்.

ஒருவனுக்குக் கேடு புரிபவர் பகைவரே; அவரும் இடம் கண்டு சமையம் நோக்கியே அது செய்ய நேர்வர். வெளியேயுள்ள அவரை முன்னதாக அறிந்து எளிதே தடுத்து இடர் நேராமல் தன்னைக் காத்துக் கொள்ளலாம்.

குற்றம் உள்ளேயிருந்து மெள்ளத்தோன்றி ஒல்லை யில் அல்லல் விளைக்கும் ஆதலால் **குற்றமே அற்றம் தரூஉம் பகை** என்றார். புறப் பகைவரினும் அகப்பகை யாகிய குற்றத்தையே ஒருவன் அஞ்சி நீக்க வேண்டும்.

குற்றத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டே பகை வரும் அற்றம் விளைக்க நேர்வர். குற்றம் அற்ற அளவு அற்றம் இல்லை. வெற்றியே எங்கும் விளைந்து வரும்.

நள மன்னன் மீது **கலி** பொறாமை கொண்டு பகைமை மண்டி நின்றான். கேடு செய்ய மூண்டும் நெறி நியமங்களோடு யாண்டும் குண சீலனாய் இவ்வேந்தன் இருந்து வந்தமையால் **கலியன்** யாதும் செய்ய முடியா மல் காலம் கருதி வந்தான். ஏதேனும் இவனிடம் குற்

றம் நிகழாதா? என்று பன்னிரண்டு ஆண்டுகள் அவன் வேவு பார்த்து வந்தான். முடிவில் ஒரு நாள் மறதியால் கால்களைக் கழுவாமல் இவன் பூசை செய்ய நேர்ந்தான். அந்தச் சிறிய பிழையையே பற்றுக் கோடாகப் பற்றிக் கொண்டு அவன் பெரிய துயரங்களைச் செய்தான்.

இந்நகர் வரைப்பில் யாண்டும் எய்துதற்கு அரிதென் றெண்ணிச்
சென்னிவான் தடவு தெய்வச் செழுமலர்ச் சோலை புக்கு
மன்னவன் இழைக்கும் தீமை யாது? என மனத்தின் ஓர்ந்து
துன்னருந் தான்றி மீதில் சூழ்ச்சியோ டிருக்கும் நாளில்.

கோவடு குருதி வேலான் கொழுஞ்சுடர் பட்ட காலைச்
சேவடி கழுவ லின்றிச் செய்கட ன் கழித்தல் நோக்கிக்
காவலற் சேருங் காலம் கருதுபு பன்னி ராண்டு
மேவரு தான்றி யுற்ற வெங்கலி மேயி னானே. (நைடதம்)

குற்றம் கருதிக் கலி காத்திருந்த காட்சியை இங்கே கண்டு கொள்ளுகிறோம். சிறிய தவறும் பெரியோரிடத்தில் குற்றமாகிறது. ஞாலம் காக்க நேர்ந்த மேலான அரசர் எவ்வளவு செவ்வியராய், எத்துணை நெறியாளராய் வாழ வேண்டும்! என்பது ஈண்டு உணர வந்தது.

குற்றம் உடையவர் அற்றம் அடைந்து வருந்துவர்.

இது வருணன் பால் அறிய வந்தது.

### சரிதம்

இவன் திக்கு பாலகருள் ஒருவன். மேற்குத் திசைக்குத் தலைவன். நீரின் அதிதேவதை. கடல்களுக்கு அரசன். வானுலகில் வருண மண்டலம் இவனுக்குத் தனியுரிமையுடையது. இவனது இராசதானிக்குச் சித்திராவதி என்று பெயர். மனைவி பெயர் சேட்டை. மகன் பெயர் தருமன். புதல்வியர் சுநந்தை, வாருணி என இருவர். இந்திரன் அக்கினி இயமன் நிருதி வாயு குபேரன் ஈசானன் என்பவர் இவனுடைய நண்பர்கள். சிறந்த நிலையில் உயர்ந்த வேந்தனாய் ஒளி மிகுந்து வந்த இவன் ஒரு நாள் பிரமதேவனைக் காணச் சென்றான். அங்கு நிகழ்ந்த ஒரு வேள்வி விழாவின் பொருட்டுத்

தேவர் யாவரும் கூடி யிருந்தனர். அயனை முறையே வணங்கி இவனும் அச்சபையில் அமர்ந்திருந்தான். அங்கே கங்காதேவி வந்து பிரமனைப் பணிந்து தொழு தாள். அவ்வாறு தொழுங்கால் காற்றால் அவளது மெல் லிய ஆடை சிறிது விலகியது; விலகவே பெண்மைக்குறி தெரிய நேர்ந்தது; காண நாணி அமரர்கள் தலை கவிழ்ந்த னர். வருணன் மாத்திரம் யாதும் நாணாமல் நகை மிகுந்து அதனை நோக்கினான். இவனது சிறுமையைப் பிரமன் அறிந்து பெரிதும் சினந்தான்; "இழிந்த செயலை விழைந்து செய்த நீ விண்ணுலக வாழ்வை இழந்து மண் ணுலகில் இழிக" என்று எதிரே சபித்தான். அந்தச் சாபத்தின்படியே இவன் ஆபத்தை அடைந்தான்.

வான்முக மதியமும் புதிய மாலிகைக்
கான்முக இதழியும் கமழும் கங்கையாள்
தேன்முகம் பொழிதரு செய்ய தாழுரை
நான்முகன் பேரவை நண்ணினாரோ. (1)

இருங்கலை இமையவர் எதிர்இறைஞ் சுவாள்
மருங்கலை மதியினை மதிக்கு மாறுபோல்
அருங்கலை அயலுற அதிர்ந்து வீசினான்
பொருங்கலை எனுமிகற் புரவி வீரனே. (2)

திருக்குறும் அவையவம் திகழ்ந்து தோன்றவே
கருத்துடன் அவையத்தோர் கண்புதைக்கவும்
மருத்தினை மனமுற மகிழ்ந்து காதல்கூர்
உருக்குறும் உரிமையோ ரொருவன் நோக்கினான். (3)

நோக்கிய வருணனை நுவலும் நான்மறை
ஆக்கிய முனிவரும் அழன்று பார்மகள்
பாக்கியம் என்னவுற் பவிக்க நீயெனத்
தாக்கிய உருமெனச் சபித்த காலையே. (4)

கோனிடம் நினைவொடு குறுகி நீயுநன்
மானிட மடந்தையாய் மணந்து மீள்கென
வானிடை நதியையும் வழுவி னலவன்
தானிடர் உறும்வகை தந்தை ஏவினான். (5)

(பாரதம், குருகுலம்)

நேர்ந்துள்ள நிலைமைகளை இதில் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். மேலான உயர்ந்த பதவியை இழந்து தன் குற்றத்தினால் வருணன் கீழா யிழிந்துள்ளான். பகைவர் எவரும் செய்ய முடியாத கொடிய துன்பத்தை ஒரு சிறு குற்றம் செய்து விட்டது. அழிதுயரங்களைத் தருகின்ற பகை குற்றமே; ஆதலால் அது நேராவண்ணம் எவ்வழியும் கவனமாகத் தன்னை ஒருவன் காத்துக் கொள்ள வேண்டும்; அங்ஙனம் காவானாயின் ஓவாத்துயரமே! என்பதை உலகம் காண இவன் காட்டி யுள்ளான்.

குற்றம் படியாமல் கூர்ந்துநீ வாழ்ந்துவரின்
நற்றவ வாழ்வாம் அது.

தப்பின்றிச் செப்பமாய் வாழ்க.

---

435. கண்டு திரிபுரர்முன் காவாமை யாலழிவு
கொண்டுநொந்தார் என்னே குமரேசா—மண்டி
வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். (ரு)

இ-ள்.

குமரேசா! முன் அறிந்து காவாத திரிபுரர் ஏன் பின்பு ஒருங்கே அழிந்தார்? எனின், வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரி முன்னர் வைத்தூறு போலக் கெடும் என்க.

கருத்தோடு கவனமாய்க் காக்க வுரியதை இது காட்டியுளது, காப்பும் வாழ்வும் காண வந்தன.

இடர் எய்து முன்னே எதிரறிந்து பாது காவாதவனது வாழ்க்கை நெருப்பு எதிரே பட்ட வைக்கோல் பொதி போல் விரைந்து அழிந்து படும்.

வைத்தூறு=வைக்கோலின குவியல். நெல்லைப் பிரித்து எடுத்துக் கொண்ட பின் தனியே படப்பாக் குவித்து வைக்கப்படுவது வை என வந்தது.

வையும் மண்ணும் மயிரும். (நீலகேசி 868)

இதில் வை குறித்திருக்கும் பொருளை அறிக.

வரு முன்னர் என்று பொதுவாக வந்துள்ளது. வருவதைத் தெளிவாக விளக்கிக் கூறவில்லை. எது வருவது? எவை வருவன? அதிகாரத்தின் உரிமையால் குற்றம் என்று கொள்ளலாம் ஆயினும் எரி என்ற உவமைக் குறிப்பால் இடையூருன துயர் என்பதே சரியாம்.

மனிதனுடைய வாழ்க்கை துயர்கள் பல சூழ்ந்தன. இன்பமும் துன்பமும் பகலும் இரவும் போல் இயல்பாய்த் தொடர்ந்துள்ளன. இயன்ற வரையும் முயன்று எவ்வழியும் செவ்வையாய்ச் சீர்தூக்கிக் கவனமாய் வாழ்ந்து வருபவனே மதியூகியாய் உயர்ந்து வருகிருன்; அவனுடைய வாழ்வும் வளமாய்ச் சிறந்து வருகிறது. அவ்வாறு வாழாதவன் வாழ்வு தாழ்வடைய நேர்கிறது.

வருமுன்னர்க் காக்க வுரியன பல. அவரவருடைய நிலைகளைப் பொறுத்துள்ளன. பகைவர் புரியும் மிகைகளை முன் அறிந்து காப்பது அரசனுக்குரிய கடமையாம். பருவம் தவருமல் காலம் அறிந்து முன்னதாக ஆராய்ந்து செய்யவுரியவற்றைச் சீருடன் செய்வது உழவர் வணிகர் முதலியோருக்கு உரியன. சோதனையில் தேற நேர்ந்த மாணவன் அதற்குரிய பாடங்களை முன்னதாகவே நன்கு பயின்று தெளிவு செய்து கொள்ள வேண்டும்; இல்லையேல் தேர்வில் இழிவு நேர்ந்து விடும்.

எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய். (குறள் 429)

என்றதனல் அவ்வாறு காவாதார் துயரால் அதிர்ந்து நடுங்குவர் என்பது அறிய வந்தது. **பசி வரு முன்னர்** உணவைச் சமைக்க வில்லையானல் அது வந்த போது பதைத்துத் துடிப்பர். வருமுன் காவாத வாழ்வு தீ எதிர்ப்பட்ட துரும்புபோல் நோயுழந்து மாயும். அங்ஙனம் மாய்ந்து படாமல் முன்னதாகவே ஆய்ந்து உய்க.

எரி துயர்க்கும், வைத்தூறு வாழ்க்கைக்கும் ஒப்பாம். வருமுன் அணைகோலி வகையாய் வாழுக.

வளிமுன்னர் வைப்பாரம் இல். (பழமொழி 234)

சூறைக் காற்றின் முன் வைக்கோல் குவை ஒழிவது போல் போம். அழிவு நேராமல் ஆய்ந்து வழி செய்க.

**முன்துறையரையர்** இங்ஙனம் உவமை கூறியுள்ளார். எரி **முன்னர் வைத்தூறு** என்பதை எதிர் நோக்கி இது வந்துள்ளது. நெல் அதிகம் விளையும் நாடு ஆதலால் கவிகள் இவ்வாறு உவமைகள் கூற நேர்ந்துள்ளனர். வருவதை உணர்பவன் வானவனாகிறான்.

எதிர்வதை முன்னுற எண்ணி வாழ்; எண்ணாது ஒழியின் உன் வாழ்வு மண்ணாம்: நீயும் மறுகி வருந்துவாய் என மனிதனுக்கு உறுதியான மதியருளியுள்ளார்.

முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை
பின்னூ றிரங்கி விடும். (குறள் 535)

பின்னரும் இன்னவாறு கூறியுள்ளார். வருமுன்னர் நோக்கி நீக்க வுரியது துன்பம்; நீக்காவழி அது பெரிய பிழையாம் என்பதை இதில் அறிந்து கொள்கிறோம்.

"If a man take no thought about what is distant, he will find sorrow near at hand."

"எட்ட வருவதை ஒருவன் எண்ணாது ஒழியின் அது கிட்ட நெருங்கிய பொழுது கேடாய்த் துன்புறுவான்" என இது குறித்துளது. குறிப்பைக் கூர்ந்து தெளிக.

எதிர் நோக்கி எண்ணி வாழாதவர் இழிந்து அழிவர்.

இவ்வுண்மை திரிபுரர் பால் நன்கு தெரிய நின்றது.

## சரிதம்

இம் மூவரும் தானவர் தலைவர். தாரகாக்கன், கமலாக்கன், வித்துன்மாலி என்னும் பேரினர். பேராற்றலுடையவர். அருந்திறலுடைய இவர் பிரமனை நோக்கிப்

பெருந்தவங்கள் புரிந்து அரிய பெரிய வரங்களைப் பெற்று அதிசய நிலைகளில் உயர்ந் திருந்தனர். பொன் வெள்ளி இரும்புகளா லான மூன்று பெரிய நகரங்கள் வான மண்டலத்தில் வயங்கி விளங்க வானவரெவரும் ஏவல் புரிந்து வரத் தானவர் வேந்தராய் யாண்டும் ஆட்சி புரிந்து இவர் மாட்சி மிகுந்து வாழ்ந்து வந்தனர்.

விண்ணிடைப் பறக்கும் மூன்று வியனகர் உலவா வெற்றி
எண்ணறும் ஆயு ளெய்தி ஈறுபட் டழியா ஆக்கைத்
தண்ணறுந் துளவோன் ஆதி அமரர்வெஞ் சமரின் ஏற்றெம்
கண்ணெதிர்ப் படினும் அஞ்சும் கடுந்திறல் அருள்க என்றார்.

ஆங்கவை யனைத்துந் தந்தோம் ஆயிரம் பருவம் செல்லின்
தூங்குறும் எயில்கள் மூன்றும் ஒருவயின் தொகுமஞ் ஞான்றின்
வாங்குவிற் பகழி ஒன்றால் மாய்ந்திடின் மாய்வ தல்லால்
தீங்குறு என்னை ஓதித் திசைமுகன் மறைந்து போனான்.

தேசுறு செம்பொன் வெள்ளி இரும்பினில் திசைகள் தோறும்
யோசனை நூறு கொண்ட தோரொரு நகரம் ஆகக்
காசகன் படுத்து வெய்ய கவின்வளர் மாட முற்று
மாசறு நகர மூன்று மயனினி தியற்றி னானே.

(கூர்மபுராணம்)

இவர்களுடைய திவ்விய செல்வங்களையும் தெய்வீக நிலைகளையும் தீர வீர பராக்கிரமங்களையும் இவற்றால் உணர்ந்து கொள்கிறோம். இவ்வாறு எவ்வழியும் பெரு மேன்மைகளோடு பெருமித நிலைகளில் இவர் வாழ்ந்து வந்தனர். யாண்டும் நீண்ட சிறப்பாய் நிலவி வந்த இவர் பின்பு செருக்கும் களிப்பும் மிகுந்து தேவர்களுக்குத் துயர் விளைத்தனர். அவர் மாயவனிடம் முறையிட்டனர். போரில் இவரை நேரே வெல்ல முடியாது என்று தெரிந்து வேறுவகையில் திருமால் இவரிடம் பெருமால் புரிந்து வந்தார். உள்ளம் திரிந்த இவர் தீயராய் மூண்டு சீவர்களுக்கு எங்கும் தீங்கு புரியவே தேவர் முதல் யாவரும் சிவபெருமானை நினைந்து தொழுது துதித்தனர். உயிர்களின் துயர்களை நீக்கி யருளக்கருதி இறைவன் பொரு திறலோடு இவர் மேல் வந்தார். நேர்ந்ததை நோக்கி

நெடுந்திகிலடைந்தாலும் யாராலும் அழிக்க முடியாத அரண்வலியுளது என்று இவர் அடல்கொண்டு நின்றார். இவரது நிலைமையை எண்ணிக் கண்ணுதல் பரமன் புன்னகை செய்தார். அந்தச் சிறிய சிரிப்பு பெரிய நெருப்பாய் மூண்டு பாய்ந்து திரிபுரங்களை அடியோடு எரித்து ஒழித்தது. திருமால் பிரமன் முதல் எல்லோரும் பெருமானைப் புகழ்ந்து போற்றினர். எதிர்வதை அறியாமல் ஏமாந்திருந்தமையால் எரிந்து அழிந்தார். வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் வைத்தூறு போலக் கெடும் என்பதை யாவரும் இவரிடம் நேரே கண்டு தெளிந்தார். இவரது அழிவு உலகிற்குப் பெரு மகிழ்வாய் நலம் புரிந்து நிலவியது.

விண்ணிடைத் திரிபுரம் வெந்து நீறெழப்
பண்ணுடைச் செந்தழல் பரப்பு மூரலாய்!
எண்ணுடைக் காமனை எரித்த பேரழற்
கண்ணுடைக் கடவுளே! கால காலனே! (பாரதம்)

திரிபுரம் எரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப
உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவன். (சிலப்பதிகாரம் 6)

சிவபெருமான் திரிபுரம் எரித்ததை இவை இங்ஙனம் குறித்துள்ளன. தீயவர் தீயால் தீய்ந்து மாய்ந்தனர்.

**இன்ன லுறாமல் எதிர்நோக்கி எவ்வழியும்**
**உன்னிநீ வாழ்க வுயர்ந்து.**

உறுவதை ஓர்ந்து உறுதி காணுக.

---

436. கற்ற வழுதி கதவுதொட்ட கையையேன்
குற்றமென நீத்தான் குமரேசா—உற்றறிந்து
தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு. (சு)

இ—ள்.

**குமரேசா!** தான் குற்றம் செய்ததாகப் பாண்டிய மன்னன் ஏன் தன்கையைக் கொய்தான்? எனின், தன்

குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் காண்கிற் பின் இறைக்கு என் குற்றம் ஆகும் என்க.

குற்றம் ஒழியும் வழி உணர வந்தது.

தனது குற்றத்தை நீக்கிப் பிறருடைய குற்றங்களை நோக்க வல்லனுயின் அந்த அரசனுக்கு யாதொரு ஏதமும் இல்லையாம்.

வருமுன்னர்க் கா! என்று முன்னம் கூறினர்; இதில் உன்னிடமுள்ள குற்றத்தை முன்னுற நீக்குக என்கின்றார். யாண்டும் பிழை புகாமல் ஆள்பவனே அரசனும்.

தன் என்றது தனியே தலைமையாயிருந்து அரசு புரிந்து வரும் மன்னனை. தான் குற்றம் இன்றித் திருந்தி யிருந்த அளவு தான் அவன் குணவாளுய்ச் சிறந்து உயர்ந்து எவ்வழியும் வெற்றி வீறுடன் விளங்குகிறுன்.

தான் திருந்தாதவன் பிறரைத் திருத்த முயல்வது விருத்தமாம்; ஆகவே தனது திருத்தத்தை முதலில் அரசனுக்குக் குறித்தருளினர். உள்ளம் புனிதமாய்த் திருந்திய உரவோன் எதிரே உலகம் தானகவே திருந்தி வருகிறது. மாசு அற்றவன் தேசுற்றுத் திகழ்கின்றுன்.

குற்றங்களும் குறைகளும் மனிதனிடம் இயல்பாய் மருவியுள்ளன. சுற்றிய சூழல்களாலும் பற்றிய பழக்க வழக்கங்களாலும் மனிதன் உருவாகி வருகிறுன். அறியாமையால் மருவி வருகிற பிழைகளை அறிவின் தெளிவால் அரசன் ஒழித்து ஒழுக வேண்டும். படிந்த தவறுகளை முடிந்த வரையும் நீக்குவது முடி மன்னன் கடமையாம். வழுவறப் புரிபவன் விழுமியோ னுகிறுன்.

**நீக்கி** என்றது நீக்கவுரிய மாசுகளை நோக்கி வந்தது. நீங்காமல் இயல்பாய் நின்ற குற்றங்களும் பாங்காய் வந்து பற்றிய குறைகளும் ஒழிந்த அளவு தான் அரசன் தெளிந்த குணவாளுய்ச் சிறந்து உயர்ந்து திகழ்கிறுன்.

போகம் பொருள்கேடு மான்வேட்டம் பொல்லாக்கள்
சோகம் படுசூதே சொல்வன்மை—வேகக்
கடுங்கதத்துத் தண்டம் அடங்காமை காப்பின்
அடுங்கதமில் ஏனை அரசு. (1)

கொல்லான் கொலைபுரியான் பொய்யான் பிறர்பொருள்மேல்
செல்லான் சிறியார் இனம்சேரான்—சொல்லும்
மறையில் செவியிலன் தீச்சொற்கண் மூங்கை
இறையிற் பெரியாற் கிவை. (2)
(ஏலாதி)

குறைகள் நீங்கி இறைமகன் நிறைவுடன் இருக்க வேண்டிய நீரமையைக் கணிமேதையார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் வரைந்து குறித்திருக்கிறார்.

பொறிவெறி, பொருளை விழைக்கல், சாதுவான பிராணிகளை வேட்டையாடல், குடி, சூது, கடுஞ் சொல், வீண்கோபம், கொடுந்தண்டம் முதலிய குற்றங்கள் இல்லாதவனாய், கொல்லாமை பொய்யாமை இன்னா செய்யாமை பிறர்பொருள் நயவாமை சிற்றினம் சேராமை தீச்சொற் கேளாமை புறங் கூறாமை முதலிய குணநீர்மைகள் உடையவனாய் அரசன் இருப்பானாயின் உலகம் முழுவதும் அவனைப் புகழ்ந்து போற்றி உவந்து வரும் என்னும் இவை ஈண்டு ஊன்றி உணரவுரியன.

குற்றம் நீங்கிக் குணமுடன் வாழ்வது மாந்தர் யாவர்க்கும் பொதுவாயினும், வேந்தனுக்கு மிகவும் சிறப்பாக வேண்டும் ஆதலால் இறைக்கு என்று இனத்தைத் தெளிவாக விளக்கி உரிமையுடன் குறித்தார்.

மன்னவன் மாசு நீங்கி நின்றால் மக்களும் அன்னவன் போலவே தேசு மிகுந்து சிறந்து வருவர். எங்கே குற்றங்கள் தோன்றுமோ, அங்கங்கே அவற்றைக் கூர்ந்து கண்டு ஓர்ந்து கடிய வல்லவன் என்பது இறை என்ற குறிப்பால் இனிது தெரிய வந்தது.

பிறர் குற்றம் நீக்கினே என்னுமல் காணின் என்றது அந்தக் காட்சியின் மாட்சி கருதி. ஒளி காண இருள் ஒழியுமாறு போல அரசன் கண்ணோடிக் காண நேரின் குடிகள் குற்றம் ஒழிந்து குணமாய் வாழ நேர்வர்.

குற்றம் கடிந்த போதே குணம் படிந்து வெற்றி வேந்தனாய் விளங்குவன் ஆதலால் அவனது ஆட்சியும்

காட்சியும் அதிசய ஆற்ற லுடையனவாய் யாண்டும் விதிமுறைகளை நன்கு விளக்கி யருளும்.

சீற்றம் செற்றுப்பொய் நீக்கிச்செங் கோலினால்
கூற்றம் காய்ந்து கொடுக்க வெணுந்துணை
மாற்ற மேநவின் றுன்றடு மாற்றத்துத்
தோற்றம் தன்னையும் காமுறத் தோன்றினான்.
(குண்டலகேசி)

குற்றங்கள் நீங்கிச் செங்கோல் செலுத்தி எங்கும் குறைகள் நேராமல் ஆட்சி புரிந்த ஓர் அரசன் உலகம் உவந்து போற்றத் தோன்றியுள்ள தோற்றத்தை இதில் ஊன்றி நோக்கி வியந்து நயந்து கொள்ளுகிறோம்.

நல்ல நயமான குணங்கள் மனிதனைத் தெய்வமாக உயர்த்துகின்றன; அந்த நன்மைகள் நீங்கிப் புன்மைகள் தோய நேரின் அவன் புல்லியனா யிழிகின்றான். குற்றங்கள் எவரையும் எவ்வழியும் தாழ்த்தி வருதலால் அவை பகை நஞ்சு பழி பாவம் என அஞ்ச நேர்ந்தன.

அற்புப் பெருந்தளை யாப்பு நெகிழ்ந்தொழிதல்
கற்புப் பெரும்புணை காதலிற் கைவிடுதல்
நட்பின் நயநீர்மை நீங்கல் இவைமூன்றும்
குற்றந் தரூஉம் பகை. (திரிகடுகம் 86)

அன்பு சீலம் பண்பு என்னும் இவை இன்பம் தரும் இனிய நீர்மைகள். இந்நீர்மைகள் நீங்க நேரின் துன்பங்கள் ஓங்கி வரும் எனச் சங்கப் புலவராகிய **நல்லாதனார்** இங்ஙனம் கூறியுள்ளார். **குற்றம் தரூஉம் பகை** என்று இங்கே குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்க வுரியது.

அரசன் தலைமையான நிலைமை யுடையவன் ஆதலால் பிழை யுறாமல் தன்னை அவன் பாதுகாத்து வர வேண்டும்; அவ்வரவு நாட்டுக்கும் மக்களுக்கும் நன்மை பயந்து வரும். தன் குற்றம் நீக்கு! என்று மன்னனை நோக்கி முன்னதாகக் குறித்தது, அந்த நீக்கம் எல்லாருக்கும் நேரே நல்ல பேராக்கம் ஆதல் கருதி.

பொருந்தாப் பழிஎன்னும் பொல்லாப் பிணிக்கு
மருந்தாகி நிற்பதாம் மாட்சி—மருந்தின்
தணியாது விட்டக்கால் தண்கடல் சேர்ப்ப!
பிணியீ டழித்து விடும். (பழமொழி 355)

பழி என்னும் பொல்லாத பிணி யாதும் பற்றுமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளுவதே மன்னனுக்கு விழுமிய நன்மையாம் என இது விளக்கியுள்ளது.

குற்றம் புரியா திருந்துபிறர் குற்றம் களைக! சிறிதேனும்
குற்றம் புரியின் சிற்றெரிவைக் குவையை அழிக்கு மாறேபோல்
பற்றும்பெருவாழ் வினை அழிக்கும் பகைவர்க்குஆக்கம் மிகப்பெருக்கும்
சூற்றும் பெருநோய் உழப்பிக்கும் முனியா ரானும் முனிவிக்கும்.
(விநாயகபுராணம்)

துயர் நேராமல் அரசன் உயர்வாய் வாழ வேண்டு மானுல் அவன் இன்ன வகையில் இனிது ஒழுக வேண்டும் என்பதை இது நயமா யுணர்த்தி யுளது.

குற்றம் நீக்கிக் குணம் ஆக்கி வரும் வேந்தனை மாந்தர் யாவரும் மகிழ்ந்து புகழ்ந்து போற்றி வருவர்.

இவ்வுண்மை குலசேகரன் பால் தெரிய வந்தது.

### சரிதம்

குலசேகர பாண்டியன் என்னும் இம்மன்னன் மதுரை யிலிருந்து மாட்சிமையாய் ஆட்சி புரிந்தான். நீதியும் வீரமும் நிறையும் பொறையும் இவனிடம் நிறைந் திருந்தன. வஞ்சனை தீவினை மருவா நெஞ்சினன். மெய்யே புகலும் துய்ய நாவினன். உலக வுயிர்களைத் தன் உயிர் போல் பேணி வந்த இவ்வேந்தன் ஒரு நாள் இரவு மாறுவேடம் தரித்துத் தனியே நகரின் இயல்பை நாடி வந்தான். ஒரு மறையவன் மனையருகே வருங்கால் இவனது பாதுகாப்பின் நீதியைக் குறித்து உள்ளே உரைகள் நிகழ்ந்தன. காசி யாத்திரை போக விரும்பிய கீரந்தை என்னும் ஒரு வேதியன் தன்னைப் பிரிந்து தனியே இருக்க அஞ்சிய தனது இள மனைவியை இனிது

தேற்றினான்: "கண்ணை இமை காப்பது போல் மன்னுயிர்களைக் காத்து வருகிற நம் மன்னர் பெருமான் ஆட்சியில் உனக்கு யாதொரு இன்னலும் நேராது; சும்மா இரு" என்று தேற்றி விட்டு அன்றே அவன் காசியை நோக்கிப் போயினான். அவ்வேதியன் கூறியதைக் கேட்டு இவ்வேந்தன் வியந்தான். அன்று முதல் அவளைத் தன் புதல்வியாகக் கருதிப் போற்றி வந்தான். அவளை மாத்திரம் தனியே பேணின் உலகம் மாறுபாடாக எண்ண நேரும் என்று எண்ணி அவ்வீதியிலுள்ள வேதியர்களுக் கெல்லாம் ஒருபடியாகப் படியளவு செய்து பாதுகாத்து வந்தான். திங்கள் பன்னிரண்டு கழிந்தன. தேச யாத்திரை சென்றிருந்தவன் திரும்ப வந்தான். மனைவியைக் கண்டான்; மகிழ்வு கொண்டான். அன்றிரவு மனைவியுடன் தனியேயிருந்து போனதும் வந்ததும் புகன்று கொண்டிருந்தான். பார்ப்பான் வந்ததை அரசன் பாராதவன் ஆதலால் வழக்கம் போல் பார்க்க வந்தான்; உள்ளே ஆள் அரவம் கேட்டதும் உள்ளம் கலன்றான். கதவைத் தட்டினான். வேதியன் வெகுண்டு "யார்?" என வினவினான். உள்ளிருப்பவன் உரியவன் தான் என்று அரசன் உணர்ந்தான். அம் மறையவன் ஐயுறாதவாறு அவ்வரிசையிலிருந்த இல்லங்கள் தோறும் அவ்வகையே செய்து சென்றான். மறுநாள் அரசன் கொலு வீற்றிருக்கும் கால் அந்தணர் எல்லாரும் திரண்டு வந்தனர். இரவு நிகழ்ந்ததை மறுகி மொழிந்தனர். அரியணையில் அமர்ந்திருந்த அரசன் அருகே நின்ற அமைச்சரை நோக்கி "இவ்வாறு செய்து போனவனைக் கண்டால் எவ்வகையான தண்டனை செய்யலாம்?" என்று கேட்டான். அதற்கு அவர் "கதவு தொட்டகையை வெட்ட வேண்டும்" என்றார். உடனே அரசன் உடைவாளை உருவி "அங்ஙனம் தொட்டகை இது தான்" என்று துண்டாட வெட்டி வீழ்த்தினான். நிகழ்ந்துள்ள நிலைமைகளை அறிந்து எல்லாரும் நெஞ்சம் பதைத்து நெடிது மறுகினர். அந்த முற்கை பொற்கை ஆயது. அதன்பின் **பொற்கைப் பாண்டியன்** என்று இவன் புகழ்

பெற்று விளங்கினான். தன்பால் யாதும் குற்றமில்லா திருந்தும் குற்றம்போல் தோன்றியதையும் இவன் நீக்கி யருளினான். இவனுடைய குணநீர்மைகளைக் கண்டு குடி மக்கள் எல்லாரும் குற்றம் கடிந்து குணம் படிந்து வாழ்ந்தனர். தன்பால் யாதொரு குற்றமும் நேராமல் அரசன் நீக்க வேண்டும் என்பதை உலகம் காண இவன் காட்டி யருளினான். வழுதி மரபுள் இவனது அரிய சரிதம் விழுமிய நிலையில் பெரிதும் விளங்கி வருகிறது.

உதவா வாழ்க்கைக் கீரந்தை மனைவி
புதவக் கதவம் புடைத்தனன் ஓர்நாள்:
"அரச வேலி யல்லது யாவதும்
புரைதீர் வேலி இல்லென மொழிந்து
மன்றத் திருத்திச் சென்றீர்! அவ்வழி
இன்றவ் வேலி காவாதோ?" எனச்
செவிச்சூட் டாணியிற் புகையழல் பொத்தி
நெஞ்சம் சுடுதலின் அஞ்சிநடுக் குற்று
வச்சிரத் தடக்கை அமரர் கோமான்
உச்சிப் பொன்முடி ஒளிவளை யுடைத்தகை
குறைத்த செங்கோல் குறையாக் கொற்றத்து
இறைக்குடிப் பிறந்தோர்க்கு இழுக்க மின்மை.
(சிலப்பதிகாரம் 23)

குற்றம் குறைகள் யாதும் படியாமல் இக்கோமகன் புரிந்துள்ள நீதிமுறைமையை **மதுராபதி** என்னும் தெய்வம் இவ்வாறு வியந்து புகழ்ந்துள்ளது. மேலே குறித்துள்ள சரிதத்தை இதில் உணர்ந்து கொள்கிறோம். **இறைக்கு** உரிய நீர்மையை அடிகள் உணர்த்திய படியே **இறைக்குடிப் பிறந்த** இந்தக் குணக்குரிசில் நெறிமுறையே நடந்து குடிகளை இனிது பேணி நீதி நிலையை நெடிது விளக்கி யிருக்கிறார்.

எனக்குத் தகவன்றால் என்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் தானாய்த் தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் தென்னவனும்; காணார்
எனச்செய்யார் மாணா வினை. (பழமொழி 102)

தீமைசெய் தாய்போல் செங்கை
குறைத்தாய் முறையேயோ! (திருவிளையாடல்)

குற்றம் செய்யாதிருந்தும் அதைச் செய்தவன் போலச் செவ்விய கையைக் கொய்தாயே! என இம் மன்னனது மனமாட்சியை வியந்து பரிந்து இன்னவாறு முன்னோர்கள் புகழ்ந்து போற்றி யுள்ளனர்.

கொற்கையான் மாறன் குலசேகரப்பெருமான்
பொற்கையான் ஆனகதை போதாதோ?—நற்கமல
மன்றலே வாரி மணிவா சலையசைக்கத்
தென்றலே! ஏன்வந்தாய் செப்பு? (தனிப்பாடல்)

மூடியிருந்த கதவைத் தென்றல் காற்று மெல்ல அசைத்தபோது அதை நோக்கிக் கம்பர் இவ்வாறு பாடியிருக்கிறார். குற்றம் யாதும் இன்றிக் குணங்கள் ஓங்கி வாழ்ந்த இந்தக் குல மகன் சரிதம் உலக மக்களுக்கு நலமா உயர் நீதியை உறுதியாய்ப் போதித்துள்ளது.

வழுதி வேந்தன் [illegible]
பழுதிலன் [illegible];
முழுதும் நீங்க [illegible];
தொழுது மைந்தர் துதிக்கத் துலங்கினான்.

**மன்னவன் மாசிலன் ஆயினே மக்களும்**
**அன்னவன்போ லாவர் அமைந்து.**

*அரசன் ஆகு அறின் தேசம் தேசுறும்.*

---

437. கூடிநின்ற மூவன் குலச்செல்வம் பின்குலைந்து
கோடிறைந்த தென்னே குமரேசா!—நாடிச்
செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும். (எ)

இ—ள்.

**குமரேசா!** உலோபியான மூவனது செல்வம் பின்பு ஏன் நிலை குலைந்து தொலைந்தது? எனின், செயல் பால செய்யாது இவறியான் செல்வம் உயல்பாலது அன்றிக் கெடும் என்க.

செயல் இயல்கள் தெரிய வந்தன.

செய்ய வுரிய கடமைகளைச் செய்யாமல் இழிந்துள்ள உலோபியின் செல்வம் உயர்வின்றி அழிந்து ஒழியும்.

இவறியான் என்றது உலோபியை. **இவறல் உலோபம்** ஆதலால் அதனையுடையவன் **இவறியான்** என நேர்ந்தான். பொருள் மேல் பேராசை கொண்டு மருள் மண்டி நிற்பவன் என்பது இப்பெயரால் தெரிய வந்தது.

உய்தல் என்பது உயல் என நின்றது. அல்லல் நீங்கி நல்ல கதியில் மேல் நோக்கிச் செல்வது உய்தலாம். அந்தத் தலைமையான நிலைமையை இவறியான் செல்வம் அடையாமல் தவறிவிடுகிறது.

செல்வம் கெடும் என்றது அதனையுடைய உலோபியின் மதிகேட்டை மறுகிக் குறித்தது. நல்ல பொருள் புல்லன் மருளால் புலையாயிழிந்து கழிந்து போகின்றது.

இம்மைக்கு உரிய இன்பங்களை அனுபவிக்கவும், மறுமைக்கு உரிய தருமங்களைச் செய்து கொள்ளவுமே செல்வம் உரிமையாய் அமைந்துள்ளது. அந்த நல்ல உரிமைகளை நயமாய்ச் செய்து கொள்ளாமல் பொல்லாத உலோபி புலையாய் இழந்து விடுகிறான். விடவே செல்வமும் சீரழிந்தது; அவனும் இருமையும் இழந்து சிறுமை யடைந்து இழிந்து கழிந்து ஒழிந்து போகிறான்.

உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தான்என் றெண்ணப் படும். (நாலடி 9)

உலோபியின் இழிவான நிலைகளையும், அவனுடைய பொருள் அழிந்து ஒழியும் புலைகளையும் ஒரு தமிழ் முனிவர் இவ்வாறு பரிதாபமாய் விளக்கி யுள்ளார். **அ! ஆ! இழந்தான்** என்ற இரக்கம் மீதூர்ந் தெழுந்த தொனிக் குறிப்பை நுனித்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

விழிகண் குருடனை ஒருவன் படு பாதாளமான அழிகுழியில் விழ நேர்ந்ததைக் கண்டு விழியுடைய ஒரு அருளாளன் வெருண்டு பதறிப் பரிந்து கூவியது போல் இம்மொழிகள் இதில் வெளியாகி யுள்ளன.

அரிய செல்வத்தைப் பெற்றும் உரிய பயன்களை அடையாமல் அதனைக் கெடுத்துத் தானும் கெட்டு உலோபன் அழிவது பரிதாபமான பாவமே.

உண்ணலும் உடுத்தலும் உற்றார்க்கு உதவலும் நண்ணினர்க்கு அருளலும் நலிந்தவர்க்கு ஈதலும் புண்ணியம் புரிதலும் பண்ணிய பொருளின் கண்ணியமான பயன்கள் ஆதலால் இவற்றை அடைந்தவர் உயர்ந்து சிறந்தார்; அடையாதவர் கடையரா யிழிந்து ஒழிந்தார்.

நல்ல செல்வமும் பொல்லாத உலோபிபால் புலை யடைந்து போதலால் அவனது பழிநிலை விழி தெரிய நின்றது. உயர் பொருளும் இழி மருளனால் இழிவுறுகிறது.

முறவொலி முந்நீர் முழுதுடன் ஆண்டார்
விழவூரில் கூத்தேபோல் வீழ்ந்தவிதல் கண்டும்
இழவென் றொருபொருள் ஈயாதான் செல்வம்
அழகொடு கண்ணின் இழவு. (பழமொழி 343)

ஈயாதான் செல்வத்தின் இழிவை முன்துறையரையர் இங்ஙனம் குறித்திருக்கிறார். கண் இழந்த குருடனாய் இவறியான் கழிந்து நிற்கின்றான். ஒருவிதத்திலும் ஈயாத பொருள் பல விதத்திலும் பாழாய் ஒழிகிறது.

காயமும் பொன்னும் கனப்போல் அழியுங்காண்
பேயே எனக்காத்துப் பின்னை வென்றெண்ணி
ஈயாமை தானுநன் றென்றுமவை பொன்றுவேல்
சாயாமுன் வாய்ப்ப தரல். (இன்னிசை 62)

செல்வம் உள்ளபோதே நல்லதைச் செய்தருள் என்று உள்ளம் தெளிய இது குறித்துளது.

செய்யத் தக்கதைச் செய்; உன் செல்வம் உய்யத் தக்கதாய் உயரும். நீயும் உயர்ந்து உய்தி யுறுவாய்.

தக்கதைச் செய்யாதவர் தகாதவரா யிழிகின்றார்.

இது மூவன் பால் அறிய நின்றது.

சரிதம்

இவன் ஒரு குறுநில மன்னன். கொங்கு நாட்டினன். நீர் வளமும் நிலவளமும் வாய்ந்த உயர்ந்த விளைபுலங்களும் சிறந்த செல்வ வளங்களும் இவனிடம் நிறைந்திருந்தன. இருந்தும் ஈந்து உவந்து வரும் இன்ப நலன்களை இவன் இழந்து நின்றான். நல்ல உபகாரி போல் வெளியே உல்லாசமாய்ப் பேசுவான்; உள்ளே பொருள் மேல் பேராசை மண்டி மருள் கொண்டிருந்தமையால் உதவியாளனாய் உயரவில்லை. தான் கொண்டதை முதலை வாய் விடினும் தன் முதலை இவன் கைவிடான் என்று வையம் வசை கூற நசையாய் வாழ்ந்து வந்தான். இவனது நிலைமையைச் சரியாகத் தெரியாமல் **பெருந்தலைச்சாத்தனார்** என்னும் புலவர் திலகர் பரிசில் கருதி இவன் பால் வந்தார். அந்தப் பெரியவரது மகிமையை உணர்ந்து மரியாதையுடன் மதித்துப் போற்றாமல் இவன் மறைந்திருந்தான். அவர் உள்ளம் வருந்தினார்; பரிந்து பாடி அயலே விரைந்து போனார். அன்று இவனை நோக்கி அவர் பாடிய பாட்டுள் ஒரு பகுதி அருகே வருகிறது. மருவியுள்ள நிலைமையைக் கருதி உணர்க.

"பழனுடைப் பெருமரம் தீர்ந்தெனக் கையற்றுப்
பெறாது பெயரும் புள்ளினம் போல நின்
நசைதர வந்துநின் இசைநுவல் பரிசிலேன்
வறுவியேன் பெயர்கோ? வாள்மேம் படுந!
ஈயா யாயினும் இரங்குவேன் அல்லேன்;
நோயிலை யாகுமதி பெரும!" (புறம் 209)

"மூவனே! பழம் பெற விரும்பிப் பறந்து வந்த ஒரு பறவை தான் கருதி வந்த மரத்தில் கனி யில்லையானால் எவ்வாறு அது மறுகி மீளுமோ அவ்வாறே உன்பால் அன்போடு வந்த நான் துன்போடு போகின்றேன்; நீ சுகமாய் வாழ்ந்திரு!" என்று உள்ளம் கனன்று குறிப்போடு

இவ்வாறு அவர் எள்ளி இகழ்ந்து போனர். அரிய மேதை யான அந்தப் பெரிய புலவர் இங்ஙனம் புலந்து போகவே இவனும் பின்பு செல்வங்களை யிழந்து இழிந்து அழிந்து போனன். செயல் பால செய்யாது இவறியான் செல்வம் தவருது அழிந்து போம்; அவனும் இழிந்து போவான் என்பதை உலகம் இவன் பால் உணர்ந்து நின்றது.

**கடமை யுரிமை கருதியும் செய்யான்**
**மடமை உலோபி மருண்டு.**

உலோபியா யிழிந்து ஒழியாதே.

---

438. உற்ற சுவேதன் உலோபமொன்றல் ஏனிழிந்து
குற்றமுற்று நொந்தான் குமரேசா—முற்றிய
பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று. (அ)

இ-ள்.

குமரேசா! மிக்க உலோப முற்றிருந்த சுவேதன் ஏன் இழிந்து ஒழிந்தான்? எனின், பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும் எண்ணப்படுவது ஒன்று அன்று என்க.

குற்றங்களுள் கொடிய குற்றம் அறிய வந்தது.

பொருள் மேல் பற்றுள்ளமாய் மருள் கொண்டுள்ள உலோபம் குற்றங்கள் எவற்றினும் கொடிய குற்றமாம்.

பற்று உள்ளம்=படுநசையாய்ப் பொருளை இறுகப் பற்றி மருளுடன் மண்டி நிற்கும் கொடு மனம்.

**குற்றம் கடிதல்** என்னும் இந்த அதிகாரத்தில் உலோபத்தை மிகுதியாகக் குறித்துக் காட்டி யிருக்கிருர். அரசன் அறிய வுரியது தெரிய நின்றது.

**இவறல், இவறியான், இவறன்மை, பற்றுள்ளம்** என உலோபத்தையும் உலோபியையும் கடுமையாக இகழ்ந்துள்ளார். பிசுனனது பழி நிலை பெரிய இழி புலை.

இன்பம் புகழ் புண்ணியங்களை நல்க வுரிய நல்ல பொருளைப் பழியாகப் பற்றி யாதொரு பயனுமில்லாமல் பாழ்படுத்திக் கீழ்மையாய் வருதலால் உலோபி இழிபழி யாளனாய்க் கழிய நேர்ந்தான்.

எந்த வகையான எள்ளல் இழிவுகளும் உலோபத்தை உள்ளே கொள்ளாது; வெளியே எள்ளித் தள்ளி விடும்; அது ஒரு மோசமான நீசம் என்பார் இவறன்மை எற்றுள்ளும எண்ணப்படுவது ஒன்று அன்று என்றார்.

ஒருவனிடம் எவ்வளவு நல்ல குணங்களிருந்தாலும் உலோபம் ஒன்று புகுந்தால் அவ்வளவும் பாழாம்.

உளப்பரும் பிணிப்புறு உலோபம் ஒன்றுமே
அளப்பரும் குணங்களை அழிக்கும். (இராமாயணம்)

விசுவாமித்திர முனிவர் இவ்வாறு உரைத்திருக்கிறார். குணங்களைக் கொல்லும் கொடிய நீசம் பிசுனமே.

உளப்பரும் பிணிப்பு என்றது பற்றுள்ளம் என்பதைப் பற்றி வந்துள்ளது. உள்ளம் பொருளில் மருளாய் மண்டியுள்ளமையால் வெளியே எவ்வகையான எள்ளலையும் உணராமல் மானம் இழந்த ஈனனாய் உலோபன் உறைந்து நிற்கின்றான்.

உத்தம குணங்கள் எல்லாம் உலோபத்தால் ஒழிந்துபோமே.

உலோபத்தின் புலையான பழிநீசமும் அழிநாசமும் இதனால் இங்கு நன்கு புலனாய் நின்றன.

யாருக்கும் யாதும் உதவாதவர் ஆதலால் உலோபர் மனித வுருவில் மருவியிருந்தாலும் இழிந்து அழிந்தவராகவே யாவராலும் எண்ணப்படுகின்றார்.

பதராகி லும்கன விபூதிவிளை விக்கும்;
பழமைபெறு சுவராகிலும்
பலருக்கு மறைவாகும் மாடுரிஞ்சிடும்; மலம்
பன்றிகட்கு உபயோகமாம்;
கதமிகு கடாவென்னில் உழுதுபுவி காக்கும்; வன்
கழுதையும் பொதிசுமக்கும்;
கல்லெனில் தேவர்களும் ஆலயமுமாம்; பெருங்
கான்புற்றும் அரவ மனையாம்;

இதமிலாச் சவமாகி லுஞ்சிலர்க் குதவிசெயும்
இழிவுறு குரங்காயினும்
இரக்கப் பிடித்தவர்க் குதவிசெயும் வாருகோல்
ஏற்ற மாளிகை விளக்கும்
மதமது மிகும்பரம லோபரால் உபகாரம்
மற்றொரு வருக்கும் உண்டோ?"

பதர் முதலிய எந்த இழி பொருள்களினும் உலோபர் இழிந்தவர் என இது மொழிந்துள்ளது. இவறன்மை எற்றுள்ளும் எண்ணப்படாது: இழிக்கப்படும் என்பதை இதனாலும் ஈண்டு அறிந்து கொள்ளுகிறோம். இழி பழிகள் எவற்றினும் உலோபம் கழிபேரிழிவாம்.

பெற்றாலும் செல்வம் பிறர்க்கீயார்; தாம்துவ்வார்;
கற்றாரும் பற்றி இறுகுபவால்—கற்றா
வரம்பிடைப் பூமேயும் வண்புனல் ஊர!
மரம்குறைப்ப மண்ணா மயிர். (பழமொழி 107)

பற்றுள்ளம் எவரையும் பற்றி இழிவுறுத்தும்; கற்றவரையும் அது கடைப்படுத்தும் என இது குறித்துளது.

உலோபம் மனிதரைக் கீழ்மையாத் தாழ்த்தும். ஈகை மேன்மையா உயர்த்தும். ஈதலைப் பழகினார் இசை மிகப் பெறுவர்; இவறலை மருவினார் இழிபழி யுறுவர்.

ஒளியோடு வாழ விரும்பின் இளிவான உலோபம் ஒழிய வேண்டும். ஈகை யுற எங்கும் ஓகை யுறும்.

அழி துயர்களையும் பழி யிழிவுகளையும் உலோபம் விளைத்து விடும். அதனை யுடையவர் படுதுய ரடைவர்.

இவ்வுண்மை சுவேதன் பால் அறிய நின்றது.

### சரிதம்

இவன் சுவேதன் என்னும் வேந்தனுடைய அருமைத் திருமகன். பணிவு இன்சொல் முதலிய இனிய பல குணநலன்கள் இவனிடம் இயல்பா யிசைந்திருந்தன.

இருந்தும் நீசமான உலோபத்தால் நிலைகுலைந்து இவன் புலையாய்த் தாழ்ந்து நின்றான். யாருக்கும் யாதும் ஈயாமல் எல்லா இன்ப நலன்களையும் தானே நுகர்ந்து தனியே மகிழ்ந்து வந்தான். தன்னலமே கருதி மன்னிய போகங்களில் மூழ்கி வந்த இவன் முடிவில் அரசைத் துறந்து போய் அருந்தவம் புரிந்தான். தனது அரிய தவத்தின் பெரிய பயனைப் பிரமலோகத்தை யடைந்தான். பேரின்ப நிலையமான அயன் பதியை அடைந்தும் கொடிய பசி நோயால் இவன் நெடிது வருந்தினான். வேதனை தாங்க முடியாமல் வேதனை வணங்கி விளைவினை மொழிந்து முறையிட்டு அழுதான். விதியின் பயனை விதி இவன் மதி தெளிய வுரைத்தார்: "அப்பா! நீ முன்பு அரசனா யிருந்த பொழுது யாருக்கும் உதவி புரியாமல் பிறர் பசியை நீக்காமல் நீயே உண்டு உவந்து வந்தாய்; உலோபமான அந்தப் பாவத்தின் பலனே பசி நோயாய் வந்து உன்னைப் பற்றி யுள்ளது. இது தீர வேண்டுமாயின், முன்னம் நீ தவம் புரிந்த இடத்தருகே யுள்ள வாவியில் உன் கொழுத்த வுடல் கிடக்கின்றது; அந்தப் பிணத்தை நீ தின்று முடித்தால் இப்பசி நின்று போம்" என்று நான்முகன் நவின்றருளினார். அவ்வாறே அங்கு இவன் வந்தான். தன் உடலைக் கண்டான். பசி நோய்க்கு அஞ்சி அதனைப் பற்றி மிசைந்தான். நாளும் நாளும் வந்து அருந்தியும் அது மீள மீள வளர்ந்து நிறைந்தது. உள்ளம் நொந்து உண்டு வந்தான். தெய்வ பதவியை எய்தியும் தனது வெய்ய துயரை நினைந்து ஒரு நாள் அங்கே இவன் வருந்தி நிற்குங்கால் அவ்வழியே வந்த **அகத்திய முனிவரைக்** கண்டான். அந்தப் பிணமும் ஒழிந்தது; இவன் பசியும் தொலைந்தது. அந்த மாதவரது காட்சியால் எய்திய மாட்சி என்று மகிழ்ந்து அவரடியில் விழுந்து தொழுது துதித்து ஓர் அழகிய மணிமாலையைக் காணிக்கையாக வைத்தான். தெய்வவுருவில் நின்ற இவன் நேர்ந்து நின்ற தனது சரித்திரத்தையும் முனிவரிடம் முறையே உரைத்தான். இவனுடைய இயல்பான உரைகளை அயலே காண வருகிறோம்.

இந்த வனத்தில் நெடுங்காலம்
யான்செய் தவத்தால் எய்தரிய
அந்த ணுளன் பேருலகம்
அடைந்தும் அருந்தாகமும் பசியும்
வந்து நலிய மழைவண்ண
மாயோன் தனது திருவுந்தி
தந்த மலரோன் தன்னுடைய
தாளில் வணங்கி யிவைசொன்னேன்: (1)

பெறுதற் கரிய இவ்வுலகம்
பெற்றும் பெருந்தா கமும்பசியும்
உறுதற்கு என்காரணம்? இனியான்
உண்பதுஎ தென்றிட நெஞ்சில்
இறுகத் தனத்தால் இரப்போருக்கு
இட்டு உறைதே உன்வயிறும்
பறியைத் தூர்த்து வளர்த்ததனுல்
பசிநோய் நின்னைப் பற்றியதால். (2)

பன்னு மறையின் பொருள்தெரிந்து
பணைந்தோன் பின்னும் இவைபகரும்
பின்னர் தருவார் அவ்வனத்துன்
பிணத்தை நீயே பசிதீரத்
தின்ன மாளாதுஅது வளரும்
சென்று தின்னின் குண்ட முனி
தன்னைக் கண்டால் நின்பசியும்
தாக மும்போம் எனவுரைத்தான். (3)

அன்று தொடங்கி யின்றளவும்
சுமந்த மாய இப்பிணத்தைத்
தின்று திரிந்தேன் என்பசியைத்
தீர்த்தீ என்றான் அதுதீர
நன்று பிழைத்தேன் எனவுவந்திந்
நல்லா பரணம் எனக்கீந்து
வென்றி வீரன் விமானத்து
விண்ணோர் சூழ அவன்போனான். (4)
(இராமா, உத்தரகாண்டம் 14)

இவன் கூறிய சரிதத்தை முனிவர் இராமனிடம் இவ்வாறு கூறியுள்ளார். பல நல்ல குணங்களிருந்தும்

உலோபத்தால் இவன் அடைந்துள்ள அல்லல்களை அறிந்து கொள்கிறோம். பற்றுள்ளம் என்னும் இவறன்மை படுபாதகமான கொடிய நெடிய குற்றம் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

**ஊனமே யான உலோபம்போல் இவ்வுலகில்**
**ஈனம் எதுவு மிலை.**

பழி உலோபம் இழி புலை.

---

439. வென்றிச் சடாசுரன்முன் வெம்பிப் பழிநயந்தான்
குன்றினன் பின்பேன் குமரேசா—கன்றி
வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. (கூ)

இ—ள்.

**குமரேசா!** தன்னை வியந்து தருக்கித் தீவினையை நயந்த சடாசுரன் பின்பு ஏன் துன்பாய் அழிந்தான்? எனின், தன்னை எஞ்ஞான்றும் வியவற்க; நன்றி பயவா வினையை நயவற்க என்க.

அடங்கி ஒழுகும் நயம் அறிய வந்தது.

தன்னை எக்காலத்தும் ஒருவன் வியக்கலாகாது; நன்மை பயவாத காரியத்தை யாதும் விரும்பலாகாது.

புகழ்ச்சியில் ஒரு விருப்பம் எந்த மனிதனிடமும் இயல்பா யிமைந்துள்ளது. பொருள் மேலுள்ள ஆசையினும் புகழ் மேல் உள்ள ஆசை யாண்டும் யாரிடமும் மேலோங்கி நிற்கின்றது. மருள் மயக்கமான இந்த நசை மனிதனை வசையாத் தாழ்த்தி இழிவில் வீழ்த்தி விடும். ஆதலால் குற்றம் எனக் குறித்துக் காட்டி இதனை ஒழித்து ஒழுக வேண்டும் என உணர்த்தி யருளினர்.

வியத்தல்=தன்னை அதிகமாக மதித்துப் புகழ்தல்.

வியனாக எண்ணுவதால் வீணாகப் புகழ்ந்து பேச நேர்கின்றான். வியத்தற்கு ஏதுவாகிய மேன்மைகளெல்லாம் தன்பால் ஒருங்கே எய்தியிருந்த காலத்தும் மருங்கே உவந்து புகழலாகாது என்பார் **எஞ்ஞான்றும்** என்றார். அறிவான அடக்கமே என்றும் நன்றாம்.

தன்னைப் பெருமையாகப் பிறர் மதிக்க வேண்டும் என்று கருதித் தன்னையே மிகவும் வியந்து ஒருவன் புகழ்ந்து பேசுவது தற்புகழ்ச்சியாம். இது நேரே மாறாக இகழ்ச்சியையே விளைக்கும்; அந்த விளைவை உணராமல் விழைவு மீதூர்ந்து வியந்து இழிவை யடைகின்றான்.

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம். (நீதிநெறி 19)

தற்புகழ்ச்சியால் விளையும் இழிவையும், விழைவின் அழிவையும் இது நேரே தெளிவாக விளக்கி யுளது.

எண்ணெயை அகலில் வார்த்தால் விளக்கு ஒளிவீசி நன்கு எரியும்; தண்ணீரை வார்த்தால் அவிந்துபோம். உனது குணநலன்களைப் பிறர் புகழ்ந்து கூறினால் அது பெருமையாம்; நீயே பேச நேர்ந்தால் சிறுமையாம். விளக்கை உவமை காட்டி விளக்கி யிருக்கும் நயம் வியந்து காணவுரியது. உன் புகழ் வெளியே தெளிவாக ஒளி வீசி உயர வேண்டுமானால் அதற்கு உரிய செயல்களைச் செய்; அமைதியாய் அடங்கியிரு.

வியவற்க; நயவற்க என வியங்கோளால் விதித்திருக்கும் இக்குறளைக் கருத்துட் கொண்டே இவ்வெண்பா வந்துள்ளது. அவ்வுண்மையை உரைகள் உணர்த்தியுள்ளன. ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்க.

எம்மை அறிந்திலிர்! எம்போல்வார் இல்லென்று
தம்மைத்தாம் கொள்வது கோளன்று—தம்மை
அரியரா நோக்கி அறனறியும் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள். (நாலடி 165)

தானே தன்னை வியந்து கொள்வது தவறு; தனது அருமையை உணர்ந்து பெரியோர்கள் புகழ்ந்து சொல் வதே பெருமையாம் என இது குறித்துளது. தனக்கு நேர்கிற சிறுமையை உணராமையால் தன்னை வியந்து புகழ்ந்து வீணே இழிந்து படுகிருன்.

உன்பால் உறுமுயர்வை ஓர்ந்துபிறர் பாராட்டின்
இன்பாம்நீ சொன்னல் இழிவாமே—பொன்புனைந்த
தன்முலையைத் தன்கையால் தான்வருடின் ஓர்மங்கைக்கு
உண்மலியின் புண்டோ வுணர். (தருமதீபிகை)

தற்புகழ்ச்சி இழிவாம் என இது உணர்த்தியுளது. இதில் வந்துள்ள உவமை நயத்தை உய்த்து நோக்கிப் பொருள் நிலைகளை ஊன்றி உணர்ந்து தேர்ந்து தெளிந்து கொள்ள வேண்டும்.

சடமதைக் கழுவ வுன்னிச் சகதியில் தோய்தல் போலும்
சுடரினைத் தூண்ட வேண்டி ஊதியே தொலைத்தல் போலும்
மடமையால் தன்னைத் தானே புகழுவோன் வசைகள் எல்லாம்
புடவியே எடுத்து உரைக்கப் பூணுவன் நிந்தை யம்மா! (1)

தற்புகழ் வோன்தனைப் பழிக்கும் தாரணி;
சொற்புகழ் விரும்பிடான் தனைத்து தித்திடும்;
நற்புகழ் பெறுவழி நன்னடக்கையோடு
அற்பமும் தற்புக ழாமை யாகுமே. (2)
(நீதிநூல்)

தன்னை வியப்பதால் விளையும் இழிவுகளை இன்ன வாறு நூல்கள் பல நன்னயமாக் கூறியுள்ளன. தன்னை வியவாதவனே எங்கும் வியனாய் விளங்குகின்ருன்.

**நன்றி பயவா வினை** என்றது தீமை பயக்கும் செயலை. தீவினையை நயந்தால் எவ்வழியும் துன்பமே வரும் ஆதலால் **நயவற்க** என நயமா யருளினர்.

தன்னை வியந்து தருக்கித் தீமையை நயந்து செருக்கிப் புரிபவன் இன்னலுழந்து இழிந்து அழிந்து படுவான்.

இது சடாசுரன் பால் தெரிய நின்றது.

## சரிதம்

இவன் ஓர் அசுரவேந்தன். அரிய வரபலன்களும் பெரிய செல்வ வளங்களும் உடையவன். மாய சாலங்களிலும் தேர்ந்தவன். கருதிய இடத்தில் கருதியபடியே உருவங்களை மருவி யாண்டும் உலாவ வல்லவன். பருவ மங்கையர் பலரைக் கவர்ந்து கொண்டு போய்க் காம போகங்களை நுகர்ந்து களித்து வந்த இவன் ஒரு நாள் பாண்டவர் வாசம் செய்கின்ற வனத்தை அடைந்தான். ஒரு குளிர் பூஞ்சோலை யிடையே குடிசைகள் அமைந்திருப்பதைக் கண்டான். சிறந்த அருந்தவன் போல் வடிவம் கொண்டு உள்ளே புகுந்தான். பெரிய மாதவன் என்று கருதித் **துரோபதை** இவனை வணங்கினாள்: தனியே வந்து வணங்கவே அந்தப் பேரழகியை வாரிக் கொண்டு வான வீதியில் இவன் அதிவேகமாய்ப் பறந்து போனான்.

அந்தணர் வடிவினர் கொண்டிலங் கையில்வாழ்
 அதிபர னரக்கரைப் போலச்
செந்தழல் அளித்த மடமயில் இருந்த
 சிறுபன்ன சாலையின் எய்திக்
கொந்தவிழ் அலங்கற் கொற்றவர் அறியா
 வகையொரு கோள்மறை பிதற்றிப்
பைந்தொடி தனைக்கொண்டு அந்தரம் தன்னில்
 பறந்தனன் பழியுண ராதான்.
 (பாரதம், சடாசுரன்வதை)

இந்தப் பரிதாப நிலையை அறிந்ததும் **நகுல சகாதேவர்** இருவரும் வில்லும் கையுமாய் விரைந்து தொடர்ந்தனர். வேறு காரியமாய் அயலே போயிருந்த **வீமன்** அதிவேகமாய் இவனைத் தொடர்ந்து அடர்ந்து பாஞ்சாலியைப் பதமாய் மீட்டி விட்டு இத்தீயவனைச் சித்திரவதை செய்து சிதைத்துப் பிய்த்துத் திசைகளில் எறிந்தான்.

எறிந்தவா ளரக்கன் விசும்பின தெல்லை
 எவ்வள வவ்வள வும்போய்
மறிந்தமால் வரைபோல் மீளவும் புவிமேல்
 மாசுணம் நடுங்குற வீழ்ந்து

செறிந்தபே ருடலும் ஆவியும் சிந்தத்
தென்புலத் திமைப்பினில் சென்றான்;
அறந்துறந் தென்றும் அடாதன செய்தால்
ஆர்கொலோ படாதன படாதார்?

இவன் பட்டு மாண்டுள்ள நிலையை இது சுட்டிக் காட்டியுளது. **அறந்துறந்து என்றும் அடாதன செய்தால் ஆர்கொலோ படாதன படாதார்?** இந்த நீதிவாசகம் இங்கே நினைந்து சிந்திக்க வுரியது. தன்னை வியத்தலும், நன்றி பயவா வினையை நயத்தலுமுடையார் நிலை குன்றிப் புலையாய்ப் பொன்றி விரைந்து மடிவார் என்பதை உலகம் இவன் பால் உணர்ந்து நின்றது.

**இன்னா லுறுசெயலை எண்ணுதே; எவ்வழியும்**
**உன்னைப் புகழ்தல் ஒழி.**

நல்லதை நயந்து கொள்.

---

440. அன்றேனே காதல் அயலறியா துய்த்துவன்னி
குன்றுமல் துய்த்தான் குமரேசா—என்றுமே
காதல காதல் அறியாமை யுய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல். (ம)

இ—ள்.

**குமரேசா!** தான் காதலித்ததை அயல் அறியாமல் பாதுகாத்து ஏன் வன்னி வெற்றி பெற்றான்? எனின், காதல காதல் அறியாமை உயக்கின் பின் ஏதிலார் நூல் ஏதில என்க.

காக்க வுரியதைக் காத்து ஒழுகுக என்கிறது.

தான் விரும்பிய பொருள்களின் விருப்பத்தை மருமமாய் அரசன் நடத்திவரின் பகைவரின் சூழ்ச்சி யாதும் பலியாது அகன்று போம்.

ஏதிலார்=பகைவர். ஏதும் உறவிலார் என அவரது இயல்பும் இகலும் தெரிய வந்தது. எப்பொழுதும்

இப்புரியர் நேர்ந்துள்ளவர் ஆதலால் அவர்க்கு யாதும் இடங்கொடாமல் எச்சரிக்கையாய் ஒழுக வேண்டும்.

நூல் என்றது நூலறிவால் வாய்ந்த சூழ்ச்சிகளை. தீயவர் என்பதும் இப்பேரால் தெரிய நின்றது. ஏதில = யாதொரு பயனும் இலவாய் ஒழிந்து போம்.

காதல = காதலித்த பொருள்களை. குறிப்பு வினையாய் குறித்தது. அவற்றின் நிலைமைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள. எண்ணுவன, விரும்புவன, கருதுவன என்றமையால் காதல என்றதனால் ஆசை மீதூர்ந்துள்ளமை அறிய நின்றன. உய்க்கின் = சதுரப் பாடுடன் நடத்தின். உய்த்தல் = நடத்தல்; செலுத்தல்; வைத்தல்.

தான் கருதிய உறுதி நலன்களை உரிமையாக அடையும் வரையும் பிறர் எவரும் அறியாவகை மருமமாகப் புரிந்து வருவதே மன்னனுக்குப் பெருமையாம்.

கன்றார் இனிய பொருள்பலவும் காதல் பகைவர் அறியாமே
நன்று நுகர்க; நினைவொன்றும் நன்கு மறைத்து வியவற்க;
நன்றி பயவா வினைவினையும் நண்ணு மதத்தால் முடியற்க;
வென்றி விளங்கப் புகழ்விளங்க விழுப்பம் விளங்க வேண்டிடினே.
(விநாயகபுராணம்)

ஒரு மன்னன் தன் மகனுக்கு இன்னவாறு போதித்துள்ளான். குற்றம் புகாததே வெற்றி வாழ்வாம்.

பிழைகள் நுழையாமல் பேணி வருபவனே விழுமிய வேந்தனாய் விளங்கி வருகிறான். தனி மனிதனது வாழ்க்கையைவிட அரசனுடைய வாழ்வுகள் பலவகையான சூழ்வுக ளுடையன. அவனுடைய உயர்வு தாழ்வுகள் இன்ப துன்பங்கள் குணம் குற்றங்கள் நாட்டு மக்களைத் தொடர்ந்து வருதலால் யாண்டும் அவன் தலைமையான நிலைமையில் கவனமாய் வாழ்ந்து வரவேண்டியவனாகிறான். மதியூகம் அதிசய மாட்சிமைகளை அருளுகிறது.

தான் உரிமையாய்க் கருதியுள்ள காரியத்தைச் சிறிய முறையில் செம்மையாய் முடித்துக் கொள்வதே

வேந்தனுக்கு மேன்மையான நன்மையாம். காதலித்த பொருள் கை கூடும் வரையும் அயல் அறியா வகை அதனை ஆதரித்து வருவது அரிய பெரிய வினையாண்மை ஆதலால் அஃது ஈண்டு உரிமையாய் நன்கு உணர வந்தது. கருமத்தின் மருமம் காப்பின் தருமமாயுளது.

இராச காரியம் பரம ரகசியம் என்பது முதுமொழி.

குற்றங்கள் நேராமல் தன்னையும் தன் நாட்டையும் காக்கவுரிய கொற்றவன் முன்னதாகப் பகைவரையே உற்று நோக்கி ஊறுகள் ஊராமல் ஆற்றுகின்றான்.

கோதை வேல்நம்பிக் கல்லதை இப்பொருள்
யாதும் கூறன்மின்! யாரையும் தேறன்மின்!
ஏதம் இன்னன இன்னணம் எய்தலால்
பேதை யாரொடும் பெண்ணொடும் பேசன்மின்! (1)

பகைவர் உள்ளமும் பாம்பின் படர்ச்சியும்
வகைகொள் மேகலை மங்கையர் நெஞ்சமும்
மிகைசெல் மேகத்து மின்னுஞ் செந்நில்லா
புகைசெய் வேலினீர்! போற்றுபு சென்மினே. (2)

(சீவகசிந்தாமணி)

சீவக மன்னன் தாய் இன்னவாறு கூறியுள்ளாள். தான் குறித்ததை யாரும் அறியாதபடி குறிக்கோளோடு நடத்த வேண்டும் என்று நயமா யுரைத்திருக்கிறாள். பேதையர் பெண்கள் பகைவர் என்னும் இவர்களுடைய மன நிலைகளை எடுத்துக் காட்டி அரச கருமங்களை மருமமாய்ப் பேணி வரும்படி வேண்டி யிருப்பது ஈண்டு விநய விவேகமாய் இனிது விளங்கி நிற்கின்றது.

ஏதம் எய்தாமல் தன்னைக் காத்து வருகிற மன்னன் ஏதிலரை ஏதிலராக்கி யாண்டும் இசை பெற்று வருகிறான். வினையின் அடக்கம் வெற்றியின் விளக்கம்.

எதை எதை எந்த எந்த வகையில் காத்து வர வேண்டுமோ அதை அதை அந்த அந்த வகையில் காத்து வருபவனே கண்ணியமான காவலன் ஆகின்றான். அவ்

வாறு காவாருவன் காவலன் என எதிர்மறையாய் மேவி நிற்கின்ருன். கடிவன கடிந்து காப்பன காத்தருள்.

ஒருவன் நீதிநெறியின் படி செவ்வையாய்த் தெளிந்து மன்னவன் முன்னுற நடந்து வந்த போது தான் மாந்தரும் அவ்வேந்தனை வியந்து போற்றி வருவர்.

தான்இனி தியற்றும் மனுநெறிப் படிமுன்
தான்நடந் தறவழி காட்டி
ஞானநற் குணத்தின் மேன்மையால் எவர்க்கும்
நாயகன் தானெனத் தெரித்துத்
தானமும் தயையும் மெய்மையும் தவமும்
தற்பரன் வணக்கமும் பொறையும்
மானமு மிகுத்து நரரெலாம் செழிக்க
மகியர சளிப்பவன் மன்னே. (நீதிநூல்)

உண்மையான அரசனுடைய உத்தம நீர்மைகளையும் வித்தகவிவேகங்களையும் இஃது உணர்த்தி யுள்ளது.

குற்றங்கள் நீங்கிக் குணங்கள் ஓங்கி எவ்வழியும் செவ்வியனுய் இசை பெற்று உயர்வுற்று வருபவனே வெற்றி வேந்தனுய்ச் சிறந்து திகழ்கின்ருன்.

தன் விருப்பத்தை அடக்கமாக நடத்த வல்லவன் அதிசய வெற்றிகளை நன்கு அடைந்து கொள்கின்ருன்.

இவ்வுண்மை வன்னி பால் அறிய நின்றது.

## சரிதம்

வன்னிவானவன் என்னும் அக்கினிதேவன் காண் டவ வனத்தை உண்ண விரும்பினன். அரிய பல ஓடதிகள் நிறைந்துள்ள அந்தக் கானகத்தை அருந்த விழைந்த இவன் அதற்கான உபாயங்களை மருமமாய் ஆராய்ந்து வந்தான். அந்த வனம் தேவராசனுன இந்திரனுக்கு உரியது; தான் புகுந்து நுகர நேர்ந்தால் அவன் மேகங்களை ஏவி வேகமாயவித்து விடுவான் ஆதலால் அவ்வாறு நேராதபடி நெடிது சூழ்ந்து வந்த இவன் ஒரு நாள் கடிது துணிந்தான். வசந்த காலத்தில் கண்ணனும் விசயனும்

ஒரு சோலையில் உல்லாசமாய் உரையாடிக் கொண்டிருந் தனர். ஓர் அந்தண முனிவன் போல் அவர் பால் இவன் வந்தான். அரிய ஒரு மாதவன் என்று கருதி அந்த இரு வரும் இவனை உபசரித்து "யாது வேண்டும்?" என்று ஆதரவோடு வேண்டினர். "நான் மிகுந்த பசியா யிருக் கின்றேன் எனக்குத் தகுந்த உணவு தர வேண்டும்" என்றான். இவன் வந்து வேண்டியதும் அவர் உவந்து தந்ததும் விநய விந்தைகளாய் விளங்கி நின்றன.

வந்த அந்தணன் வரவுகண் டிருவரும்
வந்தெதிர் வணங்கித்தம்
சிந்தை யன்பொடு வேதிகை யெனத்திகழ்
செம்பொனின் தவிசேற்ற
அந்த ணாளனும் குழிந்தபொற் கண்ணினன்
அவிமணம் கமழ்வாயன்
உந்து வெம்பசி பெரிதுவல் லேயெனக்
கோதனம் இடும்என்றான். (1)

கரிய மேனியர் இருவரும் செய்யபொற்
காயமா முனியுண்டற்கு
உரிய போனகம் இடுதுமிக் கணத்தென
உவகையோ டுரைசெய்தார்
அரிய வாயினும் வழங்குதற் கேற்றன
வல்ல வாயினும் தம்மில்
பெரிய வாயினும் அதிதிகள் கேட்டன
மறுப்பரோ? பெரியோரே. (2)

(பாரதம்)

இவ்வாறு அவர் உறுதிமொழி கூறிய பின் இவன் உண்மையை உரைத்தான். காண்டவ வனத்தை உண்டு களித்தான். உண்ணுங்கால் இந்திரன் புரிந்த இடை யூறுகளை யெல்லாம் அவர் நீக்கி யருளினர். கருதிய படியே யாவும் அருந்தி இவன் உவந்து போனான்

என்பிற புகல்வ தீரெழு புவனம்
எம்பிரான் அருந்திய தென்னத்
தன்பசி தணியக் காண்டவ வனத்தில்
சராசர முள்ளவை யனைத்தும்

வான்புனல் அருந்தி உதரமுங் குளிர்ந்தான்
மன்னிதன் வடிவமும் குளிர்ந்தான்
அன்புடை யிருவர்க்கு ஆசியும் புகன்ருன்
அசைந்துபோய்த் துறக்கமும் அடைந்தான்.

தான் காதலித்ததை அயலறியாமல் காத்துக் காரியசித்தி பெற்று இவன் வீரியவாஞய் விளங்கினுன். காதல காதல் அறியாமல் உய்ப்பவர் ஏதிலரை வென்று இன்புறுவர் என்பதை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்ருன். மன்னவர் மருமமாப் புரியவுரிய கருமத்தின் தருமத்தை வன்னி வானவன் நன்னயமா விளக்கி யருளினுன். வினையின் ஆட்சி வித்தக மாட்சியாயுளது.

தானம் கொடுக்குந் தகைமையும் மானத்தார்
குற்றம் கடிந்த ஒழுக்கமும்—தெற்றெனப்
பல்பொருள் நீங்கிய சிந்தையும் இம்மூன்றும்
நல்வினை யார்க்குங் கயிறு. (திரிகடுகம் 23)

பற்றும் விழைவைப் பகையறியா தாண்டுவரின்
வெற்றி விளைந்து வரும்.

எதிரிக்கு இடங்கொடாமல் வாழ்க.

---

இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

1 செருக்கும் சினமும் சிறுமையும் நீங்குக.
2 மதமும் களிப்பும் மருளும் ஒழிக.
3 தினையளவு குற்றமும் சேரா தகல்க.
4 குற்றமே கொடிய பகை முற்றும் கடிக.
5 வருமுன்னர்க் காத்து வகையாய் வாழுக.
6 தன்குற்றம் நீக்கித் தக்கதை ஆக்குக.
7 செய்ய வுரியதைச் செவ்வையாய்ச் செய்க.
8 மருளான உலோபம் மடமைப் புலையே.
9 தன்னை வியவாதே; தகாததை நயவாதே.
10 கருதியதைக் காத்து உறுதியி லுயர்க.

சுசு வது குற்றம் கடிதல் முற்றிற்று.

---

# நாற்பத்தைந்தாவது அதிகாரம்

## பெரியாரைத் துணைக் கோடல்

அஃதாவது அறிவு ஒழுக்கம் பருவம் பான்மை மேன்மை முதலியவற்றால் சிறந்த மேலோர்களைத் தனக்கு உறுதித் துணையாக அரசன் உரிமையோடு பேணிக் கொள்ளுதல். குணமுடையாரை நாடி அறிதலும் கூடி மகிழ்தலும் குற்றம் கடிந்தார்க்கே கூடும் ஆதலால் அதன் பின் இஃது இனமா அமைந்து நின்றது.

441. மண்டுபுகழ் அத்திபதி மாண்பிரம தன்மரையேன்
கொண்டுவந்தான் கேண்மை குமரேசா—கண்ட
அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல். (க)

இ—ள்.

குமரேசா! பிரம தருமரது கேண்மையை அத்திபதி ஏன் ஓர்ந்து உவந்து கொண்டான்? எனின், அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை திறன் அறிந்து தேர்ந்து கொளல் என்க.

அரிய பெரிய துணைவர் அறிய வந்தனர்.

அறநெறிகளை உணர்ந்து முதிர்ந்த அறிவுடைய பெரியோரது நட்பை நயமாக ஓர்ந்து நன்கு தெளிந்து துணையாக் கொள்ளுக.

மாந்தரை மாண்போடு ஆளும் வேந்தன் தனக்கு ஆதரவாகத் தேர்ந்து சார்ந்து கொள்ள வுரிய சான்றோர்களை இங்கே கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். எல்லார்க்கும் பொதுவாகச் சொல்லியிருப்பினும் இயல் நோக்கி அரசனுக்குச் சிறப்பாக ஈண்டு இது கருத வந்தது.

கேண்மை=கேளாந் தன்மை. உற்ற நிலைகளை உரிமையோடு கேட்டு உறுதி நலன்களைத் தெளிவாக உணர்த்த வல்ல விழுமியோரது நட்பு கேண்மை என அமைந்தது. வியனான பலன்களை அருளி வருகிற அதன் நயனும் பயனும் இங்கே நலமாய்த் தெரிய நின்றன.

தேர்ந்து கொளல்=தெளிந்து உரிமையாக் கொள்ளுக. அல்விகுதி உடன்பாட்டு வியங்கோள்.

அறிவுடையாரைத் துணைக் கொள்க என்னுமல் கேண்மை கொளல் என்றது அதன் பான்மையை உய்த்துணரா. அவரது உள்ளம் உவந்து உரிமையுடன் நட்புக் கொள்வதே நல்ல திட்பமாம். புறத்தே ஒப்புக்காகக் கூடி நிற்பது உண்மையான உறுதித் துணையாகாது.

அறன் அறிதலாவது தரும நீதிகளின் மருமங்களை நன்கு தெளிதல். அறிதலும் மூத்தலும் அறிவுடைமைக்கு அடைகளாய் நின்று அதன் இயல்பை விளக்கின. கூரிய மதியும் சீரிய திறலும் தெரிய வந்தன.

அறிந்திருப்பினும் மூப்பு இன்றேல் ஆன்ற அனுபவம் நிறையாது ஆதலால் முதுமையும் மதிக்கு உரிமையாய் வந்தது.

அறியாது மூத்தவர்கள் உலகில் பலர் உளராதலால் அவரை வேறே விலக்கி ஒழிக்க **அறிந்து மூத்த** என்றார். அறிவும் முதுமையும் அரிய மகிமைகளுறுவன.

கூரிய அறிவும் சீரிய அனுபவமும் நேரிய நீதித் தெளிவும் உடைய மதிமான்கள் உறவு ஆட்சிக்கு மிக்க மாட்சி தரும்: இத்தகைய பெரியோர்களை எத்தகைய வகையிலும் உரிய துணைவராக்கி அரசன் அன்பாய்ப் போற்றிக் கொள்ள வேண்டும்.

அறிவு ஒழுக்கம் பருவங்களில் முதிர்ந்தவரை முறையே ஞான விருத்தர், சீலவிருத்தர், வயோவிருத்தர் என்பர். பெரியவர் நிலைமைகள் தெரிய வந்தன.

திறன் அறிந்து என்றது, அறன் அறிந்து மூத்த பெரியோர்களின் நீர்மை சீர்மைகளைக் கூர்மையாபுணர்ந்து தன்பால் அவர் நண்புறும் வகையை நாடித் தெரிதலை. அதிகார ஆற்றலையும் செல்வத் தோற்றத்தையும் கண்டு அறிவுடையார் யார்க்கும் வசமாகார்; தனது பண்புடைமையை நோக்கியே அவர் நண்புறுவர் ஆதலால் வேந்தன் அதனை ஓர்ந்து உணர்ந்து ஆர்ந்த அன்போடு அவரை வசப்படுத்திக் கொள்ள வேண்டும்.

நுண்மை அறனும் மிகத்தெளிந்து நூலின் இயல்பும் உலகியல்பும்
வண்மை யுறத்தேற் றிடுமாற்றல் வல்ல ராகி வளர்சீலம்
திண்மை யறிவா யுளின்முதிர்ந்தோர் சேர நன்கு மதித்திடுக
வெண்மை புரியா துயர்த்திடுக வியம்பும் வழியே நின்றிடுக
(விநாயகபுராணம்)

அறிவுடையார் கேண்மையைத் தேர்ந்து கொள்க என அடிகள் குறித்துள்ளதை அடியொற்றி இது வந்துள்ளது. அறிவர் உறவு அரிய பெரிய திரு.

ஆயிரவ ரானும் அறிவில்லார் தொக்கக்கால்
மாயிரு ஞாலத்து மாண்பொருவன் போல்கலார்;
பாயிருள் நீக்கு மதியம்போல் பன்மீனும்
காய்கலா வாகும் நிலா. (பழமொழி 47)

அறிவுள்ள ஒருவனுக்கு அறிவில்லார் ஆயிரவரும் ஈடாகார்: எண்ணில்லா விண் மீன்கள் ஒரு வெண் மதிக்கு நிகராகா; கலைமதியைப் போல் கலை நிறைந்த மதிமான்கள் உலகில் ஒளி செய்து வருவர் என இது உணர்த்தியுளது. அறிவுடையார் கேண்மையால் விளை யும் மேன்மைகளை இதனால் அறிந்து கொள்கின்றோம்.

நல்ல அறிஞரைத் துணையாக அடைந்த போது தான் அரசன் எல்லாச் செல்வங்களையும் அடைந்தவனா கிறான்; அவரை அடைய வில்லையாயின் ஒளி யிழந்த விழிபோல் இழிவடைந்து தாழ்ந்து பட நேர்கின்றான்.

பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளான் ஆயிடினும்
என்னுள்ளா னவனவன் இருந்தவர்தம் நட்பிலனேல்?
பொன்னில்லான் பூமியில்லான் புந்தியில்லான் ஆயிடினும்
என்னில்லா னவனவன் இருந்தவர்நட் புள்ளானேல். (1

முத்திக்கு வித்தாகும் முழுதுணர்ந்தோர் பெருநட்பே
தித்திக்கு நாடோறும் தேவர்பெறற் கருந்திருவும்
சித்திக்கும் படியருளும் செப்பரிதால் அதுநிற்க
எத்திக்கும் புகழுநினக் கியன்மணநன் காயிற்றே. (2
(குசேலம்)

துவாரகையில் மன்னனாய் வீற்றிருந்த கண்ணன் குசேலரை நோக்கி இன்னவாறு கூறியிருக்கிறார். பெரி யாருடைய கேண்மையால் பெருகி வருகிற நன்மைகளை இவற்றால் உணர்ந்து தெளிந்து உவந்து கொள்கின்றோம்.